கையினுல் செய்யப்படும் தொழில் என்பது பொருள். ஆயினும் எந்திரங்களினுல் செய்யப்படும் தொழில் களும் இதனுள் அடங்கும்.

4. கிராமவாசிகள் மேற்கொள்ளக்கூடிய கைத் தொழில்கள் பல இருக்கின்றன. அவை இராட்டையில் நூல் நூற்றல், தறியில் நெய்தல், கற்ருழை, சணல், தென்னே, பனே இவற்றின் நார்களால் கயிறு திரித்தல், பனேயோலேயால் பாய்களும் பெட்டிகளும் முடைதல், கோரைப்பாய் பின்னுதல், மூங்கில், பிரம்பு இவற்ருல் கூடை முடைதல், மண் பாண்டங்கள் செய்தல், உலோகங்களேக் கொண்டு நகைகள், பாத்திரங்கள் செய்தல் முதலியனவாம்.

5. விவசாயிகளும் மேற்கூறிய தொழில்களில் ஏதேனும் ஒன்றைக் கைக்கொள்ளலாம். விவசாயி களுக்கு வருஷம் முழுவதும் விவசாய சம்பந்தமான வேலே இராது. ஆதலால் அவர்கள் ஏதேனும் ஒரு கைத்தொழிலே உதவித் தொழிலாகச் செய்து வந்தால் அவர்களுடைய வருமானம் அதிகப்படும் அல்லவா?

6. எந்திரத் தொழில் நடைபெறுவதற்கு எந் திரங்கள் வாங்க அதிகப் பணம் வேண்டும். ஆதலால் செல்வர்கள் எந்திரத் தொழிற்சாலே நடத்தி வரவேண் டும். முதலாளிகளும் தொழிலாளிகளும் ஒற்றுமை யாய் இருந்து தொழில் நடத்தி வரவேண்டும். அவர் கள் நாட்டின் தேவைக்கு வேண்டிய பொருள்களே உற்பத்தி செய்து வரவேண்டும். எந்திரங்களின் மூல மாகச் சொற்ப காலத்தில் ஏராளமான பொருள்களே உற்பத்தி செய்யலாம்.

7. கைத்தொழில் ஓங்கினுல்தான் நாட்டின் செல்வம் பெருகும். செல்வம் பெருகினுல்தான் தேசம் உயர் நிலே அடையும்.

8. சிறுவர்காள்! நீங்கள் ஏதேனும் ஒரு கைத் தொழிலேக் கற்றுக் கொள்ளுங்கள்.

## கேள்விகள்

1. நான்கு வகையான தொழில்கள் எவை ?
2. உழவுத் தொழில் ஏன் மிகவும் சிறந்தது ?
3. 'கைத்தொழில்' என்பதன் அர்த்தம் என்ன ?
4. கிராமவாசிகள் மேற்கொள்ளக் கூடிய ஏதாவது நான்கு தொழில்கள் சொல்.
5. வியவசாயிகளும் ஏதாவது ஒரு கைத்தொழிலே மேற்கொள்ளலாம். ஏன் ?
6. எந்திரத் தொழிற்சாலேகள் ஏற்படுவதால் என்ன நன்மைகள் ?

## அப்பியாசம்

1. பனேயோலே—இதைப் பிரித்து எழுது.
2. அவன் நூல் நூற்கிருன்.

   அவன் தொழில் நூற்றல்.

   நான் சோறு உண்கிறேன்.

   என் தொழில் உண்ணுதல்.

ஆகவே, நூற்கிருன், உண்கிறேன் என்பன வினேச் சொற்கள்.

இவைகளேப் போல் இரண்டு வாக்கியங்கள் எழுது. வினேச்சொற்களேக் குறிப்பிடு.

# 19. கிழவனும் மூன்று குமாரர்களும்

| | | |
|---|---|---|
| வயோதிகன் | கடைசிமுறை | பாலியன் |
| புத்திமதி | கூடுமானவரை | நொடிக்குள் |
| ஒற்றுமை | பலமுறை | இளையவன் |
| மரணகாலம் | அனுபவம் | மூத்தவன் |
| கிட்டியது | யத்தனம் | சச்சரவு |

1. ஓர் ஊரில் ஒரு வயோதிகன் இருந்தான். அவனுக்கு வயது எண்பத்தைந்து இருக்கலாம். அவன் சில மாதகாலமாக நோயினால் கஷ்டப்பட்டான். அவனுக்கு மூன்று குமாரர்கள் உண்டு. அவர்கள் எப்பொழுதும் ஒருவரோடொருவர் சண்டையிடுவது வழக்கம். கிழவனுக்கு இது கொஞ்சமும் பிடித்த மில்லை. இவர்கள் ஒற்றுமை இல்லாமல் இருப்பதைப் பார்த்து மிகவும் மனம் வருந்தினான். எத்தனையோ முறை அவர்களுக்கு நல்ல புத்திமதிகளைச் சொல்லி யும் அவர்கள் கேட்கவில்லை.

2. கிழவன் தனக்கு மரணகாலம் கிட்டியதாகத் தெரிந்தான். ஆகவே தன் குமாரர்களுக்குக் கடைசி முறையாக நல்ல புத்தி கற்பிப்போம் என்று எண்ணி னான். குமாரர்களைத் தன் பக்கத்தில் அழைத்து, "நீங் கள் நமது தோட்டத்திற்குப் போய் ஒரு கட்டுச் சுள்ளி விறகு கொண்டு வாருங்கள்" என்றான். பிள்ளைகள் தங்களுடைய தந்தை சொன்னபடி விரைவாகத் தோட் டத்துக்குச் சென்று ஒரு கட்டுச் சுள்ளி விறகு கொண்டுவந்து தகப்பன் முன் வைத்தார்கள்.

3. கிழவன் தன்னுடைய குமாரர்களில் மூத்த வனை அழைத்து, "அப்பா! இந்த விறகுக் கட்டை ஒடி" என்றான். அவன் தன்னால் கூடுமானவரை முயன்றும் அந்த விறகுக் கட்டை ஒடிக்க முடியவில்லை. கிழவன் இரண்டாவது குமாரனை அழைத்தான். "அப்பா! நீ யாவது இந்தக் கட்டை ஒடி" என்று கூறினன். அவனும் பலமுறை ஒடிக்க யத்தனம் செய் தும் அவனால் ஒடிக்க இயலவில்லை. அப்பால் கடைசி மகனை அழைத்து, "நீ பாலியனாக இருக்கிறாய், ஆகை யால் நீஇதை ஒடிக்கக் கூடுமென்று எண்ணுகிறேன்" என்றான். அவனும் ஒடிக்க முயன்று, தன் முயற்சியில் வெற்றி அடையவில்லை.

4. கிழவன் இந்த நிலையில் தன் குமாரர்களை நோக்கி, "நீங்கள் இந்தக் கட்டை அவிழ்த்துத் தனித் தனியாகவுள்ள சுள்ளிகளை ஒடியுங்கள்" என்றான். அவர்கள் ஒரு நொடிக்குள் ஒடித்துவிட்டார்கள். கிழவனும் தன் கண்ணை மூடிவிட்டான்.

5. பிள்ளைகள் கிழவனுக்குச் செய்யவேண்டிய அடக்கம் முதலிய காரியங்களை முடித்துவிட்டு, ஒரு நாள் தமக்குள் பேசிக்கொண்டு இருந்தார்கள். அப் பொழுது இளையவன் தன் மூத்த தமையனிடம், "அண்ணா! நமது தந்தை தான் இறக்கும்போது சுள்ளி விறகுகளைக் கொண்டு வந்து ஒடிக்கச் சொன்னது எதற்காக? எனக்கு விளங்கவில்லையே" என்று கேட்டான்.

6. அப்பொழுது மூத்தவன், "தம்பி விறகுச் சுள்ளிகள் ஒன்று சேர்ந்திருந்தபோது நம்மால் அதனை ஒடிக்க முடியவில்லை. தனித்தனியாக அவைகளைப்

பிரித்ததும் நாம் ஒடித்து விட்டோம். அதுபோல நாம் ஒற்றுமையாக இருந்தால் எவராலும் நம்மைக் கெடுக்க முடியாது. இந்த நீதியை அல்லவா நமது தந்தை வெளிப்படச் சொல்லாமல் அநுபவமாகக் காட்டியிருக்கிறார்'' என்றான். சகோதரர் மூவரும் அது முதல் தங்களுக்குள் யாதொரு சண்டை சச்சரவும் இல்லாமல் ஒற்றுமையாக வாழ்ந்தார்கள்.

### கேள்விகள்

1. கிழவன் தனது குமாரர்களுக்கு உபதேசித்த புத்தி மதி என்ன ?
2. அந்தப் புத்திமதியை எந்த உதாரணத்தால் கற்றுக் கொடுத்தார் ?

### அப்பியாசம்

கீழ்க்கண்ட வாக்கியங்களில் கோடிட்ட இடங்களில் பொருத்தமான வார்த்தைகளை எழுது :—

1. ஓர்—ஒரு—இருந்தான். 2. அப்பா !—இந்த — கட்டை—என்றான்.

# 20. மரம் சாட்சியானது

| | | |
|---|---|---|
| ஏமாறுதல் | நீதிபதி | மருந்துகள் |
| அயல்தேசம் | சிறைவாசம் | பெருமை |
| சம்பாதித்தல் | ஏமாற்றுதல் | நியாயஸ்தலம் |
| ஏராளமான | வைத்தியர் | அதட்டுதல் |
| க்ஷேமலாபம் | தீர்ப்பு | சாட்சி |

1. அழகாபுரி என்னும் ஊரில் கோபாலன் என்னும் இளைஞன் ஒருவன் இருந்தான். அவனுடைய தந்தை இறக்கும்போது அவனுக்கு ஆயிரம் ரூபாய் சேர்த்து வைத்திருந்தார். கோபாலன் அயல் தேசங்களுக்குப் போய் ஏராளமான செல்வம் சம்பாதிக்க வேண்டுமென்று எண்ணினன். தன்னிடமுள்ள ஆயிரம் ரூபாயையும் என்ன செய்வது என்று அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை.

2. அவன் வீட்டுக்கு அடுத்த வீட்டில் ஒரு கிழவன் இருந்தான். அவனுக்கு ஏராளமான நிலங்கள், வீடுகள் எல்லாம் உண்டு. அவன் தன் வீட்டுத் தோட்டத்தில் ஒரு மரத்தடியில் நின்று கொண்டு இருந்தான். கோபாலன் அவனிடம் போய், "ஐயா, பெரியவரே! நான் அயல் தேசம் போக வேண்டியதிருக்கிறது; என்னிடம் இருக்கும் ஆயிரம் ரூபாயையும் நான் திரும்பி வரும் வரை காப்பாற்றி வைத்திருங்கள். நான் வந்ததும் பெற்றுக்கொள்ளுகிறேன். எனக்கு இந்த உதவியைத் தாங்கள் செய்யவேண்டும்" என்று கேட்டுக்கொண்டான். கிழவனும் அவ்விதமே செய்வதாகச் சம்மதிக்கவே, கோபாலன் தன் பணத்தை அவனிடம் கொடுத்துவிட்டு அயல் தேசம் போய் விட்டான்.

3. கோபாலன் மூன்று வருஷங்கள் கழித்துத் தன் ஊருக்கு வந்தான். தனக்கு உபகாரம் செய்த கிழவனைக் காணச் சென்று, அவனுடைய க்ஷேமலாபங்களை யெல்லாம் விசாரித்தான். சிறிது நேரம்

பேசிவிட்டு முடிவில் தன் பணத்தைத் தரும்படி கிழவனிடம் கேட்டான். கிழவனோ, "பணமேது? கிணமேது? உனக்கென்ன பித்தம் தலைமேல் ஏறிவிட்டதா? வைத்தியரிடம் போய் நல்ல மருந்துகள் வாங்கிச் சாப்பிடு, போ" என்று சொன்னான். கோபாலன், "பெரியவரே! இதென்ன காரியம்? ஒன்றும் தெரியாதவர் போலப் பேசுகிறீரே! உம்முடைய வயதுக்கும் பெருமைக்கும் இது பொருத்தமான செய்கை அன்று. தயவு செய்து பணத்தைக் கொடுத்துவிடும். இல்லாவிடில் வீணாக நாம் நியாயஸ்தலத்திற்குப் போக நேரிடும்" என்றான். ஆனால், கிழவன், "அடே! வீண் பொய் வார்த்தைகளைப் பேசாதே, உன்னாலாவதைப் பார், என்னாலாவதை நானும் பார்க்கிறேன். ஓடிப்போ, இங்கே நில்லாதே" என்று அதட்டிப் பேசினான்.

4. கோபாலன் உடனே நீதிபதியிடம் போய்இந்த வழக்கை முறையிட்டான். நீதிபதி ஒரு சேவகனை அழைத்துக் கிழவனைக் கூட்டிக் கொண்டு வரச் சொன்னார். கிழவன் வந்ததும் நீதிபதி, "கிழவரே நீர் இவரிடம் பணம் வாங்கினது உண்டா?" என்று கேட்டார். கிழவன், தான் யாதொரு பணமும் வாங்கவில்லை யென்று மறுத்து விட்டான்.

5. நீதிபதி, கோபாலனை நோக்கி, "உனக்கு சாட்சி உண்டா?" என்றுகேட்டார். கோபாலன் "நான் இந்தப் பெரியவர் வீட்டுத் தோட்டத்தில் மரத்தடியில் வைத்து இவரிடம் பணம் கொடுத்தேன். எனக்கு சாட்சியாரும் இல்லை" என்றான். நீதிபதி, "அப்படியானால் நீ போய் நான் அழைத்துக்கொண்டு வரச்சொன்னதாக மரத்தினிடம் சொல். அந்த மரம் தானே வரும்; போ" என்று கோபாலனிடம் சொல்லி யனுப்பினார். கோபாலன் அவ்விதமே சென்று மரத்தை அழைத்தான். மரம் அசையாமல் நின்ற இடத்திலே நின்றது.

6. கோபாலன் திரும்புவதற்குள் நீதிபதி கிழவனை நோக்கி, "கோபாலன் இந்நேரம் மரத்தண்டை

போயிருப்பாஞ ?'' என்று கேட்டார். கிழவன், "அந்த மரம் எவ்வளவு தூரத்திலிருக்கிறது! இதற்குள் அவன் எப்படிப் போக முடியும் ?'' என்முன். இந்தச் சமயம் கோபாலன் திரும்பி வந்து நீதிபதியிடம், "ஐயா தாங்கள் சொல்லியதைச் சொல்லி மரத்தை அழைத்தேன். மரம் நின்றபடியே நின்றது. நான் தங்களிடம் திரும்பி வந்துவிட்டேன்'' என்முன்.

7. நீதிபதி அவனைப் பார்த்து, "நீ போயிருக்கும் போது அந்த மரம் இவ்விடம் வந்து சாட்சி சொல்லிப் போய் விட்டது '' என்று சொல்லிக் கிழவனை நோக்கி, "நீ கொடுத்த வாக்குமூலமே நீ பணம் வாங்கிஞய் என்பதை நிரூபித்துவிட்டது. உடனே கோபாலனிடம் பணத்தைக் கொடுத்துவிடு. அன்றியும் நீ பொய் சொல்லி ஏமாற்றிய குற்றத்திற்காகப் பத்து மாதம் சிறை வாசமும் செய்ய வேண்டும்'' என்று தீர்ப்புக் கூறிஞர்.

8. கிழவன் பொய் சொன்னதால் பத்து மாதம் சிறைக்குச் சென்றுவிட்டு வீடு சேர்ந்தான்.

### கேள்விகள்

1. கோபாலன் தன்னிடமுள்ள ஆயிரம் ரூபாயை என்ன செய்தான் ?
2. கோபாலன் அயலூர் போய்த் திரும்பிக் கிழவனிடம் ரூபாய் கேட்டதற்குக் கிழவன் சொன்ன பதில் என்ன ?
3. கோபாலனுக்கு மரம் எப்படிச் சாட்சி சொன்னது ?

### அப்பியாசம்

கீழ்க்கண்ட வார்த்தைகளில் பொருத்தமானவைகளைக் கோடிட்ட இடங்களில் அமைத்து எழுது :—

உயரமான ஏராளமான ஆழமான
அழகான இனிமையான சூடான

1. கோபாலன்—பொருள் சம்பாதிக்க விரும்பிஞன்.
2. நான் ஒரு—குதிரை வாங்கினேன்.
3. — பால் கொண்டுவா.
4. தோட்டத்தில் ஒரு —கிணறு இருக்கிறது.
5. தோட்டத்தில் — மரங்கள் வளர்ந்திருக்கின்றன.
6. பாலன்—பாட்டுப் பாடிஞன்.



## 21. புத்தியில்லாத ஆமை

| | | |
|---|---|---|
| அன்னப் பறவை | தோழர்கள் | இரைச்சல் |
| உல்லாசம் | கௌவுதல் | இறகு |
| வேடிக்கை | நடு வழி | இதழ்கள் |
| ஆச்சரியம் | இரு முனை | நீந்துதல் |
| காரணம் | ஆகாயம் | வினவின |
| நேரிடுதல் | கூச்சல் | நுனி |
| வறண்டு போதல் | கூக்குரல் | கழி |
| ஆமை | அந்தோ | பட்சி |

1. ஒரு குளத்தில் இரண்டு அன்னப் பறவைகள் வசித்து வந்தன. அக்குளத்தில் தாமரை, அல்லி முதலியன முளைத்து அக்குளத்தை அழகு படுத்தின. அன்னப் பறவைகள் தாமரை இதழ்களைத் தின்றும், தாமரை இலைகளில் படுத்து உறங்கியும் காலங்கழித்து வந்தன. அத்தடாகத்தில் ஓர் ஆமையும் வாழ்ந்து வந்தது. அன்னப் பறவைகள் அந்த ஆமையுடன்

வெகு சிநேகமாக இருந்தன. அவை மூன்றும் தண்ணீரில் உல்லாசமாக நீந்தியும் வேடிக்கையாகப் பேசியும் நேரம் போக்கி வந்தன.

2. ஒரு சமயம் பல மாதங்கள் மழை பெய்யாது ஒழியவே, அத்தடாகத்தில் உள்ள தண்ணீர் வற்ற ஆரம்பித்தது. இன்னும் சில நாட்களில் குளம் வறண்டு போகும் என்பதை அன்னப்பட்சிகள் அறிந்து கொண்டன. ஒரு நாள் அவை ஆமையை நோக்கி, "நண்பா, இக்குளத்தில் தண்ணீர் குறைந்துகொண்டு வருகிறது. இனிமேல் இக்குளத்தில் நாங்கள் தங்கி யிருக்க முடியாது. ஆகையால் நாங்கள் வேருெரு தடாகத்துக்குச் செல்வதாகத் தீர்மானித்துள்ளோம். நீ என்ன செய்யப் போகிருய் ?" என்று வினவின.

3. ஆமை, "தோழர்களே, நீங்கள் உங்கள் இறக்கைகளின் உதவியால் பறந்து செல்லக்கூடும். எனக்கு அவ்வாறு பறந்து செல்ல இறக்கைகள் இல்லே. விரைவாக நடந்து செல்வதற்கு ஏற்ற நீண்ட கால்களும் இல்லே. என் குறுகிய கால்களின் உதவியால் நான் மிகவும் மெதுவாகவே நகர்ந்து செல்லக் கூடும். உங்களேப் பிரிந்திருக்க எனக்கு மனமுமில்லே. நீங்கள் எவ்விதமாகவாவது, என்னேயும் அழைத்துச் செல்லாவிட்டால் நான் என் வாழ் நாட்களேச் சந்தோஷமாகப் போக்க முடியாது" என்றது.

4. அன்னங்கள் ஆமையைச் சுமந்து செல்ல ஒரு யோசனே செய்தன. அவை ஒரு சிறிய கம்பைக் கொண்டு வந்து ஆமையின் முன்.வைத்து, "நண்பா! இந்தக் கழியை நீ பலமாகக் கௌவிக் கொள்ள வேண்டும். நாங்கள் இக்கொம்பின் நுனிகளே ஆளுக்கு ஒரு புறமாகப் பற்றிக்கொண்டு தூக்கிச் செல்வோம். வழியில் நீ எக்காரணம் பற்றியும் வாய் திறக்கக்கூடாது. வாய் திறந்தால் உன் கதி என்ன

ஆகும் என்பதை நீயே யோசித்துக்கொள்'' என்றன. அதற்கு ஆமை, "நடுவழியில் வாயைத் திறந்தால் கீழே விழுந்து உயிரை இழப்பேன். இது எனக்குத் தெரியாதா ?'' என்று கூறிக் கழியின் நடுப் பாகத்தைப் பலமாகக் கௌவிக் கொண்டது.

5. அன்னப் பறவைகள் கொம்பின் இருமுனைகளையும் பற்றிக்கொண்டு, ஆகாயத்தில் கிளம்பிப் பறந்து சென்றன. அவை மலைகளையும், காடுகளையும், நாடுகளையும் கடந்துசென்றுகொண்டிருந்தன. அவை ஓர் ஊரின் மேலாகப் பறந்து செல்லுகையில் கீழே நின்றுகொண்டிருந்த ஜனங்கள் அன்னப் பறவைகள் ஆமையைத் தூக்கிச் செல்வதைப் பார்த்தனர். அவர்கள் ஆச்சரியமுற்று, "ஆ ! இது என்ன புதுமை !'' என்று கூறி, இரைச்சலிட்டனர். அன்னங்கள் ஜனங்கள் போட்ட கூச்சலைச் சிறிதும் கவனியாது பறந்தன. ஆனால் ஆமை அந்தக் கூக்குரலின் காரணம் யாது என்று அன்னங்களிடம் கேட்கும் பொருட்டுத் தன் வாயைத் திறந்தது. அந்தோ ! அது உடனே தரையில் விழுந்து மாண்டது. இதைக் கண்ணுற்ற அன்னப் பறவைகள் மிகவும் வருத்தப்பட்டுக்கொண்டே பறந்து சென்றன. அன்னப் பட்சிகள் கூறியபடி ஆமை தன் வாயைத் திறவாமல் இருந்தால் அதற்கு இக்கதி நேரிட்டிராது அன்றோ ?

### கேள்விகள்

1. குளத்தில் இரண்டு அன்னப் பறவைகளுடன் எது வாழ்ந்து வந்தது ?
2. அன்னப் பறவைகள் ஏன் குளத்தை விட்டுப் பிரிய எண்ணின ?
3. அன்னப் பறவை வேறிடத்திற்குச் செல்லும்போது கூடப்போன ஆமையின் கதி என்னவாயிற்று ?
4. ஆமையைப் 'புத்தியில்லாத ஆமை' என்று சொல்லுவது எவ்விதம் பொருந்தும் ?

———




## 22. தமிழ்நாட்டு வீரர்

| | | |
|---|---|---|
| பாடுபட்ட | வறுமை | ஆவி |
| வருவாய் | வாணிபம் | அறிவுறுத்தி |
| நலன் | பணி | ஈடுபட்டு |
| தியாகம் | பிரசங்கம் | திறமை |
| சார்பில் | பரிந்து | நன்கொடை |
| குற்றம் சாட்டி | நூல்கள் | முதுமை |
| ஞாபகார்த்தமாக | காட்சி | உழைத்து |

1. தமிழ்நாட்டிலே நம் தேச மக்களுக்காகப் பாடுபட்ட பெரியார்களுள் சிதம்பரம் பிள்ளை என்பவர் ஒருவர். இவர் தமிழ்நாட்டில் தூத்துக்குடியை அடுத்துள்ள ஒட்டப்பிடாரம் என்னும் ஊரில் உலகநாத பிள்ளைக்குப் புதல்வராகப் பிறந்தார். வேளாளர் குலத்தினர்.

2. சிதம்பரம் பிள்ளை தம் தாய் மொழியாகிய தமிழை நன்கு கற்றறிந்ததோடு ஆங்கிலமும் கற்ருர்; சட்டப் பரீட்சையில் தேறினுர். ஓட்டப்பிடாரம் ஊரிலேயே வக்கீல் தொழில் நடத்தி வந்தார். இத்தொழிலில் இவருக்கு இருந்த திறமை முழுவதும் வெளிப்படச் சிற்றூரான ஒட்டப்பிடாரம் போதவில்லை. ஆகவே, இவர் தூத்துக்குடி சென்று அங்கே தம் தொழிலை நடத்திப் புகழ் பெற்ருர்.

3. இவருக்குத் தம் தொழில் மூலம் நல்ல வருவாய் வந்து கொண்டிருந்தது. ஆனுல் இவர், "நாம் மட்டும் சௌக்கியமாக வாழ்ந்தால் போதாது" என்று நினைத்தார். நாட்டு மக்கள் வறுமையாலும், அறியாமையாலும் கஷ்டப்படுவதைக் கண்டார். தம் உடல், பொருள், ஆவி இவைகளை நம் நாட்டு மக்களது நலனுக்காக அளிக்கத் துணிந்தார்.

4. "நாட்டின் வறுமை யொழிய ஒவ்வொருவரும் ஏதாவது கைத்தொழில் செய்தல் வேண்டும்; வாணிபமும் ஓங்கவேண்டும்; மக்கள் கல்வி கற்றுத் தங்களைச் சீர்திருத்திக் கொள்ளவேண்டும்" என்று மக்களுக்கு அறிவுறுத்தி வந்தார்.

5. வாணிபம் வளர்வதற்கு நம் நாட்டில் பல கப்பல்கள் இருக்கவேண்டும் என்பதை உணர்ந்தார். ஒரு கப்பல் கட்டுவதற்கே லட்சக்கணக்கான ரூபாய் செலவாகும். ஆதலால் கூட்டுறவு முறையில் சங்கம் அமைத்துக்கொண்டு கப்பல் வாங்கத் தீர்மானித்துப் பல ஊர்களுக்கும் சென்று பெருஞ் செல்வர்களைக் கண்டு பேசினுர். பல பங்குகள் சேர்த்துச் 'சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி' என்று ஒரு சங்கத்தை அமைத்தார். அதன் பெயரால் இரண்டு கப்பல்கள் வாங்கித் தூத்துக்குடிக்கும் கொழும்புக்கும் ஓடிவரச் செய்தார்.

6. கப்பல் வாங்கும் பணியில் ஈடுபட்டிருந்த சமயம் இவர் சிறிது காலம் பம்பாயில் தங்க நேரிட்டது. அப்பொழுது தூத்துக்குடியிலிருந்த அவரது மனைவி தேக அசௌக்கியம் அடைந்தாள். இவரது மகனும் நோய்வாய்ப்பட்டான். ஆகவே இவரது மனைவி இவரைப் பம்பாயைவிட்டுத் தூத்துக்குடிக்கு வரும்படி எழுதினாள். ஆனால் இவர் பம்பாயை விட்டுப் புறப்படவில்லை. 'கப்பலோடுதான் தூத்துக்குடிக்குப் புறப்படுவேன்; இல்லையேல் கடலில் விழுந்து உயிர்விடுவேன்' என்று பதில் எழுதிவிட்டார். இவ்விதம் நாட்டுச் சேவையில் ஈடுபட்டபொழுது இவர் தமது மனைவி மக்களைப் பற்றியும் கவலை கொள்ளவில்லை. என்னே இவரது தியாகம்!

7. சிதம்பரம் பிள்ளை தமிழில் அழகாகப் பிரசங்கங்கள் செய்வதில்திறமையுள்ளவர். மக்கள் மனத்திற் பதியும்படி பேசுவார். அக்காலத்தில் திருநெல்வேலியில் தேசாபிமான சங்கம் என்று ஒரு சங்கம் ஏற்பட்டது. இதன் சார்பில் சிதம்பரம் பிள்ளை திருநெல்வேலியிலும் தூத்துக்குடியிலும் பல பிரசங்கங்கள் செய்து வந்தார். தூத்துக்குடியில் மில் கூலியாட்களுக்காக முதலாளிகளிடம் பரிந்து பேசிக் கூலியை உயர்த்தும்படி வேண்டினார். அவர்கள் வேலை நிறுத்தம் செய்திருந்த பொழுது பொது மக்களிடம் நன்கொடை பெற்று அவர்களுக்கு உதவினார்.

8. இவ்விதம் இவர் தேச மக்களுக்காகப் பாடுபட்டு வந்தபொழுது அரசாங்கத்தார் இவர்மீது அரசியல் குற்றம் சாட்டி இவருக்குத் தண்டனை விதித்தனர். ஆகவே இவர் ஆறு வருஷ காலம் சிறையில் இருக்க வேண்டியதாயிற்று. அக்காலத்தில் இவர் பல நூல்களை ஆராய்ந்து வந்தார். அதன் பயனாக இவர் சிறையினின்று வெளிப்பட்டதும் பல புத்தகங்களை அச்சிட்டு வெளியிட்டார்.

9. சிதம்பரம் பிள்ளை தம் முதுமைப் பருவத்தில் சில காலம் கோவில்பட்டியிலும் பின்னர் தூத்துக்குடியிலும் வக்கீல் தொழில் நடத்தி வந்தார். 1936-ம் வருஷம் நவம்பர் மாதம் 18-ம் நாள் மரணமடைந்தார். இவர் உடல் மறைந்ததேயன்றி இவரது புகழ் நீடித்து நிற்கிறது; இவரது ஞாபகார்த்தமாக இக்காலத்தில் இவரது பெயரால் பல சங்கங்கள் நடந்து வருகின்றன. இவரது உருவப்படம் பல இடங்களில் காட்சி அளிப்பதைக் காண்கிறோம். தூத்துக்குடியில் இவரது பெயரால் கல்லூரி ஒன்று நடைபெறுகின்றது; கப்பல் கம்பெனி ஒன்றும் ஆரம்பிக்கப்பட்டுள்ளது.

10. பிள்ளைகளே! நீங்களும் இப்பெரியவரைப் போல் நாட்டுக்காக உழைத்துப் புகழ் அடைவீர்களாக!

## கேள்விகள்

1. சிதம்பரம் பிள்ளை பிறந்த ஊர் எது? தந்தை பெயர் யாது?
2. இவர் என்ன தொழில் பார்த்து வந்தார்? அத்தொழிலை எங்கெங்கு நடத்தினர்?
3. இவர் நாட்டுக்காகச் செய்த பணிகள் என்ன?
4. கப்பல் வாங்கும் பொருட்டு இவர் எடுத்துக் கொண்ட முயற்சிகள் என்ன?
5. இவர் தியாகி என்பதற்கு ஓர் உதாரணம் கொடு.
6. சிறைவாசம் இவருக்கு எவ்விதம் நன்மை அளித்தது?

## அப்பியாசம்

1. கீழே கொடுக்கப்பட்டிருக்கும் வாக்கியங்களில், இரண்டுவாக்கியங்களைச் சேர்த்து ஒரு வாக்கியமாக எழுது:-

(1) நான் புத்தகம் வாங்கினேன்.
நான் ஒரு கற்பலகை வாங்கினேன்.

(2) இது ஒரு அழகான வீடு.
இது ஒரு பெரிய வீடு.

(3) ஒரு குளத்தில் இரண்டு அன்னங்கள் வசித்தன.
ஒரு குளத்தில் ஓர் ஆமை வசித்தது.

2. சிதம்பரம் பிள்ளை பம்பாய்க்குச் சென்றார்.
அவர் இரண்டு கப்பல்கள் வாங்கினர்.

மேற்கண்ட வாக்கியங்களிலுள்ள வினைச் சொற்களைக் குறிப்பிடு.



# 23. சிறுவனது தியாகம்

| | | |
|---|---|---|
| போர்க்களம் | துவங்கி | எதிரி |
| வாகைசூட | வெற்றி | துணிந்து |
| புரிந்து | திண்ணம் | பகைவர் |
| இன்றேல் | சுவர்க்கம் | வீராவேசம் |
| அபவாதம் | கீர்த்தி | ஏளனம் |
| அரிந்து | படுகாயம் | சக்தியற்றது |

இடம்: டில்லியின் அருகே போர்க்களம்.

காலம்: இரவு.

உறுப்பினர்கள்: பிருதிவிராஜன், சேனாதிபதி, வீரர்கள்.

பிருதிவிராஜன் :— வீரர்களே! போர் தொடங்கிப் பல நாட்கள் ஆகியும் முடிவு எதுவும் காணோம். ஷாவுதீனுடைய சேனையோ, கடல் போன்று பரந்திருக்கிறது. நாட்கள் நீடித்தால் எதிரியின் பலம் மேலும் மேலும் அதிகரிக்கும். ஆதலின் நாளைத் தினம் எவ்விதத்திலும் பகை முடித்து வாகை சூடவேண்டும். என்ன சொல்லுகிறீர்கள்?

வீரர்கள் :—வெற்றி நமக்கே. (தங்கள் தங்கள் பட்டாக் கத்தியைத் தொட்டுக் கொண்டு) இப்பட்டாக் கத்தி சத்தியமாக, துணிந்து போர்புரிந்து நாளைத்தினம் வெற்றி காண்போம்; இது சத்தியம், சத்தியம்.

[அலங்காரன் என்னும் ராஜபுத்திரச் சிறுவன் ஓடிவந்து பிருதிவிராஜன் முன் தலைவணங்கி நிற்கிறான்.]

அலங்காரன் :—வேந்தே! பகைவர் எம்மாத்திரம்? நாம் ஓர் அடி முன் வைத்தால் அவர்கள் பத்து அடி பின் வாங்குவது திண்ணம். எனக்குப் படைத்தலைமை கொடுங்கள்; நான் பகைவர்களைக் கலங்கி ஓடும் படி செய்கிறேன். இல்லாவிட்டால் அவர்களது தலைகள் தரையில் உருளும்படி செய்கிறேன். இன்றேல் நான் வீர சுவர்க்கம் அடைகிறேன். என் உடைவாள்மீது ஆணை. எனக்குப் படைத் தலைமை கொடுத்தருளுங்கள்.

பிருதிவிராஜன் :—சேனாதிபதியே! பார்த்தீரா, இச்சிறு வனது வீரத்தை! இச்சிறுவனைப் போல் ஒவ் வொருவரும் வீராவேசம் கொண்டு எழுந்தால் வெற்றி நமக்கே. இச்சிறுவனுக்குப் படைத் தலைமை கொடுப்போமா?

சேனாதிபதி :—வேந்தரே! இவனோ பச்சைப் பாலகன்? 'இளங்கன்று பயமறியாது'. பகைவனுடைய வலிமையை இவனறியான்.

சேனாதிபதியின் துணைவன் :— என்னே, இச்சிறுவனது வீரம்! ஆயினும் சிறுவனுக்குப் படைத் தலைமை கொடுத்தால் பழுத்த படைத் தலைவர்களுக்கு அபவாதம் பிறக்குமே! என் செய்வது?

ஒரு வீரன் :—(மற்றொரு வீரனை நோக்கி) ஏ, பார்த்தாயா? இச்சிறுவனுக்குப் படைத் தலைமை வேண்டுமாம். என்ன வீரம்! என்ன தியாகம்!

பிருதிவிராஜன் :—சிறுவ ! உன் வீரத்தை மெச்சினேன். பகைவன் மிகவும் வலிமையுள்ளவன். தவிர, நம் குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பான ஜெயச் சந்திரனே அவனுக்கு உதவி புரிந்து வருகிறான். ஆதலின் உன் வீரத்தைப் பரீட்சிக்க இது சமயம் அல்ல.

அலங்காரன் :—அரசரே ! புலிக்குப் பிறந்தது பூனை ஆகுமா ? நம் குலத்தின் மானம் குறையாதிருக்க, என் தந்தையின் கீர்த்தி குலையா திருக்க......

[பிருதிவிராஜன் குறுக்கிட்டு]

பிருதிவிராஜன் :—சிறுவ! உன் தந்தையாரின் கீர்த்திக்கு என்ன குறைவு. அவர் ஒரு தியாகி !

அலங்காரன் :—அரசரே ! என் தந்தையாரின் உடல் மகோபா யுத்த களத்தில் காணப்படவில்லை. ஆதலின் அவர் முதுகுகாட்டி ஓடிவிட்டாரென்று என் நண்பர்கள் என்னை ஏளனம் செய்கின்றனர்.

பிருதிவிராஜன் :—(எழுந்து நின்று ஆவேசத்துடன்) சிறுவ! நீ மனங் கலங்காதே. உன் தந்தையார் தியாக மூர்த்தி ; மகோபா யுத்தத்தில் உன் தந்தையாரும் நானும் ஒருவர் பக்கம் ஒருவர் நின்று பகைவரை வெட்டி வீழ்த்தி வந்தோம். முதலில் நான் படு காயமடைந்து பூமியில் சாய்ந்தேன். உன் தந்தை யார் இரு கால்களும் இழந்து தரையில் வீழ்ந்தார். கழுகுகள் என் உடலைக் கொத்தித்தின்ன விரும்பி என்னைச் சுற்றி வட்டமிட ஆரம்பித்தன. அவை களைத் துரத்த நான் சக்தியற்று இருந்தேன். அப் பொழுது உன் தந்தையார் அவரது உடலிலிருந்து தசையை அரிந்து அப்புறம் வீசவே, கழுகுகள் அத்தசைத் துண்டுகள் வீழ்ந்த திசை நோக்கிச் சென்றன. பின்னர் சில படைவீரர்கள் என்னைத்

தூக்கிச் சென்று காப்பாற்றினார்கள். உன் தந்தையார் தம் உயிரைக் கொடுத்து என்னையும் என் மூலம் நம் தேசத்தையும் காப்பாற்றினார். அவரது தியாகமே தியாகம்! நீ உன் மனக் கவலையை விடுக. நான் உன் வீரத்தை மெச்சுகிறேன். உனக்குப் படைத் தலைமையும் தந்தேன்.

### கேள்விகள்

1. அலங்காரன் யார்?
2. அவன் பிருதிவிராஜனிடம் வேண்டிக் கொண்டது என்ன?
3. பிருதிவிராஜனுடன் போர் புரிந்து வந்தது யார்?
4. அலங்காரனுடைய தந்தையார் எவ்விதம் மரணம் அடைந்தார்?

### அப்பியாசம்

கீழ்க்கண்ட வாக்கியங்களில் கோடிட்ட இடத்தில் சரியான எழுத்தை எழுது:—

1. எனக்கு–படைத்தலைமை கொடுங்கள்.
2. குலத்தை–கெடுக்க வந்தவன் இவன்.
3. வீரர்கள் அவனை–தூக்கி–சென்றார்கள்.
4. எல்லோரும் அவனை–புகழ்ந்தார்கள்.

# ஆத்திசூடி

1. அறம் செய விரும்பு.
2. ஆறுவது சினம்.
3. இளமையிற் கல்.
4. இயல்பு அலாதன செயேல்.
5. ஈவது விலக்கேல்.
6. உடையது விளம்பேல்.
7. உத்தமனு யிரு.
8. ஊக்கமது க்கைவிடேல்.
9. ஊருடன் கூடி வாழ்.
10. எண்ணெழுத் திகழேல்.
11. ஏற்பது இகழ்ச்சி.
12. ஐயம் இட்டு உண்.
13. ஓதுவது ஒழியேல்.
14. ஔவியம் பேசேல்.
15. கண்டொன்று சொல்லேல்.
16. கீழ்மை அகற்று.
17. குணமது கைவிடேல்.
18. கூடிப் பிரியேல்.
19. கெடுப்பது ஒழி.
20. கேள்வி முயல்.
21. கொள்ளை விரும்பேல்.
22. சான்றோர் இனத்திரு.
23. சுளிக்கச் சொல்லேல்.
24. சூது விரும்பேல்.
25. செய்வன திருந்தச் செய்.
26. சேரிடம் அறிந்து சேர்.

27. சோம்பித் திரியேல்.
28. தந்தை தாய்ப் பேண்.
29. தீவினை அகற்று.
30. துன்பத்திற்கு இடம் கொடேல்.
31. தூக்கி வினைசெய்.
32. தெய்வம் இகழேல்.
33. தேசத்தோடு ஒத்துவாழ்.
34. நன்றி மறவேல்.
35. நன்மை கடைப்பிடி.
36. நாடு ஒப்பன செய்.
37. நூல் பல கல்.
38. நெற் பயிர் விளை.
39. நோய்க்கு இடம் கொடேல்.
40. பருவத்தே பயிர்செய்.
41. பிழைபடச் சொல்லேல்.
42. பூமி திருத்தி உண்.
43. பெரியாரைத் துணைக்கொள்.
44. பொருள் தனைப் போற்றி வாழ்.
45. மனம் தடுமாறேல்.
46. மீதூண் விரும்பேல்.
47. மூர்க்கரோடு இணங்கேல்.
48. மேன் மக்கள் சொற்கேள்.
49. மொழிவது அறமொழி.
50. வல்லமை பேசேல்.
51. வித்தை விரும்பு.
52. வெட்டெனப் பேசேல்.
53. வைகறைத் துயிலெழு.

# கொன்றைவேந்தன்

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
ஆலயம் தொழுவது சாலவும் நன்று.
இல்லறமல்லது நல்லறம் அன்று.
ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.
ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.

எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.
ஏவா மக்கள் மூவா மருந்து.
ஐயம் புகினும் செய்வன செய்.
ஒளவியம் பேசுதல் ஆக்கத்திற்கு அழிவு.
கிட்டாதாயின் வெட்டென மற.

கீழோராயினும் தாழ உரை.
கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி.
சான்றோர் என்கை ஈன்றோர்க்கு அழகு.
சூதும் வாதும் வேதனை செய்யும்.
தந்தை சொல் மிக்க மந்திரமில்லை.

தாய் சொல் துறந்தால் வாசகமில்லை.
திரை கடலோடியும் திரவியம் தேடு.
தேடாது அழிக்கின் பாடாய் முடியும்.
நுண்ணிய கருமமும் எண்ணித் துணி
நூல் முறை தெரிந்து சீலத்தொழுகு.

மாரியல்லது காரியம் இல்லை.
மீகாமன் இல்லா மரக்கலம் ஓடாது.
முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.
மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்.
வீரன் கேண்மை கூர் அம்பாகும்.

குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை.
சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்.
தீராக் கோபம் போராய் முடியும்.
தோழனோடும் ஏழைமை பேசேல்.
நல்லிணக்கமல்லது அல்லற் படுத்தும். 30

நீரகம் பொருந்திய ஊரகத் திரு.
நெஞ்சை ஒளித்தொரு வஞ்சக மில்லை.
நைபவ ரெனினும் நொய்ய உரையேல்.
பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்.
பாலோ டாயினும் காலம் அறிந்துண். 35

புலையும் கொலையும் களவும் தவிர்.
பொல்லாங்கு என்பவை எல்லாம் தவிர்.
மருந்தே ஆயினும் விருந்தோடு உண்.
ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு. 39

---

நவீன

# தமிழ்ப் பாட புத்தகம்

நான்காம் வகுப்பு Std IV




வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை
ஆதீன வித்துவான்
திருவாவடுதுறை






எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை
பப்ளிஷர்ஸ் :: திருநெல்வேலி

 [விலை அணா 8.

# முன்னுரை

'நவீன தமிழ்ப் பாட புத்தகம்' என்னும் புத்தக வரிசை இப்பொழுது புதிதாகச் சென்னை வித்தியா இலாகா அதி காரிகள் வெளியிட்டிருக்கும் பாடத்திட்டத்தை அநுசரித்து எழுதப்பட்டிருக்கிறது. சிறு பிள்ளைகளுக்குப் படங்களை பார்ப்பதிலேயே விருப்பம் இயற்கையாகச் செல்லும். ஆகையால், முதற் புத்தகத்தில் சிறுவர்கள் வீட்டிலும் சுற்றுப் பக்கங்களிலும் பார்த்தும் கையாண்டும் பழகியுள்ள பொருள்கள் படரூபமாக முதலில் காட்டப்பட்டிருக்கின்றன. பின்பு பொருள்களின் படங்களும் அவற்றின் பெயர்களும் காட்டப்பட்டிருக்கின்றன. இதனால் முன் படத்தைமட்டும் பார்த்த பிள்ளைகள் இப்பொழுது படத்தோடு எழுத்துக்களை யும் கவனிக்கிறார்கள். அதன்பின் அவர்கள் படித்த வார்த் தைகளை எழுதுவதற்கு உபயோகமான அப்பியாசங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த நிலையில் அவர்கள் முன் படித்த எழுத்துக்களைஎழுதி அப்பியாசம் செய்தல் வேண்டும். பின் சில எளிய பாடங்களும், கதை விளக்கப் படங்களும் பாட்டுக்களும் அமைக்கப்பட் டிருக்கின்றன.

இரண்டு, மூன்று முதலிய புத்தகங்களில், புதுப் பாடத் திட்டத்தை அநுசரித்து நூதன வார்த்தைகள் படிக்கிரம மாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சிறுவர்கள் மனதைக் கவரும்படியாகப் பாடங்கள் அநேகமாகக் கதையாகவே அமைக்கப்பட்டிருக்கின்றன. இப்பாடங்கள் அவர்களுக்கு நீதியையும், உலக அறிவையும், இயற்கைப் பொருள் ஞானத் தையும் உண்டாக்கும்படியான முறையில் வரிசைப்படுத்தப் பட்டிருக்கின்றன. ஒவ்வொரு பாடத்தின் ஆரம்பத்திலும் அப்பாடத்தில் வரும் சில முக்கியமான புதிய வார்த்தைகள் குறிக்கப்பட்டிருக்கின்றன. இன்றியமையாத கேள்விகளும் அப்பியாசங்களும் பாடத்தின் இறுதியில் சேர்க்கப்பட்டிருக் கின்றன.

ஆகவே, இப்புத்தகங்கள் மாணவர்களுக்கு நமது வித்தியா இலாகா அதிகாரிகள் கொடுக்க விரும்பும் மொழி அறிவை எளிதில் கொடுக்குமென்று நம்புகிறேன்.

திருநெல்வேலி
10—11—'39.

வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை,
தமிழ்ப் போதகாசிரியர்.

# பொருளடக்கம்

நவீன

# தமிழ்ப் பாட புத்தகம்

நான்காம் வகுப்பு

---

## 1. நரியின் தந்திரம்

| | | | |
|---|---|---|---|
| கானகம் | நெடுந்தூரம் | கடைசியாக | மிருகேந்திரன் |
| இருப்பிடம் | சமயம் | பாதச்சுவடு | ஒரு வேளை |
| ஆராய்ந்து | தந்திரம் | இனிமையாக | விடை |
| அஞ்சி | கோளரி | பிழை | அன்றோ |

ஒருநாள் ஒரு சிங்கம் கானகத்தில் உணவு தேடி அலைந்து கொண்டிருந்தது. அது நெடுந்தூரம் அலைந்து திரிந்தும், அன்று அதற்கு இரை கிடைக்கவில்லை. கடைசியாக அந்த மிருகேந்திரன் ஒரு குகையைக் கண்டது. கண்டதும் அது 'இந்தக் குகையில் நாம் போய்ப் பதுங்கி இருப்போம். ஏதேனும் மிருகம் இந்த வழியாகச் செல்லும். அப்போது நாம் அதனை நமக்கு உணவாகக் கொள்ளலாம்.' என்று நினைத்து, அந்தக் குகைக்குள் சென்று ஒளிந்து கொண்டது.

அந்தக் குகை ஒரு நரியின் இருப்பிடம். நரி இரை தேடுவதற்காக வெளியே சென்றிருந்தது. அந்தச் சமயத்திலேதான் சிங்கம் குகைக்குள் போய் ஒளிந்திருந்தது. நரி இரை தேடிவிட்டுத் தனது இருப்பிடத்துக்கு வந்தது.

நரி குகையின் பக்கத்தில் வந்ததும், அங்கே சிங்கத்தின் பாதச் சுவடுகளைக் கண்டது. நரி, 'நம்முடைய இருப்பிடத்தில் சிங்கம் ஒரு வேளை சென்று குடி இருந்தாலும் இருக்கலாம். எது எப்படி இருந்த போதிலும், இதனை ஆராய்ந்து பார்த்தே நாம் உட்செல்ல வேண்டும்' என்று தீர்மானித்து ஒரு தந்திரம் செய்தது.

நரி குகைக்குச் சிறிது தூரத்தில் விலகி நின்றுகொண்டு "குகையே! நான் வெளியேபோய்த் திரும்பி வரும்பொழுதெல்லாம் நீ என்னோடு இனிமையாகப் பேசுவாயே; இன்றையத் தினம் நீ என்னோடு பேசாத



காரணம் என்ன? உனக்கு நான் ஏதாவது தவறு செய்தேனா? நான் உன்னைத் தயவாகக் கேட்கிறேன். விரைவில் எனக்கு பதில் சொல். நீ விடை கூறா விட்டால் நான் உன்னை விட்டுவிட்டு வேறு இடத்திற்குக் ஓடிபோய்விடுவேன்'' என்று உரக்கச் சொன்னது.

இதைக் கேட்டுச் சிங்கம் ஏமாறி, 'இந்தக் குகை இதற்குமுன் எல்லாம் இந்த நரியோடு பேசும்போல்

தோன்றுகிறது. இன்றைக்கு நாம் இங்கே இருக்கிற காரணத்தால் இக் குகை நமக்கு அஞ்சிப் பேசாம லிருக்கிறது. குகையிலிருந்து பதில் வரவில்லையானல் நரிக்குச் சந்தேகம் உண்டாகி அது திரும்பிவிடும். நமக்குக் கைக்கு எட்டினது வாய்க்கு எட்டாது போகும். ஆகையால் குகை பதில் சொல்லுவதுபோல நாமே விடை கூறிவிட வேண்டும்' என்று எண்ணிற்று.

இவ்வாறு எண்ணிய கோளரி சிறிதும் தாமதம் செய்யாமல், "நரியாரே என்மீது சிறிதும் சந்தேகம் வேண்டாம். நான் வேறு நினைவாக இருந்து விட்டேன். என்னுடைய பிழையைப் பொறுத்துக் கொள்ளும் நரியாரே வாரும் வாரும்" என்று முழங்கியது.

இதைக் கேட்ட நரி, 'ஆகா! குகையினுள்ளே சிங்கம் அன்றே ஒளிந்து கொண்டிருக்கிறது! இனி இங்கே நின்றல் நமக்கு ஆபத்து நேரிடுவது நிச்சயம்' என்று நினைத்து, அவ்விடத்தை விட்டுக் காற்றிலும் வேகமாக ஓடி உயிர் தப்பியது.

'அறிவே ஒருவனை ஆபத்தில் காக்கும்.'

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—
   (1) சிங்கம் குகையைக் கண்டதும் என்ன நினைத்துக் குகைக்குள் ஒளிந்து கொண்டது ?
   (2) இரை தேடிவிட்டுத் திரும்பிவந்த நரி ஏன் வழக்கம் போல் குகைக்குள் நுழையவில்லை ?
   (3) குகைக்குள் சிங்கம் இருக்கிறதா என்பதை அறிய நரி செய்த தந்திரம் என்ன ?
   (4) சிங்கம் எவ்விதம் ஏமாறினது ?
2. (1) கீழ்க்கண்ட வார்த்தைகளைத் தனித்தனி வாக்கியங்களில் அமைத்து எழுது :—
   நெடுந்தூரம், கடைசியாக, ஒருவேளை, இனிமையாக
   (2) ஒரே அர்த்தமுள்ள வார்த்தைகளைக் குறிப்பிடு :—

| | | | |
|---|---|---|---|
| சமயம் | ஆகாரம் | சீக்கிரமாக | பதில் |
| இரை | விரைவில் | உத்தரம் | அஞ்சி |
| காடு | பயப்பட்டு | வேளை | கானகம் |

## 2. கருவங் கொண்ட கழுதை

| | | |
|---|---|---|
| அருகே | பட்டம் கட்டிக்கொள்ள | கூவி அழைத்து |
| புதர் | பின் தொடர்ந்து | குரல் |
| தயை | முயல்கிறது | இடி முழக்கம் |
| மிருகேந்திரன் | பதுங்கி | நடு நடுங்கி |
| சக்தி | முடிவில் | அறைந்து |

காட்டின் அருகே இருந்த வயலில் ஒரு கழுதையும் சேவலும் இரை தேடித் திரிந்து கொண்டிருந்தன. அப்போது காட்டிலிருந்து அந்த வழியாக ஒரு சிங்கம் ஓடி வந்தது. சிங்கத்தைக் கண்ட சேவல் கொஞ்சம் பறந்து ஒரு புதருக்குள் பதுங்கிக் கொண்டது. கழுதைக்கு இன்னது செய்வதென்பது விளங்கவில்லை. அது திகைத்துப் போயிற்று. ஆனால் சிங்கம் கழுதையைக் கவனிக்கவே இல்லை. அதற்கு அப்பொழுது பசி இல்லாததால் எந்தப் பிராணியையும் கொல்ல வேண்டும் என்ற எண்ணம் ஏற்படவில்லை. அது தயையோடும் பெருந்தன்மையோடும் கம்பீரமான தோற்றத் தோடும் அவ்வழியே சென்று, காட்டின் வேறொரு பக்கத்திற்குள் நுழைந்தது.

இதைக் கண்ட கழுதை, 'மிருகேந்திரனாகிய சிங்கம் இன்று நம்மைக் கண்டு பயந்து ஓடுகிறது; எருதையும் வாயில் கௌவிக்கொண்டு வாய்க்கால்களையும் தாண்டி ஓடக்கூடிய சக்தி இதற்கு இருந்தும் இப்பொழுது இது நமக்கு அஞ்சுகிறது. இனி நாமே மிருகராஜாவாகப் பட்டம் கட்டிக் கொள்ளலாம். இதோ நம்மைக் கண்டு மிகப் பயந்து ஓடிக்கொண்டிருக்கும் சிங்கத்தை இப்பொழுதே நாம் கொன்று ஒழித்துவிட வேண்டும்' என்று நினைத்தது. இவ்

விதமான எண்ணத்தோடு கழுதை சிங்கத்தைத் தொடர்ந்து சென்றது.

சிங்கம் இதனை அறியாமல் முன்னே போய்க் கொண்டிருந்தது. கழுதையோ, 'மனிதனையும் வாலால் அடித்துக் கீழே தள்ளிக் கொல்லக்கூடிய இந்த மிருக ராஜா, இப்பொழுது எனக்கு அஞ்சித் தப்பிக்கொள்ள முயல்கிறது. இது என் அதிர்ஷ்டம் அல்லவா?' என்று எண்ணிக் கொண்டே பின்தொடர்ந்து சென்றது. சிங்கமும் கழுதையும் காட்டிற்குள் இவ்விதமாக நெடுந்தூரம் சென்று விட்டன. முடிவில் கழுதை



சிங்கத்தை எப்படியாவது கூவி அழைத்து, அத னிடம் தன் பலத்தைக் காட்டிச் சண்டையிட வேண்டு மென்று தீர்மானித்தது.

கழுதை அச்சமயம் தன் குரலின் இனிமையையும் மிருக ராஜாவிற்குக் காட்ட விரும்பியது. உடனே அது நெடுங்குரல் எடுத்துக் கனைத்துக் கொண்டே சிங்கத் தைத் தொடர்ந்தது. சிங்கம் பெருங் கோபத்தோடு திரும்பிப் பார்த்தது. கழுதை தைரியமாகத் தன்னைத்

தொடர்ந்து வருவதைப் பார்த்து, அது அதிக பயங்கர மாகக் கர்ஜித்தது. அந்தக் கர்ஜனை இடி முழக்கம் போல் காடெங்கும் முழங்கியது. அதைக் கேட்டுக் காட்டிலுள்ள மிருகங்களெல்லாம் பயந்து நாலுபக்கங் களிலும் சிதறி ஓடின. கழுதையோ நடு நடுங்கிப் போய், இன்னது செய்வது என்று தெரியாமல் தன்னை மறந்து அப்படியே நின்று விட்டது. அப்பொழுது சிங்கம், பூனை எலியின் மேல்பாய்வதுபோல் ஒரே பாய்ச்சலில் அதன் மேல் பாய்ந்து, அதை ஒரே அறையில் அறைந்து கொன்று விட்டது.

பிள்ளைகளே, கருவங் கொண்டவர்கள் முடிவில் அழிந்து போவார்கள் என்பது இக்கதையினுல் விளங்குகிறது அல்லவா ?

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—
   (1) சிங்கம் வழியிலிருந்த கழுதையை ஏன் கவனிக்காமல் சென்றது ?
   (2) சிங்கம் கவனிக்காது சென்றதைக் கண்ட கழுதை என்ன செய்தது ?
   (3) சிங்கத்தைப் பின் தொடர்ந்து சென்ற கழுதை காட்டிற் குள் நெடுந்தூரம் போனதும் என்ன செய்தது ?
   (4) கழுதைக் குரலைக் கேட்ட சிங்கம என்ன செய்தது ?
2. அடியிற்கண்ட வார்த்தைகளைத் தனித்தனி வாக்கியங் களில் அமைத்து எழுது :—

| | | |
|---|---|---|
| பதுங்கிக் கொண்டது | வேருெரு | தாண்டி |
| பின்தொடர்ந்து | நெடுந்தூரம் | தைரியமாக |

3. அருகில்—இதே அர்த்தமுள்ள வேறு இரண்டு வார்த் தைகள் எழுது.

(2) அளி, அழி } இந்த வார்த்தைகள் அர்த்தத்தில் எவ்
அரை, அறை } விதம் வித்தியாசப்படுகின்றன.

'அந்த வழியாக ஒரு சிங்கம் ஓடிவந்தது.'– இது ஒரு வாக்கியம் இதில் எத்தனை வார்த்தைகள் இருக்கின்றன? இந்த வாக்கியத்திலுள்ள வார்த்தைகளை 'வழியாக ஒரு ஓடி சிங்கம் அந்த வந்தது'—என்று எழுதினுல சரியானபடி அர்த்தம் விளங்கவில்லை. வார்த்தைகளை அர்த் தம் விளங்கும்படியான முறையில் அமைத்தால் வாக்கியம் அமையும்.

கழுதை, தொடர்ந்து, சென்றது, சிங்கத்தைத்—இந்த வார்த்தை களை அமைத்து வாக்கியம் எழுது.

# 3. புத்தகமும் அச்சுத் தொழிலும்

| | | |
|---|---|---|
| பரப்புவதற்கு | கிரய சாசனங்கள் | பிரதி |
| சாதனம் | சரஸ்வதி மஹால் | பிரபலத்திற்கு |
| குமாஸ்தாக்கள் | செதுக்கி | மாறுபட்டு |
| பெருந்தொகையாக | பரிசீலனேகளை | உரியதாகும் |
| வாரி வகிர்ந்த | உருளை | தள்ளுகிறது |

உலகத்தில் அறிவைப் பரப்புவதற்கு முக்கியமான சாதனம் புத்தகமே. தற்காலத்தில் அச்சு எந்திரங்கள் மூலம் நமக்கு ஒவ்வொரு புத்தகத்திலும் ஆயிரக் கணக்கான பிரதிகள் அச்சிடப்பட்டுச் சொற்ப விலைக்குக் கிடைக்கின்றன.

அச்சு எந்திரம் உலகில் பரவியது சுமார் 400 வருடங்களுக்கு உள்ளாகத்தான். அதற்கு முன், மேல் நாடுகளில் புத்தகம் என்பது மிக அருமையாகவே இருந்தது. ஒரு புத்தகம் வேண்டுமானுல் பல குமாஸ் தாக்களுக்குச் சம்பளம் கொடுக்கவேண்டும். அவர்கள் பல நாள் உட்கார்ந்து எழுதவேண்டும். புத்தகத்தின் விலையும் பெருந் தொகையாக இருந்து வந்தது.

நமது நாட்டில் தாள் கூடச் சமீப காலத்தில்தான் பிரபலத்திற்கு வந்தது. நெடுநாளாக நம் முன்னேர் கள் நன்ருக வாரிவகிர்ந்த பனேயோலேயில் எழுத் தாணியால் எழுதி வந்தனர். கடைக்கணக்குகள் கிரய சாசனங்கள் முதலிய யாவும் ஓலேயிலேயே எழுதப்பட் டன. தஞ்சாவூர் சரஸ்வதி மஹாலில் இன்றும் ஓலே யில் எழுதிய பல நூல்கள் இருக்கின்றன. வேறு பல நாடுகளில் தோலிலும் கல்லிலும் கூட அவசியமான விஷயங்கள் குறிக்கப்பட்டுள்ளன.

அச்சுத் தொழில் முதலில் சீன தேசத்தில் தான் உற்பத்தியானது என்று தெரிகிறது. சிலர் மரப்பலகை

களில் எழுத்துக்களைச் செதுக்கி ஒவ்வொரு பக்கத்திற்கும் ஒரே அச்சாக உபயோகித்தார்கள். அந்த எழுத்துக்கள் அளவில் ஒன்றுக்கொன்று மாறுபட்டுமிருந்தன. பிற்காலங்களில் ஐரோப்பிய நாட்டினரும் பிற நாட்டினரும் அச்சு எந்திர விஷயமாகப் பரிசீலனைகளைச் செய்து, பலவித முன்னேற்றங்களைச் செய்தனர். மர எழுத்துக்களுக்குப் பதிலாக உலோகத்தில் ஒரே அளவுள்ள எழுத்துக்களை உண்டாக்கி உபயோகித்தனர். பக்கம் முழுவதையும் ஒரே அச்சாக எடுப்பதால் சிரமம் அதிகம் என்று கண்டு, ஒவ்வொரு எழுத்தையும் தனித்தனியாகப் பிரித்து, வேண்டும்போதெல்லாம் மாற்றிச் சேர்த்தனர். இவ்வாறு பல திருத்தங்களைச் செய்து, அதை உன்னத நிலைக்குக் கொண்டுவந்த பெருமை ஐரோப்பியர்களுக்கே உரியதாகும்.

புத்தகங்கள், பத்திரிகைகள் அச்சடிக்கும் பெரிய எந்திர சாலைகளைத் தற்காலம் போய்ப் பார்த்தால், அவற்றுள் வேலைகள் எவ்வாறு திறமையுடனும் துரிதத்துடனும் செய்யப்படுகின்றன என்று அறியலாம்.

உலோகத்தில் வார்க்கப்பட்டுள்ள எழுத்துக்களை 'ஸ்டிக்' என்று வழங்கப்படும் ஒரு கட்டையில் அடுக்கி சேர்த்துப் பின்பு, அதிலிருந்து பிரதி யெடுத்து அதிற் காணும் பிழைகளைத் திருத்திப் பக்கங்கள் சேர்த்து, அச்சு எந்திரத்தில் அமைக்கின்றனர். திறமைவாய்ந்த ஒருவர் அச்சு எந்திரத்தில் தாள்களைக் கொடுத்துக் கொண்டே இருப்பார். சில உருளைகள் தானாக உருண்டு எழுத்துக்களுக்கு மை தடவுகின்றன. எந்திரம் தானாகவே அத்தாளில் எழுத்துக்கள் பதியும் படியாகச் செய்து மறுபுறம் தள்ளுகிறது. வேண்டிய பிரதிகள் அடித்தான பிறகு அவற்றை மடிப்பார்கள்.

புத்தகங்கள் பெரும்பாலும் பாரங்களாக மடித்துத் தைக்கப்படும். அதன் பின்பு அவற்றை வெட்டும் எந்திரத்தால் அறுத்து ஒழுங்காக்கி விற்பனைக்கு அனுப்புவார்கள்.

இவ்விதம் குறைந்த தொகையில் யாவரும் எளிதில் புத்தகங்களை வாங்கிப் படித்து அறிவு விருத்தி பெற அச்சு எந்திரங்கள் சாதனமயிருக்கின்றன.

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—
   (1) புத்தகம் சொற்ப விலைக்குக் கிடைப்பது எதனால்?
   (2) முன்னால் புத்தக விலை பெருந்தொகையாக இருந்தது எதனால்?
   (3) காகிதங்கள் உற்பத்தியாவதற்கு முன் எவைகளில் செய்திகள் எழுதப்படலாயின?
   (4) அச்சு வித்தையின் வரலாறு யாது?
   (5) அச்சடிக்கப்படும் முறையை அறிந்தபடி எழுது.
2. (1) மூலம்—இந்தவார்த்தைக்கு இரு பொருள் கூறு.
   (2) பரப்புவதற்கு, உள்ளாகத்தான்-ஒவ்வொரு வார்த்தையையும் வாக்கியத்தில் அமைத்து எழுது.
   (3) எதிர்ப்பதங்கள் எழுது :— நாடுகள், சொற்ப விலை.
3. (1) கீழ்க்கண்ட வாக்கியங்களைப் பூர்த்தி செய் :—
   அசசு எந்திரங்கள் மூலம் —— பிரதிகள் அச்சிடப்பட்டு—— கிடைக்கின்றன.
   (2) நம் முன்னோர்———வகிர்ந்த——எழுத்தாணியால் எழுதி வந்தனர்.
4. கீழ்க்கண்ட வாக்கியங்களிலுள்ளபெயர்ச் சொற்களையும் வினைச் சொற்களையும் குறிப்பிடு :—
   (1) உலகத்தில் அச்சுத்தொழில் முதலில் சீன தேசத்தில்உற்பத்தியானது.
   (2) மர எழுத்துகளுக்குப் பதிலாக உலோகத்தில் ஒரே அளவுள்ள எழுத்துக்களை உபயோகித்தனர்.
   (1) பனை ஓலையில் எழுத்தாணியால் எழுது.
   (2) பனை ஓலையில் எழுதுதல் சிலருக்கு எளிதன்று,
   எழுது —வினைச்சொல்.
   எழுதுதல்—பெயர்ச்சொல்.

எழுதுதல் என்ற பெயர்ச்சொல் 'எழுது' என்ற வினைச்சொல்லிலிருந்து உண்டானது; அது தொழிற் பெயர்.

ஒரு தொழிலின் பெயராக வரும் சொல் தொழிற் பெயர் எனப்படும். இதனை வினைப் பெயர் என்றும் கூறுவர்.

அழை, போ, செய், கொடு—இந்த வினைச் சொற்களிலிருந்து உண்டாகும் தொழிற்பெயர்களைக் கூறு.

# 4. எலியின் சாமர்த்தியம்

| | | |
|---|---|---|
| சாமர்த்தியம் | ஆபத்து | அஞ்சி |
| சமயம் | வலை | வற்புறுத்தியது |
| விடுதலை | வாக்களி | எத்தனித்தான் |
| சத்துரு | விடுவிப்பேன் | வளை |
| தருணம் | கேடு | மகிழ்ச்சி |

ஒரு சமயம் பூனை ஒன்று ஒரு வலையில் அகப்பட்டுக்கொண்டது. அது வழியே சென்ற எலியை நோக்கி, " எலியாரே ! இவ்வலையைக் கடித்து என்னை விடுதலை செய்யும் " என்று வேண்டிக் கொண்டது. எலிக்கு இரக்கம் ஏற்பட்டது. எனினும், தன் பிராண சத்துருவை எப்படி நம்பலாம் என்று எலி யோசனை செய்தது.

இத்தருணத்தில் எலியைப் பிடித்துக் கொள்ள வேண்டும் என்று ஒரு பருந்து ஆகாயத்தில் வட்டம் இட்டுக் கொண்டிருந்தது. இப்புதிய ஆபத்திலிருந்து எலி உடனே தப்பிக்கொள்ள விரும்பியது. எனவே, அது பூனையை நோக்கி, "பூனையாரே! பருந்து என்னைக் கொல்லச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கிறது. நானும் இப்பொழுது இந்த வலைக்குள் வந்து விடுகிறேன். நீங்கள் என்னைக் காப்பாற்றுவதாக வாக்களிக்க வேண்டும். அப்படியானால், உங்களையும் நான் விடுவிப்பேன் " என்று கூறியது. பூனை அதற்குச் சம்மதித்தது.

எலி வலைக்குள் நுழைந்து கொண்டது. பூனைக்குத் தன் உதவி அவசியமாக இருந்ததால், அது தனக்குக் கேடு செய்யாது என்று எலி தைரியமாக இருந்தது. பருந்தோ வலையில் அகப்பட்டுக் கொள்ள அஞ்சி

எங்கேயோ பறந்து போய்விட்டது. பிறகு எலி மெல்ல மெல்ல வலைக் கயிறுகளைக் கடித்துக் கத்தரிக்க ஆரம்பித்தது. ஆனால் பூனை தப்பிக்கொள்ளும் அளவிற்கு அது வலையைக் கத்தரித்து விடவில்லை.

மீதமான பகுதியையும் கத்தரித்துத் தன்னை உடனே விடுவிக்கும்படி பூனை வற்புறுத்தியது. ஆனால், எலி பூனையை நோக்கி, "பூனையாரே! இங்கு வலை வைத்திருக்கும் வேடனைக் கண்டதும் உங்களை விடுவிப்பேன்; நீங்கள் பளிச்சென்று ஓடித் தப்பிக் கொள்ளலாம்; அப்படியானால்தான் உங்களால் எனக்கு ஆபத்து ஏற்படாது" என்று சொல்லிச் சும்மா இருந்தது.

சிறிது நேரத்தில் வேடன் அங்கே வந்தான். அப்பொழுது எலி பளிச்சென்று வலையைக் கடித்துப் பூனையை விடுவித்தது. "முதலில் பூனையைப் பிடிக்கலாமா, எலியைப் பிடிக்கலாமா?" என்று வேடன் யோசித்துக் கொண்டிருக்கையில், பூனை தப்பி ஓடிப் போய்விட்டது. ஓடிக்கொண்டிருந்த பூனையை முதலில் பிடிக்கலாம் என்று வேடன் எத்தனித்தான். அப்பொழுது, எலியும் சாமர்த்தியமாகத் தப்பிக் கொண்டு ஒரு வளைக்குள் நுழைந்து மறைந்து விட்டது.

வளைக்குள் வந்த எலி மகிழ்ச்சியோடு, 'இவ்வுலகில் வாழ்வதற்கு இரக்கத்தோடு சாமர்த்தியமும் வேண்டும்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டது.

அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—

(1) ஒரு சமயம் பூனைக்கு ஏற்பட்ட கஷ்டங்கள் யாவை?

(2) பூனை யாரை தனக்கு உதவி செய்யும்படி வேண்டிக் கொண்டது ?

(3) அச்சமயத்தில் எலிக்கு ஏற்பட்ட ஆபத்து யாது ?

(4) எலி பருந்திடமிருந்து தப்ப என்ன செய்தது ?

(5) எலி வேடனைக் காணும் வரையில் பூனையை விடுவிக்காமல் இருந்த காரணம் என்ன ?

2. (1) புதிய, அவசியம், தைரியம், நம்பிக்கை—எதிர்ப் பதங்கள் எழுது.

(2) தருணம், எத்தனித்தான், சத்துரு—ஒவ்வொரு வார்த்தைக்கும் அதே அர்த்தமுள்ள வேறு இரண்டு வார்த்தைகள் எழுது.

(3) இறக்கம், இரக்கம்—அர்த்த வேறுபாடு என்ன ?

. கொடுக்கப்பட்ட வார்த்தைகளிலிருந்து சரியான வார்த்தையைப் பொறுக்கிக் கோடிட்ட இடங்களில் அமைக்க :—

. (1) பூனை ———அகப்பட்டுக் கொண்டது.
(வலையில், வளையில்)

(2) எலி வலையை———பூனையை விடுவித்தது.
(அடித்து, கடித்து, கத்தரித்து)

(3) பையன் மாம்பழம் ———ஆசைப்பட்டான்.
(விற்க, தின்க)

ஒருநாள் ஒரு பூனை ஒரு வலையில் அகப்பட்டது.

இந்த வாக்கியத்திலுள்ள பெயர்ச் சொற்கள் எவை ?

நாள்— காலத்தைக் குறிக்கிறது. இது **காலப் பெயர்.**

பூனை, வலை – பொருள்களைக் குறிக்கின்றன. இவை **பொருட்பெயர்கள்.**

தொழிற்பெயர், காலப் பெயர், பொருட்பெயர் இவை ஒவ்வொன்றுக்கும் ஐந்தைந்து உதாரணங்கள் எழுது.

# 5. திருவிழாப் பார்க்கப் போதல்

| | | |
|---|---|---|
| திருவிழா | அக்கம் பக்கத்து | தமாஷாக |
| தலை கிறுகிறுக்கும் | ஏராளமாக | வருடந்தோறும் |
| உற்சவம் | பேரன் | |

[கோபாலன் வசிக்கும் ஊருக்குத் தெற்கில், சுமார் அரை மைல் தூரத்தில், நதிக்கரை யோரமாக இருக்கும் ஒரு கோவிலில் திருவிழா நடக்கிறது. கோபாலன் திருவிழாப் பார்க்கப் புறப்படுகிறான், அவனை மாதவன் சந்திக்கிறான். மாதவன் அவ்வூருக்குப் புதியவன்.]

மாதவன்:-கோபாலா! எங்கே போகிறாய்?

கோபாலன்:-திருவிழாப் பார்க்கப் போகிறேன். நீயும் வருகிறாயா?

மாதவன்:-வருகிறேன். அங்கு என்ன நடக்கும்?

கோபாலன்:-அங்கு ஏராளமான ஜனங்கள் அக்கம் பக்கத்துக் கிராமங்களிலிருந்தும், பட்டணங்களிலிருந்தும் சுவாமி தரிசனம் செய்ய வந்திருப்பார்கள். கூட்டம் அதிகமாக இருக்கும். அங்குப் பல கடைகளையும் வேடிக்கைகளையும் காணலாம்.

மாதவன்:-என்ன வேடிக்கைகள் அங்கு காணப்படும்?

கோபாலன்:-குடை - ராட்டு இருக்கும்; அதில் பலர் ஏறிச் சுற்றுவார்கள்.

மாதவன்:-குடை - ராட்டு என்றால் என்ன?

கோபாலன்:-குடை - ராட்டு நீ பார்த்தது இல்லையா?

மாதவன்:-இல்லை.

கோபாலன்:-குடை - ராட்டு என்பது ஒரு பெரிய குடை போல் இருக்கும். அதன் மேற்கூரையி

லிருந்து பலமான இரும்புக் கம்பிகளில் சில மரத் தொட்டில்களும், மரத்தால் செய்யப்பட்ட சிங்கம், புலி, குதிரை முதலியவைகளும் தொங்க விடப்பட்டிருக்கும். குடை-ராட்டில் சுற்ற விரும்பு கிறவர்கள் தங்களுக்கு விருப்பமான ஏதாவது ஒரு மிருகத்தின் மீதாவது தொட்டிலிலாவது உட்கார்ந்து கொண்டால், ஒருவன் குடை ராட்டைச் சுற்றுவான். அதில் தொங்கவிடப் பட்டிருக்கும் மரத்தாலான மிருகங்களும் தொட்டில்களும் சுற்றிச் சுற்றி வரும்.



மாதவன்:-குடை-ராட்டில் ஏற ஏதாவது பணம் கொடுக்க வேண்டுமா ?

கோபாலன்:-ஆம், பணம் கொடுக்க வேண்டும். அணுவுக்கு இருபது சுற்று அல்லது முப்பது சுற்று என்று கணக்கு உண்டு. அதன்படி குடை-ராட்டைச் சுற்றுவான்.

மாதவன்:-குடை-ராட்டில் ஏறிச் சுற்றுவது தமாஷாக இருக்கும் போலிருக்கிறதே!

கோபாலன்:-தமாஷாகத்தான் இருக்கும். ஆனால், சிலருக்குத் தலை கிறுகிறுக்கும்.

(இருவரும் பேசிக்கொண்டே வழிநடந்து கோயிலண்டை வந்து சேருகிறார்கள்.)

மாதவன்:-ஏ, அப்பா! என்ன கூட்டம்!

கோபாலன்:-இந்த வருடத்தில் சென்ற வருடத்தைப் போல் கூட்டம் இல்லையே!

மாதவன்:-அப்படியானால் ஒவ்வொரு வருடமும் இங்குத் திருவிழா நடக்குமோ?

கோபாலன்:-ஆம், வருடந்தோறும் தை மாதத்தில் இந்தக் கோயிலில் பத்து நாட்கள் உற்சவம் நடக்கும். பத்தாம் திருவிழா அன்றுதான் இங்கு அதிகக் கூட்டம் வரும்.

மாதவன்:-கோபாலா, நீ சொன்னபடி அநேக கடைகள் வந்திருக்கின்றனவே!

கோபாலன்:-கடைகளை எல்லாம் போய்ப் பார்ப்போம் வருகிறாயா?

மாதவன்:-சரி போவோம்.

(இருவரும் கடைகளைப் பார்த்துக்கொண்டு வருகிறார்கள்.)

கோபாலன்:-மாதவா, அதோ பார். ஒருவன் பலூன்கள் விற்கிறான். நான் இரண்டு பலூன்கள் வாங்கப் போகிறேன்.

மாதவன்:-கோபாலா, அதோ பார். அந்தத் தாத்தாவை! அவர் தம் பேரனுக்குப் பலூனை ஊதிக்

காட்டும்போது அவருடைய கன்னங்கள் வெடித்து விடும் போலிருக்கின்றனவே!

கோபாலன்:-குடை – ராட்டில் ஏறுவோமா?

மாதவன்:-உம்...ஏறுவோம். நீ எதன் மீது உட்காரப் போகிறாய்?

கோபாலன்:-நான் குதிரை மீது ஏறிச் சவாரி செய்யப் போகிறேன். நீ எதன் மீது ஏறப்போகிறாய்?

மாதவன்:-நான் தொட்டிலில் செளக்கியமாக உட்கார்ந்து கொள்கிறேன்.

[இருவரும் குடை-ராட்டில் ஏறிச் சுற்றுகிறார்கள். பின்னர் தின்பண்டங்கள் வாங்கித் தின்றுகொண்டு வீட்டுக்குத் திரும்புகிறார்கள்.]

## அப்பியாசம்

கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது:—

1. (1) கோபாலன் எங்கே புறப்பட்டுச் சென்றான்? வழியில் அவனைச் சந்தித்தது யார்?
   (2) குடை-ராட்டு என்பது என்ன?
   (3) உங்கள் ஊரில் நடைபெறும் ஏதாவது ஒரு திருவிழாவைப் பற்றிச் சில வாக்கியங்கள் எழுது.

2. (1) அரை. அறை, ஏரி, ஏறி | அர்த்தம் எவ்விதம் மாறுகிறது? வாக்கியங்களில் அமைத்து எழுது.
   (2) விரும்பு—இதன் தொழிற் பெயர் என்ன?
   (3) தமாஷாக, வருஷந்தோறும், அக்கம்—பக்கத்து இந்த வார்த்தைகளைத் தனித்தனி வாக்கியங்களில் அமைத்து எழுது.

3. அர்த்தம் விளங்கும்படி சேர்த்து வாக்கியங்களில் எழுது:—
   (1) திருவிழாப் பார்க்க ஏராளமான ஜனங்கள்
   (2) குடை-ராட்டின் மேற்கூரையிலிருந்து
   (3) குடை-ராட்டில் ஏறிச் சுற்றுவது

(4) சிங்கத்தைக் கண்ட சேவல் கொஞ்சம் பறந்து

(5) கிருஷ்ண தேவராயர் புரோகிதர்களுக்குத்

மிகவும் தமாஷாக இருக்கும்.

அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்து வந்தார்கள்.

சென்று ஒரு புதருக்குள் மறைந்து கொண்டது.

தங்கத்தால் செய்யப்பட்ட மாம்பழங்களைத் தானம் செய்தார்.

பலமான இரும்புக் கம்பிகளில் சில மரத்தொட்டில்கள் தொங்குகின்றன.

4. (1) எலி பூனையிடம் இரக்கம் கொண்டது.

(2) கோபாலன் கோவிலுக்குச் சென்றான்.

(3) குடை-ராட்டில் சுற்றும்பொழுது சிலருக்குத் தலை கிறு கிறுக்கும்.

மேற்கண்ட வாக்கியங்களிலுள்ள பெயர்ச் சொற்கள் எவை?

இரக்கம்—குணப் பெயர் (பண்புப் பெயர்)

தலை—சினைப் பெயர்.

ஆகவே, பெயர்ச் சொற்கள் 1. பொருட்பெயர், 2. காலப் பெயர், 3. தொழிற் பெயர், 4. பண்புப் பெயா, 5, இடப் பெயர் 6. சினைப் பெயர் என ஆறுவகைப்படும்.

ஒவ்வொரு வகைப் பெயர்ச் சொல்லுக்கும் நந்நான்கு உதாரணங்கள் எழுது.

# 6. ஒன்று பட்டால் உண்டு வாழ்வு

| | | |
|---|---|---|
| ஆகாயவீதி | தொடங்கின | விநோதம் |
| தலைமை வகித்த | சிக்கிக்கொண்டன | கண்ணுற்ற |
| ஆலோசித்து | வான வீதி | விரைவாக |
| ஏககாலத்தில் | சூழ்ந்துகொண்டு | பரிவாரங்கள் |

ஒரு காலத்தில் புறாக்களின் கூட்டம் ஒன்று ஆகாய வீதியில் பறந்து சென்று கொண்டிருந்தது. கீழே ஓரிடத்தில் தானியங்கள் தாராளமாகச் சிதறிக் கிடந்ததை அக்கூட்டம் கண்டது. கூட்டத்திலிருந்த சில புறாக்கள் அத்தானியங்களைப் பொறுக்கித் தின்ன வேண்டுமென்று ஆசை கொண்டன.

ஆனால் அக்கூட்டத்தில் தலைமை வகித்த கிழப் புறா, "அவ்வளவு தானியம் அங்குச் சிதறிக் கிடப்பதற்குக் காரணம் என்ன ?" என்று ஆலோசித்தது. பிறகு, அது "அங்கே அபாயம் இருக்கிறது. ஒரு வேடன் நம்மைப் பிடிப்பதற்காக வலையை விரித்து அதன் மேல் தானியத்தைப் பரப்பி இருக்கிறான்" என்று மற்றப் புறாக்களுக்கு எச்சரிக்கை செய்தது.

அவைகளோ தலைவன் சொல்லை நம்பாமல் தானியங்களின் மீதுள்ள ஆசையால், கீழே இறங்கித் தானியங்களைப் பேராசையோடு தின்னத் தொடங்கின. உடனே புறாக்கள் அடியில் கிடந்த வலையில் சிக்கிக் கொண்டன. தலைமைப் புறாவும் தன் கூட்டாளிகளை விட்டுப் பிரிய மனமில்லாமல் வலையில் அகப்பட்டுக் கொண்டது.

இப்பொழுது தலைவன் பேச்சைக் கேளாததற்காக புருக்கள் வருத்தம் அடைந்தன. உடனே கிழப்புரு, "நடந்ததைக் குறித்து வருந்துவதில் பயன் இல்லை. இனி எல்லாப் புருக்களும் ஏககாலத்தில் வலையோடு பறந்துவிட வேண்டும். இதோ வேடன்வந்துவிட்டான! இந்த நிமிஷமே நான் சொன்னபடி செய்யுங்கள்" என்றது. அப்படியே புருக்கள் ஒன்றுபட்ட மனத்தோடு வலையையும் தூக்கிக்கொண்டு வான வீதியில் பறந்து



சென்றன. அவ்விநோதத்தைக் கண்ணுற்ற வேடன் ஆச்சரியத்தோடும் ஆத்திரத்தோடும் வில்லும் கையுமாகப் புருக் கூட்டத்தைத் தொடர்ந்து ஓடினான்.

புருக்களோ விரைவாகப் பறந்து சென்று அவன் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போயின. கிழப் புரு அக்கூட்டத்தைத் தன் நண்பனான எலி ராஜனுடைய இருப்பிடத்தில கொண்டு சேர்த்தது. எலி ராஜன் பரிவாரங்களோடு வலையைச் சூழ்ந்து கொண்டு அதைக் கடித்துத் துண்டு துண்டாக்கி விட்டது.

புருக்கள் மகிழ்ச்சியோடு தங்கள் நன்றியைத் தெரிவித்து விட்டுப் பறந்து போயின.

அவை பறந்து போகும்போது "இனி நாம் தலைவனுக்கு அடங்கி ஒன்றுபட்டு வாழவேண்டும். ஒற்றுமையே பலம் என்ற வாக்கியத்தை நாம் ஒரு போதும் மறக்கலாகாது" என்று ஒரு முகமாகத் தீர்மானம் செய்து கொண்டன.

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—
   (1) தலைமை வகித்த கிழப் புரு சிதறிக் கிடந்த தானியங்களைப் பொறுக்கக்கூடாது என்று ஏன் சொன்னது ?
   (2) அந்தப் புருவின் பேச்சை மற்றப் புருக்கள் கேளாததால் அவைகளுக்கு என்ன கஷ்டம் நேரிட்டது ?
   (3) தலைமைப் புரு ஏன் வலையில் அகப்பட்டது ?
   (4) புருக்கள் எல்லாம் வேடனிடமிருந்து எவ்விதம் தப்பின ?
2. கோடிட்ட வார்த்தைகளுக்குப் பதில் வேறு சரியான வார்த்தைகளை அமைத்து எழுது :—
   விரும்பின,. யோசித்தது, ஆரம்பித்தன.
   (1) புருக்கள் தானியங்களைத் தின்னவேண்டுமென்று ஆசைகொண்டன.
   (2) கிழப் புரு தானியங்கள் சிதறிக் கிடப்பதற்கு என்ன காரணம் என்று ஆலோசித்தது.
   (3) புருக்கள் தானியங்களைப் பொறுக்கத் தொடங்கின.
3. (1) எதிர்ப்பதங்கள் எழுது :—
   வருத்தம், விரைவாக, ஒற்றுமை.
   (2) புருக்களோ விரைவாகப் பறந்து சென்று வேடன் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போயின :—
   இந்த வாக்கியத்தை இரண்டு வாக்கியங்களாகப் பிரித்து எழுது.
   புரு-ஒரு பொருளைக் குறிக்கும் பெயர். இது ஒருமை எண்.
   புருக்கள்— பல பொருளைக்குறிக்கும் பெயர். இது பன்மை எண்.

பெயர்ச் சொற்களை ஒருமைப் பெயர். பன்மைப் பெயர் என இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு வகைக்கும் ஐந்து உதாரணங்கள் இப்பாடத்திலிருந்து எடுத்து எழுது.

## 7. காகமும் அதன் பழக்க வழக்கங்களும்

| | | |
|---|---|---|
| சாதாரணமாக | கந்தை | அருந்துகின்றன |
| தொந்தரவு | சேமித்து | மாறிமாறி |
| பொறி | மீண்டும் | உணவளிக்கப்படுகின்றன |
| ஏமாந்து | மிருதுவாக | ஜீவிக்கின்றன |

சாதாரணமாகக் காணப்படும் பறவைகளில் காகமும் ஒன்று. காகத்தினல் நமக்கு உண்டாகும் துன்பங்கள் பல.

ஒரு நாள் எங்கள் வீட்டுச் சிறுவன் கிட்டு ஒரு முறுக்கைக் கையில் வைத்துக்கொண்டு வாசலில் நின்று கொண்டிருந்தான். ஒரு காகம் பறந்து வந்து அந்த முறுக்கைக் கௌவிக் கொண்டு பறந்து சென்றது. கிட்டு அழுது கொண்டே வீட்டுக்குள் வந்து, தாயாரைத் தொந்தரவு செய்து இன்னெரு முறுக்கு வாங்கிக் கொண்டான். அதுமுதல் அவனும் வீட்டிலுள்ள மற்றக் குழந்தைகளும் வீட்டுக்கு வெளியே தின்பண்டங்களைக் கொண்டுபோய்த் தின்னும் வழக்கத்தைக் கைவிட்டனர்.

ஒரு சமயம் நான் வீட்டில் திறந்த வெளியான முற்றத்திலுள்ள ஒரு கொடியில் என்னுடைய துணிகளை உலர்த்தி யிருந்தேன். ஒரு காகம் வந்து அத்துணிகளின் மீது உட்கார்ந்து எச்சமிட்டு அவைகளை அசுத்தப்படுத்திச் சென்றது.

இவ்விதம் காகத்தினல் நமக்குப்பல துன்பங்கள் நேரிடினும் சில நன்மைகளும் உண்டாகின்றன. நாம் நமது வீடுகளில் தொந்தரவு செய்யும் எலி, பெருச்சாளி இவைகளைப் பொறி வைத்துப் பிடித்துக் கொன்று தெருக்களில் எறிகிறோம். இவ்விதம் எறியப்படும்

பிராணிகளைக் காகம் எடுத்துச் சென்று அவ்விடங்களைச் சுத்தம் செய்கிறது.

நாய், கழுதை முதலியன இறந்து விட்டால், ஜனங்கள் அவைகளைக் கண்ட கண்ட இடங்களில் எறிந்து விடுவதுண்டு. காகங்கள் அவைகளைக் கொத்தித் தின்று ஆகாயம் அசுத்தமடையாதபடி செய்கின்றன.

காகங்களுக்கு எந்த உணவும் தள்ளுபடி இல்லை, அவை செத்த பிராணிகள், மீன்கள் இவைகளைத் தின்கின்றன. நம் வீடுகளில் வந்து நாம் எறியும் எச்சிற் சோறு, கறி இவைகளையும் தின்கின்றன. மிட்டாய்க் கடைக்குச் சென்று கடைக்காரன் ஏமாந்து இருக்கும் சமயம் பார்த்து மிட்டாய்களைத் தூக்கிச் சென்று உண்ணுகின்றன. நாம் உலர்த்தும் வடகம், வறறல் இவைகளையும் கொத்திக் கொண்டு போகின்றன. தரையிலுள்ள புழுப் பூச்சிகளையும் அலகினுல் கொத்தி உண்கின்றன. இவைகளை எல்லாம் பார்த்தால் காகங்கள் 'சர்வபட்சணிகள்' என்று சொல்லுவது பொருந்துமல்லவா ?

ஒரு காகம் ஏதாவது ஆகாரத்தைக் கண்டால் உடனே அது தன் இனத்தைக் கூவி அழைத்து உண்ணும். ஆண் காகம் தான் உண்டு மிகுந்த உணவைப் பெண் காகத்துக்குக் கொடுப்பதையும், குஞ்சுக்கு ஊட்டுவதையும் நாம் காணலாம்.

சில சமயங்களில் காகங்கள் அவைகளுக்குக் கிடைக்கும் ஆகாாத்தை ஓரிடத்தில் சேமித்து வைத்துக் கொண்டு பின்பு உண்பதும் உண்டு. ஒரு நாள்

மத்தியான வேளையில் நான் என் வீட்டின் மாடியிலுள்ள ஓர் அறையில் சன்னல் ஓரமாக உட்கார்ந்து கொண்டு தோட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். தோட்டத்தில் பல வாழை மரங்களும், இரண்டு வேப்ப மரங்களும், ஒரு முருங்கை மரமும் வளர்ந்திருந்தன. ஒரு காகம் தன்னுடைய அலகுநிறையச் சோற்றைக் கொண்டுவந்து ஒரு வாழை மரத்தில் உட்கார்ந்தது. உடனே நான் அதைக் கவனிக்கத் தொடங்கினேன். அது அந்த மரத்தின் பட்டையைச் சிறிது நீக்கி அதனுள் தான் கொண்டுவந்த சோற்றை வைத்து விட்டுப் பறந்து சென்றது. நான் இதைக் கண்டு ஆச்சரியமுற்றுத் தோட்டத்தையே கவனித்துக் கொண்டிருந்தேன். காகம் மீண்டும் தன் அலகு நிறையச் சோற்றைக் கொண்டுவந்து அந்த இடத்தில் வைத்து விட்டுச் சென்றது. இவ்விதம் அது நாலைந்து தடவைகள் சோற்றைக் கொண்டு வந்து சேமித்து வைத்தது. பிறகு, அது சாயுங்காலம் வந்து சேமித்து வைத்த உணவைப் புசித்துவிட்டுப் பறந்து சென்றது.

காகங்கள் மரங்களில் கூடுகளைக் கட்டி முட்டை யிடும். அவைகள் தங்கள் கூடுகளைச் சுள்ளிகளாலும் முட்களாலும் அமைக்கும். உட்பாகத்தில் மிருதுவாக இருக்கும்படி புல், கந்தை, வைக்கோல் முதலிய பொருள்களைப் பரப்பும். ஆண் காகத்தைக் காட்டிலும் பெண் காகத்துக்கே நன்கு கூடு கட்டத் தெரியும்.



பெண்காகம் இரண்டு முதல் ஐந்துவரை முட்டை களிடும். காகத்தின் முட்டைகள் பச்சை அல்லது பச்சையும் நீலமும் கூடிய நிறமுள்ளனவாகவும், பழுப் புப் புள்ளிகள் உள்ளனவாகவும் இருக்கும். முட்டை களை ஆண்காகமும் பெண்காகமும் மாறிமாறி அடை காக்கும். இரண்டு வாரங்களில் முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளிப்படும். பிறகு, சுமார் மூன்று வாரங் கள் வரையிலும் இக்குஞ்சுகள் பெற்றோர்களால் உணவளிக்கப்படுகின்றன. பின்னர் இவை பறந்து சென்று தாமே இரைத் தேடிக்கொள்ளுகின்றன.

காகங்கள் தம் குஞ்சுகளிடம் மிகவும் அன்பாக இருந்து அவைகளை ஆதரிக்கும். 'காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு' என்னும் பழமொழி வழங்கி வருவதை நீங்கள் கேட்டிருக்கலாம்.

அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—

(1) காகத்தால் உனக்கு ஏற்பட்ட ஏதாவது ஒரு துன்பத்தைப் பற்றிச் சில வாக்கியங்கள் எழுது.

(2) காகத்தால் நமக்கு ஏற்படும் நன்மைகள் யாவை ?

(3) காகங்கள் எவ்விதம் கூடுகளைக் கட்டிக்கொள்ளுகின்றன ?

4) காகத்தின் முட்டை எவ்விதம் இருக்கும் ?

..(1) சாதாரணமாக, ஆச்சரியமுற்று, மீண்டும், மாறி மாறி— இவைகளைத் தனித்தனி வாக்கியங்களில் அமைத்து எழுது.

(2) பல, சுத்தம் — இந்த வார்த்தைகளின் எதிர்ப்பதங்களை எழுது

(3) பொறி, பொரி அர்த்த வித்தியாசம் என்ன ?

மேற்கண்ட வாக்கியங்களிலுள்ள பெயர்ச் சொற்கள் எவை ?

கிட்டு — ஓர் ஆணைக் குறிக்கும் பெயர்.

லக்ஷ்மி — ஓர் பெண்ணைக் குறிக்கும் பெயர்.

ஆண் என்ற பிரிவைக் குறிக்கும் பெயர்ச் சொல் ஆண்பாற் பெயர் ஆகும். பெண் என்ற பிரிவைக் குறிக்கும் பெயர்ச் சொல் பெண்பாற் பெயர் ஆகும். பால் என்றால் 'பிரிவு' என்று அர்த்தம்.

ஜனங்கள் குப்பைகளைக் கண்டகண்ட இடங்களில் போடுகிறார்கள்.

ஜனங்கள் — பலரைக் குறிக்கும் பெயர். இது பலர்பாற் பெயர் ஆகும்.

# 8. விடுமுறை விண்ணப்பங்கள்

| | | |
|---|---|---|
| சுரம் | வணக்கமாக | கையொப்பம் |
| தயவுசெய்து | கீழ்ப்படிதலுள்ள | விலாசம் |
| விடுமுறை | மாணவன் | ஆசிரியர் |
| பணிவுமிக்க | மாணவி | அயலூர் |

மாதிரிக் கடிதம் 1

15, கீழரத வீதி,
மாணிக்கபுரம்.
8—8—'52.

ஐயா,

இன்று எனக்குத் தலைவலியும் சுரமும் இருப்பதால் தயவு செய்து இன்று மட்டும் விடுமுறை கொடுக்கும்படி மிகவும் வணக்கமாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு
தங்கள் கீழ்ப்படிதலுள்ள மாணவன்
ரத்தனசாமி.

தகப்பனார் கையொப்பம்:—சங்கரலிங்கம்.

விலாசம் :—

ஸ்ரீ

த. க. கந்தசாமிப் பிள்ளை,
4-வது வகுப்பு ஆசிரியர்.
ஜில்லாப்போர்டு பாட்சாலை,
மாணிக்கபுரம்.

அப்பியாசம்

நீ ஒரு கலியாணத்திற்கு உன் பெற்றோர்களுடன் அசலூருக்குப் போவதாக நினைத்துக்கொண்டு, உன் வகுப்பு ஆசிரியருக்கு ஒரு விடுமுறை விண்ணப்பம் எழுது.

# 9. புலியும் வழிப்போக்கனும்

| | | |
|---|---|---|
| வழிப்போக்கன் | நீதிபதி | அபிமானம் |
| கெஞ்சிக் கேட்டது | விவகாரம் | அமைதியாக |
| பிரயாணி | தெரிவித்தான் | பரிகாசமாக |
| பசி ஆறுவேன் | விவகரித்தது | உபதேசம் செய்தது |

ஒரு புலி கம்பிகளால் செய்த கூடு ஒன்றில் அடைபட்டிருந்தது. அதை ஒரு வழிப்போக்கன் கண்டான். அப்போது புலி அவனை நோக்கி "ஐயா, தயவு செய்து கூட்டைத் திறந்து என்னை விடுவிக்க வேண்டும்," என்று கெஞ்சிக கேட்டுக் கொண்டது.

பிரயாணி இரக்கம் உள்ளவன்; ஆனால் புத்தியில்லாதவன். எனவே, அவன் கூட்டைத் திறந்து புலியை வெளியே விட்டான். புலி வெளிப்பட்டதும் அவனை நோக்கி, "அடா! மூடா! உன்னை நான் இப்பொழுதே கொன்று தின்று பசி ஆறுவேன்" என்று பயமுறுத்தியது. பிரயாணி அதற்கு எவ்வளவோ சொல்லிப் பார்த்தான்; அவன் சொன்னதைப் புலி ஒபபுக்கொள்ளவில்லை.

அச்சமயம் ஒரு நரி அங்கே வந்தது. "இந்த நரியை நீதிபதி ஆக்கி, இதனிடம் நமது விவகாரத்தைச் சொல்லுவோம்; என்று பிரயாணி புலியிடம் சொன்னான். புலியும் சம்மதித்ததால், பிரயாணி நடந்த விஷயத்தை நரியிடம் தெரிவித்தான். புலி நடந்ததை ஒப்புக்கொண்டு நரியை நோககி, "நீதிபதியே இம்மனிதர்கள் எங்கள் இனத்திற்கு எவ்வளவோ துன்பம் இழைத்திருக்கிறார்கள். இவர்களைக் கண்ட இடங்களில் பலத்தாலும் தந்திரத்தாலும் கொன்று ஒழிப்பது நலம் என்று தன் கட்சியை எடுத்து விவகரித்தது.

நரி, "பொதுவாக மனிதனிடம் எனக்கு அபி
மானம் கிடையாது" என்று தந்திரமாகச் சொல்லிக்
கொண்டே புலியோடும் பிரயாணியோடும் கூடு
இருந்த இடத்திற்குச் சென்றது. பிறகு அது பிர
யாணியை நோக்கி, "நீ எங்கே நின்று புலியோடு
பேசிக்கொண்டிருந்தாய்? அந்த இடத்தைக் காட்டு"
என்று கேட்டது. பிரயாணி தான் முன் நின்றபடியே



நின்று காட்டினான். அப்பால் நரி புலியை நோக்கி
"வால் நீண்ட வரிப்புலியாரே, பிரயாணி அப்படி
நின்றுகொண்டிருந்த சமயத்தில் நீர் எப்படி இருந்தீர்?
எங்கே இருந்தீர்?" என்று அமைதியாகக் கேட்டது.

புலி பளிச்சென்று கூட்டினுட்சென்று, "நான்
இப்படி இருந்தேன்" என்று காட்டியது. உடனே நரி
பிரயாணியை நோக்கி அக்கூட்டை மூடிவிடச்சொல்லி
"ஓ புலியாரே, கூடு இப்படித்தான் மூடி இருந்ததோ?"

என்று பரிகாசமாகக் கேட்டது. பின்னர், அது பிரயாணியை நோக்கி, "ஓ மனிதனே இனி நீ உன் மூளையை எப்போதும் சரியாக உபயோகித்தல் வேண்டும்" என்று உபதேசம் செய்து விட்டுத் தன் வழியே போயிற்று.

## அப்பியாசம்

கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—

(1) புலியைக் கூட்டிலிருந்து விடுவித்தது யார் ?

(2) விடுவிக்கப்பட்ட புலி என்ன செய்தது ?

(3) பிரயாணி புலியிடமிருந்து விடுவிக்கப்பட்டது எவ்வாறு ?

(1) கொஞ்சி, கெஞ்சி, அர்த்த வேறுபாடு விளங்கும்படி தனித் தனி வாக்கியங்களில் அமைத்து எழுது,

(2) திறந்து, வெளியே—எதிர்ப்பதங்கள் எழுது.

(3) கோடிட்ட வார்த்தைகளுக்குப் பதில் வேறு வார்த்தைகளை அமைத்து வாக்கியங்களை எழுது.

(1) மனிதர் எங்கள் இனத்திற்கு எவ்வளவோ துன்பம் இழைத்திருக்கிறார்கள்.

(2) பிரயாணி நரியிடம் விவகாரத்தைச் சொன்னான்.

பிரயாணி கூட்டைத் திறந்தான்

பிரயாணி கூட்டைத் திறக்கிறான்.

பிரயாணி கூட்டைத் திறப்பான்.

திறந்தான், திறக்கிறான், திறப்பான்—இந்த வார்த்தைகள் ரயாணியின் தொழிலைக் குறிக்கின்றன அவ்விதம் ஒரு பொருளின் தாழிலைக் காட்டும் சொல் வினைச்சொல் ஆகும். வினைச்சொல் ாலத்தைக் காட்டும்.

திறந்தான்--இறந்தகாலம்

திறக்கிறான்—நிகழ்காலம்

திறப்பான்—எதிர்காலம்

# 10. தென்னையும் நாணலும்

| | | |
|---|---|---|
| நெடுநாள் | புயல் | முடி |
| தோற்றம் | வளைந்து வளைந்து | போதித்தாய் |
| இங்கும் அங்கும் | இருமுறை | புத்திமதி |
| இளங்காற்று | இடை இடையே | வெற்றி |
| நமஸ்காரம் | அநியாயம் | உழைத்து |
| துணிவு | இகழ்ந்தது | பகைவர் |
| பிதற்றுதே | புத்தியீனம் | ஊழியம் |

[உரையாடல்]

ஓர் ஆற்றங்கரையில் ஓர் உயர்ந்த தென்னையும் ஒரு நாணலும் நெடுநாள் சிநேகமாய் இருந்தன. தென்னைக்குத் தன் உயரத்திலும் கம்பீரமான தோற்றத்திலும் கருவம் அதிகம் உண்டு. ஒரு நாள் நாணல் காற்றில் இங்கும் அங்கும் ஆடுவதைத் தென்னை கண்டது.

தென்னை : நாணலே! நீ என்ன பூமி மட்டத்தில் வீசும் ஒவ்வொரு இளங்காற்றுக்குக் கூடத் தரையோடு தரையாய் நமஸ்காரம் செய்கிறாயே, இவ்வளவுதானா உன் சக்தி? என்னைப்பார். ஆகாயத்தில் வீசும் பெரிய காற்றிலே கூடச் சிறிதுதானே அசைகிறேன், பணிகிறேனா?

நாணல் : தென்னையாரே! அவரவருக்கு காலம் வரும் போது அவரவர் பெருமையைக் காணலாம்.

தென்னை : என்னைப்போல் ஆண்மையும் துணிவும் உடையவரைக் காலம் என்ன செய்யும்? அறியாமல் பிதற்றுதே, போ.

[புயலடித்ததும் நாணல் தரையோடு தரையாய் வளைந்து வளைந்து நமஸ்கரித்தது. தென்னை ஒரு முறை, இருமுறை வேகமாக ஆடுகிறது. இடை இடையே 'கிர்ர்-கிர்ர்' என்ற சப்தம் கேட்கிறது. தென்னை திடீரென்று அடியோடு சாய்ந்து விழுகிறது.]

நாணல்: ஐயோ! நண்பரே! நீர் அநியாயமாக விழுந்து விட்டீரே.

தென்னை: தம்பி, நாணலே! உன்னை அற்பன் என்று நான் இகழ்ந்தது எனது புத்தியீனந்தான். என்னை மன்னிப்பாயாக. வணங்காத முடியுடையவர்களும் ஒரு நாள் மண்ணில் விழுவர் என்பதை நீ எனக்குப் போதித்தாய்.



நாணல்: தென்னையாரே! உம்மிடம் எனக்கு வருத்தம் இல்லை, இரக்கமே. ஆனால், உமக்கு நான் ஒரு புத்திமதி சொல்லுகிறேன். பணிவாலும் அன்பாலும் ஒருவன் முழு வெற்றி அடைய முடியும்.

தென்னை : சரி என் வாழ்வு முற்றும் போனபின் இதை நினைத்து வருந்துவதால் என்ன பயன்.

நாணல் : நண்பரே! இறக்கும் நாளிலும் அன்பினால் நாம் உலகத்திற்கு உழைத்து மேன்மை அடையலாம். அதோ உம்மை வெட்ட ஒருவன் கோடரி கொண்டு வருகிறான். பகைவரையும் நேசித்து அன்புடன் அவருக்கு ஊழியம் செய்வதனால், தூல உடம்பு அழிந்தாலும் புகழுடம்பு நிலைத்து நிற்கும்.

தென்னை : உன் உபதேசம் கேட்டு மகிழ்ந்தேன். உனக்கு வந்தனம். உன் வாக்கின்படியே பிறருக்கு– நமக்குத் தீங்கு செய்யும் பகைவருக்கும்கூட—என்னாலான உதவியைச் செய்கிறேன். (விறகு வெட்டியிடம்) அன்பரே! உபயோகமற்ற என் உடலை வெட்டி நீர் உபயோகப் படுத்திக் கொள்ளும்.

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—
   (1) தென்னை மரம் ஏன் கருவம் கொண்டிருந்தது ?
   (2) தென்னை நாணலை ஏன் பரிகாசம் செய்தது?
   (3) புயலடித்த பொழுது தென்னைக்கு நேரிட்ட கஷ்டம் என்ன ?
   (4) நாணல் தென்னைக்கு என்ன புத்தி கூறியது ?

2. (1) கீழ்க்கண்ட வார்த்தைகளைச் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது :—

   நெடுநாள், இங்கும் அங்கும், வளைந்து வளைந்து, இடை இடையே, வாக்கின்படி, அவரவர், இருமுறை.

   (2) எதிர்ப்பதங்கள் எழுது :—

   உயர்ந்த, பெருமை, இகழ்ந்தது, வெற்றி, பகைவர்.

(3) தூல உடம்பு அழிந்தாலும் புகழுடம்பு நிலைத்து நிற்கும் :—

இந்த வாக்கியத்தின் அர்த்தத்தை விளக்கு.

ஒருவன் தென்னையை வெட்ட வருகிறான்.

அவன் கீழே விழுந்த மரத்தை வெட்டினான்.

வெட்ட, வருகிறான், விழுந்த, வெட்டினான்—இவை வினைச் சொற்கள்.

| | |
|---|---|
| வருகிறான்<br>வெட்டினான் | இவை அர்த்தம் முடிந்த வினைச் சொற்கள். அர்த்தம் முடிந்து நிற்கும் வினைச் சொல்லுக்கு வினை முற்று என்று பெயர். |
| வெட்ட<br>விழுந்த | இவை அர்த்தம் முடிவு பெறாத வினைச் சொற்கள். அர்த்தம் முடிவு பெறாத வினைச் சொல்லை எச்சவினை எனலாம். |

கீழ்க்கண்ட சொற்றொடர்களிலுள்ள வினை முற்றுக்களையும் எச்ச வினைகளையும் குறிப்பிடு :—

வீசும் காற்று, வளைந்து நமஸ்கரித்தது, சாய்ந்து விழுகிறது, நிலைத்து நிற்கும், கேட்டு மகிழ்ந்தேன், முறிந்த மரம், ஓடின பையன்.

1. கீழே கண்டவை என்ன காலம் என்று எழுது :

| | | |
|---|---|---|
| போயிற்று | போகும் | போகின்றன |
| கேட்டது | கேட்கும் | கேட்கின்றன |
| காட்டினான் | காட்டும் | காட்டுகின்றன |

2. பெயர்ச் சொற்கள், வினைச் சொற்களை எடுத்தெழுது :

| | |
|---|---|
| திருநெல்வேலி | படித்தான் |
| கோயில் | உண்டாள் |
| கண் | உண்டவன் |
| மாசி | பள்ளிக்கூடம் |

3. இந்தப் பாடத்திலே பயிலும் பெயர்ச் சொற்கள் வினைச் சொற்களை யெடுத்தெழுது.

4. இறந்த காலவினை முற்றுக்களை இந்தப் பாடத்திலே இருந்து எடுத்தெழுது.

# 11. யானைக்குப் பானை சரி

| | | |
|---|---|---|
| வாணிபம் | துக்கம் | ஆற்றல் |
| புதல்வி | மாவுத்தன் | தத்தம |
| விமரிசையாக | வாதித்தான் | வரவழைத்து |
| ஊர்வலம் | நியாயஸ்தலம் | சித்தமாய் |
| தானியம் | நீதிபதி | விடைபெற்றுக்கொண்டு |
| பட்டணப் பிரவேசம் | வக்கீல் | ஆஜராஞன் |
| வேழம் | வாதி | பலமுறை |
| மாண்டது | பிரதிவாதி | ஏகிவா |
| தெய்வச் செயலாய் | தீர்ப்பு | முறையிட்டான் |

சேர நாட்டில் கோட்டாறு என்பது ஒரு சிறந்த நகரம். இதிலே பலவகைத் தொழில்களும் செய்யும் மக்கள் வாழ்ந்து வந்தனர். பக்கத்துக் கிராமங்களி லிருந்து நெல், சோளம் முதலிய தானிய வகைகளை மொத்தமாக வாங்கி விற்பனை செய்து வந்தார் ஒரு வணிகர். இவர் ஆரம்பத்தில் சொற்ப முதலுடன் வாணிபம் செய்தார். வாக்கு நாணயத்தாலும் இனி மையாகப் பேசும் இயல்பினுலும் யாவரும் இவரிடமே தானியம் வாங்கிச் செல்வர். இவரும் ஜனங்களுடைய ஆதரவினுல் பெரும் செல்வராஞர்.

இவருக்குச் செல்வத்துக்கு ஏற்றபடி மக்கள் அதிகமில்லை. ஒரே ஒரு மகள்தான் உண்டு. அருமை பெருமையாக வளர்த்த தம் புதல்விக்குத் தக்க புருஷன் ஒருவனை நாகர்கோவிலில் தேடி மணம் செய்துவைக்க விரும்பிஞர். புதல்வியின் கலியாணத்தை மிகவும் விமரிசையாக நடத்திஞர். அவர் ஊர்வலத்திற்கான ஒரு யானையை வாடகைக்குப் பேசிக்கொண்டு வந் திருந்தார். பட்டணப் பிரவேசம் புறப்படும் முன் அவ் வேழம் திடீரென்று கீழே விழுந்து மாண்டது. வர்த்தகர்

மிகவும் வருத்தமுற்று யானைப் பாகனை நோக்கி, "அப்பா! உன் யானையின் விலையை நான் உனக்குக் கொடுத்து விடுகிறேன்; தெய்வச் செயலாய் ஏற்படும் கஷ்டத்துக்கு நாம் யாது செய்ய முடியும்? நீ உன் யானைக்காகத் துக்கப்பட வேண்டியதில்லை. நான் கொடுக்கும் பணத்தை எடுத்துக்கொள்'' என்று அவனிடம் யானைக்குரிய விலையைக் கொடுத்தார்.

ஆனால், மாவுத்தன் வணிகர் கொடுத்த பணத்தை வாங்கிக் கொள்ளாது, தனக்குத் தன் யானையே வேண்டும் என்று வாதித்தான். என் செய்வார் வணிகர்! "அப்படியானால், நீ என் இஷ்டப்படி என்ன வேண்டுமானாலும் செய்து கொள். இறந்த யானையை உயிர்ப்பித்தல் கூடுமா?'' என்று கூறி விட்டார்.

அக்காலத்தில் வழக்குகளை விசாரிக்க இக் காலத்தில் இருப்பது போன்ற நியாயமன்றங்களும் நீதிபதிகளும் இல்லை. வழக்குகளை எடுத்துரைக்க வக்கீல்களும் இல்லை. ஏதாவது வழக்கைத் தீர்த்துக் கொள்ள வேண்டுமானால், அந்த வழக்கு சம்பந்தமான வாதி பிரதிவாதிகள் தங்கள் ஊரிலோ அல்லது பக்கத்து ஊரிலோ உள்ள பெரியோரிடம் தங்கள் வழக்கைச் சொல்லித் தீர்த்துக் கொள்ளுவார்கள். இந்த வணிகர் வசித்த ஊருக்குப் பக்கத்து ஊரில் மர்யாதைராமன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் வழக்குகளை நன்கு ஆராய்ந்து அறிந்து சரியானபடி தீர்ப்புச் சொல்லும் ஆற்றலுடையவன். அவன் இருந்த ஊரிலுள்ளவர்களும் பக்கத்து ஊரிலுள்ளவர்களும் அவனிடமே தத்தம் வழக்குகளைத் தீர்த்துக் கொள்வார்கள்.

மாவுத்தன் மரியாதை ராமனிடம் சென்று தன் வழக்கைக் கூறினுன். அவன் வ ணி க ரை வர வழைத்து விசாரித்தான். வணிகர் மரியாதை ராமனே நோக்கி, "ஐயா! நான் யானையின் விலையைக் கொடுப் பதாக இந்த மாவுத்தனிடம் சொன்னேன் ஆனுல் அவன் தனக்குப் பணம் வேண்டாம் என்றும், தன் யானையே வேண்டும் என்றும் சொல்லுகிருன். இதற்கு நான் யாதுசெய்வது? தங்களுடைய தீர்ப்பின்படி நடக்க நான் சித்தமாயிருக்கிறேன்," என்ருன். மரியாதை ராமன் சிறிது நேரம் யோசித்தான். அவன் வாதி பிரதி வாதிகளை நோக்கி, சரி. "நாளை நீங்கள் இருவரும் வாருங்கள் தீர்ப்புச் சொலலுகிறேன்" என்ருன். இரு வரும் மரியாதைராமனிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டுப் போயினர். அவ்விருவரும் சிறிது தூரம் சென்றதும், மரியாதைராமன் வணிகரை மட்டும் தனி யாக அழைத்து ஏதோ சில சமாசாரங்களை இரகசிய மாகச் சொல்லி அனுப்பினுன்.

மறுநாள் மரியாதைராமன் கூறியபடி மாவுத்தன் அவன் முன் ஆஜராஞன். வணிகரோ வரவில்லை. மரியாதைராமன் மாவுத்தனை நோக்கி, "நீ போய் வ ணி க ரை அழைத்துவா" என்றனன். அவனும் விரைந்து சென்று வணிகரின் வீட்டை அடைந்தான். வீட்டின் கதவு மூடப்பட்டிருந்தது. மாவுத்தன் வெளியில் நின்ற வண்ணம் பலமுறை வணிகரை அழைத்தான்; பதில் இல்லை. பிறகு கதவைத் தட்டிஞன். கதவு திறந்தது. அப்பொழுது மரியாதைராமன் சொல்லிய யோசனைப்படி கதவுக்குப் பின்னுல் அடுக்கி வைத்திருக்கப்பட்டிருந்த மண் பானைகள் "கல கல" வென்று உருண்டு விழுந்து

உடைந்தன. வணிகர் ஓடி வந்து, "என் பானைகளை ஏன் உடைத்தாய்? என் பானைகளைக் கொடு" என்று மாவுத்தனை நோக்கிக் கூறினர். மாவுத்தன் பானைகளின் கிரயத்தைக் கொடுப்பதாகச் சொன்னன். ஆனல், வணிகர் ஒப்புக் கொள்ளவில்லை.

இருவரும் மரியாதைராமனிடம் ஏகினர். வணிகர் தம்முடைய வழக்கை மரியாதைராமனிடம் முறையிட்டார். மரியாதைராமன் மாவுத்தனை நோக்கி, "நீ என்ன சொல்லுகிருய்?" என்று வினவினன். மாவுத்தன் யாதொரு பதிலும் சொல்லாமல் விழித்தான். ராமன் மாவுத்தனை நோக்கி "உன் யானைக்கும் வணிகருடைய பானைக்கும் சரி. நீ வணிகருக்குப் பானைகளைக் கொடுக்க வேண்டியதில்லை" என்று தீர்ப்புக் கூறி, அவ்விருவரையும் அனுப்பினன். மாவுத்தன் விதண்டாவாதம் செய்ததாலன்றே அவனுக்குப் பெரு நஷ்டம் ஏற்பட்டது!

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—

(1) யானை இறந்ததும் வணிகர் மாவுத்தனிடம் என்ன கூறினர்?

(2) நீ உன்னை அந்த மாவுத்தனுக நினைத்துக்கொண்டு மரியாதை ராமனிடம் வழக்கை நேரில் சொல்லும் பாவனையில் எழுது.

(3) மரியாதை ராமன் வணிகனிடம் என்ன சமாசாரங்களை இரகசியமாகச் சொல்லியிருப்பான்?

(4) மாவுத்தன் வணிகரை அழைக்கச் சென்றபொழுது என்ன நேர்ந்தது?

(5) மரியாதை ராமன் வணிகரின் வழக்கை எவ்விதம் தீர்த்தான்?

2. (1) சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது :—

ஒரே ஒரு, வாடகைக்குப் பேசி, தெய்வச் செயலாய். வரவழைத்து, விடைபெற்றுக் கொண்டு, பலமுறை.

(2) மகள், புதல்வி—இவற்றின் ஆண்பால் என்ன?

(3) ஒரே அர்த்தமுள்ள வார்த்தைகளைக் குறிப்பிடு!—

| | | | |
|---|---|---|---|
| வேழம் | வருத்தம் | வேகமாக | தெய்வம் |
| விரைவாக | நியாயாதிபதி | துக்கம் | நீதிபதி |
| ஊர்வலம் | பட்டணப்பிரவேசம் | யானை | கடவுள் |

(4) எடுத்துரைக்க—இரண்டு பதங்களாகப் பிரி.

3. யானை கீழே விழுந்து இறந்தது

இறந்த யானை உயிர்பெற்று எழுதல் எங்ஙனம்?

மேற்கண்ட வாக்கியங்களிலுள்ள எச்ச வினைகள் எவை?

விழுந்து—இது 'இறந்தது' என்ற வினைமுற்றைத் தழுவுகிறது. இது வினை எச்சம்.

இறந்த—இது 'யானை' என்ற பெயர்ச் சொல்லைத் தழுவுகிறது. இது பெயர் எச்சம்.

இப்பாடத்திலிருந்து வினை எச்சம், பெயர் எச்சம் இவை ஒவ்வொன்றிற்கும் உதாரணம் எழுது.

# 12. கிராமச் சுகாதாரம்

| | | |
|---|---|---|
| பழமொழி | பருகும் | தொற்று நோய் |
| நோய்வாய்ப்படாமல் | காலி இடம் | குப்பை கூளம் |
| ஜனத்தொகை | தடையின் | தளவரிசை |
| ஆயினும் | ஏது ஆகும் | கைபிடிச் சுவர் |
| அறியாமை | நீர்நிலைகள் | சௌக்கியமாக |

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்னும் பழமொழியை நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். ஒருவருக்கு எவ்வளவு செல்வம் இருந்த போதிலும் அவர் வியாதியின்றி இருந்தாலொழிய யாதொரு சுகமும் அனுபவிக்க முடியாது. அசுத்தமே பல வியாதிகளுக்கும் காரணமாக இருக்கிறது. ஒவ்வொருவரும் நோய்வாய்ப் படாமல் சுகமாக இருக்க வேண்டுமானால், தத்தம் உடலைச் சுத்தமாக வைத்துக் கொண்டு, சுத்தமான உணவு, நீர், காற்று இவைகளை உட்கொண்டு வந்தால் மட்டும் போதாது, நாம் வசிக்கும் வீடு, வீட்டின் சுற்றுப்புறம் இவைகளையும் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும்.

நமது தேசத்தில் கிராமங்களே அதிகம்; நகரங்கள் மிகக் குறைவு. கிராமங்களில் ஜனத்தொகை குறைவாகவே இருக்கும். அங்குச் சுத்தமான காற்றும் தண்ணீரும் ஏராளமாகக் கிடைக்கும். ஆயினும், கிராமவாசிகள் தங்கள் அறியாமையால் தாம் சுவாசிக்கும் காற்றையும், பருகும் தண்ணீரையும் அசுத்தமாக்கிக் கொண்டு பல வியாதிகளுக்கு இரையாகின்றனர்.

கிராமங்களில் ஏராளமாகக் காலி இடங்கள் இருப்பினும், கிராமத்தார் தங்கள் வீடுகளை நெருக்க மாகக் கட்டிக் கொள்கிறார்களே யொழிய வீட்டுக்கு வீடு இடம் விட்டுக் கட்டுதல் கிடையாது, தவிர, வீடுகளில் பெரிய சன்னல்களை வைத்துக் கட்டுவதும் இல்லை. இவ்விதமாகத் தங்கள் வீடுகளுக்குள் சுத்தமான காற்று வீசவொட்டாது தடுத்துக் கொள் கின்றனர். மேடான இடத்தில் காற்று தடையின்றி வீசும்; மழைத் தண்ணீர் தங்கி நில்லாது. ஆதலின் மேடான இடங்களில் வீட்டுக்கு வீடு இடம்விட்டு பல சன்னல்களையும் அமைத்து வீடுகளைக் கட்டிக் கொண்டு வசித்தால் நல்ல காற்றைப் பெறமுடியும்.

வீடுகளையும் தெருக்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ளவேண்டும். வீட்டின் தரையை அடிக்கடி பெருக்கி மெழுகி சுவர்களை ஒட்டடை நீக்கிச் சுத்தம் செய்து கொள்ளவேண்டும். வீட்டில் சேரும் குப்பை களைத் தெருவில் கொட்டக்கூடாது. தெருவில் சேரும் அசுத்தங்கள் பல வியாதிகள் ஏற்பட ஏது ஆகும். சாக்கடை நீரை வீட்டண்டையில் தேங்கவிடக்கூடாது. சாக்கடைகளில் கொசுக்கள் உற்பத்தியாகின்றன. இக்கொசுக்கள் மலேரியா சுரத்தைப் பரவச் செய் கின்றன. ஆதலால், சாக்கடை நீரை வீட்டின் பக்கங் களில் தேங்கவிடாது, தோட்டத்திலுள்ள மரம் செடி களுக்குப் பாய்ச்சுவது நல்லது. ஒவ்வொருவரும் தத் தம் வீட்டையடுத்துள்ள இடத்தைச் சுத்தமாக வைத்துக் கொண்டால், வீதிகள் சுத்தமாக இருக்கும்; கிராமம் முழுவதும் சுத்தமாயிருக்கும்.

ஆறு, குளம், கிணறு முதலிய நீர் நிலைகளையும் அவைகளை யடுத்துள்ள இடங்களையும் அசுத்தப்

படுத்தக்கூடாது. அசுத்தத் தண்ணீரைக் குடிப்பதால் பலர் பல தொற்று நோய்களால் வருஷந்தோறும் இறக்கின்றனர். ஆறு, குளம், வாய்க்கால் முதலிய நீர் நிலைகளில் ஸ்நானம் செய்வதாலும், துணிகளைத் துவைப்பதாலும், பாத்திரங்களைக் கழுவுவதாலும் ஆடு மாடுகளைக் குளிப்பாட்டுவதாலும் அங்குள்ள தண்ணீர் அசுத்தமடைகிறது. இவ்விதம் அசுத்தம் அடைந்த தண்ணீரைப் பருகுவதனாலேயே பலர் தொற்று நோய்களுக்கு இரையாகின்றனர். நாம் குடிக்க உபயோகிக்கும் நீர், கிணற்று நீராக இருந் தால் மிகவும் நல்லது. கிணற்றுப் பக்கத்தில் குப்பை கூளங்களைப் போட்டு வைத்தல் கூடாது. மலஜலம் கழிக்கக் கூடாது. இந்த அசுத்தங்கள் மழைத் தண்ணீரில் கரைந்து, பூமிக்குள் இறங்கிக் கிணற்று நீருடன் சேர்ந்து அதை அசுத்தப்படுத்தும். கிணற் றைச் சுற்றிலும் தண்ணீர் தேங்கி நிற்காதபடி தள வரிசை அமைக்கப்பட்டிருக்க வேண்டும். கழிவு நீர் கிணற்றுக்குள் இறங்காதபடி கிணற்றுக்கு உயரமான கைபிடிச் சுவர் கட்டியிருக்க வேண்டும். கிணற்றின் அருகில் மரங்களை வளரவிடக்கூடாது. மரங்கள் இருந்தால், அதன் இலை, தழைகள் கிணற்று நீரில் விழுந்து அழுகித் தண்ணீரை அசுத்தப்படுத்தும்.

தவிர கிராமங்களில் கண்ட கண்ட இடங்களில் மலஜலம் கழிக்கும் வழக்கம் இருக்கிறது. இவ் வழக்கம் ஒழிவதற்கான முறைகளைக் கைக்கொள்ளல் வேண்டும். ஒவ்வொரு கிராமவாசியும் கிராமச் சுகா தாரத்தைக் கவனித்துச் சுகமாக வாழவேண்டும்.

1 கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—

(1) நோய்வாய்ப்படாமல் சுகமாக இருக்க நாம் கைக்கொள்ள வேண்டியவைகள் எவை ?

(2) உன் வீட்டிலிருக்கும் கிணற்றுத் தண்ணீர் அசுத்தமடையாது இருக்க நீ என்னென்ன முறைகளைக் கையாள வேண்டும் ?

(3) கிராமவாசிகள் கிராமச் சுகாதார சம்பந்தமாகக் கவனித்துக் கொள்ள வேண்டியவைகள் எவை ?

2. (1) வீட்டுக்கு வீடு, சௌக்கியமாக—தனித்தனி வாக்கியங் களில் அமைத்து எழுது.

(2) மேடான, சுத்தமான—எதிர்ப்பதங்கள் எழுது.

(3) வீட்டண்டை—இரண்டு பதங்களாகப் பிரித்து எழுது.

3. (1) குளத்தின் கரை உடைந்து விட்டது.

(2) சர்க்கரையைத் தண்ணீரில் கரை.

மேற்கண்ட வாக்கியங்களில் வந்துள்ள 'கரை' என்ற இரண்டு சொற்களில் எது பெயர்ச் சொல் ? எது வினைச் சொல் ?

———

# 13. தெனாலிராமன் குதிரையை வளர்த்தல்

| | | |
|---|---|---|
| லாயம் | ஏவலாளர் | ஆக்கினை |
| திரவியம் | இளைதது | ஆக்ஞை |
| பாதுகாத்து | கட்டளை | அலறிக்கொண்டு |
| ஆணை | கொற்றவன் | கடிந்து |

ஒரு சமயம் கிருஷ்ண தேவராயருடைய லாயத்தில் பல குதிரைக் குட்டிகள் இருந்தன. அவர் அக் குதிரைக் குட்டிகளை நன்கு காப்பாற்றி வளர்க்க நினைத்தார். தமது சபையிலுள்ள பலரை அழைத்து, ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு குதிரைக் குட்டியை ஒப்புவித்து, அதை நன்றாக வளர்த்துக் கொண்டு வரவேண்டும் என்று உத்திரவு செய்தார். குதிரைக் குட்டிகளின் தீனிச் செலவுக்காகப் போதுமான திரவியம் கொடுத்தார். தெனாலிராமனும் அரசரிடம் ஒரு குதிரைக் குட்டியையும் அதன் தீனிச் செலவுக்கு வேண்டிய பொருளையும் பெற்றுச் சென்றான்.

குதிரைக் குட்டிகளை வளர்க்கக் கொண்டு போனவர்களில் தெனாலிராமனைத் தவிர மற்றவர்கள் அரசரது ஆணைக்குப் பயந்து குதிரைக் குட்டிகளை நன்கு வளர்த்து வந்தார்கள். அவைகளும் தங்களுக்கு உணவாக அளிக்கப்பட்ட புல், கொள் இவைகளைத் தின்று வளர்ந்து பருத்துக் கொழுத்திருந்தன.

தெனாலிராமன் குதிரைக் குட்டியின் தீனிக்காகத் தன்னிடம் கொடுக்கப்பட்ட பணத்தை எல்லாம் தன் சொந்தச் செலவுக்கு உபயோகித்துக் கொண்டான். குதிரையை ஒரு லாயத்தில் அடைத்துக் கதவைப் பூட்டினான். அந்த லாயத்தின் ஒருபுறச் சுவரில் தலை நுழையக்கூடிய அளவுள்ள ஒரு துவாரம் இருந்தது.

தெனுலிராமன் தினந்தோறும் காலேயிலும் மாலேயிலும் ஒரு பிடி புல்லே, அந்த வாயிலின் வழியாகக் காட்டு வான். பட்டினியால் வாடும் அக் குதிரைக் குட்டியும் வெகு ஆவலுடன் அப்புல்லேத் தெனுலிராமனுடைய கையிலிருந்து பிடுங்கித் தின்னும். போதுமானபடி தீனி போடாததால் அது இளேத்துப் போயிற்று. .

சில மாதங்கள் கழித்தபின், கிருஷ்ண தேவராயர் அனேவரையும் குதிரைக் குட்டிகளேக் கொண்டு வரும்படி கட்டளேயிட்டார். தெனுலிராமனேத் தவிர மற்றவர்கள் தாம் தாம் வளர்த்த குதிரைக் குட்டிகளேக் கொண்டு வந்தனர். அக் குதிரைக் குட்டிகள் பருத்துக் கொழுத்து வளர்ந்திருந்ததைக் கண்டு அரசர் சந்தோஷப்பட்டார். அவர் தெனுலிராமனே நோக்கி, "நீ வளர்க்கக் கொண்டுபோன குதிரைக் குட்டியை ஏன் கொண்டு வரவில்லே ?" என்று வினவினுர்.

தெனுலிராமன், "வேந்தே, அந்தக் குதிரைக் குட்டியின் பக்கத்தில் எவரும் போக முடியவில்லே அது மிகவும் முரடாக இருக்கிறது. ஆகையால் அனேவரும் அதன் அருகில் செல்ல அஞ்சுகின்றனர். அதைப் பிடித்துவர நீங்கள் பலசாலியான ஒரு வேலேயாளே என்னுடன் அனுப்புங்கள்" என்று கூறினுன். கொற்றவனும் தன் ஏவலாளருள் மிகுந்த பலமுளளோன் ஒருவனே அழைத்து, "நீ தெனுலிராமனுடன் சென்று, அவன் வளர்த்துவரும் குதிரைக் குட்டியைப் பிடித்து கொண்டு வா" என்று ஆக்கினே இட்டார். அப்பணியாளனும் வேந்தனது ஆணேப்படி தெனுலிராமனுடன் சென்முன்.

அந்த ஏவலாள் நீண்ட தாடியும் மீசையும் உடையவன். தெனுலிராமன் அவனேக் குதிரை லாயத்

தின் அண்டை அழைத்துச் சென்று, சுவரிலிருந்த துவாரத்தின் வழியாகக் குதிரைக் குட்டியைப் பார்க்கும்படி தூண்டினான். அவனும் துவாரத்தின் வழியாகத் தன் தலையை நீட்டினான். உடனே குதிரைக் குட்டி அவனுடைய தாடியைப் புல் எனக் கருதித் தன் வாயால் கௌவி இழுத்தது. அந்த வேலையாள் தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றும் வலி பொறுக்க முடியாமல் கதறினான்.



இவ்விதம் தன்னுடன் வந்த வேலையாள் அலறிக் கொண்டிருக்கும் பொழுது, தெனாலிராமன் ராயர் சமஸ்தானத்துக்கு வேகமாக ஓடி அரசரையும் வேறு பலரையும் அழைத்துக் கொண்டு திரும்பினான். வேந்தனுடன் வந்தவர்கள் லாயத்தின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்று குதிரைக்குட்டியின் பிடியினின்றும் அந்த வேலைக்காரனை விடுவித்தனர். குதிரைக்குட்டி எலும்பும் தோலுமாக இருப்பதைக் கண்டு திகைத்தனர். அரசர் மிகக் கோபங்

கொண்டு, "தெனாலிராமா, குதிரைக் குட்டி ஏன் இவ்விதம் இளைத்திருக்கிறது? அதன் தீனிக்காகக் கொடுத்த பணத்தை என்ன செய்தாய்?" என்று கடிந்துகேட்டார். தெனாலிராமன், "வேந்தே குதிரைக் குட்டி இளைத்ததுபோல் தோன்றினாலும் அதற்குப் பலமில்லாது போகவில்லையே? அதற்குப் பலம் இல்லாதிருந்தால் தங்களுடைய சேவகனை அது இவ்விதம் துன்பப்படுத்த முடியுமா?" என்று பதில் உரைத்தான். இவனுடைய பதிலைச் செவியுற்ற அரசரும், மற்றவர்களும் சிரித்தார்கள். அரசரும் அவனை மன்னித்தார்.

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—

   (1) கிருஷ்ணதேவராயர் குதிரைக் குட்டிகளை நன்கு வளர்க்கும் பொருட்டு யாது செய்தார்?

   (2) தெனாலிராமன் குதிரைக்குட்டியை எவ்விதம் வளர்த்து வந்தான்?

   (3) தெனாலிராமன் வளர்த்த குதிரைக் குட்டியைக் கொண்டு போகவந்த சேவகனுக்கு என்ன கஷ்டம் நேரிட்டது?

2. (1. உத்தரவு, அரசன்—ஒவ்வொன்றுக்கும் அதே அர்த்தமுள்ள வேறு சில வார்த்தைகளை எழுது.

   (2) அரசன்—இதன் பெண்பால் என்ன?

   (3) அரசன் தெனாலிராமனை மன்னித்தான்—'மன்னிப்பு' என்ற வார்த்தையை உபயோகித்து வாக்கியத்தை மாற்றி எழுது.

   (4) தெனாலிராமன் என்பது எழுவாயாக வருமாறு மேற்படி வாக்கியத்தை மாற்றி எழுது.

3. கோடிட்ட இடங்களில் சரியான வார்த்தைகளை அமைத்து எழுது :—

   (1) அரசன் குதிரைக் குட்டிகளை நன்கு——நினைத்தார். (அடிக்க, வளர்க்க, தூரத்த)

   (2) தீனிச் செலவுக்காக——திரவியம் கொடுத்தார். (பலமான, கம்பீரமான, போதுமான)

———

# 14. குரங்கும் முதலையும்

| | | |
|---|---|---|
| வானரம் | வலிமுகம் | நிறைவேற்ற |
| உல்லாசமாக | திண்ணம் | கண்ணுற்ற |
| கனி | மித்திரன் | வாட்டமுற்று |
| ஏகும் | தீங்கு | உபசரி |
| வழக்கம்போல் | நலம் | வஞ்சகஎண்ணம் |
| நாதன் | அவதிப்பட்டது | பரிகாசமாக |

கங்கை நதியின் கரையோரத்தில் பரந்துவளர்ந்த ஒரு நாவல் மரத்தில் ஒரு குரங்கு வசித்து வந்தது. அந்த நதியில் வாழ்ந்து வந்த ஒரு முதலை அந்த வானரத்துடன் மிகவும் சிநேகமாக இருந்தது. அந்த முதலை நாள்தோறும் நாவல் மரத்தண்டை வந்து, குரங்குடன் வெகு நேரம் உல்லாசமாகப் பேசிக் கொண்டிருக்கும். வானரம் சுவை மிகுந்த நாவற்பழங்களைப் பறித்து முதலைக்குக் கொடுக்கும். முதலை அக்கனிகளைத் தின்றுவிட்டு, குரங்கினிடம் விடை பெற்றுக்கொண்டு தன் இருப்பிடம் ஏகும்.

ஒரு நாள் முதலை வழக்கம் போலத் தனது சிநேகிதனிடம் பேசிவிட்டுத் திரும்பும்பொழுது சில நாவற் பழங்களைத் தன் மனைவிக்குக் கொடுக்கும் பொருட்டு எடுத்துச் சென்றது. பெண் முதலை அந்தக் கனிகளைத் தின்றுவிட்டு "நாதா! இக்கனிகள் மிகவும் ருசியாக இருக்கின்றனவே. இவை உமக்கு எப்படிக் கிடைத்தன?" என்று வினவியது. ஆண் முதலை "இந்தக் கனிகளை எனது நண்பனான வலிமுகம் எனக்குக் கொடுத்தது. அது தினந்தோறும் இந்தக் கனிகளையே தின்று வாழ்கிறது" என்று பதில் கூறியது.

பெண் முதலை, "இந்தக்கனிகள் இவ்வளவு சுவையுள்ளனவாக இருப்பின், தினந்தோறும் இந்தக் கனிகளைப் புசிக்கும் அந்த வானரத்தின் ஈரல் எவ்வளவு சுவையுள்ளதாக இருக்கும்! அதன் ஈரலை எவ்விதத்திலும் கொண்டு வந்து எனக்குக் கொடுக்கவேண்டும். இல்லாவிட்டால் நான் உயிரை விடுவது திண்ணம்" என்று கூறியது.

என்ன செய்யும் ஆண் முதலை! மனைவிக்காக நண்பனுக்குத் தீங்கு இழைப்பதா, அல்லது நண்பனின் நலத்தைக் கருதி மனைவியை இழப்பதா என்று யோசித்து, 'இருதலைக் கொள்ளி எறும்புபோல்' அவதிப்பட்டது. கடைசியில் தன் மனைவியின் விருப்பத்தை நிறைவேற்றத் தீர்மானித்துக் கொண்டு நாவல் மரத்தண்டை வந்து, கரையோரமாக விசனத்துடன் படுத்துக் கொண்டது.

முதலை வழக்கம்போலத் தன்னுடன் உல்லாசமாக உரையாடாமல் வருத்தமுற்று இருப்பதைக்கண்ணுற்ற குரங்கு முதலையை நோக்கி, "தோழ, இன்று நீ வாட்டமுற்று இருப்பதன் காரணம் யாது?" என்று வினவியது. முதலை, "நண்பா! நீ எனக்குக் கொடுத்த கனிகளை நான் என் மனைவிக்குக் கொண்டுபோய்க் கொடுத்தபோது, உன் தயாள குணத்தைப்பற்றி அவளிடம் கூறினேன். அவள் அந்தக் கனிகளைத் தின்று விட்டு, ஆஹா! இவ்வளவு தித்திப்பான கனிகளை உமக்குத் தினந்தோறும் கொடுத்து உம்மை உபசரிக்கும் நண்பனை நீர் ஒரு தடவையாவது நமது வீட்டுக்கு விருந்துக்கு அழைத்துக்கொண்டு வரவேண்டாமா? இப்பொழுதே சென்று 'உமது தோழனை விருந்துக்கு அழைத்துவாரும்' என்று சொல்லி என்னை அனுப்பி

"ளுள். உன்னை விருந்துக்கு அழைத்துச் செல்லும் பொருட்டே நான்இப்பொழுது இங்குவந்திருக்கிறேன். நீ வர மறுத்துவிட்டால் என்ன செய்வது என்பதைப் பற்றியே வருத்தப்படுகிறேன். நீ வராவிட்டால் என் மனைவியும் வருத்தப்படுவாள். ஆதலால், நீ கட்டாயம் என்னுடன் வரவேண்டும்'' என்றது.



குரங்கு "மித்திரா, தண்ணீரில் எவ்விதம் வர முடியும்?'' என்று கேட்டது. முதலை "நான் உன்னை எனது முதுகிலே ஏற்றிக் கொண்டு போகிறேன்'' என்றது.

முதலையின் யோசனைப்படி குரங்கு அதன் முதுகின்மீது ஏறிக்கொண்டது. முதலை தண்ணீரில் வேகமாக நீந்திச் சென்றது. நடு ஆற்றை அடைந்ததும்; முதலை குரங்கை நோக்கி, "நண்பா என் மனைவி உனது ஈரலைத் தின்ன விரும்புகிருள். ஆகையால் உன்னைக் கொல்லவே இப்பொழுது கொண்டு

போகிறேன்'' என்று உண்மையை உரைத்தது. முதலை யின் வஞ்சக எண்ணத்தை அறிந்த வானரம் சிறிதும் பயப்படாமல், "அடடா இதை நீ அப்பொழுதே கூற வேண்டாமா? நான் ஈரலை மரத்தில் அன்றோ ஒளித்து வைத்திருக்கிறேன். நீ அப்பொழுதே சொல்லியிருந் தால் ஈரலைக் கொடுத்திருப்பேனே. அப்படியானால், கரைக்குத் திரும்பு'' என்றது.

வானரத்தின் வார்த்தைகளைக் கேட்ட முதலை உண்மையென்று நம்பி, அவ்விதமே கரைக்குத் திரும்பியது. கரையை அடைந்ததும், குரங்கு முதலை யின் முதுகிலிருந்து 'தொப்' என்று குதித்துத் தாவி ஓடிப்போய் மரத்தில் ஏறிக்கொண்டு பரிகாசமாகச் சிரித்து, முதலையை நோக்கி, "ஏ மூடா! உடம்பை விட்டு ஈரலை எடுத்து விட்டால், உயிருடன் இருக்கமுடியுமா? உன்னைப் போன்ற மூடர்களுடன் சிநேகம் செய்தால் உயிருக்கு ஆபத்து உண்டாகும். இனி மேல் நீ என் முகத்தில் விழிக்காதே ஓடிப்போ'' என்றது. முதலை வெட்கித் தலை குனிந்து தன் இருப்பிடம் சென்றது.

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—
   (1) முதலை நாள்தோறும் எங்கு வந்து நேரம் போக்கிக் கொண் டிருந்தது?
   (2) பெண் முதலை நாவற்பழங்களைத் தின்றதும் ஆண் முதலை யிடம் என்ன சொன்னது?
   (3) ஆண் முதலை குரங்கை அழைத்துச் செல்ல என்ன தந்திரம் செய்தது?
   (4) முதலை நடு ஆற்றை அடைந்ததும் குரங்கினிடம் என்ன சொன்னது?

(5) குரங்கு முதலையிடமிருந்து எவ்விதம் தப்பியது ?

(6) குரங்கு கரையை யடைந்ததும் முதலையிடம் சொல்லிய தென்ன ?

2. சொந்த வாக்கியங்களில் உபயோகித்து எழுது :—

(1) உல்லாசமாக, வழக்கம் போல, நிறைவேற்ற, வாட்டமுற்று, குரங்கு, சிநேகிதன்—இவை ஒவ்வொன்றுக்கும் அதே அர்த்தமுள்ள வேறு பல வார்த்தைகள் எழுது.

(2) கனி, ஒளி—இரு பொருள்கள் கூறு,

(3) கரை, கறை—இவைகளில் அர்த்த வித்தியாசம் தெரியும்படி வாக்கியங்கள் எழுது.

(4) தோழன், கணவன்—பெண்பால் என்ன ?

3. கீழ்க்கண்ட வாக்கியங்களைப் பூர்த்தி செய் :—

(1) முதலை சில நாவற்பழங்களைத் தன் மனைவிக்குக் கொடுக்கும் பொருட்டு——

(2) நான் உன் சிநேகிதனைக் காணும் பொருட்டு——

(3) இந்தக் கனிகளை——வானரத்தின்——எவ்வளவு—— —— இருக்கும்.

(4) தினந்தோறும் கொடுத்து உம்மை——நண்பனை——ஒரு தடவையாவது——வீட்டுக்கு—— —அழைத்துக் கொண்டு வரவேண்டாமா ?

(5) உன்னைப் போன்ற——சிநேகம் செய்தால்——ஆபத்து உண்டாகும்.

# 15. பஸ் பிரயாணம்

| | | |
|---|---|---|
| பஸ் | பஸ்-சார்ஜ் | காலைக் கடன் |
| போக்கு வரவு | கண்டக்டர் | நொடி |
| பஸ்-ஸ்டாண்டு | ஹாரன் | காட்சி |

எங்கள் ஊர் புளியம்பட்டி. அது ஒரு சிறிய கிராம மாயினும் ஒரு பெரிய ரஸ்தாவின்மேல் இருக்கிறது. அந்த ரஸ்தாவின் வழியாகப் பஸ் போக்குவரவு நடந்து வருகிறபடியால், எங்கள் ஊரையடுத்து ரயில்வே ஸ்டேஷன் இல்லாதகுறைஎங்களுக்குத் தெரியவில்லை.

ஒரு சமயம், ஒரு கலியாணத்திற்காக நாங்கள் எங்கள் ஊரிலிருந்து சுமார் ஐம்பத்து மூன்று மைல் தூரத்திலுள்ள கிருஷ்ணகிரிக்குப் போக வேண்டி யிருந்தது. கிருஷ்ணகிரிக்குப் போகும் பஸ் தினம் காலை எட்டு மணிக்கு எங்கள் ஊருக்கு வருவது வழக்கம். பஸ் வந்ததும், ரஸ்தாவின் மீதுள்ள ஒரு பலகாரக் கடைவாசலில் சுமார் பத்து நிமிஷங்கள் நிற்கும். அக் கடைவாசல்தான் எங்கள் ஊருக்குப் 'பஸ்-ஸ்டாண்டு' அங்கு பஸ் வந்து நின்றதும், பிரயாணிகளில் பலர் பஸ்ஸை விட்டு இறங்கி, அப் பலகாரக்கடையில் ஆகாரம் உட்கொள்ளுவதுஉண்டு. கிருஷ்ணகிரிக்குப் போகும் பஸ் அங்கே காலை நேரத்தில் வந்து சேருவதால் அப்பொழுது அப் பல காரக்கடையில் விற்பனை மற்றச் சமயங்களில் இருப் பதைக் காட்டிலும் அதிகமாகவே இருக்கும்.

கலியாணத்துக்கு முந்தின நாள் நாங்கள் காலையில் வழக்கம்போல் எழுந்திருக்கும் நேரத்துக்கு முன்னதாகவே எழுந்திருந்து, காலைக்கடன்களை முடித்

துக்கொண்டோம். நாங்கள் கொண்டுபோக வேண்டிய சாமான்களை எல்லாம் எடுத்துக் கொண்டு பஸ்-ஸ்டாண்டுக்குப் போனோம். அப்பொழுது மணி 7-50. அன்று சரியாக 8-மணிக்குப் பஸ் வந்து விட்டது.

புளியம்பட்டியிலிருந்து கிருஷ்ணகிரிக்குப் பஸ் சார்ஜ் ஒரு ரூபாய் ஒன்பது அணா. ஆகையால் நாங்கள் கண்டக்டரிடம் ஆறேகால் ரூபாய் கொடுத்து நான்கு டிக்கட்டுகள் வாங்கிக் கொண்டோம். எங்கள் பெட்டிகள், படுக்கைகள் பஸ்ஸின் மேலே போடப்பட்டன. கண்டக்டர் எங்கள் நால்வரையும் இரண்டாவது வரிசையில் உட்கார வைத்துவிட்டு, ஆகாரம் சாப்பிடப் பலகாரக் கடைக்குள் நுழைந்தான்.

பஸ்ஸைவிட்டு இறங்கிப் பலகாரக் கடைக்குள் போனவர்கள் சாப்பிட்டுவிட்டு ஒவ்வொருவராக வர ஆரம்பித்தனர். டிரைவர் 'ஹாரன்' கொடுத்தான். அந்தச் சப்தத்தைக் கேட்டதும் மற்றவர்கள் அவசர அவசரமாகச் சாப்பிட்டு விட்டு வந்தார்கள். இப்பொழுது நாங்கள் நான்கு பேர் அதிகமாக வந்து பஸ்ஸில் ஏறிக்கொண்டதால் அதில் ஏறவந்தவர்கள் சிலர் 'இடமில்லையே' என்று கண்டக்டரிடம் குறை கூறினர். அவன் சாமர்த்தியமாகப் பேசி எல்லோரையும் பஸ்ஸில் ஏற்றி உட்காரவைத்தான். இவ்விதம் ஏற்பட்ட குழப்பத்தால் அன்று பஸ் வழக்கம்போல் அவ்விடமிருந்து புறப்படும் நேரத்திற்கு நாலைந்து நிமிடங்கள் கழித்தே புறப்பட்டது.

பஸ் பல சிறிய ஊர்களையும் பெரிய ஊர்களையும் கடந்து சென்றது. அது ஆங்காங்கு நின்றபொழுது பிரயாணிகளில் சிலர் பஸ்ஸை விட்டு இறங்கினர். வேறு சிலர் புதிதாக வந்து ஏறினர். இடைவழியில்

சிலர் ரஸ்தாவின் குறுக்கே நின்று கையைக் காட்டி 'இடம் இருக்கிறதா?' என்று கேட்டபோது, டிரைவர் பஸ்ஸை நிறுத்தி, அவர்களையும் பஸ்ஸில் ஏற்றிக் கொண்டான். இடம் இல்லாத சமயங்களில் கையை விரித்து அசைத்து, இடம் இல்லை என்பதைத் தெரிவித்தான். இவ்விதம் பஸ்ஸில் இடம் கிடையாமல் ஏமாந்தவர்களைப் பார்த்த பொழுது எங்களுக்கு வருத்தம் உண்டாயிற்று. அச்சமயத்தில் நூறுபேர்கள் வரை ஏறிக்கொண்டு போகக்கூடியபடி பஸ் பெரியதாக இருந்தால் சௌகரியமாக இருக்கும் அல்லவா? என்றுகூட நாங்கள் நினைத்தது உண்டு.

கிருஷ்ணகிரிக்குச் செல்லும் ரஸ்தா முக்கியமான ரஸ்தா வாகையால் அதில் அவ்வளவு நொடிகள் இல்லை. ஆகையால், பஸ் அதிக ஆட்டமில்லாமல் வேகமாகச் சென்றது. நாங்கள் உல்லாசமாகப் பேசிக் கொண்டும், வழியின் இருபுறங்களிலுமுள்ள காட்சிகளைக் கண்டு களித்துக்கொண்டும் சென்றோம். மத்தியானம் ஒருமணிக்கு பஸ் கிருஷ்ணகிரி வந்து சேர்ந்தது. நாங்கள் எங்கள் சாமான்களைத் தூக்கிக் கொண்டு கலியாண வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தோம்.

பஸ் இல்லாவிட்டால், சுமார் 4-30 மணி நேரத்தில் ஐம்பத்து மூன்று மைல் தூரத்தை நாங்கள் கடந்துவர முடியுமா? காலைச் சாப்பாடு எங்கள் வீட்டில்; மத்தியானச் சாப்பாடு கலியாண வீட்டில்! முற்காலத்தில் இவ்வளவு சௌகரியமாகப் பிரயாணம் செய்ய வசதிகள் உண்டா?

அப்பியாசம்

(1) நீ செய்துள்ள பிரயாணங்கள் ஏதாவது ஒன்றைப்பற்றிச் சில வாக்கியங்கள் எழுதுக.

(2) அவசரம், அவசரமாக, இடை வழியில், ஆங்காங்கு—வாக்கியங்களில் அமைத்து எழுது.

# 16. தேசிங்கு ராஜா

| | | |
|---|---|---|
| தனித்தனியாக | கப்பம் | அளவு கடந்த |
| சிற்றரசர்கள் | இயலவில்லை | விடுதலை |
| சக்கரவர்த்தி | பரிசு | முடிசூடி |

இந்தியா பல சிறு இராஜ்யங்களாகப் பிரிவுபட்டது. அவைகளைத் தனித்தனியாகச் சிற்றரசர்கள் ஆண்டு வந்தார்கள். இவர்கள் டில்லி பாட்சா என்ற முகம்மதியச் சக்கரவர்த்திக்குக் கப்பம் கட்டி வந்தார்கள். டில்லி பாட்சாவிடம் விலையுயர்ந்த குதிரையொன்று இருந்தது. அந்தக் குதிரையை அடக்கி அதன்மீது ஏறிச் சவாரி செய்யப் பாட்சாவால் இயலவில்லை. ஏறிச் சவாரி செய்பவருக்குப் பரிசு கொடுப்பதாக வாக்களித்தார் பாட்சா. சிற்றரசர் பலரும் சவாரி செய்ய முயன்றும் முடியவில்லை. பாட்சா அவர்களைச் சிறையில் அடைத்து வைத்தார்.

அவ்விதம் சிறையில் வைக்கப்பட்டவர்களில் செஞ்சிக்கோட்டை மன்னன் தரணிசிங்கும் ஒருவன். இவன் சிறையிலடைக்கப்பட்டபின் பிறந்தவன் தேசிங்கு என்பவன். தன் தாய்மூலம் தந்தை சிறைபட்டிருக்கிறான் என்று தெரிந்து, காரணமறிந்து, டில்லி பாட்சாவின் குதிரையை அடக்கிச் சவாரி செய்தான்.

பாட்சா மகிழ்ந்து தேசிங்குக்கு அந்தக் குதிரையைப் பரிசாகக் கொடுத்தார். தரணிசிங்கு கட்டி வந்த கப்பமும் இனிக் கட்ட வேண்டாமென்று உத்தரவிட்டார். தேசிங்கின் தந்தையுடன் மற்றச் சிற்றரசர்களையும் விடுதலை செய்தார். பாட்சாவின் சேனைத் தலைவன் தேசிங்கின் வீரத்தைப் பாராட்டித் தன் அருமை மகளைத் தேசிங்குக்கு மணம் செய்வித்தான்.

தேசிங்கு டில்லியில் பெற்ற சகல மரியாதைகளோடு தந்தையை அழைத்துக்கொண்டு செஞ்சிக்குத் திரும்பினன். மகன் வரவை ஆவலாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த தாய், தன் மகன் வீரத்தால் தன் கணவனும் விடுதலையடைந்தான் என்று அறிந்து அளவு கடந்த சந்தோஷம் அடைந்தாள். செஞ்சிக்குத் திரும்பிய சில மாதங்களில், சிறையிலிருந்து மெலிந்த தரணிசிங்கு காலஞ்சென்ருன். இளவரசனுகிய தேசிங்கு செஞ்சியில் முடிசூட்டிக் கொண்டு இராஜ்யத்தை ஆளத் தொடங்கினன். அவன் ஆட்சியில் மக்கள் எல்லோரும் சுகமாக வாழ்ந்தார்கள்.

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—
   (1) டில்லி பாட்சா பல சிற்றரசர்களைச் சிறையில் அடைக்கக் காரணம் என்ன ?
   (2) பாடசாவின் குதிரையை அடக்கிச் சவாரி செய்தது யார் ?
   (3) தேசிங்கு குதிரையை அடக்கிச் சவாரி செய்ததைக் கண்ட பாட்சா யாது செய்தார் ?

2. (1) தனித் தனியாக, பல வருடங்களாக, எதிர்பார்த்துக் கொண்டு—இவைகளைத் தனித்தனி வாக்கியங்களில் அமைத்து எழுது.
   (2) சக்கரவர்த்தி —பெண்பால் என்ன ?
   (3) இளமை, விலை உயர்ந்த, ஏரி எதிர்ப்பதம் எழுது.
   (4) சிறையிலிருந்து, மெலிந்திருந்த—ஒவ்வொன்றையும் இரண்டு வார்த்தைகளாகப் பிரித்து எழுது.
   (5) மண்ம்—இரு பொருள் கூறு.
   'இனி எனக்குக் கப்பம் கட்டவேண்டியதில்லை' என்ருன்.
   ஒரு ரூபாய்தான் கொடுப்பேன்.
   குரங்கு 'தொப்' எனக் குதித்தது.
   அவன், பூனை எலியின் மீது பாய்வது போல் பாய்ந்தான்.
   இனி, தான், என, போல்—இவை இடைச் சொற்கள்.
   இவை போன்ற இடைச்சொற்கள் வந்துள்ள வாக்கியங்களை முன் பாடங்களிலிருந்து எடுத்து எழுது.

# 17. பீமனும் பகாசூரனும்

| | | | |
|---|---|---|---|
| ஆசிரியர் | சுரங்கம் | ஒப்பந்தம் | பன்மடங்கு |
| நியமித்து | உயிர்தப்ப | உடன்படிக்கை | யுத்தம் |
| இளவரசர் | இல்லாள் | ராக்ஷஸன் | கடைசியில் |
| நள்ளிரவு | அசுரன் | வேதியர் | செய்தி |

வெகு காலத்துக்கு முன்னர் வட இந்தியாவிலுள்ள யமுனை நதிக்கரையில் ஒரு சிறிய இராஜ்யம் இருந்தது. அதை விசித்ர வீரியர் என்ற ஓர் அரசர் ஆண்டு வந்தார். அவருக்குத் திருதராஷ்டிரர், பாண்டு என்ற இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். இவர்களில் மூத்தவரான திருதராஷ்டிரர் பிறவிக் குருடர். ஆகையால், விசித்ர வீரியருக்குப் பிறகு இளையவரான பாண்டு முடிசூட்டப் பெற்றார்.

திருதராஷ்டிரருக்கு நூறு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் மூத்தவர் பெயர் துரியோதனன். பாண்டுவுக்குத் தருமர், பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் என்று ஐந்து புதல்வர்கள் இருந்தார்கள். அவர்கள் பாண்டவர்கள் என்று அழைக்கப்பட்டனர்.

பாண்டு சிறிது காலஞ் சென்றபின் மரணம் அடைந்ததால், திருதராஷ்டிரர் தாமே நாட்டை ஆட்சி புரிந்து வந்தார். அவர் தம் பிள்ளைகளைப் போலவே தமது சகோதரரான பாண்டுவின் புதல்வர்களையும் யாதொரு வித்தியாசமும் பாராட்டாது ஆதரித்து வந்தார். த்குந்த ஓர் ஆசிரியரை நியமித்துக் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் கல்வி போதிக்கும்படி செய்தார். பாண்டவர்கள் கல்வியில் மிகவும் தேர்ச்சி பெற்றார்கள். அவர்கள் கௌரவர்களைவிட மிகவும்

சிறந்து விளங்கினர்கள். ஆகையால் திருதராஷ்டிரர் பாண்டவர்களில் மூத்தவரான தருமரை இளவரசராக நியமித்தார். அதனால் துரியோதனனுக்குப் பாண்டவர் களிடத்தில் பொறாமை உண்டாயிற்று; அவர்களைக் கொல்ல அநேக வழிகளைத் தேடினன்.

துரியோதனன் வாரணாவதம் என்னும் இடத்தில் அரக்கினால் ஓர் அழகிய மாளிகையைக் கட்டுவித்து; பாண்டவர்களையும் குந்திதேவியையும் விருந்துக்கு அழைத்தான். அவர்களும் வாரணாவதத்துக்குச் சென் றனர். அவர்களைத் துரியோதனன் அந்த மாளிகையில் தங்கும்படி செய்து, நள்ளிரவில் மாளிகைக்குத் தீ வைத்து விட்டான். ஆனால், பீமன் குந்திதேவி யையும் தன் சகோதரர்களையும் தூக்கிக்கொண்டு, ஒரு சுரங்கத்தின் வழியாகச் சென்று காட்டை அடைந்தான். இது துரியோதனனுக்குத் தெரியாது. அவன் பாண்டவர்களும் குந்திதேவியும் மாளிகை எரியும்பொழுது தீயில் அகப்பட்டு இறந்து போயிருப் பார்கள் என்று நினைத்து சந்தோஷப்பட்டான்.

தீயினுக்கு இரையாகாமல் உயிர் தப்பிய பாண்ட வர்கள் வேத்திரகீயம் என்னும் நகரத்தை அடைந்து, அங்கிருந்த ஒரு பிராமணர் வீட்டில் தங்கி வசித்து வந்தனர். அந்த அந்தணரும் அவருடைய இல்லாளும் அவர்களை அன்பாக ஆதரித்து வந்தார்கள்.

வேத்திரகீயத்துக்குப் பக்கத்தில் ஏக சக்கரவனம் என்றொரு காடு இருந்தது. அதில் பகவன் என்ற ஓர் அசுரன் இருந்தான். அவன் வேத்திரகீயத்திற்குள் வந்து ஜனங்களைக் கொன்று தின்ன ஆரம்பித்தான். உடனே ஊரார் ஒன்றுகூடி அந்த அசுரன் ஊருக்குள்

வந்து ஜனங்களை அழிக்காமல் இருக்கும்படி அவனுடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டனர். அந்த உடன்படிக்கைக்கு இணங்க, அந்த ஊரார் தினத்திற்கொரு வீட்டிலிருந்து ஒரு வண்டி நிறையச் சோற்றையும் காய் கறிகளையும், ஒரு பையனையும் அந்த அசுரனுக்கு இரையாக அனுப்பி வந்தார்கள்.

ஒரு நாள் பாண்டவர்கள் தங்கியிருந்த வேதியர் வீட்டின் முறை வந்தது. அந்த வேதியருக்கு ஒரே ஒரு



மகன். அவனைப் பகாசூரனுக்கு இரையாக அனுப்ப நேர்ந்ததைக் குறித்து அவனுடைய பெற்றோர்கள் அழுது புலம்பினர். அவர்கள் படும் துக்கத்தைக் கண்ணுற்ற குந்திதேவி அவர்களை நோக்கி, "நீங்கள் துக்கப்படவேண்டாம். என் மகன் பீமன் மிக்க பலமுள்ளவன். உங்கள் குமாரனுக்குப் பதிலாக நான் அவனைப் பகாசூரனிடம் அனுப்புகிறேன்" என்று சொல்லி அவர்களைத் தேற்றினாள்.

தாயின் கட்டளைப்படி பீமன் இரண்டு முரட்டு எருதுகள் பூட்டப்பட்ட ஒரு கட்டைவண்டியில் பல பெரிய பானைகள் வைத்து, அவற்றில் நிரம்பச் சோற்றையும், காய்கறிகளையும் எடுத்துக் கொண்டு வனத்தை நோக்கிச் சென்றான். சோற்றில் தனக்கு வேண்டியதை எடுத்துப் புசிக்கத் தொடங்கினான். பகாசூரன் அன்று வெகு நேரம் ஆகியும் தனக்கு ஆகாரம் வந்து சேராததைக் கண்டு, மிகக் கோபங் கொண்டு, வேத்திரகீயத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தான். வழியில் பீமன் தனக்காக அனுப்பப்பட்ட சோற்றை எடுத்துத் தின்று கொண்டிருப்பதைக் கண்டு, முன்னிலும் பன்மடங்கு சினம் கொண்டு அவன்மீது பாய்ந்து அவனைக் கொல்ல முயன்றான். பீமனும் தைரியமாகப் பகாசூரனை எதிர்த்தான். இருவருக்கும் வெகு நேரம் யுத்தம் நடந்தது. கடைசியில் பகாசூரன் கொல்லப்பட்டான். இச் செய்தி வேத்திரகீயத்து ஊர் முழுவதும் பரவியது. அவ்வூரார் அளவிலாத ஆனந்தம் அடைந்து பாண்டவர்களையும் குந்திதேவியையும் வாழ்த்தி உபசரித்தார்கள்.

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—
   - (1) துரியோதனனுக்கு பாண்டவர்களிடம் பொறாமை உண்டாகக் காரணம் என்ன ?
   - (2) துரியோதனன் பாண்டவர்களைக் கொல்லக் கருதி என்ன சூழ்ச்சி செய்தான் ?
   - (3) வேத்திரகீயத்து ஜனங்கள் பகாசூரனுடன் செய்து கொண்ட ஒப்பந்தம் யாது ?
   - (4) பகாசூரன் எவ்விதம் கொல்லப்பட்டான் ?

2. (1) மகன்—இதே அர்த்தமுள்ள பல வார்த்தைகள் எழுது:—
   (2) சகோதரன்—பெண்பால் எழுது.

(3) நள்ளிரவு, உயிர் தப்ப, ஒப்பந்தம், கடைசியில்—தனித்தனி வாக்கியங்களில் அமைத்து எழுது.

3. கீழ்க்கண்ட வார்த்தைகளில் பொருத்தமானவற்றை கோடிட்ட இடங்களில் அமைக்க :—

சௌகரியமாக, வேகமாக, சாமர்த்தியமாக, சிநேகமாக, அன்பாக.

(1) அந்தணர் பாண்டவர்களை — —ஆதரித்து வந்தார்.

(2) கண்டக்டர் பிரயாணிகளிடம்— —பேசினார்.

(3) பஸ் அதிக— — —ஆட்டமில்லாமல்— — —சென்றது.

(4) நாங்கள்— — —பிரயாணம் செய்தோம்,

(5) முதலை அந்த வானரத்துடன்— — —இருந்தது.

ஆஹா ! என்ன அழகான குதிரை !

ஆ ! என்ன கூட்டம் !

ஐயோ ! அவன் கால் முறிந்துவிட்டது.

அந்தோ ! அவன் இறந்து விட்டான்,

சீ சீ ! துஷ்டருடைய சிநேகம் கூடாது.

ஆஹா, ஆ— —வியப்பைத் தெரிவிக்கின்றன.

ஐயோ, அந்தோ— — —துக்கத்தைக் காட்டுகின்றன.

சீ சீ— — —வெறுப்பைக் குறிக்கிறது.

வியப்பு, துக்கம், வெறுப்பு இவைகளைத் தெரிவிக்கும் சொற்களும் இடைச் சொற்கள் ஆகும்

! இந்த அடையாளம் உணர்ச்சிக் குறி எனப்படும்.

———

# 18. சங்கீதமும் சங்கீதக் கருவிகளும்

| | | |
|---|---|---|
| வீராவேசம் | மேளக்கச்சேரி | கருவி |
| சோர்ந்து | பிரபலமான | நூதன |
| போர் புரியும்படி | சங்கீத வித்வான் | பிராசீன |
| தனவந்தர் | பிரசுரித்து | யாசிக்கிருன் |
| பாட்டுக்கச்சேரி | சுருதி | கதாகாலக்ஷேபம் |

ஒருவர் இனிமையாகப் பாடிஞல் அவரைச் சுற்றி லும் பலர் பலாப் பழத்தை ஈக்கள் மொய்ப்பது போல் கூட்டம் கூடுவதைக் காண்கிறோம். பாட்டுகளில் திருப்புகழ், காவடிச்சிந்து, கீர்த்தனை எனப் பலவகை யுண்டு. சில பாட்டுகள் மனக்கவலையை நீக்கி அமை தியை உண்டுபண்ணி, சந்தோஷத்தைக் கொடுக்கும். மற்றும் சில வீராவேசத்தை மூட்டும்; அவை சோர்ந்து நிற்கும் வீரர்களைத் தட்டி எழுப்பி உற்சாகமாகப் போர் புரியும்படி தூண்டும். தாய்மார்கள் குழந்தைகளைத் தூங்கச் செய்யப் பாட்டுகளைப் பாடுவதை நாம் கவ னித்திருக்கிறோம். பாட்டுகளைக் கேட்டு ஆனந்தம் அடையாதார் எவரும் இலர். பாம்புகள் கூடப் பாம் பாட்டியின் குழல் ஓசையை அடங்கி நின்று கேட்பதை நாம் காண்கிறோம்.

சில செல்வர்களின் வீடுகளில் கலியாணம் முதலிய விசேஷங்கள் நடக்கும் பொழுதும், பெரிய கோவில்களில் திருவிழாக்கள் நடக்கும் பொழுதும் பாட் டுக்கச்சேரி, மேளக் கச்சேரி முதலியன நடைபெறும். பிரபலமான சங்கீத வித்வான்களின் படங்களை பத்திரிகைகளில் பிரசுரித்து வெளியிடுவதை நீங்கள் பார்த்திருக்கலாம், சில படங்களில் அவர்கள் பிரிய மாகப் பாடும் பாட்டுகளும் குறிப்பிடப்பட்டிருக்கும்.




பயிற்சி: படத்திலுள்ள சங்கீதக் கருவிகளின் பெயர்களை எழுது.

பாட்டுக் கச்சேரியில் வாய்ப்பாட்டு வித்வான் ஒரு பாட்டைப் பாடும்பொழுது, அதை அநுசரித்து, மிருதங்கம், தபலா, புல்லாங்குழல், பிடில், மோர்சிங் முதலியன வாசிக்கப்படும். ஹார்மோனியத்தில் சுருதி வைத்துக் கொள்வார்கள். புகழ்பெற்ற வித்வான்களால் நடத்தப்படும் சங்கீதக் கச்சேரிகள் மிகவும் இன்பமாக இருக்கும். பிடில் முதலிய நரம்புக் கருவிகளால் பாடப்படும் பாட்டு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுக்கும்.

இனிய நாதசுரக் கச்சேரிகள் நடைபெறும் இடங்களில் மக்கள் ஏராளமாகக் கூடுவதைக் காண்கிறோம். தவுல் அடிப்போன் நாதசுரம் வாசிப்பவரோடு போட்டியிட்டுத் தலையை உருட்டிக் கொண்டு தவுல் வாசிப்பதைக் காண மிகவும் வேடிக்கையாக இருக்கும். ஊதுவோன் ஒருவன் சிறிது தூரத்திலிருந்து குனிந்த தலை நிமிராமல் கன்னங்களை 'உப்' என்று வைத்துக் கொண்டு ஊதிக்கொண்டிருப்பான். ஒருவன் ஜாலர் வைத்துக்கொண்டு தாளம் போட்டுக் கொண்டிருப்பான். அவன் சிறிது தாளம் தவறினாலும், நாதசுரம் வாசிப்போரை மிகவும் பாதிக்கும்.

இக்காலத்தில் கிராமபோன், ரேடியோ என்னும் கருவிகளின் உதவியால் வித்வான்களை நேரில் பார்வையிடாமலே அவர்களுடைய பாட்டைக் கேட்டுச் சந்தோஷமடைகிறோம். கிராமபோன், ரேடியோ முதலிய நூதனக் கருவிகளைக் கண்டுபிடித்த இக்காலத்திலும் பழமையான பல வாத்தியங்கள் வழக்கத்தில் இருந்து வருகின்றன. சில பண்டாரங்கள் சங்கு ஊதிக் கொண்டும், தம்பூர் மீட்டிக் கொண்டும், சேமக்கலம் அடித்துக் கொண்டும் வருவதைக் காண்கிறோம்.

கோவில்களில் சுவாமி வீதிவலம் வருவதைத் தெரிவிக்க நகரா அடிப்பதை இன்றும் பார்க்கலாம். குடுகுடுப்பைக்காரன் உடுக்கை அடித்துக்கொண்டு யாசிக்கிறான். சில ஜாதியினர் தப்பட்டை அடித்துக் கொண்டு ஆடிப்பாடிக் களிக்கின்றனர். கதாகால க்ஷேபம் நடத்துவோர் சிப்ளாக் கட்டையை உபயோகிக் கின்றனர். சங்கீதத்தால் இன்பம் அடையாதவரும் உண்டோ ?

## அப்பியாசம்

1 கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—

(1) பாட்டுகளில் உனக்குத் தெரிந்தவைகளின் பெயர்களை எழுது.

(2) நீ கவனித்த பாட்டுக் கச்சேரி அல்லது மேளக் கச்சேரியைப் பற்றிச் சில வாக்கியங்கள் எழுது,

(3) ரேடியோவால் ஏற்படும் அனுகூலங்கள் யாவை ?

2. (1) 'பாட்டுகளைக் கேட்டு ஆனந்தம் அடையாதார் யாரும் இலர்'—யாவரும்' என்ற வார்த்தையை உபயோகித்து இந்த வாக்கியத்தை மாற்றி எழுது.

(2) தாய்மார்கள் குழந்தைகளைத் தூங்கச் செய்யப் பாட்டுகளைப் பாடுவதை நாம் கவனித்திருக்கிறோம்—இந்த வாக்கியத்தை இரண்டு வாக்கியங்களாகப் பிரித்து எழுது.

3. பாட்டுகள் சந்தோஷத்தைக் கொடுக்கும்.

இந்த வாக்கியத்தில் எழுவாய் எது ? பயனிலை எது ?

'கொடுக்கும்' என்னும் பயனிலைக்கு முன் 'எதை' என்ற வார்த்தையை அமைத்துக் கேள்வி கேள்.

'எதைக் கொடுக்கும்'' 'சந்தோஷத்தை' என்ற பதில் கிடைக்கிறது. இது செயப்படுபொருள்.

ஒரு வாக்கியத்தின் உறுப்புகள் மூன்று, அவை எழுவாய், பயனிலை செயப்படுபொருள் என்பன, எழுவாய், பயனிலை எல்லா வாக்கியங்களிலும் இருக்கும். செயப்படுபொருள் சில வாக்கியங்களில் இருக்கும் சில வாக்கியங்களில் இராது. பயனிலைக்கு முன்னால் 'எதை' அல்லது 'யாரை' என்ற வார்த்தையை அமைத்துக் கேள்வி கேட்டுச் செயப்படு பொருள் எது என்று கண்டுபிடிக்கலாம்.

குடுகுடுப்பைக்காரன் யாசிக்கிறான்.

தேசிங்கு குதிரையை அடக்கினான்.

பாடசா சிற்றரசர்களைச் சிறையிலிருந்து விடுவித்தார்.

# 19. ஏகலைவன்

| | | |
|---|---|---|
| பரதகண்டம் | அநவரதமும் | குறிவிடுதல் |
| கௌரவர் | கண்ணும் கருத்துமாய் | நிகழ்ந்த |
| அந்தணர் | நாளடைவில் | குருபக்தி |
| வாழ்நாள் அளவும் | எங்ஙனம் | தக்ஷிணை |
| மந்திரித்து | வழி தவறி | சித்தமாக |
| யானையேற்றம் | சுணங்கன் | பகர்ந்தான் |
| மனந்தளராத | கைதேர்ந்த | காணிக்கை |

நமது பரதகண்டத்தில் திருதராஷ்டிரர், பாண்டு, விதுரர் என்ற மூவர் வாழ்ந்து வந்தார்கள். இவர்களில் திருதராஷ்டிரருக்குத் துரியோதனர் முதலிய நூறு பிள்ளைகளும், பாண்டுவுக்குத் தருமபுத்திரர் முதலிய ஐந்து பிள்ளைகளும் இருந்தார்கள். துரியோதனர் ஆதியர் கௌரவர்கள் என்றும், தருமபுத்திரர் ஆதியர் பாண்டவர் என்றும் அழைக்கப்பட்டனர். இதை முந்திய பாடத்திலே படித்தீர்கள். இவர்கள் பாட்டனார் பீஷ்மர் என்பவர்.

பாண்டவர் பந்து விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது தங்களுடைய பந்து ஒரு கிணற்றுள் விழுந்து விட்டபடியால், அதை எடுக்க முடியாதபடி வருந்திக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவ்வழியே துரோணாசாரியார் என்ற ஓர் ஆசிரியர் வந்தார், அவரிடம் பந்தை எடுத்துத்தர வேண்டினார்கள். அவர், "இந்தப் பந்தை மட்டுமன்று; வேண்டுமானால் எனது மோதிரத்தையும் கிணற்றில் போட்டுவிட்டுத் திரும்பவும் எடுத்துத தருகிறேன். நீங்கள் எனக்கு ஒரு வேளைச் சாப்பாடு உதவினால் போதும்'' என்றனர்.

தருமராதியர் மகிழ்ந்து, "அவ்விதம் செய்தால் ஒரு வேளைச் சாப்பாடு மட்டுமல்லாமல் வாழ்நாள் முழுவதும் சாப்பாடு கொடுக்கிறோம்" என்றார்கள். அதன் மேல் துரோணரும் தருப்பைப் புல்லை மந்திரித்து எய்து கிணற்றுள்ளிருந்து அந்தப் பந்தையும் மோதிரத்தையும் எடுத்துப் பாண்டவர் முன்னிலையில் வைத்தார்.

பின்பு தருமராதியர் துரோணரைத் தம் அரண்மனைக்கு அழைத்துச் சென்று, பீஷ்மரிடம் தெரிவித்துத் தங்களுக்கு ஆசிரியராக அமர்த்திக் கொண்டார்கள். அவரும் க்ஷத்திரிய புத்திரர்களுக்கு விற் பயிற்சியுடன் யானையேற்றம், குதிரை யேற்றம் முதலியவைகளையும் கற்பித்து வந்தனர்.

இரணியதனுசு என்பவன் ஒரு வேட மன்னவன். இவனுக்கு ஏகலைவன் என்ற ஒரு பையன் உண்டு. ஏகலைவனுக்கு வில்வித்தை கற்கவேண்டுமென்ற ஆவல் உண்டாயிற்று. ஒரு நாள் அவன் துரோணரிடம் போய்த் தனக்கு வில்வித்தை கற்றுக்கொடுக்கும்படி வேண்டினான். அவர், "நான் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் வேறு சில ராஜபுத்திரர்களுக்கும் வில்வித்தை போதித்து வருவதால், எனக்கு ஓய்வு ஒழிவு இல்லை" என்று சொன்னார். மனந்தளராத ஏகலைவன் தன் இருப்பிடம் சென்று ஒரு சிலம்பக் கூடம் கட்டினான். அதில் துரோணாசாரியாரைப் போல் களிமண்ணால் ஓர் உருவம் செய்து வைத்தான். அந்த உருவத்தையே குருவாகக் கருதி வழிபட்டு விற்பிடித்தல், சரம் தொடுத்தல், குறி வைத்தெய்தல் முதலியவற்றைப் பழகி வந்தான்.

இஃது இங்ஙனமிருக்க, ஒருநாள் அரசகுமாரர்கள் ஏகலைவன் இருந்த காட்டை அடைந்தனர். அவர்

களுடன் ஒரு நாயும் வந்திருந்தது. அது காட்டில் அங்கும் இங்கும் ஓடித்திரிந்த பொழுது வழிதவறித் தன் எஜமானர்களிடமிருந்து பிரிந்தது. ஆகையால், அச்சுணங்கன் குரைக்க ஆரம்பித்தது.

நாயின் குரைத்தலைச் செவியுற்ற ஏகலைவன் தன் கல்வித் திறனை அறியும்பொருட்டு, சப்தம் வரும் திசையை நோக்கி ஓர் அம்பை எய்தான். அந்த அம்பு



நாயின் வாய்வழியாகப் பாய்ந்து அதன் உடலை ஊடுருவிச் சென்று உயிரை நீக்கியது. அரசகுமாரர்கள் நாயைத் தேடிக் கொண்டு வருகையில், அது ஓர் அம்பு பாய்ந்து இறந்து கிடத்தலைக் கண்டு மிகவும் வருந்தினர். அதன் உடம்பில் அம்பு பாய்ந்து சென்ற விதத்தை உற்று நோக்கினர். வில் வித்தையில் கை தேர்ந்த எவனோ ஒருவன் இந்த அம்பை எய்திருக்க வேண்டும் என்று அறிந்து ஆச்சரிய முற்றனர். அவ்விதம் வெகுதிறமையுடன் அம்பு எய்தோனைக் கண்டறி

அப்படியாயின் நீ குருவுக்குச் செலுத்த வேண்டிய தக்ஷிணை எங்கே?" என்று வினவினர். ஏகலைவன் "தேவரீர் எதுவேண்டினும் நான் கொடுக்கச் சித்தமாக இருக்கிறேன்," என்று பதிலுரைத்தான். துரோணர் "இது உண்மைதானே! எது கேட்பினும் கொடுக்கத் தயாராய் இருக்கின்றனையா?" என்று வினவினர். "ஆகா, தாங்கள் எது கேட்பினும் கொடுக்கக் காத்திருக்கிறேன்" என்று மறுமொழி பகர்ந்தான். அப்படியானல் "உனது வலதுகைக் கட்டைவிரலைக் கொடு" என்று துரோணர் கூறினர். உடனே ஏகலைவன் சிறிதும் தயங்காமல் தனது வலதுகைக் கட்டைவிரலை வெட்டித் துரோணருக்கு முன் வைத்தான். என்னே ஏகலைவனுடைய குருபக்தி!

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—
   (1) பாண்டவர்கள் துரோணாசாரியாரை ஆசிரியராக அடைந்த விதம் என்ன? ஏகலைவன் துரோணரிடம் வேண்டிக்கொண்டது என்ன?
   (2) துரோணர் ஏகலைவனுக்கு வில்வித்தை கற்பிக்க ஏன் மறுத்தார்?
   (3) ஏகலைவன் எவ்விதம் வில்வித்தை கற்றுக் கொண்டான்?
   (4) நாயின் குரைத்தலைக் கேட்டதும் ஏகலைவன் என்ன செய்தான்?
   (5) அரசகுமாரர்கள் ஏகலைவனிடம் என்ன கேட்டார்கள்?
   (6) ஏகலைவன் அரசகுமாரர்களுக்கு என்ன பதில் சொன்னான்?
   (7) ஏகலைவன் மிகுந்த குருபக்தி உடையவன் என்பது எவ்விதம் விளங்குகிறது?
2. கீழ்க்கண்ட வார்த்தைகளை வாக்கியங்களில் அமைத்து எழுது:—
   (1) பந்து விளையாடி, ஒரு வேளைச் சாப்பாடு, தருப்பைப் புல், யானையேற்றம்.

(2) எஜமானன்—இதன் பெண்பால் என்ன ?

(3) ஏகலைவன் வில்வித்தை கற்க விரும்பினான். இந்த வாக்கியத்தில் எத்தனை வார்த்தைகள் இருக்கின்றன ? ஒவ்வொரு வார்த்தையும் என்ன வகையான சொல் ? எழுவாய் எது ? பயனிலை எது ?

(4) கண்டு வியப்புற்றார், கற்பித்து வருகிறேன், தங்களுடன் வந்த நாய், சப்தம் வரும் திசை, தேடி வந்தார்கள், இறந்து கிடந்தது, தேடிவந்த அரசகுமாரர்கள்—இவற்றிலுள்ள பெயரெச்சம், வினையெச்சம் இவைகளைக் குறிப்பிடு.

(5) அம்பு நாயின் வாய் வழியாகப் பாய்ந்து, அதன் உடலை ஊடுருவிச் சென்று அதன் உயிரை நீக்கியது. இதை மூன்று வாக்கியங்களாகப் பிரித்து எழுது.

துரோணர் வில்வித்தை கற்பித்தார்.

துரோணர் வில்வித்தை கற்பித்தாரா ?

முதல் வாக்கியம் நடந்த காரியத்தைத் தெரிவிக்கிறது. இரண்டாவது வாக்கியத்தில் கேள்வி கேட்கிறோம். இது வினா வாக்கியம் எனப்படும்.

? இதற்கு வினாக் குறி என்று பெயர்.

இப்பாடத்திலிருந்து மூன்று வினா வாக்கியங்களை எழுது.

# 20. வீரப்பெண்—பன்ஞ

| | | |
|---|---|---|
| படையெடுப்பு | உடன்கட்டை ஏறுதல் | ஜாக்கிரதையாக |
| ராஜ பதவி | அயர்ந்து தூங்கிக்கொண்டு | கிட்டத்தட்ட |
| அரண்மனே | அதட்டிக் கேட்டான் | வேண்டுகோள் |
| தென்பட்டது | ஆடையாபரணங்கள் | மூர்ச்சையுற்று |
| அலங்கரித்து | மூர்ச்சை தெளிந்து | ஈமக்கடன். |
| சுட்டிக்காட்டு | உற்று நோக்கி | வரலாறு |
| புன்னகை | காலியான | நள்ளிரவு |

முற்காலத்தில் சித்தூரை ராஞசிங் என்னும் ஓர் ராஜபுத்திர அரசன் ஆண்டு வந்தான். குஜராத்து நாட்டு அரசன் படையெடுத்து வந்து ராஞசிங்குடன் போர் புரிந்தான். ராஞசிங் யுத்தத்தில் கொல்லப் பட்டான். அந்தக் காலத்தில் ராஜபுத்திர மாதர்கள் தமது கணவர் இறந்த பின்னர் உயிர்வாழமாட்டார்கள். உடன்கட்டை யேறியோ அல்லது தீயில் பாய்ந்தோ தம் உயிரை விடுவர். இந்த வழக்கப்படி ராஞசிங் இறந்த பின்பு அவருடைய மனேவி அக்கினியில் பாய்ந்து தனது உயிரைவிடத் துணிந்தாள்.

அரசி தன் உயிர்த் தோழியாகிய பன்ஞ என்பவ ளிடம் தனது ஒரே ஆண் குழந்தையை ஒப்புவித்து, "நான் இறக்கப்போகிறேன்; நீ இந்தக் குழந்தையை ஜாக்கிரதையாக வளர்த்து அரசனுக்க வேண்டும்'' என்று கூறினுள். பன்ஞவும் அந்தக் குழந்தையை ஒப்புக்கொண்டு, அதைக் காப்பாற்றி வருவதாக வாக்குக் கொடுத்தாள். பிறகு அரசி நெருப்பை வளர்த்து அதில் விழுந்து மாண்டாள்.

ராஞசிங்குக்குப் பிறகு ராஜ பதவியை அடைந்த வன் ஒரு கொடியன். அவன் அரசகுமாரன் உயிருடன்

இருப்பின் தன் பதவிக்குக் கேடுவரும் என்று நினைத்து அந்தக் குழந்தையைக் கொல்லத் துணிந்தான்.

ஒரு நாள் நள்ளிரவு அரண்மனையில் ஒவ்வொரு வரும் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தனர். பன்னு அரசகுமாரனைத் தொட்டில் இட்டுப் பாட்டுப் பாடித் தாலாட்டிக் கொண்டிருந்தாள். அவளுக்கு அரச குமாரனை ஒத்த வயதுள்ள ஓர் ஆண்குழந்தை உண்டு. அந்தக் குழந்தை கிட்டத்தட்ட உருவத்திலும் தோற்றத் திலும் அரசகுமாரனைப் போலவே இருந்தது. அந்தக் குழந்தை தொட்டிலின் பக்கத்தில் தரையில் சிரித்து விளையாடிக்கொண்டிருந்தது.

அந்தச் சமயம் திடீரென்று அந்த அறையின் கதவைத் திறந்துகொண்டு ஒரு வேலைக்காரன் ஓடி வந்து, "அம்மணி! புதிய அரசர் ராஜகுமாரனைக் கொல்ல வருகிறார்" என்றான்,

பன்னு: என்ன! ராஜகுமாரனைக் கொல்ல வருகிறாரா? இது உண்மைதானா? உனக்கு எப்படித் தெரியும்?

வேலைக்காரன்: முதலில் அவர் அந்தச் சிறு வனைக் கொன்றுவரும்படி எனககு உத்தரவிட்டார். நான் தயங்கினேன். ஆகையால், அவரே வருகிறார்.

உடனே பன்னு அரசகுமாரனைக் காக்க யாது செய்யலாம் என்று யோசித்தாள்; சுற்றிலும் பார்த் தாள். ஒரு காலியான பழக்கூடை தென்பட்டது. அரசிளங்குமாரனைத் தொட்டிலிலிருந்து எடுத்து, அவ னுடைய ஆடையாபரணங்களைக் கழற்றினாள். அவனைக் காலியாயிருந்த பழக்கூடையில் வைத்து மேலாகச் சில இலைகளைப் போட்டு மறைத்தாள். ஒரு வேலைக்காரியை அழைத்து, அந்தக் கூடையைப் பத்திரமாக அரண்

மனைக்கு வெளியே ஓர் இடத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி கூறி அனுப்பினாள்.

பிறகு பன்னா தன் மகனை அரச குமாரனுடைய ஆடையாபரணங்களால் அலங்கரித்துத் தொட்டிலில் படுக்க வைத்துத் தாலாட்டினாள். குழந்தை தன் தாயின் முகத்தைப் பார்த்துப் புன்னகை புரிந்துகொண்டிருந்தது. அச்சமயம் கதவு திடீரென்று திறக்கப் பட்டது. உருவிய வாளுடன் வந்தான் அந்தக் கொடுங் கோல் மன்னன்.



"அரசகுமாரன் எங்கே?" என்று பன்னாவை அதட்டிக் கேட்டான்.

பன்னாவால் பேச முடியவில்லை. அவள் தொட்டிலைச் சுட்டிக் காட்டினாள்; மூர்ச்சை யுற்றுக் கீழே விழுந் தாள். பாதகன் தொட்டிலின் சமீபமாகச் சென்று குழந்தையை உற்று நோக்கினான்; வாளை ஓங்கி வீசிக் குழந்தையைக் கொன்றுவிட்டுத் திரும்பினான்.

பன்னு மூர்ச்சை தெளிந்து எழுந்தாள். தன் மகனுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களைச் செய்து முடித்தாள். பிறகு அரச குமாரனை எடுத்துச் சென்ற வேலைக்காரியைச் சந்தித்து,அவளிடமிருந்து குழந்தை யிருந்த அந்தக் கூடையை வாங்கிக் கொண்டாள். குழந்தையை எடுத்துச் சென்று ஒரு சிற்றரசனை அடைந்து, அவனிடம் நடந்ததைக் கூறி, அக் குழந்தையை வளர்த்து வரும்படி வேண்டினுள். அவனும் பன்னுவின் வேண்டுகோளுக்கு இணங்கி, அக்குழந்தையை வளர்க்க உடன்பட்டான்.

சில வருடங்களுக்குப் பின்னர் பன்னு அரசகுமார னுடைய வரலாற்றை நாட்டு மக்களுக்கு எடுத்துக் கூறி அவன் பட்டம் அடையும்படிசெய்து, தான் முன்பு அரசிக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றினுள்.

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :—
   (1) ராணுசிங் யுத்தத்தில் கொல்லப்பட்டதும் அவன் மனைவி என்ன செய்தாள் ?
   (2) ராணுசிங்குக்குப் பிறகு ராஜ்ய பதவியை அடைந்தவன் அரசகுமாரனை ஏன் கொல்ல நினைத்தான் ?
   (3) பன்னு அரசகுமாரனை எவ்விதம் காப்பாற்றினுள் ?
2. (1) மனிதன், அரசன், கொடியவன், வேலைக்காரன்—இவை களுக்குப் பெண்பால் எழுது.
   (2) சண்டை—இதே அர்த்தமுள்ள வேறு சில வார்த்தைகள் எழுது.
   (3) சுட்டிக்காட்டு, மூர்ச்சையுற்று, நள்ளிரவு, கிட்டத்தட்ட— இவைகளைத் தனித்தனி வாக்கியங்களில் உபயோகித்து எழுது.
3. கோடிட்ட இடங்களில் சரியான வார்த்தைகளை அமைத்துக் காட்டு:—
   (1) ஆகாயத்தில் காகங்கள்— — —(பறக்கிறது, பறக்கின்றன)
   (2) மாடு புல்லைத்— — —(தின்கிறது, தின்கின்றன)
   (3) ராமன் நேற்றுப் பள்ளிக்கூடத்துக்கு———(வருகிறுன், வந்தான்).
   (4) புத்தகங்கள் மேசையின்மேல்—(இருக்கின்றன, இருக்கிறது).

# 21. கடிதம் எழுதுதல்

நாம் கடிதம் எழுதி நமது கருத்துக்களை ஒருவருக்கு ஒருவர் தெரிவித்துக் கொள்ளுகிறோம் அல்லவா ? கடிதத்தில் ஐந்து பாகங்கள் உண்டு.

1. கடிதம் எழுதுவோரின் இருப்பிடமும் தேதியும்: கடிதத்தின் தலைப்பில் வலதுகைப் புறத்தில் கடிதம் எழுதுவோர் அவர் இருக்கும் வீட்டின் நம்பர், தெருவின் பெயர்,ஊரின் பெயர் இவைகளை எழுதி அவற்றின் கீழே தேதியைக் குறிக்க வேண்டும்.

2. அழைக்கும் முறை : கடிதம் யாருக்கு எழுதப்படுகிறதோ அவருக்கு ஏற்ற மரியாதையைக் குறிப்பிட்டு அவரை அழைக்கவேண்டும். ஆசிரியர், நண்பர் முதலியவர்களுக்குக் கடிதம் எழுதும் பொழுது எவ்விதம் அவர்களை அழைக்க வேண்டும் என்பதை மாதிரிக் கடிதங்களில் கவனியுங்கள்.

3. சமாசாரம் : இது கடிதம் யாருக்கு எழுதப்படுகிறதோ அவரிடம் கடிதம் எழுதுவோர் நேரில் சமாசாரங்களைச் சொல்லும் முறையில் தெளிவாக இருக்கவேண்டும்.

4. முடிவு : சமாசாரத்துக்கு அடியில் வலதுகைப் புறமாகக் கடிதம் எழுதுவோர் தம் கையொப்பம் இடவேண்டும். கடிதங்களை எவ்விதம் முடிக்க வேண்டும் என்பதையும் மாதிரிக் கடிதங்களில் கவனியுங்கள்.

5. மேல் விலாசம் : இதில் யாருக்குக் கடிதம் எழுதுகிறோமோ அவருடைய பெயர், உத்தியோகம், வீட்டின் நம்பர், தெருவின் பெயர், ஊரின் பெயர், தபாலாபீசின் பெயர் இவைகளைத் தெளிவாக எழுதவேண்டும்.

கருணாகரன் தனது நண்பன் சுந்தரத்திற்கு
எழுதின கடிதம்.

15, கீழ ரத வீதி,
மாணிக்கபுரம்.
10—9—48.

எனது அன்புள்ள சுந்தரம்,

எங்களுக்கு நேற்றுடன் கால்வருடப் பரீட்சை முடிவடைந்தது. எல்லாப் பரீட்சைகளிலும் நன்றாகத் தான் பதில் எழுதியிருக்கிறேன். இந்த வருடம் எங்கள் பள்ளிக்கூடத்தில் தக்களியாலும், இராட்டின் உதவியாலும் நூல்நூற்கக் கற்றுக் கொடுக்கிறார்கள் என்று முன்பு ஒரு கடிதத்தில் உனக்கு எழுதினேன் அல்லவா? இப்பொழுது பல பையன்களும் நானும் தக்களியாலும் இராட்டினாலும் நன்கு நூற்கக் கற்றுக் கொண்டுள்ளோம்.

சென்ற வாரத்தில் எங்கள் வகுப்பில் நூல் நூற்கத் தெரிந்த பையன்களையும் பெண்களையும் போட்டோ எடுத்தார்கள். அந்தப் போட்டோவின் ஒரு பிரதியை இந்தக் கடிதத்துடன் உனக்கு அனுப்பியிருக்கிறேன். போட்டோவின் நடுவே கதர் ஜிப்பா அணிந்து கொண்டு, தலையில் கதர்க்குல்லா வைத்துக்கொண்டு இராட்டில நூல் நூற்றுக் கொண்டிருப்பவரே எங்கள் வகுப்பு ஆசிரியர். இந்தப் போட்டோவை நீயே வைத்துக் கொள்.

இங்கு எல்லோரும் நலமாக இருக்கிறோம். உங்கள் வீட்டில் எல்லோருடைய சுகத்தையும் குறித்துப் பதில் எழுது.

இப்படிக்கு,
உனது அன்புள்ள
கருணாகரன்.

விலாசம்:
ஸ்ரீ சுந்தரம்,
28, வடக்கு ஆவணி மூலவீதி,
மதுரை.

சுந்தரம் கருணாகரனுக்கு எழுதின பதில்.

28, வடக்கு ஆவணி மூல வீதி,
மதுரை, 15—9—48.

எனது அன்புள்ள கருணாகரா,

நீ 10-9-48-ல் எனக்கு எழுதின கடிதமும், அத்துடன் அனுப்பிய போட்டோவும் கிடைத்தன. போட்டோ நன்றாக இருக்கிறது. நீ போட்டோவில் தலையைச் சிறிது குனிந்து கொண்டிருக்கிறாய்.

நீ நூல் நூற்கக் கற்றுக் கொண்டதைத் தெரிந்து மிகவும் சந்தோஷப்படுகிறேன். எனக்கு நூல் நூற்கக் கற்றுக்கொள்ள ஆசையாக இருக்கிறது. இந்த வருடம் அட்டை வேலை கற்றுக் கொடுக்கிறார்கள். இப்பொழுது எனக்கு அட்டையால் பெட்டிகள் செய்யத் தெரியும்.

இந்த விடுமுறை காலத்தில் அவனியாபுரம் விவசாயப் பண்ணை, பேரணை முதலியவற்றைப் பார்த்து வரப் பள்ளிக்கூடத்தில் ஏற்பாடு செய்யப்படுகிறது.

சென்ற வாரத்தில் என் தம்பி ரங்கனுக்குக் கொஞ்சம சுரமாக இருந்தது. இப்பொழுது குணமடைந்து, அவன் சுகமாக இருக்கிறான். உனக்குப் பரீட்சைமார்க்குகள் தெரிந்ததும் அவைகளைக் குறிதது எனக்கு எழுதி அனுப்பு. நானும் எனக்குக் கிடைக்கும் மார்க்குகளைக் குறித்து உனக்கு எழுதி அனுப்புகிறேன். கணக்கில்தான் எனக்கு மார்க்குக் கொஞ்சம குறையும் என்று நினைக்கிறேன்.

இப்படிக்கு,
உனது அன்புள்ள
சுந்தரம

விலாசம் :

ஸ்ரீ கருணாகரன்,
15, கீழ ரத வீதி,
மாணிக்கபுரம்.

மாதிரிக் கடிதம்—3

கருணகரன் தனது நண்பன் சுந்தரத்துக்கு
எழுதின பதில்.

15, கீழ ரத வீதி,
மாணிக்கபுரம்,
2—10—48.

எனது நேயமிக்க சுந்தரம்,

நீ 15-9-48 ல் எனக்கு எழுதிய பதில் கிடைத்தது. நீ இந்த வருடம் அட்டைவேலை கற்றுப் பெட்டிகள் செய்யப் பழகியிருப்பது பயனுடையதே. உன் தம்பி ரங்கனுக்கு உடல் நலம் எப்படி இருக்கிறது? சுரம் முற்றிலும் நீங்கி யிருக்குமென்று நம்புகிறேன்.

என்னுடைய கால் வருடப் பரீட்சையின் முடிவு இன்று வாசிக்கப்பட்டது. நான் எல்லாப் பாடங்களிலும் தேர்ந்திருக்கிறேன். உனக்குக் கணக்கில் மார்க்குக் குறையுமென்ருயே எப்படித் தேர்ந்திருக்கின்ருய்? நீ இதற்குமுன் ஆசிரியருடன் அற்புதக் காட்சிகள் அமைந்த இடங்களுக்குச் சென்று பல விஷயங்களை அறிந்து மகிழ்ந்ததாக என்னிடம் சொன்ன ஞாபகம் இருக்கிறது. அங்ஙனம் நீ பார்த்து வந்த அதிசயங்களை நானும் தெரிந்து கொண்டு மகிழ்ச்சி யடையும்படி விவரமாக எழுத விரும்புகிறேன்.

இங்ஙனம்,
உனது நேயமிக்க,
கருணகரன்.

விலாசம்:

திரு, சுந்தரம்,
28, வடக்கு ஆவணி மூல வீதி,
மதுரை,

# 22. அக்பர் சக்கரவர்த்தி

| | | |
|---|---|---|
| அரசியல் துறை | தேசசஞ்சாரி | இராஜ்யபாரம் |
| பின்பற்ற | வசதிகள் | பரிபாலனம் |
| வகுத்து | கூரிய | முனைந்தனர் |
| மாகாணம் | உயிர் துறந்தனர் | ஏகோபித்து |

பலவகை வளங்களும் படைத்த நமது பாரத தேசம் நாகரிகத்திலும் அரசியல் துறையிலும் சிறந்து விளங்கி வந்துள்ளது. இவ்விதம் சிறந்து விளங்கிய நமது நாட்டை முற்காலத்தில் பலவகை மன்னர்கள் ஆட்சிபுரிந்து வந்தார்கள். அவர்களுடைய அரசியல் முறையே இக்காலத்திய அரசியலாராலும் பின்பற்றத் தக்கதாயிருக்கிறது. நாட்டின் நன்மைக்காகப் பலவித ஆராய்ச்சிகள் செய்து, சிறந்த அரசியல் முறையை வகுத்துக் கொடுத்த மொகலாய மன்னர்களிலே அக்பர் ஒருவராவர்.

அக்பர் கி.பி. 1532-ஆம் வருடம் பிறந்தார். இவர் பிறக்கும் காலத்தில் இவரது தந்தை உமாயூன் இராஜ் யத்தை இழந்து பகைவருக்குப் பயந்து பாரசீகத்தை நோக்கிச் செல்லும் வழியில், சிந்து மாகாணத்தில் அமர்காட்டு என்னும் இடத்தில் வசித்து வந்தார். இவர்கள் நிலையாக ஓரிடத்தில் வசிக்காமல் தேச சஞ்சாரிகளாகச் சுற்றி வந்ததால், அக்பருடைய இளம் பிராயத்தில் அவர் முறையாகக் கல்வி கற்பதற்குப் போதிய வசதிகள் இல்லாதுபோயின. ஆயினும், இவர் ஆழ்ந்த சிந்தனையும் கூரிய அறிவும் படைத்தவர்.

அக்பருடைய 14-வது வயதிலே இவருடைய தந்தையார் போதிய சேனைகளைச் சேர்த்துப் போர் புரிந்து தாம் இழந்த டில்லி நகரத்தைத் திரும்பவும்

அடைந்தனர். சிறிது காலத்தில் அக்பருடைய தந்தை யார் உயிர் துறந்தனர். அப்பொழுது அக்பர் சிறுவராக இருந்ததால், நான்கு வருடகாலம் பைராம்கான் உதவியால் இராஜ்ய பாரத்தை நடத்திவந்தார். பின்பு, தாமாகவே அதைப் பரிபாலனம் செய்து வந்தார். அக்பர் அரசை ஏற்றுக் கொண்டவுடனே அதனை விருத்தி செய்ய வேண்டிய வேலையில் முனைந்தார். சுமார் இருபது வருடங்கள் தொடர்ந்தாற் போல் சண்டை செய்து வட நாட்டில் சிறிது சிறிதாக நாடு களைப் பிடித்துக் கடைசியில் இந்துஸ்தானம் முழு வதையும் கைப்பற்றினர். இராஜபுதனத்திலுள்ள மஹாராணு பிரதாப் மட்டும் அக்பருடைய ஆணைக்கு அடங்கி வரவில்லை.

அக்பர் பெரிய சுத்த வீரர். அவர் ஒரு தடவை பெரிய போர் யானை யொன்றின்மீது ஏறிக்கொண்டு மற்றொரு யானையுடன் போர் செய்து கொண்டே யமுனை நதியின் ஒரு பாலத்திற்குப் போய்ச் சேர்ந்தார். அந்தப் பாலம் யானைகளின் பாரத்தைத் தாங்காமல் இடிந்து விழுந்தது. அப்பொழுது சுத்த வீரரான அக்பர் சிறிதும் பயப்படாமலும் யானை முதுகினின்று இறங்காமலும் இருந்தார். யானைகள் அடுத்த கரை போய்ச் சேர்ந்ததும், அக்பர் இறங்கி, யானைகளைக் கூடத்தில் கொண்டு போய்க் கட்டும்படி உத்தர விட்டார்.

அக்பருடைய தர்பாரிலே பெரிய வித்வான்கள், ஞானிகள முதலியோர் எப்பொழுதும் கூட இருந்து ஆலோசனை கூறி வருவார்கள். அவர்களில் தோடர் மால், மானசிம்ஹன், அபுல் பஜல், பைஜி முதலிய வர்கள் சிறந்தவர்கள். அக்பர் இராக்காலங்களில்

அறிவாளிகளோடு பல விஷயங்களை ஆராய்ந்தும், பகற்காலங்களில் தேச விவகாரங்களை விசாரித்துநீதி வழங்கியும் வருவார். இவர் இந்துக்களையும் முஸ்லீம் களையும் ஒன்று சேர்த்து, அவர்களில் சிறந்த அறிவாளி களைக்கொண்டு நல்ல தர்மங்களைக் கடைப் பிடித்து ஒழுகிவரச் செய்தார். இரு பிரிவினர்களையும் உற்சாகப் படுத்திப்பெரிய பதவிகளைத் தகுதியுடையவர்களுக்குச் சமமாக வழங்கி, ஒற்றுமையைப் பலப்படுத்தி வந்தார்.

இம்மன்னருடைய எண்ணம் என்னவென்றால் இந்தியாவில் இந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்றாக வாழ்ந்து வந்தால் இந்திய மக்களைப் பின்னால் எவரும் அசைக்க முடியாது என்பதுதான். அரசரான அக்பர், பிற்காலத்தில் அரசாட்சி முறையில் தமது ஆழ்ந்த கருத்தை நிறைவேற்ற வேண்டிய முன்முயற்சிகளை எடுத்துக் கொண்ட பெருமை இம்மன்னருக்கே உரியதாம்.

## அப்பியாசம்

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது:—
   - (1) அக்பர் காலத்திய அரசியல் முறை சிறப்புடையது என் பதை விளக்கு.
   - (2) அக்பர் அரசாட்சி புரிந்த விவரம் என்ன ?
   - (3) அக்பர் பெரிய சுத்த வீரர் என்பது எங்ஙனம் விளங்கும் ?
   - (4) அக்பர் தர்பாரிலிருந்த புலவர்கள் யாவர் ?
2. (1) பின்பற்றத் தக்கதாயிருக்கிறது பதங்களாகப் பிரித் தெழுது.
   - (2) உமாயூன் பாரசீகம் நோக்கிப் புறப்பட்டார். அமர்காட்டு என்னுமிடத்தில் வசித்தார். இவ்விரண்டு வாக்கியங் களையும் சேர்த்து ஒரு வாக்கியமாக எழுது.
   - (3) அக்பர் இருபது வருடங்களாக, தொடர்ந்து சண்டை செய்து வட நாட்டில் சிறிது சிறிதாக நாடுகளைக் கைப்பற்றினர். இந்த வாக்கியத்தை இரண்டு தனி வாக்கியங்களாகப் பிரி.
   - (4) அக்பர் அமர்காட்டில் பிறந்தார். இந்த வாக்கியத்தில் எத்தனை வார்த்தைகள் இருக்கின்றன ? ஒவ்வொன்றும் என்ன வகையான சொல்? எழுவாய், பயனிலை இவைகளைக் கூறு.

# 23. பொறுமைக்கு வெகுமதி

## காட்சி 1

[பெரியவர், கந்தன், சரஸ்வதி, குழந்தைகள்]

தாது வருடத்திலே பஞ்சம் ஏற்பட்டது. வெகு நாளாக மழையே இல்லை. பூமி வறண்டு விட்டது. பயிர் பச்சைகள் உலர்ந்து போயின. உணவுக்கு வகையொன்றுமில்லாமல் ஜனங்கள் அவதிப்பட்டனர். ஊருக்கு மேலக் கோடியில் உலர்ந்துகிடந்த தாமரைக் குளத்தைத் தோண்டி, தாமரைக் கிழங்குகளைக்கூட ஜனங்கள் சாப்பிட ஆரம்பித்து விட்டார்கள். புளியங் கொட்டை படி ஒரு ரூபாயாக விற்றது.

அந்த ஊரிலே பெரியவர் ஒருவர் இருந்தார். ஏழைகள் படும் பாட்டைக் காண அவருக்குச் சகிக்க முடியவில்லை. தூர தேசத்திலிருந்து மிகுந்த பணச் செலவு செய்து அவர் கோதுமை மாவைத் தருவித்தார். அதை அடைகளாகச் செய்து ஊரிலுள்ள குழந்தைகள் எல்லோருக்கும் தினம் ஒவ்வொரு குழந்தைக்கும் ஒவ்வொன்று வீதம் கொடுத்து வந்தார்.

[இதோ அவருடைய வீட்டின் வாசலில் நிற்கிறோம்; கோதுமை அடைகளுக்காக, 'எனக்கு முதலில், எனக்கு முதலில்' என்று குழந்தைகள் சண்டையிட்டுக் கொள்ளுவது காதில் விழுகிறது.]

கோபு:--[ஒரு சிறுவனை நோக்கி] ஏண்டா, என்னைத் தள்ளுகிறாய்? [பெரியவரை நோக்கி] ஐயா, என்னைத் தள்ளுகிறான் பாருங்கள்.

ராமு:--நிற்க முடியவில்லை. ஐயா, எனக்கு முதலில் கொடுங்கள்.

முத்து: மூஞ்சியைப் பார், மூஞ்சியை, உனக்கென்னடா முந்தி?

மீனாட்சி: ஐயையோ! என்னுடைய பாவாடை கிழிந்து விட்டதே! அக்கா! [அழுகிருள்]

காமாட்சி: [மீனாட்சியின் தமக்கை] அழாதே மீனு. இதோ வந்துவிட்டார் பெரியவர். அடையை வாங்கிக் கொண்டு போய்விடலாம்; அழாதே, அம்மா.

மீனாட்சி: இரண்டு அடையையும் எனக்குக் கொடுக்கிருயா ?

காமாட்சி: ஆகட்டும்! தருகிறேன்.

மீனாட்சி: எனக்குக் கொஞ்சம் தண்ணீர் வாங்கிக் கொடேன்.

காமாட்சி: தண்ணீர் ஏது இங்கே? ஓடு, ஓடு, அடை கொடுககிருர்கள்.

எல்லோரும்: [பெரியவரை நோக்கி] எனக்கு முந்தி ஐயா, [பக்கத்திலுள்ளவரை நோக்கி] காலே மிதிக்காதே, [பெரியவரைநோக்கி] இங்கேகொடுங்கள்.

பெரியவர்: கூச்சல் போடாதேயுங்கள். ஹூம்–ஹூம், மெதுவாய், மெதுவாய, ஏன் இப்படி விழுகிறீர்கள் ? [வேலேக்காரனை நோக்கி] ஆளுக்கு ஒன்று கொடு.

வேலேக்காரன்: இதோ பாருங்கள் எஜமான், இந்தப் பையன் இரண்டாம் தடவை கேட்கிருன்.

பெரியவர்: கொடு, கொடு, [குழந்தைகள் எல்லோரும் வாங்கிக்கொண்டு போகின்றனர். சரஸ்வதி என்னும் பெண்மட்டும் தனியாக நிற்கிருள்.] அப்பாடா, என்ன பாடு படுத்துகின்றன இந்தக் குழந்தைகள். இது யார்? [சரஸ்வதியைப் பார்த்து] ஏனம்மா நிற்கிருய் ?

சரஸ்வதி: ஐயா, அடை வாங்கிப் போவதற்காக நிற்கிறேன். இருந்தால் கொடுங்கள்.

பெரியவர்: அடே கந்தா, இந்தப் பெண்ணை நான் தினமும் பத்து நாளாகப் பார்த்து வருகிறேன். எல்லோரும் போன பிறகு, காத்திருந்து கடைசியிலே வாங்கிக்கொண்டு போகிறாள். உள்ளே கைப்பெட்டி மேலே ஓர் அடை வைத்திருக்கிறேன். அதை எடுத்துக் கொண்டு வா. அதை இவளுக்குக் கொடுப்போம். [வேலைக்காரன் போகிறான்.] அம்மா இதுதான் சரி. இப்படித்தான் பெறுமையாக இருக்கவேண்டும். உன் பெயர் என்ன அம்மா ?

சரஸ்வதி: ஐயா, என் பெயர் சரஸ்வதி.

பெரியவர்: சரஸ்வதி! அழகான பெயர். அதற்கேற்ற குணமும் இருக்கிறது. [வேலைக்காரன் வருகிறான்.] இந்தா, வாங்கிக்கொள்.

[சரஸ்வதி அடையை வாங்கிக்கொண்டு வீட்டுக்குப் போகிறாள்.]

## காட்சி 2

சரஸ்வதி: [வேலைக்காரனை நோக்கி] ஐயா பெரியவர் எங்கே இருக்கிறார் ?

வேலைக்காரன்: அடே சாயங்காலமும் வந்துவிட்டீர்களா? காலையில் வாருங்கள் அடைக்கு. போ, போ, காலையில் வா.

சரஸ்வதி: இல்லை ஐயா, பெரியவரைப் பார்க்க வேண்டும்.

கந்தன்: இபபோது பார்க்க முடியாது என்கிறேன் காதில் விழவில்லை ! பெரியவர் தூங்குகிறார்!

[உள்ளே பெரியவர் குரல்]

பெரியவர்; யாரடா அங்கே?

கந்தன்: எஜமான், ஒரு பெண் வந்து—

பெரியவர் : அடே, ஒன்றும் சொல்லாதே யடா. ஒரு அடை கொடுத்துப் போகச் சொல்லு.

கந்தன் : இந்தா, அடையை வாங்கிக் கொள். ஆனால், இனிமேல் சாயங்காலம் வராதே.

சரஸ்வதி : எனக்கு அடை வேண்டாம். பெரியவுரைப் பார்க்க வேண்டும்.

கந்தன் : இதென்ன சங்கடம் ? பெரியவர்--பெரியவர் என்று இங்கே இரையாதே. தூங்குகிறார்க ளென்று சொல்லுகிறேன் அல்லவா ? எஜமான்! அந்தப் பெண்ணுக்கு அடை வேண்டாமாம். உங்களைத்தான் பார்க்க வேண்டுமாம்.

[பெரியவர் வருகிறார்.]

பெரியவர் : யார் சாஸ்வதியா ? வா அம்மா ! என்ன வேண்டும், அம்மா !

சரஸ்வதி : ஐயா, இன்று மாலையிலே நீங்கள் கொடுத்த அடையிலே இதோ இந்தப் பவுன்காசு இருந்தது. இதைத் திருபபிக் கொடுத்துவிட்டுப் போக வந்தேன்.

கந்தன் : பவுன் காசா !

பெரியவர் : பார்த்தாயா கந்தா ! இந்தக் குழந்தையை அதட்டினாயே பார்த்தாயா ! அவளுடைய பொறு மையைப் பார்த்துத்தான் அந்த அடையிலே ஒரு பவுன் காசை வைத்துக் கொடுத்தேன். அதைத் திருப்பிக் கொண்டு வந்து விட்டாள். பொறுமை மட்டுமில்லை. இந்தக் குழந்தையிடம் உண்மை யும் நாணயமும் இருக்கின்றன. அம்மா, சரஸ் வதி நீயே அந்தக் காசை வைத்துக்கொள். அது உன்னுடைய பொறுமைக்கு வெகுமதி.

சரஸ்வதி : எனக்கு வேண்டாமையா. இந்தக் காசைக் கொண்டு நானென்ன செய்ய ?

பெரியவர் : பாதகமில்லை. அது உன்னிடமே இருக்கட்டும். உனக்கு வேறு ஏதாவது வேண்டுமானாலும் கேள்.

சரஸ்வதி : ஐயா, என் தம்பியாலே இங்கே நடந்து வந்து அடை வாங்கிக் கொண்டு போக முடியவில்லை. அம்மாவும் படுத்த படுக்கையாக இருக்கிருள்.

பெரியவர் : உனக்கு அப்பா இல்லையா ?

சரஸ்வதி : பஞ்சம் வந்த பிறகு அவர் தெற்கே போனர்; திரும்பி வரவே இல்லை.

சரஸ்வதி : ஒரு அடை எங்கள் மூன்று பேருக்கும் போதவில்லை. தினம் இன்னொர் அடை கொடுக்கச் சொல்லுங்களேன்.

பெரியவர் : ஒன்று போதுமா ?

சரஸ்வதி : போதும் அம்மாவுக்கு ஒன்று, எனக் தம் தம்பிக்கும் ஒன்று.

பெரியவர் : அம்மா, சரஸ்வதி ! இந்த வயதிலே இவ்வளவு பொறுமையும திருப்தியும் உனக்கு இருப்பதைக் கண்டு சந்தோஷம்.
அடோ கந்தா ! வண்டியைப் போடு. இந்தக் குழந்தை வீட்டுக்குப்போய் அதன் தம்பியையும் அம்மாவையும இங்கே அழைத்துக்கொண்டுவா. எல்லோரும் இங்கேயே இருக்கலாம்.

சரஸ்வதி : இந்தப் பவுன் காசு ?

பெரியவர் : நீயே வைத்துக்கொள், அம்மா ! எனக்கு உன் மாதிரி ஒரு குழந்தையைப் பகவான் கொடுக்கவில்லை. இங்கே இருக்கிற பவுன் காசெல்லாம் உனக்குத்தான். போ. கந்தா, சீக்கிரம் அழைத்து வா. சரஸ்வதி ! உள்ளே போகலாம் வா.

# செய்யுட் பகுதி

## 1. தாய் தந்தையரை வணங்குதல்

உற்றவரே! என்னைப் பெற்றவரே! தினம்
உமக்கே நமஸ்காரம்;
முற்றுமே நீர்செய்த உதவிக்கு நான் என்ன
மொழிவேன் உபசாரம். 1

எனக்கொரு சுகம்வரின் உமக்குவந் ததுபோல
எக்களிப் படைந்தீரே!
எனக்கொரு துயர்வரில் உமக்குவந் ததுபோல
ஏங்கி உள்ளுடைந்தீரே. 2

பாலுஞ்சோ றும்பக்ஷணங்களும் எனக்கிட்டுப்
பழஞ்சோ றுண்டீரே!
காலமெல் லாம்நல்ல சோமன்நா னுடுக்க நீர்
கந்தையைக் கொண்டீரே! 3

மண்பிள்ளை யாயினும் தன்பிள்ளை யென்றெனை
மகிழ்ந்தா தரித்தீரே;
பண்புடன் என்னை ஒருவனாக நீர் பலரையும்
பணிந்துப சரித்தீரே. 4

தெரியாமல நான் செய்த பிழைபொறுத் தென்னிடம்
திருவருள பதிப்பீரே;
அருமைதெய்வத நாயகன் அருள் செய்யும்படி என்னை
ஆசீர் வதிப்பீரே.

—வேதநாயகம் பிள்ளை.

---

## 2. பரசுராமனுக்கும் இராமனுக்கும் சம்வாதம்

திரு மகளாம் சானகி கல்யாணம் செய்து
செயம்உள தம்பியர்க்கும் விவாகங்கள் செய்து
வரும் வழியில் சகுன விரோதத்தினாலே
மலைபோல முனி பரசு ராமன் வந்தான்;
பெருகு தசரதன் கண்டு நடுங்கும்போது
பிரசண்ட கோதண்ட குருராமன் வந்தான்;
ஒருவரும் நேர் இல்லைஎன வில்லை ஏந்தி
உரம் சொல்வான் உடனே உத்தரம் சொல்வானே.

1. மண்ணில் அரசர் போல் காணுகிருயே
   ஆசீர்வாதம் ரகு ராமா.
   கண்ணில் வேதியர் போல் தோணுகிருயே
   நமஸ்காரம் பரசு ராமா.

2. தாடகை என்னும் பெண்மேல் சண்டை
   கொள்ள ராசற்குத்தான் விதியோ ராமா.
   வேடர்கள் தொடுக்கும் வில்லைப் பிராமணர்
   தொடத் தலைவிதியோ பரசு ராமா.

3. ஆனுல் பெண்கொலை செய்யல் ஆமோ
   உனக்கிது அடைவோ ரகுராமா.
   தானுகப் பெற்றெடுத்த தாயைக் கொலைசெய்
   தாயே தகுமா பரசு ராமா.

4. தருமமா எனைப்பெற்ற தகப்பன் சொற்படி
   செய்தேன் தாய்க் கொலையோ ராமா.
   குருவார்த்தை தடுக்காமல் நானும் செய்தேன்
   பெண் கொலையோ பரசுராமா.

5. சொத்தைவில் ஒடித்ததை மெத்த மெத்தவே
   எண்ணித் துள்ளாதே ரகுராமா.
   கற்ற வேதியன் என்று பொறுத்தேன்
   குதிக்காதே பரசு ராமா.

6. அந்தவில் வளைத்தாயே இந்தவில் வளை
   இந்தா, அடடா, ரகு ராமா.
   இந்தா, வளைத்தேன் இதில் வைத்த அம்
   புக்கு வழி எங்கே பரசு ராமா.

7. அம்புக்கு வழியில்லை நான் பிராமணன்
   இனி அனுக்கிரகம் செய் ராமா.
   பின் புத்திக்காரன் இரு பிறப்பன் உன்
   ஞேடே என்ன பேச்சு பரசு ராமா.

8. சந்தி ஜெப தபங்கள் எல்லாம் உன் சரத்
   துக்கே தந்தேன் ரகு ராமா.
   வந்தவழி பார்த்துக்கொண் டோடிப்
   போவதே நல்ல மார்க்கம் பரசு ராமா.

# 3. மூதுரை

1. நல்லாரைக் காண்பதுவும் நன்றே, நலமிக்க
நல்லார் சொற் கேட்பதுவும் நன்றே – நல்லார்
குணங்க ளுரைப்பதுவும் நன்றே, அவரோடு
இணங்கி யிருப்பதுவும் நன்று.

2. தீயாரைக் காண்பதுவுந் தீதே, திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதே—தீயார்
குணங்களுரைப்பதுவுந் தீதே, அவரோடு
இணங்கி யிருப்பதுவுந் தீது.

3. நெல்லுக் கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாம் – தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரே லவர் பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை.

4. கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்– சபைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டாத வனன் மரம்.

5. கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற்போலுமே
கல்லாதான் கற்ற கவி.

6. வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடதாரி
ஆங்கதனுக் காகார மானாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த உபகார்ம்
கல்லின்மே லிட்ட கலம்.

7. அடக்க முடையார் அறிவிலரென்றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா—மடைத்தலையில்
ஓடுமீ னோட வுறுமீன் வருமளவும்
வாடியிருக்கு மாங் கொக்கு.

8. அற்ற குளத்தி னறுநீர்ப் பறவை போல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர் – அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டியுறுவார் உறவு.

9. சீரியர் கெட்டாலுஞ் சீரியரே சீரியர் மற்று
அல்லாதார் கெட்டால் அங்கென்னாகும் –சீரிய
பொன்னின் குடமுடைந்தால் பொன்னாகும் என்னாகும்
மண்ணின் குடமுடைந்தக்கால்.

10. நற்றாமரைக் கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்– கற்பில்லா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம்.

11. நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு – நெஞ்சில்
கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர்.

12. மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனின் கற்றோன் சிறப்புடையன் – மன்னற்குத்
தன் தேசம் அல்லால் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்ற இடம் எல்லாம் சிறப்பு.

———

# 4. நல்வழி

1. ஆற்றுப் பெருக்கற் றடிசுடும் அந் நாளுமவ்வா(று)
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்குடிப் பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து.

2. ஆன முதலில் அதிகம் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லானாம் நாடு.

3. ஆறிடும் மேடும் மடுவும்போ லாமசெல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்!—சோறிடும்
தண்ணீரும வாரும தருமமே சார்பாக
உண்ணீரும வீறும் உயர்ந்து.

4. சேவித்தும் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல் கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும—போவிப்பம்
பாழி னுடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி அரிசிக்கே நாம்.

5. மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமங் கில்லை—சுரந்தமுதம்
கற்றா தரல்போல் கரவா தளிப்பரேல்
உற்றா ருலகத் தவர்.

6. பூவாதே காய்க்கும் மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின் றுணர்வார் தாமுளரே—தூவா
விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்(கு)
உரைத்தாலும் தோன்றா துணர்வு.

———

# 5. பிட்டுக்கு மண் சுமந்த கதை

"யாரும் அற்ற பாவி எனக்காரும் துணையிங்கில்லை.
என்ன செய்வேன்," என்று ஏங்கிமனங்கலங்கி
வந்தி படுந்துயரம் மாற்ற மனதிலெண்ணி
அழுக்குப் படிந்த கந்தை அரையிலே தானுடுத்து
தலைமேல் சும்மாடு கட்டித் தான் கூடை மேல்கவிழ்த்து
மண்வெட்டி தன்னை மறு விலாத் தோள் சுமந்து
ஒட்டனைப்போல் உருவம் தனைஎடுத்துக்
கூலிகொடுத்து வேலைகொள்வார் உண்டோ ?" என்று
வந்தி மனைக்கருகே வந்துநின்றார் அந்நேரம்.

(வந்தியிடம் உதிர்ந்த பிட்டுக்குக் கரையை அடைக்க ஒப்புக்கொண்டு)

"உதிர்ந்த பிட்டைத் தின்று ஒருகூடை மண்சுமந்து
போடுவார், வெட்டுவார், தட்டும் சரியாகும்,
மறுபடியும் தான்வருவார் வாணிச்சி அண்டையிலே
பிட்டெடுத்துத் தான் தருவாள் பேரான ஒட்டருக்கு
பிட்டுதின்று போவாராம் போடுவார் தட்டுமண்ணு.
பிட்டுதனைத்தின்று போவதும் வருவதுமாய்
ஒட்டன் திரிய உதிர்ந்த பிட்டும் சரியாச்சு
களைத்தவரைப் போலக் கண்துயின்றார் அவ்வேளை."

———

# 6. பாரத தேசம்

ராகம்—புன்னாகவராளி

பல்லவி

பாரத தேச மென்று பெயர் சொல்லுவார்—மிடிப்
பயங் கொல்லுவார் துயர்ப்பகை வெல்லுவார்.

சரணங்கள்

1. வெள்ளிப் பனி மலையின் மீதுலவுவோம்;— அடி,
மேலைக் கடல் முழுதுங் கப்பல் விடுவோம்;
பள்ளித் தல மனைத்துங் கோயில் செய்குவோம்; எங்கள்
பாரத தேசமென்று தோள் கொட்டுவோம்.

2. சிங்களத் தீவினுக்கோர் பால மமைப்போம்;
சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம்;
வங்கத்தி லோடிவரும் நீரின் மிகையால்
மையத்து நாடுகளிற் பயிர் செய்குவோம்.

3. வெட்டுக் கனிகள் செய்து தங்க முதலாம்
வேறு பல பொருளுங் குடைந் தெடுப்போம்;
எட்டுத் திசை களிலுஞ் சென்றிவை விற்றே
எண்ணும் பொருளனைத்தும் கொண்டு வருவோம்.

4. முத்துக் குளிப்ப தொரு தென்கடலிலே
மொய்த்து வணிகர் பல நாட்டினர் வந்தே
நத்தி நமக்கினிய பொருள் கொணர்ந்து
நம்மருள் வேண்டுவது மேற்கரையிலே.

5. கங்கை நதிப்புறத்துக் கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்ளுவோம்;
சிங்க மராட்டியர் தங் கவிதை கொண்டு
சேரத்துத் தந்தங்கள் பரிசளிப்போம்.

6. பட்டினி லாடையும் பஞ்சிலுடையும்
பண்ணி மலைகளென வீதி குவிப்போம்;
கட்டித் திரவியங்கள் கொண்டு வருவார்
காசினி வணிகருக் கவை கொடுப்போம்.

—பாரதியார்.

# அரும்பத விளக்கம்

அஞ்சி - பயந்து
அடிப்படை - அஸ்திவாரம்
அந்தரங்கம் - ரகசியம்
அபிமானம் - நேசம்
அமைதி - அடக்கம
அருமை - அபூர்வம்
அறிகுறி - அடையாளம்
அறிவாளி - புத்திசாலி
அநுமதி - சம்மதி
ஆகாய வீதி – வானவெளி
ஆசிரியர் - உபாத்தியாயர்
ஆச்சரியம் – அதிசயம்
ஆணை - ஆக்கினை
ஆராய்ந்து – யோசனை செய்து
ஆற்றல் - வலிமை
இகழ்ந்தது - நிந்தித்தது
இளங்காற்று - மெல்லிய காற்று
இளைத்து மெலிந்து
உடைமை - செல்வம
உதயத்தில – அதிகாலையில்
உபசரித்தல் – மரியாதை செய்தல்
உய்யும்பொருட்டு – நலவழிப்படுவதற்காக
உருமாறி – வடிவம் வித்தியாசப் பட்டு
உழைத்து – பாடுபட்டு
உற்சவம - திருவிழா
ஊர்வலம் - பட்டணப் பிரவேசம்
ஊழியம் - சேவகம
எச்சரிக்கை - பகிரங்கமாக அறிவித்தல்
எளிதில்-இலகுவாக
ஏகினர் - சென்றனர்
ஏந்திய - தாங்கிய
கடிந்து – கோபித்து
கப்பம் – அரசிறை
காலைக்கடன் – காலையில் எழுந்தவுடன் செய்யவேண்டிய நித்திய கருமங்கள்
குருகுலவாசம் - குருவின் வீட்டிலிருந்து படித்தல்
குழப்பம் - மனக்கலக்கம்
கூட்டாளி - பங்காளி
சஞ்சாரம் - பிரயாணம்
சாதனம் – உறுதி
சுபாவம் - இயல்பு
சேமித்து - ட்சகரித்து
திலகமாக - முதன்மையாக
துணிவு - தைரியம்
தெவிட்டாத - வெறுப்பில்லாத
நள்ளிரவு - நடுராத்திரி
நியமித்து - ஏற்படுததி
நுண்ணறிவு - கூரியபுத்தி
நொடி - மேடு பள்ளமுள்ள பாதை
பரிசு – இனும்
பருகும் – குடிக்கும்
பாவாடை – சிறு பெண்கள் அரையில் கட்டும் ஆடை
புயல் - கடுங்காற்று
புறம் - பக்கம்
புன்னகை - குறுஞ் சிரிப்பு
பெருந்தொகை - அதிகப் பணம்
பேராசை - அதிக விருப்பம்
மாண்டது - இறந்தது
மாவுத்தன் – யானைப் பாகன்
முடிமணி - மன்னர்கள் கிரீடத்தில் அணியும் இரத்தினம்
முன்னேற்றம் - முற்போக்கு
மேதாவி - அறிவாளி
யோகம் - நிஷ்டையிலிருத்தல்
லாயம் - குதிரைகட்டும் இடம்
வகிர்ந்த - பிளந்த
வண்மை - ஈகை
வலிமுகம் - குரங்கு
வாணிபம் - வர்த்தகம்
வித்தை - தொழில்
விவகரித்து - விசாரித்து
விநோதம் - வேடிக்கை
வேழம் - யானை

---

# செய்யுட் பகுதி

1. தாய் தந்தையரை வணங்குதல்:-பெற்றவர்-ஈன்றெடுத்தவர். மொழிதல் - சொல்லுதல். எக்களிப்பு-சந்தோஷம். உளளுடைதல்-சஞ்சலப்படுதல். சோமன-ஆடை திருவருள்-தெய்வக் கருணை.

2. பரசுராமனுக்கும் இராமனுக்கும் சம்வாதம் - திருமகள் - இலட்சுமி. முனி-தவசி. உரம்-வலிமை. வேதியர்-பிராமணர். குரு-ஆசிரியர். சொத்தை வில் - கெட்டுப் போனவில். குதித்தல்-துள்ளுதல்.

3. மூதுரை - நல்லார் - பரிசுத்தமுள்ளவா, குணங்கள்-தயை, சாந்தம், பொறுமை முதலியநற்குணங்கள், 2, தீயார்-கெட்ட பழக்கமுள்ளவா. திருவற்ற நற்குண நற்செயல்களில்லாத, 3, பொசிகல - பாய்தல். தொல் உலகு-பழமையான உலகம்; பெயயும்-பொழியும். 4. கவை-கிளை. நீட்டோலை-கொடுத்த கடிதம், குறிப்பு-சமிக்ஞை,கானமயில்-காட்டிலே வாழ்கின்ற மயில. 6. விடதாரி-விஷவைத்தியன்-பாங்கு-தன்மை, கலம-மட்பாத்திரம் 7. அடக்கம-மனத்தை அடக்கிய தன்மை, மடைத்தலை-நீர் பாயும் மடைப்பாகம் 8 அற்றகுளம-நீர்வற்றிய குளம். ஒட்டியுறதல்-பற்றி இருத்தல. 9. சீரியா-நற்குணம் வாய்ந்தோா.10 கயம்-தடாகம்.முகப்பா-விரும்புவர். முதுகாடு-சுடுகாடு. 11 கரந்துமறையும மறைந்து வசிக்கும். கரவுடையா-வஞ்சகமுடையோர். 12. சீர் தூக்கல்-அளந்து பார்த்தல். சிறப்பு-மேன்மை.

4. நல்வழி: -1. உலகூட்டும்-மக்களுக்கு நீர்கொடுத்து உதவும். நல்கூர்தல்-தரித்திரமடைதல். 2. மானம்-பெருமை, மதி-அறிவு 3. மேடு-மணல்மேடு. மடு - பள்ளம் 4. சேவித்தல்-வணங்குதல்,கடல் கடத்தல் - அயல் தேசம் செல்லுதல, பாட்டிசைத்தல்-கவிபாடுதல 5. அமுதம்-அமிர்தம்போன்ற பால். கற்று - கன்றையுடைய கறவைப் பசு, 6. ஏது-தூண்டாமல். உணர்வார்-குறிப்பு உணர்ந்து செய்பவர்.

5. பிட்டுக்கு மண்சுமந்த கதை: யாருமற்ற பாவி - உறவினர் ஒருவருமில்லாதவன. துயரம்-துன்பம். மறுவிலா-குற்றமில்லாத, ஒட்டன-கூலி வேலை செய்பவன். அருகு-சமீபம். களைத்தயர் - சோர்ந்தவர். துயின்றா - தூங்கினர்.

6. பாரத தேசம்;—1. பாரத தேசம்-இந்திய தேசம். பனி மலை-இமயமலை. பள்ளித்தலம-பள்ளிக்கூடங்கள் 2. சிங்களத்தீவு-இலங்கைத் தீவு. வங்கம் - வங்காளம். நீரினமிகை-நீரின்மிகுதி.மையத்து நாடு-மத்தியப் பிரதேசம் 3. வெட்டுக்கனி-சுரங்கம். 4. முத்துக்குளிப்பது-கடலிலே குளித்து முத்தெடுப்பது. வணிகர் - வர்த்தகர்கள. நந்தி-விரும்பி. 5. மராட்டியர்-மகாராஷ்டிரர். கவிதை - செய்யுள். பரிசு-வெகுமதி 6. காசினி-பூமி.



நவீன

# தமிழ்ப் பாட புத்தகம்

ஐந்தாம் வகுப்பு






ஆதீன வித்துவான்
வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை,
திருவாவடுதுறை.






எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை
பப்ளிஷர்ஸ் :: திருநெல்வேலி

 [விலை அணா 9

# முன்னுரை

'நவீன தமிழ்ப் பாட புத்தகம்' என்னும் புத்தக வரிசை இப்பொழுது புதிதாகச் சென்னை வித்தியா இலாகா அதிகாரிகள் வெளியிட்டிருக்கும் பாடத் திட்டத்தை அநுசரித்து எழுதப்பட்டிருக்கிறது. சிறு பிள்ளைகளுக்குப் படங்களைப் பார்ப்பதிலேயே விருப்பம் இயற்கையாகச் செல்லும். ஆகையால், முதற் புத்தகத்தில் சிறுவர்கள் வீட்டிலும், சுற்றுப்பக்கங்களிலும் பார்த்தும் கையாடியும் பழகியுள்ள பொருள்கள் படரூபமாக முதலில் காட்டப் பட்டிருக்கின்றன. பின்பு பொருள்களின் படங்களும் அவற்றின் பெயர்களும் காட்டப்பட்டிருக்கின்றன. இதனால் முன் படத்தை மட்டும் பார்த்த பிள்ளைகள், இப்பொழுது படத்தோடு எழுத்துக்களையும் கவனிக்கிறார்கள். மேல் அவர்கள் படித்த வார்த்தைகளை எழுதுவதற்கு உபயோகமான அப்பியாசங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த நிலையில் அவர்கள் முன் படித்த எழுத்துக்களை எழுதி அப்பியாசம் செய்தல் வேண்டும். பின் சில எளிய பாடங்களும், கதை விளக்கப் படங்களும், பாட்டுகளும் அமைக்கப் பட்டிருக்கின்றன.

இரண்டு முதல் ஐந்து வரையுள்ள புத்தகங்களில் புதுப் பாடத்திட்டத்தை அனுசரித்து நூதன வார்த்தைகள் படிக்கிரமமாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சிறுவர்கள் மனத்தைக் கவரும் படியாகப் பாடங்கள் அநேகமாகக் கதையாகவே அமைக்கப்பட்டிருக்கின்றன. இப்பாடங்கள் அவர்களுக்கு நீதியையும், உலக அறிவையும், இயற்கைப் பொருள் ஞானத்தையும் உண்டாக்கும் படியான முறையில் வரிசைப் படுத்தப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு பாடத்தின் ஆரம்பத்திலும் அப்பாடத்தில் வரும் சில முக்கியமான புதிய வார்த்தைகள் குறிக்கப்பட்டிருக்கின்றன. இன்றியமையாத கேள்விகளும் அப்பியாசங்களும் பாடத்தின் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

ஆகவே, இப் புத்தகங்கள் மாணுக்கர்களுக்கு நமது வித்தியா அதிகாரிகள் கொடுக்க விரும்பும் பாஷா ஞானத்தை எளிதில் கொடுக்குமென்று நம்புகிறேன்.

இரண்டாவது திருந்திய பதிப்பாகிய இப்பிரசுரங்கள் போதனா முறை ஆசிரியர்கள் கருத்துக்கேற்பச் சில பாடங்கள் நீக்கியும், புதிய பாடங்கள் சேர்த்தும், சிறுவர் சிறுமியர்கள் நடிக்கத் தகுந்த நாடகம் ஒன்று சேர்த்தும், அவர்கள் மேல் வகுப்பில் அகராதியை உபயோகிப்பதற்கு வழி காட்டியாகப் புத்தகத்தின் இறுதியில் அரும்பத விளக்கம் அகராதி வரிசையில் சேர்த்தும் அச்சிடப்பட்டிருக்கின்றன.

வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை

# பொருளடக்கம்




# ஐந்தாம் வகுப்பு

## 1. பேராசை பெரு நஷ்டம்

| | | |
|---|---|---|
| பேராசை | புனைந்த | அகமகிழ்ந்து |
| வணிகன் | மேனி | பரமானந்தம் |
| இரசவாதி | புன்னகைபுரிந்து | தியானம் |
| குண்டலம் | உள்ளத்தில் | உருமாறி |
| அணிந்த | உலகப்பிரசித்தி | கவர்ந்து |
| காவியாடை | கன்றுகாலிகள் | வாட்டமுற்று |

கலிங்க தேசத்திலே அரிபுரத்தில் தருமதத்தன் என்ற வணிகன் ஒருவன் இருந்தான். ஒரு நாள் அவனிடம் இரசவாதி ஒருவன் வந்தான். அந்த இரசவாதி குண்டலம் அணிந்த செவியும், காவியாடை புனைந்த திருமேனியும், மந்திரக்கோல் ஏந்திய கையும் உடையவனாகக் காணப்பட்டான்.

தருமதத்தன் அவனை வணங்கி, 'முனிவரே தாங்கள் இங்கு வந்த காரணம் என்னவோ?' என்று கேட்டான். அதற்கு இரசவாதி, 'வணிகர் தலைவனே! நம்மிடத்தில் கடவுள் அருளால் ஓர் அருமையான வல்லமை உண்டு. நம்பிக்கையுடையோர்க்கு மாத்திரமே அது வெளியிடத் தக்கது. உனக்கு நாம் அதனை வெளியிடுவோம்' என்று சொன்னான்.

‘அவ்வல்லமை யாது?’ என்று வணிகன் கேட்டான். இரசவாதி அவனை நோக்கிப் புன்னகை புரிந்து, ‘நாம் இரசத்தினலே உனக்கு வேண்டிய பொன்னைச் செய்து தருவோம். இரும்பைப் பொன் ஆக்குவோம். உன் பொருளை யெல்லாம் நம்மிடம் தந்தால், நாம் அப்பொருளை உன் மாளிகையில் வைப்பதற்கு இடமில்லை என்று சொல்லும்படி அவ்வளவு பெரும் பொன்னைகச் செய்வோம்’ என்றான். இதைக் கேட்ட தருமதத்தனுக்கு உள்ளத்தில் பேராசை பொங்கி எழுந்தது. அவன் தன் பெரும் பொருளையும் ஆபரணங்களையும் ஒருங்கே கொண்டு வந்து இரசவாதி முன் குவித்தான்.

இவற்றைக் கண்ட இரசவாதி, ‘பெருஞ் செல்வன் என்றும் பிரபு என்றும் பிரசித்தி பெற்றிருக்கும் உன்னிடத்திலுள்ள செல்வம் இவ்வளவுதானா?’ என்று கை கொட்டிச் சிரித்தான். இதனால் பெரிதும் வெட்கம் அடைந்த வணிகன், தன் நிலங்களையும் வீடுகளையும் கன்று காலிகளையும் உடனே விற்று, அந்தப் பொருளையும் இரசவாதியின் எதிரிலே குவித்து வணங்கி நின்றான். அப்பொழுது இரசவாதி அகமகிழ்ந்து, ‘இப் பொருளையெல்லாம் நாம் கோடானுகோடி பொன்னாக்கி மலைபோலக் குவித்து உனக்கு அளிப்போம்’ என்று சொன்னான். தருமதத்தன் பரமானந்தம் அடைந்து இரசவாதிக்கு வேண்டிய சௌகரியங்களை ஏற்பாடு செய்தான்.

இரசவாதி மிகுந்த பொன் செய்வதாகப் பாவனை செய்து, வணிகனுக்குத் தெரியாமல் அப்பொருளை யெல்லாம் இரகசியமாக ஓர் இடத்தில் மறைத்து வைத்து விட்டான். பிறகு அவன் தருமதத்தனிடம்

வந்து, 'நீ உணவின்றி எவருடனும் பேசாமல், எங்கும் போகாமல் மூன்று நாள் வரையிலும் நம்மையே தியானம் செய்துகொண்டு இவ்வீட்டைக் காத்திரு. நாம் ஒரு யாகம் முடித்துக் கொண்டு நாலாம் நாள் இங்கு வருவோம்' என்றான். பேராசை கொண்ட வணிகனும் இரசவாதி சொன்னபடி காத்திருந்தான்.

இரசவாதி விரைந்து சென்று உருமாறி, தான் கவர்ந்து கொண்ட பெரும் பொருளோடு எங்கோ மறைந்து விட்டான். தருமதத்தன் நாலாம் நாள் மாலை வரையிலும் இரசவாதி வராமை கண்டு, சந்தேகத்தோடு அவன் தங்கியிருந்த இடத்தைச் சோதித்துப் பார்த்தான். அவனுடைய பெரும் பொருளில் ஒரு சிறிதும் அங்கே காணப்படவில்லை. பிறகு அவன் இரசவாதியைத் தேடிக் காணமல் மயங்கித் தன் வீட்டுக்குத் திரும்பினான். 'ஐயோ! அவனைத் திருடன் என்று அறியாமல் போனேனே; பேராசை பெரு நஷ்டம் ஆயிற்றே!' என்று பல வாறாக எண்ணி ஏங்கி உயிர் துறந்தான்.

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—

1. இரசவாதியின் தோற்றத்தைப் பற்றி நான்கு வாக்கியங்கள் எழுது.

2. இரசவாதி தருமதத்தனிடம் கூறியது யாது ?

3. தருமதத்தன் இரசவாதியிடம் நம்பிக்கை கொண்டு என்ன செய்தான் ?

4. இரசவாதி தருமதத்தனுக்கு எவ்விதம் நஷ்டத்தை உண்டாக்கினான் ?

2. கீழ்க்கண்டவைகளைத் தனித் தனி வாக்கியங்களில் அமைத்து எழுது.

1. உலகப் பிரசித்தி பெற்ற, அகமகிழ்ந்து, வாட்டமுற்று, தியானம் செய்து.

2. நஷ்டம், நம்பிக்கை, சௌகரியம்— எதிர்ப்பதம் எழுது.

3. மாலை—இரு பொருள் எழுது.

3. கோடிட்ட இடங்களில் சரியான வார்த்தைகளை அமைத்து எழுது :—

1. தருமதத்தன் தன் பொருள்களைக் கொண்டு வந்து இரசவாதி —குவித்தான் (முன், பின்)

2. இப்பொருள்களை எல்லாம் பொன்னுக்கி உனக்கு—————— (அழிப்போம், அளிப்போம்)

3. இரசவாதி பொருள்களை எல்லாம்—ஓர் இடத்தில் மறைத்து வைத்து விட்டான். (வேகமாக, இரகசியமாக, மெதுவாக)

4. 1. பேராசை, பரமானந்தம் இருப்பிடம், புன்னகை—பதங்களைப் பிரித்து எழுது.

2. துறந்தான், திறந்தான்—அர்த்த வித்தியாசத்தை எழுது.

## இலக்கணம்

1. ஒரு மொழியைப் பிழையின்றிப் பேசுவதற்கும், எழுதுவதற்கும் சில விதிகளைத் தெரிந்து கொள்ளவேண்டும். அவ்வித விதிகளைத் தெரிவிக்கும் நூலுக்கு இலக்கணம் என்று பெயர்.

2. தமிழ் மொழியில் 247 எழுத்துக்கள் உள்ளன. அவைகளை 1. உயிர் எழுத்து, 2. மெய் எழுத்து, 3. உயிர்மெய் எழுத்து, 4. ஆய்த எழுத்து என்று நான்கு வகைகளாகப் பிரிக்கலாம்.

3. 1. அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ— இந்தப் பன்னிரண்டு எழுத்துக்களும் உயிர் எழுத்துக்கள்.

2. க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்— இந்தப் பதினெட்டு எழுத்துக்களும் மெய் எழுத்துக்கள்.

3. க கா.—கௌ—இவைகளும், இவைபோன்ற மற்ற எழுத்துக்களும் உயிர்மெய் எழுத்துக்கள் எனப்படும். உயிர் மெய் எழுத்துக்கள் இருநூற்றுப் பதினாறு.

4. ஃ—இது ஆய்த எழுத்து.

# 2. பச்சோந்தி

| | | |
|---|---|---|
| உதயத்தில் | மீண்டும் | கைவசம் |
| சூரிய கிரணங்கள் | முந்தியவன் | பூரணமாக |
| நிச்சயமாக | ஐந்து | ஏகினர் |

ஒரு காலத்தில் இரண்டு வழிப்போக்கர்கள் ஒரு சோலையிலே சந்தித்து உரையாடிக் கொண்டிருந்தார்கள். பல விஷயங்களைப் பற்றிப் பேசிய பின், அவர்களில் ஒருவன் ஒரு மலரைக் குறிப்பிட்டு, 'அது பச்சோந்தியின் நீல நிறம்போல் இருக்கிறது,' என்று சொன்னான்.



இரண்டாம் பிரயாணி உடனே அவனைத்தடுத்து, 'பச்சோந்தியின் நிறம் பச்சை என்பது உனக்குத் தெரியாதா? அதன் உடம்பின் பச்சை நிறத்திற்குச் சமமானதை ஒருவரும் கண்டதில்லை. இன்று உதயத்தில் சூரிய கிரணங்கள் தன் மேல் பட விரும்பி, அது தன் உடம்பை நீட்டிக்கொண்டு படுத்திருந்தது; என் கண்ணாலே பார்த்தேன்' அது பச்சை என்றான்.

இவ்விதமாக இரண்டாம் பிரயாணி சொன்னவுடன், முதற் பிரயாணி, 'நானும் அதைப் பார்த்திருக்கிறேன். நான் முதலிற் சொன்னபடி அதன் நிறம் நீலந்தான். அது சோலையின் நிழலிலே இருந்

தைதப் பார்த்தேன்' என்று நிச்சயமாகக் கூறினுன். இரண்டாம் பிரயாணியோ, 'பச்சோந்தியின் நிறம் பச்சைதான்' என்று மீண்டும் வற்புறுத்தினுன். முந்தியவன், 'என்னை இரண்டு கண்களுமில்லாத குருடன் என்று நினைத்தாயோ?' என்று கோபமாகக் கேட்டான்.

பிறகு பிரயாணிகள் இருவரும் சினங்கொண்டு வாதித்தார்கள். அந்த வாதம் மிகுந்து வாய்ச் சண்டை கைச்சண்டையாகும் சமயத்தில், மூன்ருும் பிரயாணி ஒருவன் அந்தச் சோலை வழியே போனுன். அவர்கள் அவனை யழைத்துப், 'பச்சோந்தியின் நிறம் நீலமோ பச்சையோ? உனக்குத் தெரியுமானுல் சொல்' என்று கேட்டார்கள்.

அப்பொழுது புதியவன், 'பச்சோந்தியின் நிறம் நீங்கள் சொல்லிய இரண்டும் அன்று. அந்த ஜந்துவை நான் நேற்று இராத்திரி விளக்கெதிரே பார்த்தேன். அதன் நிறம் கறுப்பு, என் வார்த்தையை நீங்கள் நம்பவில்லையானுல், அது என் கைவசம் இருக்கிறது, காட்டுவேன்' என்று சொன்னுன். அவன் அப்படிச் சொல்லிக்கொண்டே தான் வைத் திருந்த பச்சோந்தியை அவர்கள் கண்முன் விட்டான். அப்போது அது வெண்ணிறமான தோற்றத்தோடு வெளிப்பட்டது. அது கண்ட மூவரும் திடுக்கிட்டார்கள்.

அச்சமயம் பச்சோந்தி தன் நீண்ட நாக்கை நீட்டி, அவர்களை நோக்கி, 'மனிதர்களே! நான் பல நிறம் காட்டும் பச்சோந்தி என்பதை நீங்கள் அறிந்து கொள்ளவில்லையே. என் நிலைமையைப் பூரணமாக அறியாமல் நீங்கள் பலவற்றைப்

பேசினீர்கள். அவரவர் என்னிடம் கண்ட நிறத்தைச் சொன்னதால், நீங்கள் குற்றமில்லாத வர்களாக இருக்கிறீர்கள்; எதையும் தீர விசாரிக்க வேண்டும்; வீண் சண்டை போடக்கூடாது' என்று கூறியது. பிரயாணிகள் பச்சோந்தி பல நிறம் காட்டக் கூடியது என்பதைத் தெரிந்து கொண்டு, தத்தம் வழியே ஏகினர்.

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—

1. இரண்டு பிரயாணிகளும் எதைப்பற்றிச் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர்?

2. அவர்கள் மூன்ளும் பிரயாணியைச் சந்தித்ததும் என்ன செய்தார்கள்?

3. மூன்ளும் பிரயாணி அவர்களுக்கு என்ன பதில் கூறினன்?

4. பச்சோந்தியைக் கண்ட மூவரும் ஏன் திடுக்கிட்டனர்?

5. மூன்று பிரயாணிகளும் அறிந்துகொண்ட உண்மை யாது?

2. 1. நிச்சயமாக, மீண்டும், வீண்சண்டை, கைவசம்—இவை ஒவ்வொன்றையும் ஒவ்வொரு வாக்கியத்தில் அமைத்து எழுது.

2. நீட்டிக் கொண்டு, உதயம், முந்தி—எதிர்ப்பதங்கள் எழுது.

3. விளக்கெதிரே, படுத்திருந்தது—தனித்தனிப் பதங்களாகப் பிரித்து எழுது.

3. 1. 'அன்று நான் பச்சோந்தியைக் கண்டேன்'

'பச்சோந்தியின் நிறம் பச்சை அன்று'

மேற்கண்ட வாக்கியங்களில் 'அன்று' என்ற வார்த்தையின் அர்த்தம் எவ்விதம் வித்தியாசப்படுகிறது?

2. என் வார்த்தையை நீங்கள் நம்புங்கள்.

'நம்பிக்கை' என்ற வார்த்தையை உபயோகித்து வாக்கியத்தை மாற்றி எழுது.

## இலக்கணம்

1. உயிர் எழுத்துக்கள் எத்தனை? அவை ஒவ்வொன்றையும் உச்சரித்துப் பாருங்கள். அவற்றுள் குறுகிய ஓசையை உடையன எவை? நீண்ட ஓசையை உடையன எவை?

2. குறுகிய ஓசையுள்ள அ, இ, உ, எ, ஒ என்ற ஐந்தும் குற்றெழுத்துக்கள் எனப்படும்.

3. நீண்ட ஓசையுள்ள ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்ற ஏழும் நெட்டெழுத்துக்கள் ஆகும்.

# 3. விடா முயற்சி

| | | |
|---|---|---|
| அறிவாளி | காரியசித்தி | திட்டமாக |
| தொடுத்து | இராஜ்யங்கள் | அதைரியம் |
| ஆற்றல் | செங்கோல் செலுத்தி | சித்திபெற |
| விடாமுயற்சி | பகைமை | அரிய |
| வெற்றி | தோல்வி | படை |
| நுண்ணறிவு | சேனை | திரட்டிக்கொண்டு |

சிலர் அறிவாளிகளாயிருந்தும் தாம் எடுத்த காரியத்தைத் தொடுத்து முடிக்கும் ஆற்றல் பெறுவதில்லை. வேறு சிலர் சிறந்த அறிவுப் பயிற்சி பெருதவர்களாயினும், தம் விடாமுயற்சியால் வெற்றி பெறுகின்றனர். நுண்ணறிவைக் காட்டிலும் விடாமுயற்சியே காரிய சித்திக்கு அவசியமாகும். இதற்கு உதாரணமாக ஒரு கதை சொல்லுவோம்.

இங்கிலாந்து, ஸ்காத்லாந்து என்ற இரண்டு நாடுகளும் சேர்ந்து ஒரு தீவாக அமைந்திருக்கின்றன. ஒன்றை யொன்று அடுத்துள்ள இவ்விரண்டு நாடுகளும் இந்நாளில் ஒரே அரசியல் அமைப்புக்கு உட்பட்டிருக்கின்றன. பழைய காலத்தில் இவ்விரண்டு தேசங்களும் வெவ்வேறு சிறு இராஜ்யங்களாக இருந்தன. இங்கிலாந்தில் இரண்டாவது எட்வர்ட் மன்னர் அரசு புரிந்து வருகையில், ஸ்காத்லாந்தில் ராபர்ட்புரூஸ் என்னும் வேந்தர் செங்கோல் செலுத்தி வந்தார்.

இம்மன்னர் இருவரும் சில காரணங்களால் ஒருவரோடு ஒருவர் பகைமை கொண்டு போர் செய்து வந்தனர். இப்போர்களில் ஸ்காத்லாந்து

மன்னரான புரூஸ் ஒரு முறைபோல் ஆறு முறை தோல்வியடைந்தார். அவரது சேனைகள் பெரும் பாலும் அழிந்து போயின. அதனால் அவர் நாடு விட்டு, காட்டிற்குச் சென்றார்.

ஒரு நாள் அவர் அக்காட்டிலுள்ள குகை யொன்றில் படுத்துக்கொண்டு, 'இனி இன்னது செய்யவேண்டும்' என்பதைத் திட்டமாக அறிந்து



கொள்ள முடியாமல் திகைத்துக் கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு சிலந்திப் பூச்சி அக் குகையின் ஒரு பக்கத்தில் வலை கட்டிக்கொண்டிருந்தது. அது ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலையில் தனது நூலைக்கொண்டுபோய் ஒட்டுவதற்காக முயன்றதைப் புரூஸ் கவனித்தார். அப்பூச்சி தன் முயற்சியில் வெற்றி பெறாமல் கீழே விழுந்து விட்டது. எனினும், அது சிறிதும் அதைரியமடையாமல் பல தடவைகள் தாண்டிப் பார்த்தது. ஒவ்வொரு முறையும் கீழே

தவறி விழுந்துவிட்டது. இப்படி அப்பூச்சி ஆறு தரம் முயன்றும் அதன் காரியம் சித்தி பெறவில்லை. இதைப் புரூஸ் கவனித்தார்.

அதன் நிலைமை தமது சொந்த நிலைமையை ஒத்திருந்ததால், புரூஸ் ஆவலோடு அதன் செய்கையைக் கவனித்து வந்தார். முடிவில் சிலந்தி ஏழாவது முறையும் முயற்சி செய்து, அம்முயற்சியில் வெற்றி பெற்றுத் தான் எண்ணிய மூலையில் தாவி, வலை பின்னி விட்டது. அதைக் கண்ணுற்ற ராபர்ட் புரூஸ் 'இப் பூச்சி இன்று எனக்கு ஓர் அரிய உபதேசம் செய்கிறது! நான் ஆறு முறை தோல்வி அடைந்ததற்காக மனம் இடிந்து கிடப்பது சரியன்று. இன்னும் தொடர்ந்து ஒரு முயற்சி செய்து இச் சிலந்தியைப்போல் வெற்றி பெறுதல் வேண்டும்' என்று தனக்குள் தீர்மானம் செய்து கொண்டார்.

உடனே அவர் குகையினின்றும் வெளிப்பட்டு, ஏழாவது முறையும் படைகளைத் திரட்டிக் கொண்டு, தம் பகைவனாகிய எட்வர்டின் சேனைகளை எதிர்த்துச் சென்றார். இம்முயற்சியில் புரூஸ் வெற்றியடைந்து இழந்த இராஜ்யத்தை மீண்டும் பெற்று மகிழ்ந்தார்.

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—

1. ராபர்ட் புரூஸ் நாடுவிட்டுக் காட்டிற்குச் செல்லக் காரணம் என்ன ?

2. ராபர்ட் புரூஸ் குகையில் படுத்து யோசித்துக் கொண்டிருக்கையில் அவர் கவனித்தது யாது ?

3. ராபர்ட் புரூஸின் கவனத்தை இழுத்த சிலந்திப் பூச்சியின் செய்கையைப் பற்றிச் சில வாக்கியங்கள் எழுது.

4. சிலந்திப் பூச்சி தன் முயற்சி வெற்றி பெற்றதைக் கண்ட ராபர்ட் புரூஸ் என்ன தீர்மானம் செய்து கொண்டார் ?

2. 1. ஒருவரோடு ஒருவர், திட்டமாக, அடுத்துள்ள — வாக்கியங்களில் அமைத்து எழுது.

2. அவசியம், தைரியம், செங்கோல் செலுத்தி, சிநேகம், வெற்றி — எதிர்ப் பதங்கள் எழுது.

3. அரிய, அறிய—அர்த்த வித்தியாசம் தெரியும்படி வாக்கியங்களில் அமைத்து எழுது.

4. நான் ஆறு முறை தோல்வி அடைந்ததற்காக மனம் இடிந்து கிடப்பது சரியன்று — தடித்த எழுத்துக்களுள்ள வார்த்தைகளுக்குப் பதில் வேறு வார்த்தைகளை அமைத்து எழுது.

## இலக்கணம்

3. 1. மெய் எழுத்துக்கள் எத்தனை? அவை ஒவ்வொன்றையும் உச்சரித்துப் பாருங்கள். அவற்றின் ஓசையின் தன்மையைக் கவனித்து அவைகளை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

2. க், ச், ட், த், ப், ற், — இவை வன்மையான ஓசையை உடையவை. இவை வல்லெழுத்துக்கள் அல்லது வல்லினம் ஆகும்.

3. ங், ஞ், ண், ந், ம், ன், — இவை மென்மையான ஓசையை உடையவை. இவை மெல்லெழுத்துக்கள் அல்லது மெல்லினம் எனப்படும்.

4. ய், ர், ல், வ், ழ், ள், — இவை வன்மையான ஓசைக்கும் மென்மையான ஓசைக்கும் இடைப்பட்ட ஓசை யுள்ளவை. இவைகளுக்கு இடை எழுத்துக்கள் அல்லது இடையினம் என்று பெயர்.

# 4. வரப்பு உயர

| | | |
|---|---|---|
| திலகமாக | சஞ்சாரம் | விமரிசையாக |
| மேதாவி | விஜயம் செய்த | கற்பகம் |
| ஜீவனோபாயம் | குடிவளம் | காமதேனு |

நமது தமிழ் நாட்டில் ஔவையார் என்றொரு பாட்டியார் இருந்தார். ஔவையார் என்ற சொல்லுக்கே பாட்டியார் என்பதுதான் பொருள். இவரது இயற் பெயர் இன்னது என்பது நமக்குத் தெரியாது.

முற்காலத்தில் கல்வியிற் சிறந்த பெண்கள் பலர் இந்நாட்டில் வாழ்ந்து வந்தார்கள். இவர்களுக்கெல்லாம் திலகமாக விளங்கும் பெருமை ஔவையாருக்குத்தான் உண்டு.

ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலிய நூல்களை இயற்றியவர் ஔவையார் என்பது உங்களுக்குத் தெரியும். முன் வகுப்பில் நீங்கள் ஔவையார் இயற்றிய மூதுரை, நல்வழி என்ற அருமையான நூல்களிலிருந்து சில அழகான பாடல்களைப் படித்திருப்பீர்கள். ஔவையார் அருளிய நீதி நூல்கள் நமக்கு அறிவையும் ஒழுக்கத்தையும் ஒருங்கே புகட்டுகின்றன.

இத்தகைய நூல்களை இயற்றிய ஔவையார் எவ்வளவு சிறந்த மேதாவியாக இருக்கவேண்டும்! அவர் அக்காலத்தில் வழங்கிய நூல்களைக் கற்றிருந்ததோடு, இடைவிடாமல் தேச சஞ்சாரம் செய்து பல விஷயங்களையும், இயற்கைப் பொருள்களையும், மனிதர்களையும் நேரில் கண்டு ஆராய்ச்சி செய்து

வந்தார். ஔவையாரின் படிப்பு கேவலம் ஏட்டுப் படிப்பு அன்று. அவர் புத்தகங்களைக் காட்டிலும் உலகத்தை நன்றாய் அறிந்திருந்தார்.

ஔவையார் எல்லோரிடத்திலும் பேரன்பு பூண்டு, அவர்களுக்கு நன்மையே செய்து கொண்டிருந்தார். எனினும், ஏழைகளிடத்திலும் அவருக்கு விசேஷமான அன்பும் இரக்கமும் உண்டு. நம்து நாட்டு மக்களின் ஜீவனோபாயத்திற்கு அடிப்படையாக இருப்பது விவசாயம் அல்லவா? இதனை ஔவையார் நன்கு உணர்ந்திருந்தார். குடியானவர்களின் க்ஷேமத்தில் அவர் எப்பொழுதும் கண்ணும் கருத்துமாக இருந்தார்.

சோழநாட்டு அரசிளங் குமரனுடைய திருமணம் வெகு விமரிசையாக நடைபெற்றது. மணம் இனிது நிறைவேறியதும் அங்கு விஜயம் செய்திருந்த புலவர்கள் எல்லோரும் பல பாடல்கள் பாடி இளவரசனை வாழ்த்தினார்கள். அவர்கள் அவனை இந்திரனென்றும், சந்திரனென்றும், கற்பகம் என்றும், காமதேனு என்றும், உண்மைக்கு ஒருவனென்றும், வண்மைக்கு இவனே என்றும் புகழ்ந்து பாடினார்கள். அப்பொழுது அங்கிருந்த ஔவையாரோ 'வரப்பு உயர' என்னும் இரண்டு சொற்களால் மட்டும் அரசிளங் குமரனை வாழ்த்தினர். இச்சொற்களின் கருத்தை அரசன் அறிந்து கொள்ளவில்லை. இதைக் கண்ட ஔவையார் தமது கருத்தை விளக்கி,

'வரப்பு உயர நீர் உயரும்
நீர் உயர நெல் உயரும்
நெல் உயரக் குடி உயரும்
குடி உயர முடி உயரும்' என்று கூறினர்

பிள்ளைகளே! வயல்களில் வரப்பு உயர்ந்தால் பயிர்களுக்கு நீர்வளம் ஏற்படும். இவ்வளத்தால் நெற்பயிர் செழித்து வளரும். இப்படி விவசாயம் மேலோங்குவதால் குடிவளம் பெருகும். இக்குடி வளத்தினுலேயே அரசாங்கம் பெருமை பெறுகின்றது. இப் பெருங் கருத்தை அன்றோ ஔவையார் இரண்டு சிறு தமிழ்ச் சொற்களால் வெளியிட்டு அரசனுக்கு ஆசி கூறினுர்.

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—

1. ஔவையாரைப் பற்றி ஏழு வாக்கியங்கள் எழுது.

2. ஔவையார் இயற்றிய நூல்கள் எவை ?

3. புலவர்கள் இளவரசனை எவ்விதம் வாழ்த்தினுர்கள் ?

4. ஔவையார் இளவரசனை எவ்விதம் ஆசி கூறினுர்? அவர் கூறிய இரண்டு சொற்களின் கருத்து என்ன ?

2. 1. என்றுரு, இந்திரனென்றும்—பதங்களாகப் பிரித்து எழுது.

2. இடைவிடாமல், கண்ணும் கருத்துமாக, விமரிசையாக ஆசி கூறி—வாக்கிய்ங்களில் அமைத்து எழுது.

3. இன்பம், ஏழை, புகழ்ந்து, பெருமை-எதிர்ப் பதங்கள் எழுது.

4. மதி-இந்த வார்த்தைக்கு இரண்டு அர்த்தம் எழுது.

5. ஔவையார் கல்விச் சிறப்பை அறியாதவர்கள் இல்லை—'அறிவார்கள்' என்ற வார்த்தையை உபயோகித்து வாக்கியத்தை மாற்றி எழுது.

## இலக்கணம்

1. க என்னும் எழுத்து, க் என்ற எழுத்தும் அ என்ற எழுத்தும் சேர்ந்து உண்டாவது. க் + அ = க, க் என்ன எழுத்து? இவ்விதம் உயிர் எழுத்தும், மெய் எழுத்தும் கூடி உண்டாகும் எழுத்துக்கள் எத்தனை ? கொ என்ற உயிர்மெய் எவ்விதம் உண்டானது ?

(2) ஃ—இது ஆய்த எழுத்து, அஃது, இஃது என்ற வார்த்தைகளில் அது உபயோகப்படுவதைக் கவனியுங்கள்.

3. அரசாங்கம் — இந்த வார்த்தையில் எத்தனை எழுத்துக்கள் இருக்கின்றன ? ஒவ்வொன்றும் எவ்வகையான எழுத்து ?

# 5. கோஹினூர் வைரம்

| | | |
|---|---|---|
| படையெடு | கைப்பற்றி | வழங்கி |
| சொந்தம் | அந்தரங்கம் | நிலை குலைந்த |
| யாத்திரிகர் | நட்பு | ஆட்சி |
| செருக்கு | அறிகுறி | சாணை |
| பேராச்சரியம் | அளவு கடந்த | முடி மணி |
| கண்ணுற்ற | சமாதானம் | தலைப்பாகை |

கோஹினூர் டில்லி சக்கரவர்த்திகளுக்குச் சொந்தமாக இருந்தது. பெயர் பெற்ற பிரெஞ்சு யாத்திரிகரும் வர்த்தகருமான டாவர்னியர் என்பவர் இந்தியாவுக்கு வந்தார். அப்போது டில்லியில் சக்கரவர்த்தியாக ஔரங்கசீப் விளங்கினார்; அவர் அதிகச் செருக்கோடு தாம் பத்திரப்படுத்தி வைத்திருந்த கோஹினூரை அவ்வர்த்தகருக்குக் காட்டினார். அதைக் கண்ணுற்ற டாவர்னியர் பேராச்சரியமடைந்தார்.



ஔரங்கசீப் காலஞ்சென்ற பின், பாரசீக மன்னராக இருந்த நாதர்ஷா இந்தியாவின்மீது படையெடுத்து வந்து, டில்லி சக்கரவர்த்தியாக இருந்த மகம்மதுஷாவை ஜயித்தார். அப்பொழுது கோஹினூர் வைரம் மகம்மதுஷாவிடம் இருந்தது. இவ்வைரத்தின் பெருமை உலகமெங்கும் பரவியிருந்ததால், நாதர்ஷா டில்லியைக் கொள்ளையடித்த பிறகு மகம்மதுஷாவின் ஆபரணங்களிருந்த அறையிலே அவ் வைரக்கல்லைத் தேடிப் பார்த்தார்.

அங்கே அது காணப்படவில்லை. அப்போது மகம்மது ஷாவின் அந்தரங்க வேலைக்காரன் ஒருவன் வைரக் கல்லைச் சக்கரவர்த்தி தமது தலைப்பாகைக்குள் மறைத்து வைத்திருப்பதாக நாதர்ஷாவுக்கு அறிவித்தான்.

உடனே நாதர்ஷா, 'இனி நாமிருவரும் சமாதானமாகப் போவோம். நமது புதிய நட்பின் அறிகுறியாக இப்பொழுது நாமிருவரும் தலைப் பாகைகளை மாற்றிக் கொள்வோம்' என்று மகம்மது ஷாவிடம் தந்திரமாகச் சொன்னூர். தோல்வியுற் றிருந்த டில்லி சக்கரவர்த்தி வேறு வழியில்லாமல் வெற்றி வீரனுகிய நாதர்ஷாவோடு தலைப்பாகை மாற்றிக் கொண்டார்.

அப்போது மகம்மதுஷாவின் தலைப்பாகைக்குள் மறைந்திருந்த கோஹினூரைக் கண்டு நாதர்ஷா அளவு கடந்த ஆச்சரியங்கொண்டு 'ஆ! கோஹ்-ஹீ-னூர் (ஆ! ஜோதி மலை)' என்றும் கூவினூர். இதனுல்தான் கோஹினூருக்கு இப்பெயர் வழங்கி வருகிறதாம்.

நாதர்ஷாவோடு கோஹினூர் பாரசீகம் சென் றது. பாரசீக இராஜ்யம் நிலைகுலைந்த பின் கோஹி னூர் ஆப்கானிஸ்தானத்து அரசர்களுக்குச் சொந்த மாயிற்று. அவ்விடத்தில் அது சுமார் 50 வருஷ மிருந்தது. பின்பு பஞ்சாப் வீரனுன ரஞ்ஜித் சிங்கன் ஆப்கானியரிடமிருந்து கோஹினூரைக் கைப்பற்றிக் கொண்டான். அவன் மரணமடைந்தபின், பிரிட்டிஷ் கிழக்கு இந்தியக் கம்பெனியார் பஞ்சாபில் ஆங்கி லேயக் கொடியை நாட்டினுர்கள். கம்பெனியாரிட மிருந்து இந்திய ஆட்சி விக்டோரியா மகாராணியார்

கைக்கு மாறியபோது, கோஹினூர் வைரமும் மகாராணியாருக்குச் சொந்தம் ஆயிற்று.

மகாராணியார் கோஹினூர் வைரத்தை மீண்டும் சாணை பிடிக்கும்படி ஏற்பாடு செய்தார். சாணை பிடிப்பதற்கு 8000 பொன் செலவானதாம். இப்பொழுது கோஹினூர் பிரிட்டிஷ் மன்னரின் முடியணியாக விளங்குகிறது.

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது —

1. டாவர்னியர் என்பவர் யார்?

2. நாதர்ஷா, மகம்மதுஷ்ஷாவிடமிருந்து கோஹினூர் வைரத்தைக் கைக்கொண்டது எவ்விதம்?

3. கோஹினூர் எவரெவர் கைகளிலிருந்து மாறி விக்டோரியா மகாராணியார் கைக்கு வந்தது?

4. கோஹினூர் வைரத்தைச் சாணை பிடிக்கச் சிலவு எவ்வளவு ஆயிற்று?

2. 1. உலகமெங்கும், பெயர்பெற்ற, அறிகுறியாக — தனித் தனி வாக்கியங்களில் அமைத்து எழுது.

2. மணி—மூன்று வித அர்த்தம் எழுது.

3. ஒரே அர்த்தமுள்ள வார்த்தைகளைக் குறிப்பிடு.

3. வேலைக்காரன் வைரக்கல்லைப் பற்றி நாதர்ஷாவுக்கு அறிவித்தான். 'நாதர்ஷாவை' எழுவாய் ஆக்கு.

## இலக்கணம்

1. 1. ங—என்ற எழுத்தில் ஆரம்பம் ஆகும் வார்த்தை ஏதாவது இருக்கிறதா?

2. தமிழ் மொழியிலுள்ள எழுத்துக்களில் சில எழுத்துக்கள்தான் மொழிக்கு முதலில் வரும். அவை எவை என்று கண்டுபிடி.

2. அது, அப்புத்தகம், அந்தப் புத்தகம் | —இவற்றில்
இது, இப்புத்தகம், இந்தப் புத்தகம் |

அ, இ, என்ற எழுத்துக்கள் ஒரு பொருளைச் சுட்டிக் காட்டுகின்றன அல்லவா? இவற்றுள் எந்த எழுத்து தூரத்திலுள்ள பொருளைச் சுட்டிக் காட்டுகிறது? எது பக்கத்திலுள்ள பொருளைச் சுட்டிக் காட்டுகிறது?

# 6. சிறுவன் செயல்

| | | |
|---|---|---|
| மேதை | கண்ணும்கருத்தும் | பண்பாடு |
| மும்முரம் | கலை விநோதர் | பிரதிட்டை |
| மிடுக்கு | நாலாதிசை | தாறுமாறு |

சுமார் ஆயிரத்தெண்ணூறு வருடங்களுக்கு முன்னமே, பெஷாவரைத் தலைநகராகக் கொண்டு வட இந்தியாவை ஆண்டு வந்த பெருவேந்தர் கனிஷ்கர். நாகார்ச்சுனர் அஸ்வகோஷ் போன்ற பெரு மேதைகள் இவர் சபையை அலங்கரித்தனர். இவர் ஒரு கலைவிநோதர். தலைநகரிலே, பதின்மூன்று மாடிகள் அமைத்து நானூறடி உயர்ந்த கோபுரம் ஒன்றை இவர் கட்டினர். உலக அதிசயங்களிலே அது ஒன்றும். அது கட்டப் பெற்றதற்கு ஒரு காரணம் சொல்லப்படுகிறது. அந்தக் கதையை நீங்கள் அறிய வேண்டாமா ?

ஒரு நாள் காலை வேளையிலே வெய்யில் மிகவும் வெப்பமாகக் காய்ந்து கொண்டிருந்தது. கனிஷ்கர் மாறுவேடம் பூண்டு குதிரைமீது ஏறி, எங்கேயோ சென்று கொண்டிருந்தார். வழியிலே ஓரிடத்தில் சிறுபையன் ஒருவன் மண்ணினால் கோயில் கட்டிக் கொண்டிருந்தான். அவனுக்குப் பத்து அல்லது பன்னிரண்டு வயதிருக்கும். மண்ணைக் குழப்புவதிலும் சுவர் எழுப்புவதிலும் அவன் மும்முரமாய் முனைந்திருந்தான். இதைப் பார்த்த கனிஷ்கர் பையன் சிறு வீடு கட்டி விளையாடுகிருன் என்று கருதித் தம் வழியே போய்விட்டார். மாலையிலே அவர் திரும்பி வந்த போதும், அவன் தன் வேலை

யிலே கண்ணும் கருத்துமாய் இருந்தான். கோயில் மூன்றடி உயரமே எழுந்திருந்தது; அதைச் சுற்றிலும் மதிற்சுவருக்கும் அஸ்திவாரம் பறிக்கப் பட்டிருந்தது. இதைப் பார்த்த கனிஷ்கர் 'சிறுவனே! நீ என்ன செய்கிறாய்?' என்று வினவினர். 'பெருமான் புத்தருக்கு நான் கோயில் கட்டுகிறேன்' என்று மிடுக்காகக் கூறினான் சிறுவனும். அதைக் கேட்ட கனிஷ்கர், 'பெருமைவாய்ந்த புத்தருக்கு நீ கட்டும் இச் சிறு கோயில் போதுமா?' என்றார். சிறுவனும் தயக்கம் இல்லாமல், 'நான் என்ன கனிஷ்க சக்கரவர்த்தியா பெரிய கோயிலைக் கட்டுவதற்கு? நானோ ஏழை; ஒவ்வொருவனும் தன் சக்திக்குத் தகுந்தபடிதானே சேவை செய்ய வேண்டும்' என்று மிகவும் அழுத்தமாகச் சொன்னான். சிறுவனுடைய தெய்வ பக்தியைக்கண்டு வியந்த கனிஷ்கர், 'சிறுவ! கனிஷ்கர் கோயிலைக் கட்டுவதானால், அது எவ்வளவு பெரியதாக இருக்க வேண்டும் என்று நீ எண்ணுகிறாய்?' என்று கேட்டார். 'சுமார் நானூறு அடி உயரமாவது இருக்க வேண்டாமா? தங்கத்தால் ஆகிய புத்தர் விக்கிரகம் ஒன்றையும் அங்கே பிரதிட்டை செய்ய வேண்டும். ஆனால், கனிஷ்கராவது கோயிலைக் கட்டுவதாவது; என் போன்ற ஏழைகள் எங்கள் சக்திக்குத் தகுந்தபடி கட்டினால் உண்டு' என்று, சிறுவனும் மனவேதனையோடு சொன்னான். கனிஷ்கர் அரண்மனைக்கு விரைந்து சென்றார்.

அரண்மனையை அடைந்த வேந்தர்பெருந்தகை, நாலா திசையினின்றும் சிறந்த சிற்பிகளை வரச் செய்தார். நன்கு ஆலோசித்து நானூறு அடி உயரமுள்ள கோயிலைக் கட்ட முற்பட்டார். அதைக்

கட்டி முடிக்க ஏழு வருடங்கள் ஆயின. தங்கத்தால் புத்த விக்கிரகமும் செய்தாகி விட்டது. சிறுவனும் வளர்ந்து வாலிபத்திலேயே துறவி ஆனான். அவனை அழைத்து வருமாறு கனிஷ்கர் ஏவலரை அனுப்பினார். அவனும் வந்து சேர்ந்தான். தான் சிறுவனாய் இருந்தபோது, தன்னைக் கண்டு பேசிய குதிரைவீரன்தான் கனிஷ்கர் என்பது அவனுக்குத் தெரியாது.

கனிஷ்கர் கேட்டார், 'சகோதரனே! நான் ஒரு கோயிலையும் கட்டப்போவதில்லை என்று முன்னொரு நாள் நீ சொன்னாய். இப்போது நான் கோயிலைக் கட்டி முடித்துவிட்டேன். அது உனக்குப் பிடித் திருக்கிறதா?' அதற்கு சிறுவன் சொன்னான்: 'சக்கரவர்த்தியே! இது மிகவும் மேலான கோயிலாக விளங்குகிறது. அன்று நான் குதிரை வீரனிடம் ஏதோ தாறுமாறாகப் பேசிவிட்டேன். அவன் தங்க ளிடம் சொல்லிவிடுவான் என்று அப்போது நான் கருதவில்லை; என் மனசிலே பட்டதை ஒளிக்காமல் சொன்னேன். அது பிசகுதான், என்றாலும் இப்போது என் மனம் திருப்தி அடைந்து விட்டது. என்னுடைய அதிகப்பிரசங்கித்தனத்தால் அழகிய கோயில் உருவாகிவிட்டதல்லவா?'

அப்போது கனிஷ்கர் தம் அரச உடையைக் கழற்றி, குதிரை வீரன் வேடத்திலே நின்றார். 'நான்தான் அந்தக் குதிரை வீரன். தெய்வ பக்தி வாய்ந்த தங்களையே இந்தக் கோயிலின் குருவாக நியமிக்கப்போகிறேன்; ஏற்றருள வேண்டும்' என்று பிரார்த்தித்தார். வாலிபத் துறவியும் குருவாகக் கோயிலிலே அமர்ந்து, பக்தியும் பண்பாடும் தழைத் தோங்கப் பாடுபட்டார்.

## பயிற்சி

1. கனிஷ்கரைப் பற்றி நீங்கள் அறிவதென்ன ?
2. கனிஷ்கர் சபையிலிருந்த மேதைகள் யாவர் ?
3. பெஷாவார் எங்கே இருக்கிறது ?
4. சிறுவனுடைய அதிகப்பிரசங்கித்தனம் என்ன ?
5. சிறுவனுடைய அதிகப்பிரசங்கித்தனம் எப்படி நன்மையாயிற்று ?
6. சிறுவனுடைய பக்தியைப் பற்றி எழுது.
7. துறவி என்பவர் யார் ?

## இலக்கணம்

1. இவர் ஒரு கலை விநோதர்.
2. உலக அதிசயங்களிலே அது ஒன்று.

—இந்த வாக்கியங்களிலே உயிர் எழுத்துக்கள் எவை?
—மெய்யெழுத்துக்கள் எவை ?
—உயிர் மெய்யெழுத்துக்கள் எவை ?

1. அது கட்டப்பெற்றதற்கு ஒரு காரணம் சொல்லப்படுகிறது.
2. அந்தக் கதையை நீங்கள் அறிய வேண்டாமா ?
3. இப்போது நான் கோயிலைக் கட்டி முடித்துவிட்டேன். அது உனக்குப் பிடித்திருக்கிறதா ?

—இந்த வாக்கியங்களிலே சுட்டெழுத்துச் சொற்கள் எவை ?

# 7. கடிதங்கள்

## மாதிரிக் கடிதம் 1

அயலூர் சென்றிருக்கும் தந்தைக்கு மகன் எழுதும் கடிதம் :

24, ஸ்ரீபுரம்,
திருநெல்வேலி,
24—7—49

அன்பார்ந்த தந்தை அவர்களுக்கு,

நமஸ்காரம். நீங்கள் எழுதின கடிதம் நேற்றுச் சாயங்காலம் கிடைத்தது. இங்கே சரோஜா எப்பொழுதும் "அப்பா, அப்பா" என்றே சொல்லிக் கொண்டு இருக்கிருள். எனக்கும் உங்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை இருந்துக்கொண்டே இருக்கிறது. நீங்கள் சீக்கிரம் திரும்பி விடுவதாக உங்கள் கடிதத்தில் எழுதியிருப்பது கண்டு சந்தோஷப்படுகிரும்.

நீங்கள் புறப்பட்டு வரும்போது சரோஜாவுக்கு ஒரு பட்டுப் பாவாடையும், பொம்மையும் வாங்கிக் கொண்டு வரும்படி அம்மா விரும்புகிருள். எனக்குக் காலால் அடிக்கும் பந்து ஒன்று வாங்கிக்கொண்டு வர வேண்டுகிறேன்.

இப்படிக்கு,
உங்கள் அன்புள்ள குமாரன்,
சுப்பிரமணியன்.

விலாசம் :

ஸ்ரீ முத்துக்குமாரசாமி பிள்ளை அவர்கள்,
96, பெல்ஸ் ரோடு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

## மாதிரிக் கடிதம் 2

தந்தை மகனுக்கு எழுதும் கடிதம் :

96, பெல்ஸ் ரோடு,
திருவல்லிக்கேணி-5.
26—7—49.

நிறைநாட் செல்வன் சுப்பிரமணியனுக்கு,

அநேக ஆசீர்வாதம். நீ 24—7—49-ல் எழுதின கடிதம் நேற்றுக் கிடைத்தது. நான் இங்கு வந்த காரியம் இந்த மாதம் 30உக்குள் முடிவடைந்து விடும். ஆகையால் நான் ஆகஸ்டு மாதம் 1-ந்தேதி அன்று இங்கிருந்து கட்டாயம் புறப்பட்டு விடுவேன். நீ எழுதியிருக்கிறபடி உனக்குக் காலால் அடிக்கும் பந்து ஒன்றும் சரோஜாவுக்கு ஒரு பட்டுப் பாவாடையும், பொம்மையும் வாங்கிக் கொண்டு வருகிறேன். மற்றவை நேரில்.

இப்படிக்கு,
உன் அன்புள்ள தந்தை
முத்துக்குமாரசாமி பிள்ளை.

விலாசம் :

செல்வன்
சுப்பிரமணியனுக்கு,
24, ஸ்ரீபுரம்,
திருநெல்வேலி ஜங்ஷன்.

## மாதிரிக் கடிதம் 3

ஒரு நண்பனுக்கு எழுதும் கடிதம் :

27, நாதமுனித் தெரு,
மாம்பலம்
15—7—49

என் அன்புள்ள துரைராஜ்,
க்ஷேமம்.

வருகிற புதன்கிழமை காலை 6 மணிக்கு என் தமையனாரும் நானும் மகாபலிபுரம் போகப் போகிறோம். நாங்கள் இங்கிருந்து நேராக எங்கள் மோட்டாரிலேயே செல்ல உத்தேசித்திருக்கிறோம். எங்கள் இருவரையும் தவிர வேறு ஒருவரும் எங்கள் வீட்டிலிருந்து புறப்பட வில்லை. மோட்டாரில் இடம் இருக்குமே, உன்னையும் அழைத்துக்கொண்டு போவோம் என்று நினைத்து, என் தமையனாரிடம் என் எண்ணத்தைத்தெரிவித்து அனுமதிகேட்டேன். அவரும் ஆட்சேபிக்கவில்லை, "பேஷாக உன் சிநேகிதனையும் கூட்டிக் கொண்டு வா!" என்று சொல்லி விட்டார். நீ வந்தால் தமாஷாக நேரம் போகும். ஆகையால் நீ உன் பெற்றோர்களிடம் அனுமதி பெற்றுக்கொண்டு செவ்வாய்க்கிழமை சாயங்காலமே இங்கு வந்துவிடு. நீ கட்டாயம் வரவேண்டும்.

இங்ஙனம்,
உன் அன்பார்ந்த நண்பன்,
மாசிலாமணி.

விலாசம் :

ஸ்ரீ துரைராஜ்,
36, அரண்மனைக்காரத் தெரு,
சென்னை.

## மாதிரிக் கடிதம் 4

வியாபாரக் கடிதம் :

கலைமகள் ஆபீசு மானேஜர் அவர்களுக்கு
மைலாப்பூர், சென்னை.

ஐயா,

'முருகன் ஓர் உழவன்' என்ற புத்தகத்தைத் தயவு செய்து கீழ்க்கண்ட விலாசத்துக்கு வி. பி. தபால் மூலம் அனுப்பும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

அருள் நிலையம்,
தெற்குத் தெரு, புதுப்பேட்டை,
17—8—'49.

இப்படிக்கு,
தங்கள் உண்மையுள்ள,
ராஜகோபாலன்.

## மாதிரிக் கடிதம் 5

வியாபாரப் பதில் கடிதம் :

திரு. ராஜகோபாலன்,
அருள் நிலையம்,
தெற்குத் தெரு, புதுப்பேட்டை.

ஐயா,

தங்கள் 17—8—49-ல் எழுதிய ஆர்டர் கிடைத்தது. தாங்கள் வி. பி. மூலம் அனுப்பும்படி எழுதியிருக்கிறீர்கள். அவ்விதம் அனுப்புவதனால் செலவு அதிகம் ஆகும்.

ஆகையால் தாங்கள் குறித்த புத்தகத்திற்குரிய விலை ரூ. 2-ம் தபால் செலவுக்கு அணா 4-ம் சேர்த்து மணியார்டர் அனுப்பினால் புத்தகத்தைப் புக்போஸ்டு மூலமாக அனுப்பி வைக்கிறோம்.

கலைமகள் ஆபீசு,
மைலாப்பூர், சென்னை,
21—8—49

இப்படிக்கு,
தங்கள் அன்புள்ள,
மானேஜர்.

# 8. புத்தரும் சிறுவனும்

| | | |
|---|---|---|
| நன்னெறி | யோகம் | மேனி |
| இலட்சியம் | வற்புறுத்தும் பொருட்டு | இயன்றவரை |
| மயக்கம் | உபவாசம் | தீண்டுவது |
| புலன்கள் | நிஷ்டை | களை தீர்ந்து |

புத்தர் பெருமான் உலகம் உய்ய ஒரு நல்வழி காணவேண்டுமென்று பெரு முயற்சி செய்து கொண்டிருந்தார். அவர் தமது தேசத்தின் பல பகுதிகளுக்கும் சென்று அறிவாளிகளோடு கலந்து ஆலோசனை செய்தார். காடுகளில் தவம் செய்த முனிவர்களைக் கண்டு அவர்கள் மூலமாக உண்மையைக் கண்டுபிடித்தல் கூடுமோ என்றும் ஆலோசித்தார். இத்தகைய ஆலோசனைகளால் அவர் மனம் திருப்தி யடையவில்லை.

பிறகு அவர் ஒரு நாள் ஒரு மலைச்சரிவின் வழியாகச் சென்று கொண்டிருக்கையில் மழை, பனி, வெயில், காற்று ஆகிய இவைகளால் வரும் துன்பங்களைப் பொறுத்துக்கொண்டு யோகம் செய்துகொண்டிருந்த ஒரு யோகியைக் கண்டார். ‘ தாங்கள் இவ்வாறு கடுந்தவம் கிடக்கக் காரணமென்ன ?” என்று புத்தர் யோகியை வினவினர். அதற்கு அவர் ‘ இவ்வாறு தவம் செய்வோர் தாம் மனத்தில் நினைத்ததை நினைத்த வண்ணம் பெற்று மகிழ்வார்கள் ’ என்று விடை இறுத்தார்.

அது கேட்ட புத்தர், தாம் நாடிய நன்னெறியை அவ்வுபாயத்தில் ஒரு வேளை விரைவில் காணலாம் என்று எண்ணித் தாமும் அவ்வாறே தவம் செய்யத்

தொடங்கினர். இயன்ற வரையில் உபவாசம்செய்து புலன்களை அடக்கி, உயிர்க்கும் உடலுக்கும் வரும் துன்பங்களையெல்லாம் பொறுத்துக்கொண்டு புத்தர் நிஷ்டையில் இருந்துவந்தார். இவ்வாறு பல தினங்கள் சென்றன. புத்தர் செய்த கடுந்தவத்தால் அவரது அழகிய மேனி எலும்பும் தோலுமாக இளைத்துப் போயிற்று. ஒருநாள் அவர் ஒன்றும் புசியாமல் தண்ணீரும் பருகாமல், எழுதி வைத்த சித்திரம் போல் நின்றுகொண்டு தம் உள்ளத்தைத் தமது இலட்சியத்தின்மேற் செலுத்த முயன்றபோது, மூர்ச்சையாகி விழுந்து விட்டார்.

அக்காட்டில் ஆடு மாடு மேய்த்துக் கொண்டிருந்த சிறுவன் ஒருவன் மூர்ச்சையாகிக் கிடந்த புத்தரைக் கண்டு இரங்கி, அவரது மயக்கத்தைப் போக்க விரும்பினன். ஆனல் அவருடைய தாடியையும் சடைமுடியையும் கண்டு, 'இப்பெரியவரை நாம் தீண்டுவது தகுமா?' என்று யோசித்து அவரைத் தீண்டாமலே அவரது வாய்க்கு நேரே ஓர் ஆட்டினுடைய பாலைக் கறந்தான். இதனல் மயக்கம் நீங்கிய புத்தர் அச்சிறுவனை அன்போடு நோக்கி, 'என் அன்புள்ள சகோதரனே! எனக்குப் பசியும் தாகமும் களைப்பும் அதிகமாயிருக்கின்றன. இன்னும் கொஞ்சம் பால் கொண்டுவா'. என்று வேண்டிக் கொண்டார்.

அப்பொழுது அவன் புத்தரை நோக்கி, 'தேவரீர் உயர் குலத்தில் உதித்த ஒருபெரியவராகக்காணப்படுகிறீர். ஏழையேன் தொட்டுக் கொணர்வதைத் தாங்கள் உட்கொள்ளலாமோ?' என்று கேட்டான். புத்தர் அகம் நிறைந்த அருளோடு நகைசெய்து, அன்பனே! உலகமக்கள் அனைவரும் பிறப்பிலும் இறப்பிலும்

ஒரு தன்மையாகவே இருக்கின்றனர். இவ்வுலகில் பிறருக்கு உதவி செய்யாதவரே இழிகுலத்தோ ரென்று நீ உணர்ந்து கொள்ளவேண்டும். ஆகை யால், நீ இப்பொழுது பால் கொண்டு வரலாம். அன்பு நிறைந்த உனக்கு உயர்குலமே உரியது' என்று சிறுவனை நோக்கிக் கூறினர்.

அவனும் உடனே பால் கொண்டு வந்து கொடுத்தான். புத்தர் பெருமான் அதனைப் பருகிக் களைதீர்ந்து அவனை வாழ்த்திச் சென்றார்.

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—

   1. புத்தர் நன்னெறி காணும் பொருட்டு என்னென்ன செய்தார்?

   2. புத்தருடைய மயக்கத்தைத் தீர்த்தது யார்? எவ்விதம்?

   3. மயக்கம் நீங்கிய புத்தர் ஆடு மாடுகளை மேய்த்துக்கொண்டிருந் தவனை வேண்டிக்கொண்டது என்ன?

2. இரண்டொழிய, வேறில்லை—தனிப் பதங்களாகப் பிரி.
   உயர்ந்த—எதிர்ப்பதம் என்ன?

3. புத்தர் உலகம் உய்யும் பொருட்டு ஒரு நன்னெறி காண விரும்பி னர்...'உலகம்' என்னும் வார்த்தை இந்த வாக்கியத்தில் என்ன அர்த்தத்தைக் கொடுக்கிறது?

## இலக்கணம்

1. ஜான் வந்தான். } இந்த வாக்கியங்களிலுள்ள பெயர்ச்
   மாடு வந்தது. } சொற்கள் எவை?

   ஜான் வந்தது' என்றும், 'மாடு வந்தான்' என்றும் நாம் சொல்லுவதில்லை.

2. ஜான், புத்தர், மனிதன் — இவை உயர்திணைப் பெயர்ச் சொற்கள்.

2. குதிரை, ஆடு மாடு—இவை அஃறிணைப் பெயர்ச் சொற்கள்.

# 9. அவ்வீரன் யார்?

| | | |
|---|---|---|
| சுற்றத்தார் | கழல் | காட்டு வாசிகள் |
| பந்துக்கள் | கடகம் | தரித்திருந்த |
| வறுமை | தரிசனம் | அடவி |
| பட்டினி | மூதாதையர் | அங்க அடையாளங்கள் |

ஒரு புலவர் தம் சுற்றத்தாருடன் ஒரு மலை மீதுள்ள காட்டு வழியாகப் போய்க் கொண்டிருந்தார். அவரும் அவருடைய பந்துக்களும் வறுமையால் மெலிவுற்றிருந்தனர். பல நாட்களாக அவர்கள் பட்டினி கிடந்ததால், தள்ளாடிக் கொண்டு நடந்து சென்றனர்; கடைசியில் நடக்க முடியாமல் வழியிலிருந்த ஒரு பலா மரத்தின் அடியில் தங்கினார்கள்.

அச்சமயத்தில் அவ்வழியாக உயர்ந்து பருத்துத் திரண்ட தேகமுடைய வீரன் ஒருவன் வந்தான். அவன் கையில் ஒரு வில் இருந்தது. அவன் கழுத்தில் பல முத்து வடங்களாலான ஆரத்தை அணிந்திருந்தான். காலில் வீரக்கழலும் கையில் பொற்கடகமும் காணப்பட்டன. தலையின் உச்சியில் அணிந்திருந்த நீலமணி 'பளிச், பளிச்' என்று ஒளி வீசிக்கொண்டிருந்தது.

புலவர் அவ்வீரனைக் கண்டதும் அவருக்கு அவன் பால் ஒரு மதிப்பு ஏற்படவே, அவர் தம் கைகளைக் கூப்பிக்கொண்டு எழுந்திருக்க முயன்றார். அவரால் எழுந்திருக்க முடியவில்லை; கால்கள் நடுங்கின. இதைக் கண்ணுற்ற அவ்வீரன், 'அப்படியே இருங்கள்' என்று கூறிப் புலவரை உட்காரச் செய்தான். புலவரும் அவருடைய

சுற்றத்தாரும் பசிப்பிணியால் வாடுவதை அவ்வீரன் அறிந்து கொண்டான். உடனே சுள்ளிகளைப் பொறுக்கி வந்து, ஒரு கட்டையிலே தீயைக் கடைந்து மூட்டி அதில் தான் வரும் வழியில் வேட்டையாடி வைத்திருந்த மான் இறைச்சியைச் சுட்டுப் பக்குவம் செய்து புலவருக்கும் அவருடைய உறவினர்களுக்கும் கொடுத்தான். அவர்கள் அதை உண்டு பக்கத்தில் இருந்த அருவி நீரை அள்ளிக் குடித்துப் பசியாறினர்கள்.

பின்பு புலவர் அவ்வீரனை நோக்கி, 'ஐயா! தெய்வம்போல் வந்து எங்கள் உயிரைக் காப்பாற்றினீர். நாங்கள் போய் வருகின்றோம்' என்று கூறிப் புறப்பட்டனர். அவ்வீரன் 'பெரியீர், தமது தரிசனம் எனக்குக் கிடைத்தது எனது மூதாதையர் செய்த தவப் பயனே போலும்! நான் தம்மைப் போன்ற பெரியோருக்கு என்ன உதவி செய்யப் போகிறேன். காட்டுவாசிகளான எங்களிடத்தில் தமக்குப் பரிசாகக் கொடுக்கத் தக்க விலையுயர்ந்த பொருள்கள் எவையுமில்லையே என வருந்துகின்றேன். ஆயினும் இப் பொருள்களைத் தயவு செய்து பெற்றுக் கொள்ளுதல் வேண்டும்' என்று கூறிக்கொண்டே, தனது கழுத்தில் அணிந்திருந்த விலையுயர்ந்த முத்துமாலையையும், கையில் தரித்திருந்த பொற்கடகத்தையும் கழற்றி அப்புலவரிடம் கொடுத்து வணங்கினன்.

புலவர் வியப்புற்று அவ்வீரனை நோக்கி, தாம் யாரென்று தெரிவிக்கலாமோ? என்று வினவினர். அவ்வீரன் அதற்கு விடை கூருது, 'போய் வாருங்கள்' என்று கூறி அவரை நமஸ்கரித்து விட்டு அவ்விடம் விட்டு அகன்று அடவிக்குள்

புகுந்தான். அவ்வீரன் யார் என்று அறியப் புலவர் ஆவல் கொண்டார்.

பின்னர் அப்புலவர் தம் உற்ருருடன் புறப்பட்டு வழி நடக்கலானுர். வழியில் அவர் தம் எதிரில் வந்தவர்களிடம் அந்த வீரனுடைய அங்க அடையாளங்களையும் அவனுடைய செய்கைகளையும் கூறி, 'அவ்வீரன் யார்' என்று வினவினர். அவர்கள், 'அவ்வீரன் இத்தோட்டி மலைக்குத் தலைவனுன நள்ளி' என்று பதில் அளித்துச் சென்ருர்கள்.

நள்ளி தான் இன்னுன் என்பதைப் புலவருக்கு அறிவித்துக் கொள்ளாமற் சென்ற போதிலும், புலவர் அவன் செய்த உதவியைப் புகழ்ந்து பாடி உலகம் முழுவதும் அவனை அறியும்படி செய்தார்.

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—

1. புலவர் முன் தோன்றிய வீரனது தோற்றம் யாது?
2. வீரன் புலவருடைய பசிப்பிணியை எவ்விதம் நீக்கினுன்?
3. புலவர் வீரனிடம் விடை பெற்றுக்கொண்ட சமயத்தில் அவன் என்ன செய்தான்?
4. புலவர் அவ்வீரன் இன்னுன் என்பதை எவ்விதம் அறிந்து கொண்டார்?

2. ஒலி, ஒளி, ஒழி—இவற்றின் அர்த்த வித்தியாசம் தெரியும்படி தனித்தனி வாக்கியம் எழுது.

1. இராமன் வந்தான்.
ஜானகி பாடுகிருள்.
பையன்கள் ஓடுகிருர்கள்.
குதிரை மேய்கிறது.
குருவிகள் பறக்கின்றன.

} இந்த வாக்கியங்களிலுள்ள பெயர்ச் சொற்கள் எவை? அவற்றுள் உயர்திணைப் பெயர்கள் எவை? அஃறிணைப் பெயர்கள் எவை?

2 இராமன்—ஆண்பாற் பெயர். ஜானகி—பெண்பாற் பெயர். பையன்கள்—பலர்பாற் பெயர். 'பால்' திணையின் உட்பிரிவு: பகுப்பு அல்லது பிரிவு என்று பொருள்படும்.

3. ஆண்பால், பெண்பால், பலர்பால் இவை மூன்றும் உயர்திணையைச் சேர்ந்தவை.

4. ஒன்றன் பால், பலவின் பால் இவை இரண்டும் அஃறிணையைச் சேர்ந்தவை. குதிரை—ஒன்றன்பாற்பெயர். குருவிகள்—பலவின்பாற் பெயர்.

# 10. நல்ல சமாரியன்

| | | |
|---|---|---|
| நியாய சாஸ்திரி | யூதர் | பரம்பரை |
| தேவாலயம் | கற்பனை | பணிவிடை |
| அந்தஸ்து | போதகர் | நாதி |

இயேசுநாதர் காலத்திலே யூதர்களுக்குள் 'நியாய சாஸ்திரிகள்' என்று ஒரு வகுப்பார் இருந்தார்கள்; அவர்கள், பழைய சாஸ்திரங்களையும் பரம்பரையாய் வருகிற ஆசாரங்களையும் அறிந்து, பிறருக்குப் போதிக்கிற தொழிலாளர்.

ஒரு சமயம் நியாய சாஸ்திரி ஒருவன் இயேசுநாதரைச் சோதிக்க விரும்பி, அவரிடம் வந்து, 'போதகரே! கற்பனைகளிலே முதன்மையானது எது?' என்று வினவினான். அதற்கு இயேசுநாதர், 'நீயே சொல்லு' என்றார். சாஸ்திரி சொன்னான்; 'உன் இறைவனாகிய கடவுள்மீது உன் முழுவலிமையோடும் உன் முழுவாஞ்சையோடும் அன்புகொள்வாயாக; உன்னிடத்திலே நீ அன்பு கூர்வதுபோல் பிறனிடத்திலும் அன்பு கொள்வாயாக.' இதைக் கேட்ட இயேசுநாதர், 'அப்பா, நீ போய் அப்படியே செய்' என்றார். சாஸ்திரி தான் நல்லவன் என்று காட்டிக் கொள்ள ஆசைப் பட்டவனாய், 'சுவாமி! எனக்கு அயலான் யார்?' என்றான்.

அதற்கு இயேசுநாதர் கண்ணுக்கு எதிர்ப்படும் எவனும்—ஏழை எளியவனும் பெரியவனும்—அயலான்தான். மதபேதம் சாதிபேதம் இல்லாமல் அனைவரையும் நேசிக்க வேண்டும் என்பதை

விளக்கி அவனுக்கு ஒரு கதை சொன்னார். அது வருமாறு :

ஒரு மனிதன் எருசலேமில் இருந்து எரிகோவுக்குப் போகப் புறப்பட்டான். அவன் சென்ற காட்டுப் பாதையிலே திருடர் வந்து அவனை அடித்துக் காயப்படுத்தி அவன் பொருள்களைக் கொள்ளை கொண்டுபோய் விட்டார்கள். அவன் மூர்ச்சை அற்று அங்கே கிடந்தான்.

சற்று நேரத்திலே ஆசாரியன் ஒருவன் அந்த வழியே வந்தவன், அவனைப் பார்த்து, 'இவனைக் கவனிப்பதுதான் என் சோலியோ? நான் தேவாலய ஊழியன்' என்று எண்ணிக் குற்றுயிராய்க்கிடந்த அநாதையைப் பொருட்படுத்தாமல் விலகிப் போனான். பின் லேவியன் ஒருவன் அந்த வழியே வந்தான். அவன் தாழ்ந்த வேலை செய்பவன்; எனினும், தேவாலயப் பணிவிடைக்காரன். அவன் தன் அந்தஸ்தை மறந்தவனும் அல்லன். மூச்சற்று, நாதியற்றுக் கிடந்த வழிப்போக்கனைக் கண்டு, 'நமக்கேன் இந்தத் தொல்லை' என்று ஒரு பக்கமாய் ஒதுங்கிப் போனான்.

பின்பு, சமாரியப் பிரபு ஒருவன் வாகனமீதேறி அவ்வழியே வந்தான்; வழியிலே அடிபட்ட காயங்களுடன் இரத்தத்திலே தோய்ந்து கிடந்த வழிப்போக்கனைப் பார்த்தான். 'வழிப்போக்கன் யூதன், சமாரியர் குல விரோதி' என்ற எண்ணங்கள் வந்து, பிரபுவின் தருமசிந்தனையைத் தடுக்கவில்லை. அவன் சட்டென வாகனம் விட்டு இறங்கி ஓடினான். வழிப்போக்கன் புண்களை எண்ணெயிட்டுக் கட்டி, அவனைத் தன் வாகனத்திலே ஏற்றிச் சத்திரத்

துக்குக் கொண்டு சென்று பராமரித்தான். மறுநாள் அவன் புறப்படும்போது, புண்பட்டவனைச் சத்திரக் காரன் பாதுகாப்பிலே வைத்து, செலவுக்கு இரண்டு பணமும் கொடுத்து, 'ஐயா! இவனைக் கவனமாய்ப் பார்த்துக் கொள்; இதற்கு மேல் ஏதேனும் நீ செலவு செய்தாலும் நான் வந்து கொடுப்பேன்' என்றான்.

சாஸ்திரியாரே! 'இப்போது சொல்லும்; புண்பட்டவனுக்கு அயலான் யார்?' என்றார் இயேசு நாதர். சாஸ்திரியும், 'அவனுக்கு உதவி செய்த உத்தமனே அயலான்' என்றான். அதுகேட்ட இயேசு நாதர், 'அப்படியே நீயும் ஜீவியம் செய்' என்றார்.

## கேள்விகள்

1. கற்பனைகளிலே முதன்மையானது எது?
2. அயலான் யார்.
3. லேவியன், என்பவன் யாவன்?
4. சமாரியன், என்பவன் யாவன்?
5. யூதர் என்பவர் யாவர்?
6. மதபேதம் சாதிபேதம் இன்றி அனைவரையும் நேசிக்க வேண்டும் என்பது எப்படி வற்புறுத்தப்படுகிறது?

## இலக்கணம்

1. அவர், அந்நாள் அரசன், இவ்விஷயம்—இவற்றில் சுட்டெழுத்துச் சொற்கள் எவை?

2. 1. புத்தகம் கொண்டுவா.
   2. கந்தன் மதுரையில் வசிக்கிறான்.
   3. சித்திரை மாதம் வந்தான்.
   4. தாயார் குழந்தையிடம் அன்பாக இருக்கிறாள்.
   5. கண்ணில் தூசி விழுந்தது.
   6. காலையில் படித்தல் நல்லது.

   மேற்கண்ட வாக்கியங்களிலுள்ள பெயர்ச் சொற்களைக் குறிப்பிடு. அப்பெயர்ச் சொற்களை முன் வகுப்பிற் படித்த முறையில் வகைப்படுத்துவோம்.

   பொருட் பெயர்—புத்தகம்    குணப் பெயர் —அன்பு
   இடப் பெயர் —மதுரை    சினைப் பெயர் —கண்
   காலப் பெயர் —சித்திரை    தொழிற் பெயர்—படித்தல்

3. கந்தன், தாயார், குழந்தை, தூசி, மாதம், காலை—இவை ஒவ்வொன்றும் என்ன வகையான பெயர்ச்சொல்?

# 11. தேசீய கவி சுப்பிரமணிய பாரதியார்

| | | |
|---|---|---|
| பண்டிதர் | விண்ணுலகம் | சுயேச்சை |
| பாமரர் | தாயகம் | தொல்லை |
| வயோதிகர் | கவிதை | வேட்டகம் |
| ஏகமனதாக | சுயமாக | அர்ச்சகர் |
| விநோதமான | போதிய | நலிந்து |
| சமஸ்தானம் | ஆதரவு | பாக்கள் |
| வித்துவான் | அரண்மனை | ஐயம் |

தமிழ் நாட்டில் பண்டிதரும், பாமரரும், பாலரும் வயோதிகரும் ஏகமனதாகக் கொண்டாடி மகிழும் தேசீய கவி பாரதியே யாவர். சிறு குழந்தைகளுக்கு மிகப் பெரிய நீதிகளையும் கருத்துக்களையும் விளையாட்டாக எடுத்துக்கூறும் விநோதமான 'பாப்பா' பாட்டை இயற்றியவரும் இவரே.

பாரதியாரின் தகப்பனார் சின்னச்சாமி ஐயர் என்பவர் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள எட்டையபுரம் சமஸ்தானத்தில் வித்துவானாயிருந்தார். இவர் தருக்கம், இலக்கணம், கணிதம் இவைகளில் தேர்ந்தவர். பிறர் உதவியின்றியே கால நிலைக்கேற்ப ஆங்கிலமும் கற்றுக்கொண்டவர். பாரதியாரின் தாய் நற்குண நற்செய்கை வாய்ந்த லட்சுமி தேவி என்பவள்.

பாரதியார் ஐந்து ஆண்டு நிறையும் முன்னே அவருடைய அன்னை விண்ணுலகெய்தினள். தந்தையானவர் தாயற்ற பிள்ளையைப் பொன்னே போலப் போற்றி வளர்த்து அவருக்குத் தாமே தமிழ் கற்பித்து வந்தார். அந்தக் காலத்தில் எட்டையபுர

சமஸ்தானம் தமிழ்க் கவிகளுக்கு ஒரு தாயகமாக யிருந்தபடியால் இளமை முதற்கொண்டே பாரதியா ருக்குத் தமிழ்க் கவிதைப் பழக்கம் ஏற்பட்டது. இயற் கையிலேயே கவி உணர்ச்சி ததும்பிக் கிடந்த அவர்



மனத்தில் அவருடைய ஏழு வயதிலேயே யாதொரு முயற்சியு மின்றிச் சுயமாகக் கவிதை எழுந்தன. பதினொரு வயதிலெல்லாம் தமிழ் வித்துவான்கள் கண்டு அதிசயிக்கும் வண்ணம் பெருஞ் சபைகளில் கொடுத்த அடிகளை அல்லது கருத்துக்களைக்கொண்ட அழகிய பாடல்களை விரைவில் பாடிக் காட்டுவார்.

1897-ம் ஆண்டில், தமது பதினைந்தாம் வயதில் பாரதியார் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள கடயம் செல்லப்பா ஐயர் புதல்வி செல்லம்மாளை மணந்தார். இதன் பின்பு ஒரு வருடத்திற்குள்ளாகத் தந்தை தேக வியோகமானார். ஆதலால், காசியிலுள்ள தமது உறவினர் உதவியால் அங்கே ஒரு வருடம் கல்வி பயின்று வந்தார். பின்பு திருநெல்வேலி ஹிந்து கலாசாலையில் பயின்றார். மறுபடியும் 1901-ல் காசி சென்று படித்தார். அங்கே தமிழ் இல்லாததால் சமஸ்கிருத மொழி பயின்று, சர்வ கலாசாலைப் பிரவேச பரீட்சையில் முதன்மையாகத் தேறினார். ஆயினும் போதிய ஆதரவில்லாத நிலையில் கல்விப் பயிர்ச்சியைக் கைவிட நேர்ந்தது.

எட்டையபுரம் ஜமீன்தார் பாரதியாருக்கு அரண்மனையில் உத்தியோகம் கொடுத்தார். இவருடைய சுயேச்சைக் குணமானது இவரை இரண்டு வருடங்களுக்கு மேல் அங்கிருக்க விடவில்லை. 1904-ல் மூன்று மாதகாலம் மதுரைச் சேதுபதி ஹைஸ்கூலில் தமிழ்ப் பண்டிதரா யிருந்தார். பின்பு சென்னையிலுள்ள உறவினரின் முயற்சியால், 'சுதேசமித்திரனில்' கீர்த்திமிக்க ஜி. சுப்பிரமணிய ஐயரின் கீழ் உதவி ஆசிரியராக அமர்ந்தார். மற்றும் 'இந்தியா' பத்திரிகையும் நடத்தினார். 1905-முதல் 1907-வரை இவர் தேசீய இயக்கத்தில் பெரிதும் ஈடுபட்டார்.

பாரதியாரின் வாழ்வில் பெரும் பகுதி புதுச்சேரியிலே கழிந்தது. அங்கு இவர் வறுமையால் பட்ட கஷ்டங்கள் பல. இந்த நிலையிலுங்கூட இவருடைய ஈகைக் குணம் சற்றும் குறையவில்லை. ஒரு தடவை தாம் உடுத்தியிருந்த உடையினையும் தானம் செய்து விட்டுக் கோவணத்துடன் விளங்கினார். கடன்

தொல்லையால் அயர்வுறும் நிலையைக் கேள்வியுற்று 1915-ல் 'சுதேசமித்திரன்' ஆசிரியராக விருந்த ஏ. ரங்கசாமி ஐயங்கார் இவருக்கு மாதம் முப்பது ரூபாய் வீதம் அனுப்பி வந்தார். புதுவை முருகேச பிள்ளை என்பவரும் இவருக்கு அடிக்கடி உதவி செய்துவந்தார்.

1918-ல் புதுச்சேரியிலிருந்து இவர் வெளியேறினார். கூடலூரில் போலீசார் இவரைக் கைதுசெய்ய முயன்றனர். பின் தமது மாமனார் வசித்து வந்த கடயத்தில் குடும்பத்துடன் வாழ்ந்து வந்தனர். போதிய வருவாய் இல்லாமையால் சிறிது வருந்தினார். 1920-ம் வருடம் மறுபடியும் 'சுதேசமித்திரனில்' ரூபாய் 100 சம்பளத்தில் உதவி ஆசிரியராகச் சென்றார். இந்தச் சமயம் இவர் தினந்தோறும் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோவிலுக்குப் போய் வழிபாடு செய்து வந்தார். தேங்காய் பழங்களைக் கோயில் யானைக்குக் கொடுத்து வந்தார். ஒரு நாள் யானை மதங்கொண்டிருந்தபடியால் இவரைத் தூக்கி எறிய, அது முதல் உடல் நலிந்து 1921-ல் உலகை நீத்தார்.

பாரதியார் உயர்ந்த கொள்கையும், அதனை முற்றும் நடைமுறையில் கொண்ட வாழ்வும் உடையவர். சுதந்திரம், சுயராஜ்யம் என்று அவர் தவித்துக்கொண்டிருந்தார். உலகில் ஒருவன்கூட வறுமையால் நலியக்கூடாதென ஆவேசமாய்க் கூறியுள்ளார். இவர் பித்தர் போன்றும், துறவி போன்றும் காலம் கழித்தார். குயிற் பாட்டு, கண்ணன் பாட்டு முதலிய உயர்ந்த இலக்கியச் சுவையுள்ள பாக்களையும், பல தேசீயப் பாட்டுக்களையும் இவர் இயற்றியுள்ளார். இவர் எழுதிய பாஞ்சாலி சபதத்தை

வாசித்தால் எந்த மந்த புத்தி யுள்ளவனுங்கூட ஆவேசமும் வீரமும் கொண்டு எழுவானென்பதில் ஐயமில்லை. தமிழ்இலக்கியத்தில் தேசாபிமானத்தை வளர்த்த பெருமை இவருடையதே யாகும். இவர் ஒரு பெரிய தேசீய கவி.

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—

1. பாரதியார் சிறுவராக இருந்தபொழுதே தமிழ் வித்துவான்கள் அதிசயிக்கும் வண்ணம் செய்த காரியங்கள் எவை ?

2. பாரதியாரின் வாழ்வில் பெரும்பகுதி எவ்விடத்தில் கழிந்தது ?

3. பாரதியார் கடன் தொல்லையால் கஷ்டப்பட்ட சமயத்தில் அவருக்கு உதவி செய்து வந்தவர் யார் ?

4. பாரதியாரின் மரணத்திற்கு எச்சம்பவம் காரணமாயிற்று ?

2. தடித்த எழுத்துக்களிலுள்ள வார்த்தைகளுக்குப் பதில் வேறு வார்த்தைகளை அமைத்து எழுது.

1. பாரதியார் ஐந்து ஆண்டு நிறையும் முன்னே அவருடைய அன்னை விண்ணுல கெய்தினள்.

2. உலகில் ஒருவன்கூட வறுமையால் நலியக்கூடாதெனக் கூறியுள்ளார்.

## இலக்கணம்

| | |
|---|---|
| 1. நான் படிக்கிறேன். | 'நான்'—பேசுவோன், தன்மை இடம் |
| நீ எழுதுகிறாய். | 'நீ'—கேட்போன், முன்னிலை இடம் |
| அவன் பாடுகிறான். | 'அவன்'—பேசப்படுவோன், படர்க்கை இடம் |

தன்மைப் பெயர்கள் : நான், நாம், நாங்கள்.
முன்னிலைப் பெயர்கள் : நீ, நீர், நீங்கள்.
படர்க்கைப் பெயர்கள் : அவன், அவள், அவர், அது, அவை

2. பாரதியார் காசிக்குச் சென்றார்—இந்த வாக்கியத்திலுள்ள பெயர்ச் சொற்களின் திணை, பால், எண், இடம் இவைகளைக் கூறுக.

3. தமிழ் இலக்கியத்தில் தேசாபிமானத்தை வளர்த்த பெருமை இவருடையதே யாகும். இவ்வாக்கியத்தை இவர் என்ற எழுவாயுடன் அமைத்துக் காட்டு.

# 12. ஜஹாங்கீர் வழங்கிய தீர்ப்பு

| | | |
|---|---|---|
| ஈடுபட்டிரு | பிரயோகி | பிரதானி |
| ஆஸ்தான மண்டபம் | கவனித்த வண்ணம் | பிரயத்தனம் |
| மணிக்கூடு | பரபரப்பு | ஜாஹீர் |
| அனுஷ்டித்து | கைம்பெண் | வாரீசு |
| தயாளராக | பழிக்குப் பழி | சாசுவதம் |
| சகிக்க முடியாத | மனப்பூர்வம் | |

பாரத நாட்டிலே பல சக்கரவர்த்திகள் பல காலங்களில் தோன்றி மக்களுக்கு நடுவு நிலைமை யான நியாயத்தை வழங்கி வந்தனர் என்ற உண்மை பின்வரும் சரித்திரத்தால் தெளிவா கின்றது.

மொகலாய அரச பரம்பரையில் வந்த ஜஹாங்கீர் என்பவர் அக்பர் சக்கரவர்த்தியின் குமாரர். அவர் குழந்தைப் பருவம் தொட்டே அன்பிலும் நியாயத்திலும் ஈடுபட்டிருந்தார். மேலும் தமது குடிகளிடத்தில் மிகவும் நேசமாய் இருந்து வந்தார். அவர் ராஜாவாக முடிசூடிய சிறிது காலத் தில் தமது பிரஜைகளின் வழக்குகளைக் கேட்கும் பொருட்டுத் தமது ஆஸ்தான மண்டபத்தின் முன்பு ஒரு பெரிய மணிக்கூடு கட்டிவைத்தார். அதி லுள்ள மணியை இழுத்து அடிப்பதற்கு ஒரு பெரிய நியாயச் சங்கிலியும் அமைத்து வைத்தார்.

ஜஹாங்கீர் அமைத்த நியாயச் சங்கிலியானது ஒரு மணங்கு தனிப் பசும் பொன்னால் செய்யப் பட்டது. அதனுடைய ஒரு நுனி அரண்மனையின் உயரிய ஸ்தூபியிலும், மற்றொரு நுனி கோட்டையின்

வெளியே அழகிய யமுனைக்கரையில் ஒரு கம்பத்திலும் கட்டப்பட்டிருந்தது. அது அறுபது கஜம் நீளமுள்ளது. அதில் ஒவ்வொரு கஜத்துக்கும் இடையிடையே அறுபது சதங்கை மணிகள் கட்டப்பட்டிருந்தன. இவ்வித நியாயச்சங்கிலியை அமைத்து முடித்ததும் அரசன் தமது பிரஜைகளில் எவருக்காவது அவரவர் வழக்குகளை தம்மிடம் நீதி கிடைக்க வேண்டுமானால், அந்த நியாயச்சங்கிலியை அவர்கள் இழுத்தால், உடனே அவர்களுக்கு நீதி வழங்கப்படும் என்று தண்டோரா மூலம் அறிவித்தார். அதன்படி மணியோசையைக் கேட்ட மாத்திரத்தில் அரசர் தமது தர்பாருக்கு வழக்காளர்களை வரவழைத்து, அவர்களைத் தாம் நேரில் விசாரித்து நியாயம் வழங்கும் நியமத்தை அனுஷ்டித்தும் வந்தார்.

அரசர் தமது குடிகளுக்கு மட்டுமில்லாமல் ஐந்தறிவுள்ள மிருகங்களுக்குங்கூட ஏற்படும் துன்பங்களை நீக்கக்கூடிய அத்துணை தயாளராக விளங்கினார். ஜஹாங்கீருடைய மனைவியின் பெயர் நூர்ஜஹான். இவர் உலகத்திலுள்ள அழகிய மாதர்களில் தலைசிறந்தவர். இராணி நூர்ஜஹான் மென்மைத் தன்மை வாய்ந்த பாரத மகளாய் இருந்த போதிலும் தம் கணவரோடு சேர்ந்து நியாயத்தைக் கண்டு பிடித்துத் தமது குடிகளுக்கு நீதி வழங்குவதில் மிகவும் ஆற்றல் வாய்ந்தவராக விளங்கினார். ஆதியில் முதன் முதல் ரோஜாப் புஷ்பத்திலிருந்து உயர்ந்த அத்தர் இறக்குதல் முறையைக் கண்டு பிடித்தவர் இந்த உத்தமியே யாவார்.

ஒருநாள் ஓர் ஏழை ஸ்திரீ தனக்கு நேர்ந்த துன்பத்தை அறிவிக்க இந்த நியாயச் சங்கிலியைப் பிடித்

திழுத்தாள். அப்பொழுது மணி அடித்தது. அந்தச் சமயம் பாதுஷா அரண்மனையின் அந்தப்புரத்திலிருந்து தனது இராணியோடு பேசிக்கொண்டிருந்தார். மணியோசை கேட்டதும் எழுந்து வந்து, நியாயச் சங்கிலியினை இழுத்தவரைத் தர்பாருக்கு அழைத்துவர உத்தரவிட்டார். அந்த ஸ்திரீ பாதுஷா முன் ஆஜராஞள். அரசர் அவளை விசாரித்ததில் கோட்டைக்குள்ளிருந்து எவரோ சுட்ட குண்டிஞல் அவள் கணவன் இறந்து போனதாகவும், அதஞல் அவள் சகிக்க முடியாத துன்பத்தைத் தாங்குவதாகவும் அரசருக்குத் தெரிய வந்தது.

அரசர் உடனே அரண்மனையிலிருந்து அவ்விதம் குண்டு பிரயோகித்தவர் யார் என்று அறிந்து வரும்படி நாஞ பக்கமும் தமது ஏவலாளரை அனுப்பி விசாரிக்க உத்தரவிட்டார். வெகு பிரயத்தனத்தின் மேல் கடைசியாக அத் தீத் தொழிலைச் செய்தவர் தமது தேவியார் நூர்ஜஹானே என்பது தெரிய வந்தது.

அப்பொழுது தர்பாரில் கூடியிருந்த மந்திரிகள், பிரதானிகள், பிரபுக்கள், குடிகள் யாவரும் இப்பொழுது அரசர் தமது சொந்த வழக்கில் சிக்கிக் கொண்டார். பிறருக்கெல்லாம் நியாயம் வழங்கியவர் தம்து சொந்த வழக்கில் எவ்வித நியாயம் புரிகிருர் என்பதை அறிய ஆவலுடன் நன்கு கவனித்த வண்ணமாயிருந்தனர். தர்பார் எங்கும் ஒரு பரபரப்பு ஏற்பட்டது.

சக்கரவர்த்தி மிகுந்த தயாளராகவும் சிறந்த நியாயாதிபதியுமாகையால் உடனே ஒரு துப்பாக்கி

யினை தர்பாரில் வரவழைத்து எல்லோர் முன்னிலை யிலும் அதில் குண்டுகளை நிரப்பி, அந்த ஸ்திரீயின் கையில்கொடுத்தார். அரசர் அவளைப் பார்த்து, 'என் னுடைய தீர்ப்போ உயிருக்குப் பதில் உயிர்தான்'; எனது மனைவியோ உனது கணவனைத் துப்பாக்கி யால் சுட்டுக் கொன்று உன்னைக் கைம் பெண்ணாக்கி விட்டனள். அவ்விதமே நீயும் அவளுடைய கணவ னாகிய என்னைச் சுட்டு, அவளைக் கைம் பெண்ணாக்கி விடவேண்டும். நூர்ஜஹானின் நாயகனாகிய நான் இதோ உன் முன்னால் நிற்கிறேன்; நீ குண்டைப் பிரயோகம் செய்' என்றனர்.

இந்த நடுவு நிலைமையான நீதி முறையினைக் கண்டு சபையோர் அனைவரும் திகைத்துப் போயினர். அப்பொழுது அந்த ஸ்திரீ, 'இராஜாவே! நான் பழிக்குப்பழி வாங்க விரும்பவில்லை. இராணி அம்மையை நான் மனப்பூர்வமாக மன்னிக்கிறேன்' என்றனள்.

அப்பொழுது பாதுஷா, 'அவ்விதமானால் இதற்கு மேல் நான் ஒன்றும் செய்வதற்கில்லை. நூர்ஜஹானுக்கு நான் பல கிராமங்களை ஜாஹீராக வழங்கி யிருக்கிறேன். அவைகள் ஒவ்வொன்றிலும் பாதியினை இன்று முதல் நான் உனக்கு உரிமை யாக்குகிறேன்' என்று கூறிப் பட்டயம் எழுதி வைத்தார். குறித்த இனம் நிலங்கள் இன்றுவரை அந்த ஸ்திரீயின் வாரீசுப் பரம்பரையில் இருந்து வருவதாகவும் அதனை அவர்கள் சாசுவதமாக அனு பவித்து வருவதாகவும் மக்கள் கூறுகின்றனர்.

இந்த மொகலாய அரசரைப்போலத் தமிழ் நாட்டில் சோழ மண்டலத்தை ஆண்ட மனுநீதி

கண்ட சோழரும் குடிகளின் குறைகளை நேரில் விசாரித்து நியாயம் வழங்கினர். குறையுள்ளவர்கள் எவரும் அரண்மனை முன் கட்டித் தொங்கிய 'ஆராய்ச்சி மணி'யை அசைத்தால், உடனே அவர்களை அரசர் விசாரித்துத் தகுந்த நீதி வழங்கி வந்தனர்.

## பயிற்சி

1. கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் எழுது :

1. ஜஹாங்கீரின் இயல்பு என்ன ?

2. நியாயச் சங்கிலி அமைக்கப்பட்டிருந்த விதமென்ன ?

3. ஜஹாங்கீர் எவ்விதம் மிகுந்த தயாளராக விளங்கினர் ?

4. நியாயம் வழங்குவதில் ஜஹாங்கீருக்குத் துணை புரிந்தவர் யார்? அவருடைய பெயர் எதனுல் விளங்கும் ?

5. ஏழை ஸ்திரீ நியாயச் சங்கிலியை இழுத்த காரணமென்ன ?

6. தர்பார் எங்கும் பரபரப்பு ஏற்படக் காரணமென்ன ?

7. ஜஹாங்கீர் செய்த தீர்ப்பு யாது? ஏழை ஸ்திரீக்கு ஜாஹீர் வழங்கப்பட்ட விவரம் யாது ?

8. அரசர் நீதி வழங்கிய முறையில் நீ அறிந்த வேறு கதை எழுது.

## இலக்கணம்

2. 1. ஈடுபடு, நீதிவழங்கு—இவற்றைத் தனித்தனி வாக்கியங்களில் அமைத்துக் காட்டு.

2. அரசி—ஆண்பால் என்ன ?

3. ஏழை ஸ்திரீ நியாயச் சங்கிலியைப் பிடித்து இழுத்தாள். அப்பொழுது மணியடித்தது —ஒரே வாக்கியமாக்கு.

4. மேல் வாக்கியங்களை, 'இழுக்கப்பட்டது. அடிக்கப்பட்டது' என்ற வார்த்தைகள் வருப்படி மாற்றி எழுது.

# 13. குமணன் தலைக்குக் கோடிப் பொன்

| | | |
|---|---|---|
| களஞ்சியம் | மரபு | கவியரசர் |
| வரையாது | அயலான் | புவியரசர் |
| வள்ளல் | கையமை | முகமன் |
| சான்ருேர் | உவகை | அளவளாவினர் |
| ஆதி | அறம் | கவிவாணர் |
| உலோப குணம் | சிந்தனை | அவைக்களம் |
| கொடை | பறையறைவித்தான் | அமைச்சர் |
| இன்றுதொட்டு | சஞ்சலம் | பதைபதைத்து |

முன்ெருரு காலத்தில் கொங்கு நாட்டின் ஒரு பகுதி குமண நாடெனப் பெயர் பெற்று விளங்கியது. அந்நாடு குமண நகரமெனும் பெயர் வாய்ந்த நகரத்தைத் தலை நகராகக் கொண்டிருந்தது. அதை ஆண்ட குமண மன்னர் கல்விக் களஞ்சியமாகவும் கருணைக் கடலாகவும் வரையாது கொடுக்கும் வள்ளலாகவு மிருந்தார்.

அம்மன்னருக்கு அமணன் என்ற சகோதரன் ஒருவனிருந்தான். அவன் பொருளாசை கொண்டவன்; ஏழைகளையும் சான்ருேர்களையும் வெறுப்பவன். அவனிடத்திலும் ஆதியில் சில நற்குணங்கள் இருந்தன. அவை நாளடைவில் அவனுடைய உலோப குணத்தினுல் மங்கிப் போயின. குமண மன்னரது கொடையினுல் பொக்கிஷத்திலுள்ள பணம் முழுமையும் செலவாகி விடுமென்று அமணன் பெருங் கவலை அடைந்தான்.

ஒரு நாள் அமணன் தமயனை நோக்கி, 'அண்ணு பணமில்லாதவர் பிணமென்பதை நீர்

அறியீரோ? வறுமையில் உழன்று சோற்றுக்கு அலையும் புலவரே செல்வத்தைப் பழிப்பவர். எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விடும் இவர்கள் 'சீ! சீ! இந்தப் பழம் புளிக்கும்' என்று கூறிய நரியைப் போன்றவரன்றோ? எனினும் இவர்கள் நெய்க் குடத்து எறும்பு போலச் செல்வரைச் சுற்றிச் சுற்றி வருகிறார்கள். இத்தகைய செல்வத்தின் அருமையினை அறியாது, 'கொடை கொடை என்று கூறிக் கொடுத்து அழிந்தவர் மூடரே யன்றோ!' அண்ணா, செல்வம் ஒழிந்த பின் எப்படி நீர் அரசு புரிவீர்! விழலுக்கு நீர் இறைப்பதுபோல் வீணர்களான புலவர்களுக்குப் பணத்தைக் கொட்டிக் கொடுக்கிறீர். ஐயோ! உமது வறுமை உம்மோடு நிற்குமா? அது நமது மரபினையே அழித்து விடுமன்றோ? இன்று தொட்டு அந்த அரசை எனக்குத் தந்து நீர் காட்டுக்குப் போகவேண்டும்' என்று கூறினார்.

குமண மன்னர் அவன் கூறியதைக் கேட்டு அவனுடைய அறியாமைக்கு இரங்கினார். பிறகு தம்பியை நோக்கி, 'அயலான் ஒருவன் இரக்கினும் மகிழ்ச்சியோடு அளிக்கத் தக்க இந்த அரசுச் செல்வத்தைக் காப்பதற்கு உரிமை வாய்ந்த நீ கேட்ட பொழுது 'இல்லை' என்று கூறுவேனோ? இனி நீ அறிவிலும் கொடையிலும் சிறந்து நெடுங்காலம் அரசு செலுத்த வேண்டுமென்பதே எனது விருப்பம்' என்று சொல்லிச் சில நற்போதனைகளும் செய்தார்.

குமண மன்னர் அமணனுக்கு அரசை அளித்துக் காடு செல்வதை அறிந்து நகர மாந்தர் தாயைப் பிரியும் குழந்தைகள் போலக் கதறினார்கள். அவர்களிற் சிலர் அமணனோடு நாட்டில் வாழ்வதைப் பார்க்கிலும், குமண மன்னரோடு காட்டிற்குப்

போவதே நன்றென்று துணிந்தனர். இவ்வாறு பெருந் துயரத்தோடு வருந்திக் கதறிக் கொண்டு தன்னைச் சூழ்ந்த மக்களை எல்லாம் கையமைத்து குமண மன்னர் அவர்களுக்குப் பலவிதமாகத் தேறுதல் கூறிக் காட்டை நோக்கி நடந்தனர்.

அமணனே உவகையோடு அரசனானான். அவன் அறத்தையும் அருளையும் அன்பையும் நோக்காது, செல்வப் பொருளையே நோக்கி வாழ்ந்தான். பேராசை கொண்ட அவன் குமண மன்னரைப்பற்றி பின் வருமாறு கருதலுற்றான்.

'நமக்கு அஞ்சித் தமையனார் நாட்டைவிட்டுக் காடு சென்றார். எவர்க்கும் இனியவராயிருந்த அவர், நண்பர்க்ளின் உதவியால் பல படைகளும் பெற்று இங்குச் சேர்ந்து நம்மோடு போர்புரிதலும் கூடும், எனவே வருமுன் காத்தல் அறிவுடைமைக்கு அழகாகும்.'

இவ்வாறு கருதிய அமணனது உள்ளத்தில் மிகக் கொடிய சிந்தனை தோன்றியது. 'குமண மன்னர் தலையைக் கொணர்பவருக்குக் கோடிப் பொன் அளிக்கப்படும்' என்று அவன் பறையறை வித்தான். இதைக் கேட்டு நகரமாந்தர் பதைத்தனர். சிலர் செவியைக் கையால் புதைத்தனர். சிலர் புரண்டு அழுதனர். சிலர் செயல் மறந்து ஏங்கி நின்று பெருமூச்சு விட்டனர். இச்செய்தி காட்டி லிருந்த குமண மன்னர் காதிலும் விழுந்தது. அவர் சிறிதும் சஞ்சலம் அடையவில்லை.

அந்நாளில் பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் ஒருவர் இருந்தார். அவர் வறுமைப் பிணி யால் மிகவும் வாடி வருந்திக் கொண்டிருந்தார். ஒரு சமயம் அவர் நண்பரான பெருஞ்சித்திரனார் என் னும் புலவர் அவரிடம் வந்தார். புலவரிருவரும் ஒரு

வரை ஒருவர் சுகம் வினவிய பின்னர், சித்திரனுர் சாத்தனுருக்குக் குமண மன்னரது பெருவண்மை யினை அறிவித்தார்.

சாத்தனுர் குமண மன்னரைக் காணப் புறப்பட்டார். புலவர் குமண நாடு அடைந்தபின் வள்ளல் காடு சென்றமை அறிந்தார். அவ்வழியே தொடர்ந்து அவ்வரைக் காணத் துணிந்து அவர் வசித்த கானகம் தேடிச் சென்றுர்.

காட்டிலே கவியரசர் புவியரசரைக் கண்டார். அரசர் அவருக்கு முகமன் கூறி, 'உமது வரவு நல் வரவாகுக!' என்றுர். வள்ளலும் புலவரும் அளவளாவினர். பிறகு புலவர் தமது வறுமை நிலையை வெளியிட்டு ஒரு கவி பாடினுர்.

அந்தக் கவியின் அருமையை நன்கு அறிந்த குமண மன்னர் 'ஐயோ! இந்தப் புலவர் நான் அரசனுக இருந்த காலத்தில் வந்தாரில்லையே! இவர் கலி நீங்கப் பொன்னும் மணியும் என் கை நிறைய வாரி வழங்கியிருப்பேனே!' என்று நெடுநேரம் வருந்தினுர். முடிவில் தம் தலைக்கு விலையாகச் செம்பொன் கோடி தருவதாகத் தம்பி வாக்களித் திருத்தலின், கவிவாணருக்குத் தம் தலையையே கொடுத்து, அவர் வறுமை நோயைக் களையலாம் எனத் துணிவு கொண்டார்.

பிறகு அவர் தமக்குள் மகிழ்வெய்தித் தம் கை வாளை உருவிக்கொண்டே கவியரசரை நோக்கி அருங் கவிப்புலவரே! நான் நாடு ஆண்டு கொடை வழங்கி வந்த காலத்தில் என்னை அடைந்தீர் இல்லை. இப்பொழுது நான் கொடுக்கத் தக்கது எனது தலையே. இதற்கே எனது தம்பி கோடிப்பொன் கொடுப்பதாகப் பறை சாற்றியுள்ளான். ஆதலின், என் தலை

தனைக் கொண்டுபோய் என் தம்பியிடம் கொடுத்துப் பொன்னைப் பெற்று உமது வறுமையை நீக்குவீர்"



என்ற கருத்தடங்கிய,

அந்தநாள் வந்திலை அருங்கவிப் புலவோய்
இந்தநாள் வந்து நீ நொந்தெனை அடைந்தாய் :
தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக் கொடுத்து
விலைதனைக் கொண்டுன் வறுமைநோய் களையே.

என்று கூறித் தலை தாழ்த்தினர். அச்செயல் கண்டு

புலவர் பெருவியப்பும் பேருவகையும் எய்தப் பெற்றார். 'கைவாளால் அவர்தாமே தன் தலையைக் கொய்து கொண்டால் என் செய்வோம்' என்று அஞ்சி, அவர் அரசர் கையினின்றும் வாளை வாங்கிக்கொண்டார்.

உடனே புலவர் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு மாந்தையூர் அடைந்து, ஒரு சிற்பியைக் குமண மன்னர் தலைபோன்றதொரு பொய்த் தலை செய்து தரும்படி வேண்டினார். அவ்வண்ணமே அவனும் அவர் வியப்பெய்துமாறு போலித் தலையொன்று செய்து கொடுத்தான். புலவர் அத்தலையோடு அமணன் அவைக்களம் சேர்ந்தார். அவர் கையிலிருந்த தலையையும் வாளையும் கண்டு சபையிலிருந்த அமைச்சரும் பிறரும் பதைபதைத்து விம்மினர். அமணனும் 'கள கள' வென்று கண்ணீர் உகுத்தான்; பலவாறு புலம்பி அழுதான். புலவர் அவரைத் தேற்றிக் குமண மன்னர் இருந்த வனத்திற்கு அழைத்துச் சென்றார்.

அமணன் குமணமன்னர் அடிகளிலே விழுந்து, 'அண்ணா! இனி நீர் அரசாட்சி விரும்பாது மறுப்பின் என்னுயிரை நானே மாய்த்துக் கொள்வேன்' என்று அழுதான். புலவரும் கசிந்துருகி, அமணனை ஆதரித்துப் பேசினார். அவர்களுடைய வேண்டுகோளுக் கிணங்கிக் குமண மன்னர் மீண்டும் முடி புனைந்து அரசரானார். தம்பியும் அண்ணனோடு ஒருமனப்பட்டு வாழ்ந்தான்.

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—

1. அமணனது குணங்கள் குமணனது குணங்களிலிருந்து எவ்விதம் மாறுப்பட்டிருந்தன?

2. அமணன் நாட்டைத் தன்னிடம் ஒப்புவிக்க வேண்டும் என்று குமண மன்னரிடம் கேட்டபொழுது குமண மன்னர் என்ன செய்தார்?

3. அமணன் காட்டிற்குச் சென்ற குமண மன்னரைக் கொல்லக் கருதிய காரணம் என்ன?

4. காட்டிலிருந்த குமண மன்னரைக் காணச் சென்றவர் யார்? அவருடைய வறுமைப் பிணியைக் குமண மன்னர் எவ்விதம் போக்க நினைத்தார்?

5. குமண மன்னர் திரும்பவும் அரசு பெற்றது எவ்விதம்?

**2.** 1. இன்றுதொட்டு, பறையறைவித்தார், பதை பதைத்து, முகமன் கூறி—தனித்தனி வாக்கியங்களில் அமைத்து எழுது.

2. அவைக்களம், போர்க்களம்
அரம், அறம்
கவியரசர், புவியரசர்
வண்மை, வன்மை
} அர்த்தத்தில் எவ்விதம் வித்தியாசப் படுகின்றன?

3. ஆதி—எதிர்ப்பதம் என்ன?

4. குமணன் காடு அடைந்தான்—இந்த வாக்கியத்திலுள்ள பெயர்ச் சொற்களுக்குத் திணை, பால், எண், இடம், வேற்றுமை இவைகளை எழுதுக.

## இலக்கணம்

**3.** 1. குமண மன்னர் அமணனுக்கு அரசை அளித்தார் இச் செய்தியை அறிந்த நகர மாந்தர் வருத்தப்பட்டனர் புலவர் குமண மன்னரைத் தேடிச் சென்றார்.

தடித்த எழுத்துக்களிலுள்ள வார்த்தைகள் ஒவ்வொன்றும் ஒரு பொருளின் தொழிலைத் தெரிவிக்கிறது. இவ்விதம் ஒரு பொருளின் தொழிலைக் காட்டும் சொல் **வினைச்சொல்** எனப்படும். மேற்கண்ட வினைச்சொற்களில் அளித்தார், வருத்தப்பட்டனர், சென்றார் இவை அர்த்தம் முடிந்து நிற்பவை. இவை **வினைமுற்றுக்கள்** ஆகும்.

2. அறிந்த—இந்த வினைச்சொல் அர்த்தம் முடிவு பெறாமல் மாந்தர் என்ற பெயர்ச் சொல்லைத் தழுவி நிற்கிறது. இது **பெயரெச்சம்** ஆகும்.

3. தேடி—இந்த வினைச்சொல் அர்த்தம் முடிவு பெறாமல் சென்றார் என்ற வினையைக் கொண்டு முடிகிறது. இது **வினையெச்சம்**.

4. வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம் இவை ஒவ்வொன்றுக்கும் இப்பாடத்திலிருந்து மூன்று உதாரணங்கள் எடுத்து எழுது.

# 14. இரண்டு வியாபாரிகள்

| | | |
|---|---|---|
| கொண்டாடினார்கள் | கீறி | குறுக்காக |
| சீமான் | உறுதியாய் | யோக்கியன் |
| நெடுங்காலமாக | கடுமை | பறிபோய் விட்டது |
| கரியுண்டு | கையிருப்பு | பைத்தியம் |

முன்னொரு காலத்தில் கிரிபுரியில் இரண்டு வியாபாரிகள் இருந்தார்கள். அவர்கள் மண் பானைகளும் விளையாட்டுச் சாமான்களும் வாங்கி விற்று ஜீவித்து வந்தார்கள். அவர்களில் ஒருவன் நல்ல குணமும் நல்ல ஒழுக்கமும் உடையவன்; எல்லோரும் குண சீலனென்று அவனைக் கொண்டாடினார்கள். மற்றொருவன் பேராசை பிடித்தவன். ஒரு நாள் இருவரும் அனந்தபுரம் என்னும் நகரத்திற்கு மண் பாண்டங்களை விற்பதற்காகச் சென்றார்கள்.

அந்நகரிலே ஒரு வீட்டில் ஒரு சிறு பெண்ணும் அவளுடைய பாட்டியும் வசித்து வந்தார்கள். அவர்கள் ஒரு பெரிய சீமான் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்; இப்பொழுது தரித்திரத்தால் கஷ்டப் பட்டுவந்தார்கள். அவர்கள் வீட்டில் தாலமொன்று இருந்தது. அதனைச் சட்டிபானைகளுக் கிடையே போட்டு வைத்திருந்தார்கள். நெடுங்காலமாக உபயோகத்தில் இல்லாததால், அது அழுக்குப் படிந்து கரியுண்டு போயிருந்தது. அது தங்கத் தாலம். ஆனால் வீட்டிலுள்ள கிழப்பாட்டிக்குக் கூட அது தங்கமென்பது தெரியாது.

அவர்கள் வீட்டினருகே பேராசை பிடித்த வியாபாரி 'சட்டிபானை வேண்டுமோ, சட்டிபானை?'

என்று கூவிக்கொண்டே போனான். வீட்டுக்குள் இருந்த சிறு பெண் ஆவலோடு வெளியே வந்து பார்த்துவிட்டு தன் பாட்டியிடம் போய்த் தனக்கு ஏதாவது விளையாட்டுப் பாத்திரம் வாங்கிக் கொடுக்கும்படி கேட்டாள்.

‘ நாம் ஏழைகள், எதைக் கொடுத்துப் பாத்திரம் வாங்குவது ?”

‘ஏன், பாட்டி! இந்தத் தாலம் இருக்கிறது. இதனால் நமக்கு ஒரு உபயோகமும் இல்லை. இதைக் கொடுத்து வாங்கலாமே !’

கிழவி வியாபாரியை உள்ளே வரும்படி செய்து அவனிடம் தாலத்தைக் கொடுத்து, ‘இதை எடுத்துக் கொண்டு, பதிலாக ஏதாவது விளையாட்டுப் பாத்திரம் இந்தக் குழந்தைக்குக் கொடு’ என்று சொன்னாள்.

வியாபாரி தாலத்தைக் கையிலெடுத்து, அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான். தங்கமோ என்று சந்தேகங்கொண்டான். அதைத் தன் கையிலிருந்த ஆணியால் கீறி நல்ல தங்கமென்று உறுதியாய்த் தெரிந்து கொண்டான். பிற்பாடு பதிலுக்கு ஒன்றும் கொடாமலே அடித்துக் கொண்டு போய்விடலாமென்று எண்ணி, ‘இது என்ன பெறும்! அரைக் காசுகூடப் பெறாதே!’ என்று சொல்லித் தாலத்தைக் கீழே எறிந்து விட்டுப் போய்விட்டான்.

சிறிது நேரம் கழித்துக் குணசீலனை வியாபாரி, ‘சட்டிபானை வேண்டுமோ, சட்டிபானை!’ என்று கூவிக்கொண்டு அந்த வீட்டருகே வந்தான். அப்போது அந்தச் சிறுபெண் வெளியே போய்ப் பார்த்துவிட்டுத் தன் பாட்டியிடம் பாத்திரம் வாங்கிக்

கொடுக்கும்படி சொன்னாள். கிழவி, 'என் கண்ணே! முதலில் வந்தவன் தாலத்தைக் கீழே எறிந்து விட்டுத் திரும்பிக் கூடப் பாராமற் போய்விட்டான். கொடுப்பதற்கு வேறே என்ன நம்மிடம் இருக்கிறது?' என்று சொல்லி வருத்தப் பட்டாள்.

'பாட்டி! அவன் கடுமையாகப் பேசுகிறவன். இவன் அப்படிப்பட்டவன் அல்லனென்று தோன்று கிறது. இவனிடத்தில் கடுமை இல்லை. மலர்ந்த முகமுடையவன். அநேகமாய் இவன் தாலத்தை எடுத்துக் கொள்வான்.'

'அப்படியானால் கூப்பிடு' என்றாள் கிழவி. அவன் வீட்டுக்கு வந்ததும், கிழவி தாலத்தை அவன் கையில் கொடுத்தாள். அவன் அது நல்ல தங்க மென்று தெரிந்து, 'அம்மா இந்தத் தாலம் நூறா யிரம் பொன் பெறும். இதை வாங்குவதற்கு என் கையில் பொருளில்லை' என்றான்.

'ஐயா! உமக்கு முன்னால் இங்கே வந்த வியா பாரி அரைக்காசுகூட இது பெருதென்று சொல்லித் தரையில் எறிந்துவிட்டு விரைவாய்ப் போய்விட்டார். நல்ல குணமுள்ள நீர், உமது கையினால் தொட்ட புண்ணியத்தினாலேதான் இந்தத் தாலம் தங்கமாக மாறி இருக்க வேண்டும். எங்களுக்கு ஏதாவது கொடுத்துவிட்டு இதை நீரே எடுத்துக்கொண்டு போம்' என்றாள் கிழவி.

குணசீலனிடத்தில் ஐந்நூறு பொற்காசும், ஐந்நூறு பொற்காசு பெறக்கூடிய சாமான்களும் இருந்தன. அவ்வளவையும் அவர்கள் கையில் கொடுத்து 'என் கையிருப்பெல்லாம் இந்தத் தராசும், பையும், எட்டுப் பொற்காசுந்தான். இவைகள்

எனக்கு இருக்கட்டும். என்னிடமிருந்த மற்றெல்லாப் பொருள்களும் உங்களுடையனவே' என்று சொன்னுன். பின்னர் தாலத்தை எடுத்துக்கொண்டு அங்கிருந்து விடைபெற்று மிக்க வேகமாகத் தன் ஊரை நோக்கி நடந்தான். வழியில் குறுக்காக ஓடிக் கொண்டிருந்தஆற்றின் அருகில் வந்து சேர்ந்ததும், அங்குள்ள படகுக்காரனிடம் எட்டுப் பொற் காசுகளையும் கொடுத்துப் படகில் ஏறிக்கொண்டு விரைவாக நதியைக் கடந்து செல்லலானுன்.

இதற்கு மத்தியில் பேராசைக்காரனுன வியாபாரி பாட்டியும் பேத்தியும் இருக்கும் வீட்டிற்கு மறுபடியும் வந்து, 'ஏதாவது கொடுத்துத் தொலைக்கிறேன்; அந்தத் தாலத்தைக் கொண்டுவா' என்று கூறினுன். கிழவிக்குக் கோபம் வந்து விட்டது. 'அது தங்கத் தாலம் நூறுயிரம் பொன் பெறக்கூடியது. நீ அரைக் காசுகூடப் பெருதென்று சொல்லி விட்டாயே! யோக்கியனுன வேருெரு வியாபாரி வந்து ஆயிரம் பொன் கொடுத்து அதைப் பெற்றுக்கொண்டு போய்விட்டான்' என்று எரிந்து கூறினுள்.

பேராசைக்காரன், 'பறி போய்விட்டதே! நூறுயிரம் பொன் பெறுமான தாலம் பறிபோய்விட்டதே! என்று கதறினுன். அது முதல் அவன் பைத்தியம் பிடித்துத் திரியலானுன்.

### பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—

1. ஒரு நாள் இரண்டு வியாபாரிகளும் அனந்தபுரம் போய் என்ன செய்தார்கள்?

2. பேராசை பிடித்த வியாபாரியின் சத்தத்தைக் கேட்டதும் சிறு பெண் பாட்டியிடம் என்ன சொன்னுள்?

3. பாட்டி பேராசைக்காரனுன வியாபாரியினிடம் தாலத்தைக் கொடுத்ததும் அவன் என்ன செய்தான்?

4. பாட்டிக்கும் பெண்ணுக்கும் தங்கள் வீட்டிலிருந்த தாலம் தங்கத் தாலம் என்று எப்பொழுது தெரியவந்தது ?

5. பாட்டியையும் பெண்ணையும் ஏமாற்றக் கருதியவன் யார் ?

2. 1. கையிருப்பு, அதுமுதல், தெருத் தெருவாக—வாக்கியங்களில் அமைத்து எழுது.

2. வீட்டினருகே, அப்படிப்பட்டவனல்லனென்று — தனித்தனிப் பதங்களாகப் பிரித்து எழுது.

3. புண்ணியம், யோக்கியன், லாபம்—எதிர்ப்பதம் எழுது.

4. பரி, பறி
கீரி, கீறி
எரிந்து, எறிந்து
அர்த்தம் எவ்விதம் மாறுகிறது ?

3. தடித்த எழுத்துக்களிலுள்ள வார்த்தைகளுக்குப் பதில் வேறு வார்த்தைகளை அமைத்து எழுது :—

1. அவனைக் கொண்டாடினார்கள்.

2. பேராசைக்காரனான வியாபாரி தாலத்தை அடித்துக்கொண்டு போக நினைத்தான்.

3. குணசீலன் குளிர்ந்த முகமுடையவன்.

## இலக்கணம்

1. 1. பாட்டி தாலத்தை விற்றாள்.

2. பாட்டி தாலத்தை விற்கிறாள்.

3. பாட்டி தாலத்தை விற்பாள்.

மேற்கண்ட வாக்கியங்களில் தடித்த எழுத்துக்களிலுள்ள வார்த்தைகளைக் கவனி.

விற்றாள் — நடந்த செய்கையைத் தெரிவிக்கிறது—இறந்த காலம்.

விற்கிறாள் — நடக்கிற செய்கையைத் தெரிவிக்கிறது — நிகழ் காலம்.

விற்பாள்—நடக்கும் செய்கையைத் தெரிவிக்கிறது—எதிர்காலம்.

2. 1. வினைமுற்று திணை, பால், எண், இடம், காலம் இவைகளைத் தெரிவிக்கும்.

விற்றாள்—வினைமுற்று, உயர்திணை, பெண்பால், ஒருமை எண், படர்க்கை இடம், இறந்தகாலம்.

2. குணசீலன் தாலத்தை வாங்கினான்—இந்த வாக்கியத்திலுள்ள வினைமுற்றுக்கு இலக்கணம் கூறு.

3. கொடு-இதிலிருந்து உயர்திணை, ஆண்பால், ஒருமை, படர்க்கை, நிகழ்கால வினைமுற்று எழுது.

# 15. பழியோரிடம் பாவமோரிடம்

| | | |
|---|---|---|
| பொதிமாடு | அக்குள் | சாட்சி |
| கூச்சல் | நாணம் | ஞாபகம் |
| பேரிரைச்சல் | தமுக்கு | பிரமாணம் |
| தருணம் | அகலம் | துணிகரம் |
| தகராறு | தஸ்தாவேசு | குற்றஞ்சாட்டு |
| ஏளனம் | சப்-இன்ஸ்பெக்டர் | பண்ணைக்காரன் |

குளத்தூர்ப் பட்டினத்துக்குச் செல்லும் ரஸ்தாக்களிலெல்லாம் சந்தைக்குப் போகும் ம்க்கள் நிறைந்திருந்தார்கள். சிலர் பொதி மாடுகளை ஓட்டிக் கொண்டும், வேறு சிலர் கறிகாய்களும் பழங்களும் தானியங்களும் நிரம்பிய கூடைகளைச் சுமந்து கொண்டும் சென்றனர். குளத்தூர்ப் பட்டினத்துச் சந்தையில் ஆண்களும் பெண்களும் நிறைந்து, மனிதர் கூச்சலும் மாடுகள் கத்தும் ஒலியும் தாங்க முடியாத பேரிரைச்சலாக இருந்தன. அரசலூரிலிருந்து வந்த இருளப்பன் ஓர் இடத்தில் சாமான்களை பரப்பிக்கொண்டு விலைக்கு வாங்கும் மக்களை எதிர்நோக்கி யிருந்தான் ; திடீர் என்று ஒரு சிறிய மணிக்கயிறு கீழே கிடக்கக் கண்டான்; ஏதாவது கட்ட அது உதவாதா என்று நினைத்து அதைக் கையில் எடுத்தான்; அவன் எடுத்துச் சுருட்டித் தன்மடிச்சீலைக்குள் வைக்கப் போகும் தருணத்தில், அண்டை வீட்டுக்காரனை கிருஷ்ணன் • தன்னை உற்று நோக்குவதைக் கண்டான்.

சிலகாலத்திற்கு முன் இவ்விருவருக்கும் ஏதோ வர்த்தக விஷயமாய்த் தகராறு இருந்தது; இன்று

வரையில் எதிரியாகவே இருந்தார்கள் இருவரும். ஆகையால், தரையிலிருந்த அற்ப மணிக் கயிற்றை எடுத்ததற்காக அவன் தன்னை ஏளனம் செய்வானோ என்று இருளப்பன் அக் கயிற்றை முதலில் அக்குளில் மறைக்க முயன்றான். பின்பு தன் மடிச் சீலைக்குள் மறைத்து விட்டுச் சிறிது நாணந் தோன்றத் தன் வேலையைப் பார்க்கத் தொடங்கினான்.

சந்தையில் வியாபாரம் மும்முரமாயிருந்தது. ஏற்கெனவே அநேக மக்கள் சாமான் வாங்கி விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார்கள். வெயிலோ தாங்க முடியவில்லை. மக்கள் தவித்துப் போனார்கள். திடீர் என்று சந்தைப் பக்கமாய்ப் பறை அடிக்கும் சத்தம் கேட்டது. பறையடிப்பவன் பின்வருமாறு தமுக்கு அடித்தான்; 'இதனால் சகலமான மக்களுக்கும் தெரிவிப்பது யாதெனில், இன்று காலை புளியம் ரஸ்தாவில் நூறு ரூபாய் நோட்டும் சில முக்கியமான தஸ்தாவேசுகளும் அடங்கிய தோற்பை ஒன்று தவறி விட்டது. எடுத்தவர்கள் தயவுசெய்து போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரிடமாவது, மணலூர் மேடை சுப்பிரமணிய முதலியாரிடமாவது கொடுத்து விடவேண்டும். கொடுப்பவருக்குப் பத்து ரூபாய் வெகுமதி அளிக்கப்படும்.'

சிறிது நேரத்திற்குப் பிறகு ஒரு போலீஸ் சேவகன் இருளப்பன் இருக்கும் இடம் வந்து, 'ஏ இருளப்பா! நீ என் கூடவரவேண்டும். சப்-இன்ஸ்பெக்டர் ஐஜமான் உன்னைப்பார்க்க விரும்புகிறார்கள்' என்றான். இருளப்பன் ஆச்சரியமும் கவலையும் அடைந்து எழுந்து போலீஸ் சேவகனைத் தொடர்ந்து வெளியே சென்றான்.

பருத்த தேகத்தோடும் காரியக் குறியோடும் அதிகார ஆடம்பரத்தோடும் தம் சாய்வான நாற்காலியில் சாய்ந்துகொண்டு சப்-இன்ஸ்பெக்டர் இருளப்பனை எதிர் நோக்கி யிருந்தார்; இருளப்பனைக் கண்டதும், உடனே காரியப் பேச்சைத் தொடங்கினர்.

'இருளப்பா! இன்று காலை மணலூர் மேடை சுப்பிரமணிய முதலியாருடைய பணப்பை உனக்கு அகப்பட்டதைப் பார்த்ததற்குச் சாட்சி இருக்கிறது' என்றார்.

இருளப்பன் திகைத்துப் போய் சப்-இன்ஸ்பெக்டரைப் பார்த்து 'நான் எடுத்ததாகவா சொல்லுகிறார்கள்?' என்று கேட்டான்.

'ஆம்'

'ஆ! அதை நான் பார்த்ததுகூட இல்லை!'

'நல்லது! நீ எடுக்கும்பொழுது பார்த்த சாட்சி இருக்கிறது.'

'ஆ!......, நானு.....என்னையா?......பார்த்தது யார்?'

'கிருஷ்ணன்.'

இருளப்பனுக்கு இப்பொழுதுதான் ஞாபகம் வந்தது; விஷயமெல்லாம் விளங்கிற்று. கோபத்தால் கண்கள் சிவந்தன. 'ஆ! அவனு பார்த்தான்? ஆம், ஆம்! இந்த மணிக்கயிற்றை எடுக்கப் பார்த்தான்! பாருங்கள் எஜமான்களே! இதோ இருக்கிறது!' என்று பரபரப்போடு தன் மடிச்சீலைக்குள் கையை விட்டுத் தடவி ஒரு துண்டுக் கயிற்றை வெளியே எடுத்தான்.

சப்-இன்ஸ்பெக்டரோ அவநம்பிக்கை தோன்றத் தலையசைத்து, 'இருளப்பா! கிருஷ்ணன் போன்ற தக்க மனிதன் இந்த மணிக்கயிற்றைப் பணப்பை என்று தப்பாக நினைப்பானா? நான் நம்பவே மாட்டேன்' என்றார்.

இருளப்பன் ஆவேசத்தோடு கையை உயர்த்தி, 'எஜமான்களே! கடவுளாணை! நான் அதைப் பார்த்ததே இல்லை' என்று பிரமாணம் செய்தான்.

சப்-இன்ஸ்பெக்டர், 'அடே! கள்ளப் பிரமாணம் செய்யாதே!' என்று அதட்டினார்.

'ஐயா! நான் பார்த்ததும் இல்லை; எடுக்கவும் இல்லை; அநியாயம் அநியாயம்!! இப்படி ஒருவனுக்கு மற்றொருவன் கேடு சூழ இடம் கொடுக்கலாமா?' என்று இருளப்பன் கூச்சலிட்டான்.

ஆயினும் இருளப்பன்மீது நம்பிக்கை பிறக்க வில்லை. அவன் வேண்டிக் கொண்டதின் மேல், சப்-இன்ஸ்பெக்டர் கிருஷ்ணனை நேரில்விட்டு மூதலித்தார். பகைவனோ அமைதியாயும் துணிகரமாயும் பலமுறை குற்றம் சாட்டினான். இரண்டு நாழிகையாக இருவரும் நின்று கொண்டிருந்தனர். வார்த்தைகள் தடித்தன. முடிவில் இருளப்பன் தன்னைச் சோதிக்க வேண்டுமென்று பிடிவாதம் செய்தான். சோதனையில் பணப்பையாவது அதிலுள்ள ஆதரவுகளாவது ஒரு சுவடும் துலங்கவில்லை. சப்-இன்ஸ்பெக்டர் கலக்கமடைந்து, "பின்னால் ஏதாவது துப்புத் தெரியாதா! பொறுத்துப் பார்ப்போம்" என்று சொல்லி இருளப்பனை அனுப்பிவிட்டார்.

மறுநாள் பிற்பகலில், நாகலாபுரம் சோமு முதலியாரது பண்ணைக்காரனை பொன்னன் பணப்

பையையும் அதிலடங்கிய ரூபாய், தஸ்தாவேசுகளை யும் கொண்டுபோய் மணலூர் முதலியாரிடம் கொடுத்துவிட்டான்; தானே வழியில் கண்டெடுத்த தாகவும் தனக்குப் படிக்கத் தெரியாததால் பிறரிடம் காட்டி விஷயம் தெரிந்த பின்பு வந்ததாகவும் சொன்னான்.

இச்செய்தி இருளப்பனுக்கு எட்டியதும் அவன் மனம் நிம்மதி யடைந்தது. ஆனால் ஊரார் அவனை நம்பவில்லை.

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—

1. இருளப்பன் யாரைக் கண்டு நாணம் அடைந்தான்? ஏன்?

2. திடீரென்று சந்தையில் ஏற்பட்ட குழப்பம் யாது?

3. சப்-இன்ஸ்பெக்டர் இருளப்பனை அழைத்து என்ன விசாரித்தார்?

4. நீ பார்த்துள்ள சந்தை ஒன்றின் விவரத்தை ஐந்து வாக்கியங்களில் எழுது.

2. 1. கரி, கறி — அர்த்த வித்தியாசம் என்ன?

2. தருணம் — இதே அர்த்தமுள்ள வேறு வார்த்தைகள் எழுது.

3. வார்த்தைகள் தடித்தன; ஒரு சுவடும் துலங்கவில்லை — இவற்றின் அர்த்தத்தை விவரி.

4. முதலித்தார் — இவ்வார்த்தையை அமைத்துத் தனி வாக்கியம் எழுது. முதலி — என்ற பகுதியடியாகப் பிறந்த மற்றப் பால் வினைமுற்றுகள் எழுது.

## இலக்கணம்

1. சப்-இன்ஸ்பெக்டர் இருளப்பனை அழைத்தார்.

'அழைத்தார்'—சப்-இன்ஸ்பெக்டர் தாமே இருளப்பனை அழைத்ததாகத் தெரிவிக்கிறது. இது கருத்தா தானே செய்யும் வினை—தன்வினை.

சப்-இன்ஸ்பெக்டர் இருளப்பனை அழைப்பித்தார்.

அழைப்பித்தார் — சப்-இன்ஸ்பெக்டர் பிறரைக்கொண்டு இருளப்பனை அழைத்ததாகத் தெரிகிறது. இது கருத்தா பிறரைக்கொண்டு செய்யும் வினை - பிறவினை.

# 16. அந்தகக் கவி வீரராகவ முதலியார்

| | | |
|---|---|---|
| பிறவிக் குருடன் | மங்கை | திரை |
| அகமகிழ்ந்து | உள்ளக் கருத்து | அவை |
| அந்தகர் | ஆசனம் | வழங்கினுன் |

தொண்டை நாட்டில் பூதூர் என்ற ஊரில் வடுகநாத முதலியார் என்ருெருவர் இருந்தார். அவருக்குப் பிறந்த புதல்வன் பிறவிக் குருடனு யிருந்தான். அதனுல் அவனது பெற்ருேர்கள் வருந்தினர்.

வீரராகவன் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து ஐந்தாம் வயதை எய்தினன். ஒரு நாள் அவனுடைய பெற்ருேர்கள் பிறவிக் குருடனை தம் மைந்தனுக்குக் கல்வி கற்பிக்க இயலாது போயிற்றே என்று வருத்தப் பட்டுக் கொண்டிருந்தனர். அச்சமயம் வீரராகவன் அங்கு வந்தான். தாயார் அவனே எடுத்து அணைத்து முத்தமிட்டு, "வீரராகவா! உன் வயதுப் பிள்ளேகள் எல்லாம் நாளேத்தினம் பள்ளிக்குச் சென்று கல்வி கற்கப்போகின்றனர். நீ எவ்வாறு கற்பது?" என்று கண்ணீர் விடுத்தாள். வீரராகவன், "அம்மா! என்னேயும் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புங்கள். உபாத்தியாயர் என் முதுகின் மீது எழுத்துக்களே எழுதினுல் நான் அவைகளேத் தெரிந்து கொள்வேன்" என்ருன். இதைச் செவியுற்ற அவனுடைய பெற்ருேர்கள், "அப்பா! நீ எழுத்துக் களே மட்டும் அறிந்து கொண்டால் போதுமா? மற்றப் பாடங்களே எல்லாம் கற்பது எப்படி?"

என்றனர். அதற்கு வீரராகவன் தன் பெற்றோர்களை நோக்கி, "மற்றப் பிள்ளைகள் பாடம் படிப்பதைக் கேட்டு நான் தெரிந்து கொள்வேன்" என்று சொன்னான். பெற்றோர்கள் அவனுடைய சொற்களைக் கேட்டு அகமகிழ்ந்து, அவனைப் பள்ளிக்கு அனுப்பினர். வீரராகவன் தமிழ் எழுத்துக்களை ஒருவன் தன் முதுகில் எழுத அவைகளைக் கற்றுக் கொண்டான். பிறகு பல நூல்களையும் ஒருவன் படிக்க, அவன் அவைகளைக் கேட்டுக் கல்வியில் தேர்ச்சி அடைந்தான்.

சிறிது காலம் சென்றபின் வடுகநாத முதலியார் பொன்விளைந்தகளத்தூரில் வசிக்க ஆரம்பித்தனர். சில ஆண்டுகளுக்குள் வீரராகவன் ஏடு வாசிப்பான் ஒருவனுடன் காஞ்சீபுரம் போய் ஆண்டிருந்த பல புலவர்களிடம் பல நூல்களைக் கற்றுத் தேர்ந்தான். பாட்டுக்களை அமைத்துப் பாடும் சக்தி பெற்றான். புலவர்களும் அவனுடைய கல்வி அறிவையும், பாக்கள் இசைக்கும் வன்மையையும் கண்டு மகிழ்ந்து, அவனைக் 'கவி வீரராகவ முதலியார்' என்று அழைக்கத் தலைப்பட்டனர். அவர் அந்தகர் ஆகவும், கவி ஆகவும் இருந்தமையால் அவரைச் சிலர் 'அந்தகக் கவி வீரராகவ முதலியார்' என்று கூறி வந்தனர். கவி வீரராகவர் வீணைப் பயிற்சியும் செய்து இனிமையாக வீணை வாசிக்கக் கற்றுக் கொண்டார்.

அவருடைய பெற்றோர்கள் அவருக்கு ஓர் அழகிய மங்கையை மணம் புரிவித்தனர். சிறிது காலத்துக்குப் பின்னர் பெற்றோர்கள் மரணமடைந்தனர். கவிஞர் தம் மனைவியோடு இல்லறம் நடத்தி

வருங்கால், ஒருநாள் அவருடைய இல்லாள் ஏதோ அவரைப்பற்றிச் சிறிது இகழ்ந்து உரைத்தனள். உடனே வீரராகவர் தம் மாணுக்கருள் ஒருவனோடு வீட்டைவிட்டு வெளியேறித் தேச யாத்திரை செய்யத் தொடங்கினர்.

புலவர் சோழ நாட்டிலே சஞ்சாரம் செய்துவிட்டு ஈழ நாட்டை அடைந்தார். அந்த நாட்டின் வட பாகத்தைப் பர ராஜ சிங்கம் என்ற அரசர் ஆண்டு வந்தார். பாவலர் அரசரைக் காணும் பொருட்டு அங்குச் சென்று பல நாட்கள் காத்திருந்தார். ஒரு நாள் அரசர் தம் சபையிலுள்ள புலவர்களை நோக்கி, 'மனத்தில் நினைத்திருக்கும் ஒரு விஷயத்தை உங்களில் எவரேனும் அறிந்து சொல்லக்கூடுமா?' என்று வினவினர். அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கி விழித்தனர். கடைசியில் அவர்கள், 'அரசே! தங்களைக் காணும் பொருட்டுக் காத்திருக்கும் கவி வீரராகவர் ஒருகால் தங்கள் உள்ளக் கருத்தை அறிந்து சொல்லக் கூடும்' என்றனர். உடனே அரசர் கவி வீரராகவரைத் தம் சபைக்கு அழைத்து வரும்படி ஆட்களை அனுப்பினர்.

சிலர் அரசர் அந்தகரைக் காணுதல் முறையாகாது என்று கூறினர். ஆகையால் அரசருக்கும் கவிஞருக்குமாக இடப்பட்ட ஆசனங்களுக்கு இடையே ஒரு திரையைக் கட்டினர். புலவர் தம் மாணவனுடன் அவையை அடைந்தனர். மாணவன் அவரை அழைத்துச் சென்று அவருக்காக இடப்பட்ட ஆசனத்தில் அவரை அமர்த்தி, திரை கட்டப்பட்டிருக்கும் செய்தியைக் குறிப்பாகத் தெரிவித்தான். அதனைக் கவிவாணர் அறிந்து கொண்டு,

'அண்ணுமலை' என இருமுறை கூறினர். உடனே திரை தீப்பற்றிக் கொண்டது. ஏவலாளர் ஓடிவந்து அதை அறுத்து எறிந்து தீயை அணைத்தனர். ஆண்டிருந்தோர் அச்சமும் வியப்பும் கொண்டனர். பின்னர் அங்கிருந்தோரின் வேண்டுகோளின்படி கவி வீரராகவர் அரசரது உள்ளக் கருத்தை உணர்ந்து ஓர் செய்யுளாக வெளியிட்டார். அரசர் அதைக் கண்டு சந்தோஷங் கொண்டு புலவருக்குப் பல பரிசுகளையும் ஒரு யானைக் கன்றையும் கொடுத்து, அக் கன்றை வளர்க்கும் பொருட்டு ஒரு வள நாட்டையும் வழங்கினர்.

புலவர் சில ஆண்டுகள் ஈழ நாட்டிலே தங்கியிருந்து பின்னர் பொன்விளைந்தகளத்தூருக்குத் திரும்பினர்; தம் மனைவியோடு சேர்ந்து மறுபடியும் இல்லறம் நடத்திப் பல்லாண்டு இனிது வாழ்ந்து வந்தனர்.

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—

1. வீரராகவர் ஐந்தாம் வயதை அடைந்தபொழுது அவருடைய பெற்றோர்கள் அவரைக் குறித்து வருத்தப்பட்டதன் காரணம் யாது?

2. வீரராகவர் எவ்விதம் கல்வி கற்றுத் தேர்ச்சி அடைந்தார்?

3. வீரராகவருக்கு 'அந்தகக் கவி வீரராகவ முதலியார்' என்ற பெயர் ஏன் ஏற்பட்டது?

4. வீரராகவர் தேச சஞ்சாரம் செய்யச் சென்றது ஏன்?

5. பர ராஜசிங்கர் வீரராகவரைத் தம் சபைக்கு அழைப்பித்த காரணம் என்ன?

6. வீரராகவர் சபையில் தமக்கு இடப்பட்ட ஆசனத்தில் உட்காரும்பொழுது 'அண்ணுமலை' என்று ஏன் சொன்னர்?

1. திரை, சமயம்—இரு பொருள் கூறு.

2. திரை, திறை } அர்த்த வித்தியாசம் என்ன ?
பிரதேசம், பிறதேசம்

3. புதல்வன் — பெண்பால் என்ன ?

4. வீரராகவருக்கு ஒரு மங்கையை மணம் புரிவித்தனர் — வீரராகவர், என்று வாக்கியத்தை ஆரம்பித்துப் பொருள் மாறுபடாமல் எழுது.

## இலக்கணம்

1. நீ வாழ்க! நீ வருக. தீயோர் கெடுக, கடவுளே, எம்மைக் காத்து அருள்க! — வாழ்க, வருக, கெடுக, அருள்க — இவை வியங்கோள் வினைமுற்றுக்கள் :

இவை முறையே வாழ்த்தல், ஏவுதல், வைதல், வேண்டிக் கொள்ளுதல் என்ற பொருள்களில் வந்திருக்கின்றன.

2. செங்கோல் ஓங்குக ! — இதில் வியங்கோள் வினைமுற்று எது ? என்ன பொருளில் வந்திருக்கிறது ?

## 17. கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே

| | | |
|---|---|---|
| அனுபவங்கள் | சாஸனம் | அயர்ச்சி |
| உடன்பட்டார் | ஜீவனுதாரமாக | வற்புறுத்தினுர் |
| தெம்மாங்கு | பரம்பரையினர் | பணிவோடு |
| பாராட்டிக்கொண்டு | காலசக்கரம் | சந்தர்ப்பம் |
| நா தழுதழுத்தது | உதாரகுணம் | துணியவில்லை |

அழகிய சிற்றம்பலக் கவிராயர் நல்ல செல்வர். அவரோடு நான் பழகிய காலத்தில் அவர் தம் முன்னேர்களைப் பற்றிய பல வரலாறுகளை எனக்குச் சொல்லியிருக்கிருர். தம்முடைய சொந்த அனுபவங்கள் பலவற்றையும் சொன்னதுண்டு. அவற்றுள் ஒன்று பின்வருமாறு:—

அவர் ஒருநாள் எங்கோ நெடுந்தூரமுள்ள ஓரூருக்கு ஒரு கலியாணத்திற்குப் போயிருந்தார். மீண்டும் ஊருக்குத் திரும்ப எண்ணி ஒரு வண்டிக்காரனிடம் வண்டி பேசி அமர்த்திக் கொண்டார். இரவு முழுவதும் பிரயாணம் செய்ய வேண்டியிருந்தது. வண்டிக்காரன் மூன்று ரூபாய் வாடகை கேட்டான். அன்றியும், "ஊருக்குப் போகையிற் பொழுது விடிந்து விடுமாகையால், நாளைக் காலையில் எனக்குச் சாப்பாடு போட்டு அனுப்ப வேண்டும்" என்றும் அவன் கேட்டுக்கொண்டான். அவ்வாறே செய்விப்பதாக அவர் உடன்பட்டார்.

இராத்திரியில் வண்டி புறப்பட்டது. கவிராயர் அதிற் படுத்துக்கொண்டார். நல்ல நிலா வெளிச்சம் இருந்தது. வண்டிக்காரன் ஆனந்தமாகத் தெம்மாங்கு முதலியவற்றைப் பாடிக்கொண்டே வண்டி

ஓட்டினுன். காளைகள் வேகமாகச் சென்றன. பாட்டுக்களைக் கவிராயர் கேட்டுப் பாராட்டிக்கொண்டே வந்தார். பின்பு வண்டிக்காரன் மெல்ல அவருடைய குடும்ப நிலையைப்பற்றி விசாரித்தான். கவிராயர் தம்முடைய குடும்ப வரலாற்றைச் சொல்ல ஆரம்பித்தார்.

'நான் இருப்பது மிதிலைப்பட்டிதான். எங்கள் முன்னேர்களெல்லாம் பெரிய வித்துவான்கள். அவர்களில் ஒருவராகிய அழகிய சிற்றம்பலக் கவிராயருக்கு இந்த மிதிலைப்பட்டி என்னும் கிராமமானது அக்காலத்தில் இந்தப் பக்கத்தில் ஜமீன்தாராக இருந்த வெங்களப்ப நாயக்கரென்பவரால் கொடுக்கப்பட்டது. அது சம்பந்தமான சாஸனம் எங்கள் வீட்டில் இருக்கிறது. எங்களுக்கு இப்பொழுது ஜீவனுதாரமாக இருப்பதும், எங்கள் குடும்பத்தில் லட்சுமி கடாட்சம் குறையாமல் இருக்கும்படி செய்வதும் அந்த வெங்களப்ப நாயக்கர் கொடுத்த கிராமமே. அவருடைய அன்னத்தைத் தான் இப்பொழுதும் நாங்கள் சாப்பிட்டு வருகிறேம். என்ன, கேட்கிருயா ?'

'ஆமாம், சொல்லுங்கள்' என்ருன் அவன்.

'வெங்களப்ப நாயக்கர் செய்த பல தர்மங்களும் அவருடைய புகழும் இன்னும் நிலைத்திருக்கின்றன. அவரால் ஆதரிக்கப்பெற்ற பரம்பரை யினராகிய நாங்களும் பிறரும் நல்ல நிலையில் இருக்கிறேம். அவருடைய பரம்பரையோ, இருந்த இடம் தெரியாமற் போய்விட்டது. எங்கள் முன்னேர்களைப் போன்ற எவ்வளவோ பேர்களுக்கு அவர் அளவற்ற செல்வத்தைக் கொடுத்திருக்கிருர். அவர் பரம்பரை

யினர் கொடுத்துக் கொடுத்துப் புகழைச் சம்பாதித்தனர். ஆனாலும், பிற்காலத்தில் அக்குடும்பத்திற் பல பிரிவுகள் உண்டாயின; செல்வமும் குறைந்துவிட்டது. வெங்களப்ப நாயக்கருடைய பரம்பரையினர் யாரேனும் இப்போது எங்கேயாவது இருக்கிறார்களோ, இல்லையோ தெரியவில்லை. அவர்களுடைய நிலை எப்படி இருக்கின்றதோ! கால சக்கரமானது இப்படி மாறிக் கொண்டே வருகிறது' என்று சொல்லிக் கொண்டே வந்த அவர் அயர்ச்சி மிகுதியால் தூங்கிவிட்டார்.

விடியற்காலையில் வண்டி மிதிலைப்பட்டி வந்து சேர்ந்தது. வீட்டை அடைந்த கவிராயர் காலைக் கடன்களை முடித்துக் கொண்டார். தம்முடைய வேலைக்காரனை அழைத்து வண்டிக்காரனுக்குச் சாப்பாடு போடும்படி சொன்னார். அப்பொழுது வண்டிக்காரன், 'எனக்குச் சாப்பாடு வேண்டாம்; நான் போய் வருகிறேன்; உத்தரவு கொடுங்கள்' என்று சொன்னான். இவர் 'நீ ஊர் போய்ச் சேர்வதற்கு அதிக நாழிகை யாகுமே! சாப்பிட்டு விட்டுப் போ' என்று வற்புறுத்தினார்.

வண்டிக்காரன், 'இல்லை, இப்பொழுது எனக்குப் பசி இல்லை. போகும் வழியில் தெரிந்தவர்கள் வீட்டில் சாப்பிடுவேன்.'

கவிராயர், 'சரி, இதோ வாடகை ரூபாய் வாங்கிக் கொண்டு போ' என்று சொல்லி ரூபாயைக் கொடுக்க ஆரம்பித்தார்.

'ரூபாய் தங்களிடமே இருக்கட்டும். நான் போய் வருகிறேன்' என்று பணிவோடு அவன் சொன்னான்.

கவிராயர் திகைத்து விட்டார்; அவன் அதிக வாடகை விரும்புகிறானோ என்று எண்ணினார்.

'நான் பேசினது மூன்று ரூபாய்தானே'? என்று அவர் கேட்டார்.

'இது கிடக்கட்டும், ஐயா! நான் போய் வருகிறேன். தாங்கள் வேறு ஒன்றும் நினைத்துக் கொள்ளக் கூடாது' என்று கம்பீரமாக வண்டிக்காரன் சொன்னான்.

'ஏனப்பா? இவ்வாறு நீ சொல்வதற்குக் காரணம் ஒன்றும் விளங்க வில்லையே?' என்று இரக்கத்தோடு அவர் கேட்டார்.

'ஐயா நேற்று ராத்திரி உங்கள் முன்னோர்கள் கதையைச் சொல்லி வந்தீர்களே! அவர்களை ஆதரித்த் வெங்களப்ப நாயக்கர் பரம்பரையிற் பிறந்தவன் அடியேன். ஏதோ தலைவிதி இப்படி என்னை வண்டியோட்டச் செய்தது. என்ன செய்தாலும் கொடுத்ததை மட்டும் வாங்கக்கூடாது என்று பெரியவர்கள் சொல்லுவார்கள். எங்கள் முன்னோர்களாற் கொடுக்கப்பட்டவைகளில் ஒரு துரும்பையாவது உங்களிடமிருந்து வாங்கிக்கொள்ள என் மனம் துணியவில்லை; மன்னிக்க வேண்டுகிறேன். இவ்வளவாவது தங்களுக்கு நான் உபயோகப்படும்படி கடவுள் கூட்டிவைத்தது என் பாக்கியந்தான்' என்று சொல்லிவிட்டுக் கவிராயர் மேலே பேசத் தொடங்குவதற்குள் வண்டியை அவன் ஓட்டிக் கொண்டு போய் விட்டான்.

கவிராயருடைய மனம் அவனுடைய கம்பீரத்தையும், வெங்களப்ப நாயக்கர் பரம்பரையின் பெருமையையும் நினைத்து இரங்கியது. அவர் கண்ணில் நீர் ததும்பியது.

இந்த வரலாற்றைப் பிற்காலத்தில் எனக்குக் கூறும்பொழுதுகூட இந்தக் கடைசிச் சந்தர்ப்

பத்தைச் சொல்லுகையில் அவர் கண்களில் நீர்த் துளிகள் புறப்பட்டன. நா தழுதழுத்தது. உயர்ந்த பரம்பரையிற் பிறந்தவர்களுடைய கம்பீரமும் உதாரமும் எக்காலத்தும் அழியாதவை. 'கெட்டாலும் மேன் மக்கள் மேன் மக்களே' என்ற அருமையான வாக்கியத்திற்கு இந்த வரலாற்றைவிடச் சிறந்த உதாரணம் வேறு கிடைக்குமோ!

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—

1. அழகிய சிற்றம்பலக் கவிராயர் வாடகைக்கு வண்டி பேசின போது, வண்டிக்காரன் அவரிடம் கேட்டுக் கொண்டது என்ன ?

2. கவிராயர் வண்டிக்காரனிடம் யாரைப்பற்றிப் புகழ்ந்து பேசினுர் ; ஏன் ? யாரைப்பற்றி வருத்தப்பட்டார் ?

3. வண்டிக்காரன் சோறும் வாடகை ரூபாயும் பெற்றுக்கொள்ள ஏன் மறுத்தான் ?

2. 1. ஓரூருக்கு—பதங்களாகப் பிரித்து எழுது.

2. தர்மம், மேன்மக்கள்—எதிர்ப்பதம் என்ன ?

3. ஜீவனுதாரமாக, பணிவோடு, உடன்பட்டார்—வாக்கியங்களில் அமைத்து எழுது.

## இலக்கணம்

1. அவருடைய அன்னத்தைத் தான் இப்பொழுதும் நாங்கள் சாப்பிட்டு வருகிறோம்.

நெய்க்குடத்து எறும்பு போலச் சுற்றிச் சுற்றி வருவார்கள். இனி நீ அரசு புரிவாயாக.

'நீ கடைக்குப் போகவேண்டும்' எனச் சொன்னுர்.

தான், போல, இனி, என—இவை பெயர்ச் சொற்களையும், வினைச் சொற்களையும் சார்ந்து வருகின்றன. இவை இடைச்சொற்கள்.

2. நீயே தந்தாய்—'ஏகார' இடைச் சொல்.

ராமனே வந்தான்—'ஓகார' இடைச் சொல்.

'ஏகார', 'ஓகார' இடைச் சொற்கள் பெயர் வினைகளை அடுத்து அவற்றின் உறுப்பாக வரும்.

3. வேற்றுமை உருபுகளும் இடைச் சொற்களே.

# 18. இரவல் நகை

| | | |
|---|---|---|
| ஆடம்பரம் | வைபவங்கள் | உபசாரவார்த்தை |
| கிருபை | தம்பதிகள் | மிதியடி |
| ஸௌபாக்கியவதி | ஆசீர்வாதம் | சிந்தித்து |
| நிச்சயித்து | சிரமப்பட்டு | பிதிரார்ஜிதம் |
| முகூர்த்தம் | விளம்பரம் | லேவாதேவிக்காரர் |
| உறை | இரவல் | சிக்கனமாக |
| கிருகம் | ஆட்சேபனை | காலக்ஷேபம் |

மீனாட்சி கண்ணைக் கவரும் அழகுடையவள்; அவளிடம் சிறந்த குணங்களிருந்தும் பணமில்லை; உயர்ந்த நினைப்புக்களிருந்தன. அவள் ஆடம்பரத்தில் விருப்பமுள்ளவள்; மதுரையில் தன் வீட்டைப் பல படங்களால் அலங்கரித்துப் பேரும் புகழும் வாய்ந்த உறவினர்களால் நிறைப்பதுண்டு. அவளுக்கு நகைகளில்லை; எனினும் உயர்ந்த ஆபரணங்களைப் பூட்டிக்கொள்ள வேண்டுமென்னும் பேராசையிருந்தது. அவளுடைய கணவன் பெயர் கோபாலன். அவன் ஜில்லா கலெக்டர் ஆபீசில் வேலை பார்த்து வந்தான்.

ஒரு நாள் மாலை கோபாலன் கையில் ஒரு கடிதத்துடன் வீட்டுக்கு விரைந்து வந்தான். 'இதோ! அதிர்ஷ்டத்தைப் பார்!' என்று தன் மனைவியை நோக்கி ஆவலுடன் கூறி, தான் கொண்டுவந்த கடிதத்தை அவளிடம் கொடுத்தான். அவள் உறையைப் பிரித்துக் கடிதத்தைப் பின்வருமாறு படித்தாள்:—

ஸ்ரீ வெங்கடேசன் கிருபையை முன்னிட்டு, என் குழந்தை ஸௌபாக்கியவதி பங்கஜத்தைச்

சிரஞ்சீவி சீனிவாசனுக்கு விவாகஞ் செய்ய நிச்சயித்து, முகூர்த்தம் நிகழும் தை மாதம் பதினறும் தேதி பெண் கிருகத்தில் நடக்கிற படியால், அன்றை முகூர்த்தத்துக்கும், பாட்டுக் கச்சேரி முதலான சகல வைபவங்களுக்கும் தாம் குடும்ப சகிதம் வந்திருந்து, தம்பதிகளை ஆசீர்வதிக்கக் கேட்டுக்கொள்கிறேன்.

ராமச்சந்திர ராவ்,
கலெக்டர்.

அவள் கடிதத்தைப் படித்ததும், கோபாலன் தன் மனைவியை நோக்கி, 'முகூர்த்த தினத்தன்று நான் உன்னையும் அழைத்துச் செல்ல விரும்புகிறேன்' என்றான்.

அதற்கு அவள், 'நான் வரப்போகிறதில்லை. அம்மாதிரி விசேஷங்களுக்குச் செல்வதற்கு வேண்டிய சிறந்த ஆடைகளும், ஆபரணங்களும் எனக்கில்லையே; நீங்களே போய்வாருங்கள்' என்று வெறுத்துரைத்தாள். கோபாலன் இன்ஸ்பெக்டர் பரீட்சைக்குச் சட்டப் புத்தகம் வாங்கச் சிரமப்பட்டுச் சிறிது பொருள் சேர்த்திருந்தான். அதைக்கொண்டு மேகவர்ணச் சேலையொன்று வாங்கித் தன் மனைவிக்குக் கொடுத்தான்.

முகூர்த்த நாள் நெருங்கியது. மீனாட்சிக்கு வருத்தமோ தீர்ந்தபாடில்லை. நகைகள் இல்லாமல் பல சீமாட்டிகளுக்கு மத்தியில் தன் வறுமையை விளம்பரம் செய்துகொள்ள அவள் விரும்பவில்லை. கடைசியில் அவள் பண்ணை சேஷையர் மனைவி தனலட்சுமியைக் கேட்டு ஏதாவது நகை இரவல் வாங்கிக் கொள்ளத் தீர்மானித்தாள்.

மறுநாள் அவள் தன் தோழியைக் கண்டு தன் குறைகளைக் கூறிக்கொண்டாள். தனலட்சுமி தனது கைப்பெட்டியைத் திறந்து மீனாட்சி முன்னே வைத்து, 'மீனா உனக்கு வேண்டுவதை எடுத்துக் கொள்' என்றாள்.

பெட்டியில் தங்கக் காப்பு, கொலுசுகள், சங்கிலிகள், வைரத்தோடுகள், தளுக்குகள், ஒட்டியாணங்கள், கல் வைத்த அட்டிகைகள் ஆகியவை நிறைந்திருந்தன. அவற்றைக் கண்டு மீனாட்சி மயங்கிப் போய், ஒவ்வொன்றாகப் பூட்டிப் பார்த்து எதைத் தெரிந்தெடுப்பதென்று தெரியாமல் திகைத்தாள். அப்பொழுது பட்டுறை யொன்றிலிருந்து சூரிய காந்திபோல் ஒளிவிடும் வைர அட்டிகை யொன்று தென்பட்டது. அவளுடைய மனம் அதனிடத்துப் பாய்ந்து சென்றது. அதைத் தன் கழுத்தில் போடக் கையில் யெடுத்ததும் விரல்கள் நடுங்கின. கண்ணாடியில் பார்த்தாள்; பரவசமானாள். எங்கே மறுத்து விடுவாளோ என்று திகில் கொண்டு, 'தனம்! இதைக் கொடுக்க மாட்டாயா?' என்றாள்.

'அதற்கு என்ன ஆட்சேபனை?'

தனலட்சுமிக்கு உபசார வார்த்தைகள் கூறி மீனாட்சி தனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டாள்.

கலெக்டர் வீட்டுக் கலியாணத்திற்கு மீனா கோபாலனுடன் சென்றாள். அங்கு வந்திருந்த சீமாட்டிகளும் பிரபுக்களின் மனைவிமாரும் மீனாவிடம் பழக்கங் கொண்டார்கள். மறுநாட் காலையில் கோபாலனும் மீனாவும் ஒரு வண்டியை வாடகைக்குப் பேசி, அதில் ஏறிக்கொண்டு வீடு வந்து சேர்ந்

தார்கள். கோபாலன் பெரிதும் களைப்படைந்து, காலை ஒன்பது மணிக்கு ஆபீசுக்குப் போக வேண்டுமே யென்று சிந்தித்துக் கொண்டிருந்தான். மீனு தனது அழகை ஒரு முறை கண்ணுடிமுன் சென்று பார்த்தாள். திடீரென்று பெருங் கூச்சலிட்டாள். 'ஆ! ஆ! வைர அட்டிகை தவறி விட்டது!'

அவள் புருஷனை நோக்கிப் பயங்கொண்ட குரலில் 'நான்......நான்...நான்...தனலட்சுமியின் வைர அட்டிகையைத் தொலைத்து விட்டேன்' என்று கதறினுள். அவன், 'ஆ!' என்று திகைத்துப் போய் விட்டான். உடனே முன்தானையிலும் புடவையின் மடிப்பிலும் படியிலும் வீட்டுப் பக்கங்களிலும் எங்கும் தேடினுர்கள்; காணவில்லை. 'கலெக்டர் வீட்டிலிருந்து திரும்பும் பொழுது அஃது உன் கழுத்தில் கிடந்தது நிச்சயமா?' என்று கேட்டான் கோபாலன்.

'ஆ! தொட்டுக்கூடப் பார்த்தேன்.'

'ஆனுல் வண்டியில் கிடக்கலாம். தெருவில் விழுந்திருந்தால் ஓசை கேட்டிராதா? வண்டிக்காரன் பெயர் ஞாபகமிருக்கிறதா?'

'இல்லையே!'

பெரும் பயத்தோடு ஒருவரையொருவர் பார்த்தனர். உடனே கோபாலன் மிதியடியையும் கம்பையும் எடுத்துக் கொண்டு வெளியே ஓடினுன். 'வந்த வழியெல்லாம் நடந்து போய்ப் பார்க்கிறேன். ஒரு வேளை கீழே கிடந்தகப்படாதா?' என்றுன். காலை எட்டுமணி சுமாருக்குத் திரும்பினுன். அட்டிகையைப் பற்றிய துப்பு ஒன்றும் கிடைக்கவில்லை

யென்பதை வெளுத்துப் போய்த் தொங்கும் அவன் முகமே அறிவித்தது.

நாட்கள் வாரங்களாயின. கோபாலன் எப்படி யாவது அட்டிகைக்குப் பதில் வாங்கிக் கொடுத்து விட வேண்டுமென்று முடிவு செய்தான். அட்டிகை இருந்த கூட்டின் உட்புறத்திலிருந்த விலாசத்தைப் பார்த்து அந்தக் கடைக்குப் போனான். வியாபாரியோ கணக்குகளைப் புரட்டிப் பார்த்துவிட்டு, தான் உறை மட்டும் கொடுத்ததாகவும் அட்டிகை கொடுக்கவில்லை யென்றும் கூறினான்.

ஏறக்குறையப் பட்டணத்து நகை வியாபாரி களை யெல்லாம் பார்த்து விட்டார்கள். கடைசியாக ஒரு முடுக்கில் அரசாங்க மாளிகைக்குப் பக்கத்தில் சிறிய கடை யொன்றில் கெட்டுப்போன அட்டிகை இதுதானா என்னும்படியான ஒரு வைர அட்டிகை யைக் கண்டார்கள். அதன் விலை ரூபாய் இரண்டா யிரத்து நூறு. முடிவாக வியாபாரி நூறு ரூபாய் குறைத்துக் கொள்ளச் சம்மதித்தான். தங்களுக்காக மூன்று நாள் அட்டிகையை வைத்திருக்கும்படி அவர்கள் அவனை வேண்டிக் கொண்டார்கள்.

கோபாலனுக்கு ரூபாய் ஆயிரம் பிதிரார்ஜித மாய்க் கிடைத்திருந்தது. மற்றதைக் கடன் வாங்க இசைந்தான். நல்ல நாணயக்காரனானபடியால் நண்பர்களிடமிருந்து சிறு தொகைகள் கிடைத்தன. பெரும்பாலும் லேவாதேவிக்காரர்கள் வீடுகளுக்கு அலைந்து பெற்றுக் கொண்டான். பிறகு நகை வியாபாரியிடம் சென்று பணத்தைக் கொடுத்து அட்டிகையை வாங்கிக் கொண்டான்.

மீனாட்சி அட்டிகையைத் திருப்பிக் கொடுத்த பொழுது. 'ஏனம்மா முன்னமே கொடுத்திருக்கக்

கூடாது?' என்று கடுகடுத்தாள் தனலட்சுமி. ஆனால், மீனாட்சி எதிர்பார்த்தபடி கூட்டை மட்டும் திறந்து பார்க்கவில்லை. கோபாலனும் மீனாட்சியும் மிகவும் சிக்கனமாகக் காலட்சேபம் செய்து வந்து வைர அட்டிகைக்காகத் தாம் பட்ட கடனைத் தீர்த்தார்கள்.

சில வருடங்களுக்குப் பிறகு மீனாட்சி தான் தனலட்சுமியிடம் இரவல் வாங்கிய வைர அட்டிகை சீமைக் கமலத்தால் செய்யப்பட்டது என்றும் அதன் விலை இருபது ரூபாய்தான் என்றும் அறிந்து கொண்டாள்.

## பயிற்சி

1. கேள்விகளுக்குப் பதில் எழுது :—
   1. மீனாட்சி எவ்வித குணமுள்ளவள்?
   2. அவள் கலெக்டர் வீட்டுக் கலியாணத்திற்குப் போக ஏன் விரும்பவில்லை?
   3. அவள் யாரிடம் என்ன நகை இரவல் வாங்கினாள்? ஏன்?
2. ஒரு விவாக முகூர்த்தப் பத்திரிகை எழுது.
3. தடித்த எழுத்துக்களுள்ள வார்த்தைகளுக்குப் பதில் வேறு வார்த்தைகளை அமைத்து வாக்கியங்களை எழுது.
   1. அட்டிகையைப்பற்றிய துப்பு ஒன்றும் கிடைக்கவில்லை.
   2. தன் வறுமையை விளம்பரம் செய்து கொள்ள விரும்பவில்லை.
   3. வைர அட்டிகை சூரியகாந்தி போல ஒளிவிட்டது.
4. 1. அதிர்ஷ்டம்—எதிர்ப்பதம் எழுது.
   2. உறை, உரை—அர்த்த வித்தியாசம் என்ன?
   3. வெறுத்துரைத்தாள்—பதங்களாகப் பிரித்து எழுது.
   4. சீமாட்டி, தோழி—ஆண்பால் என்ன?

## இலக்கணம்

1. பெயர், வினைகளை அடுத்து நின்று அவற்றின் குணத்தை உணர்த்தும் சொற்களுக்கு உரிச்சொல் என்று பெயர்.

சால, நனி—என்பன 'மிகுதி' என்ற அர்த்தத்தைக் கொடுக்கும், இவை ஒரு குணத்தை உணர்த்தும் உரிச் சொற்கள்.

கடி—என்பது பல குணத்தை உணர்த்தும் உரிச்சொல்.

2. உரிச் சொற்களில் கடி என்பதற்கு மூன்று பொருள் விளங்க வாக்கியம் அமைக்க.

# 19. வைர மோதிரம்

## காட்சி 1

[வக்கீல் ஆத்மநாதன் வீட்டு முன்புறம். சிறிய தோட்டம் வேப்ப மரத்தடியில் நின்று கொண்டு ஆத்மநாதனின் மூத்த மகள் கமலாவும் அவள் தம்பி கண்ணனும் பேசிக்கொண் டிருக்கிறார்கள்.]

கமலா :—சரி. எப்பொழுது போகலாம்?

கண்ணன் :—சாயங்காலம் போவோம். இருட்டுவ தற்குமுன் திரும்பி வந்துவிடலாம். பானுவும் கோபுவும் வருகிறார்களா?

கமலா :—ஆமாம், ஆமாம். காலையிலிருந்து பானு என்னைத் தொந்தரவு பண்ணிக் கொண்டிருக் கிறாள். போன தடவை மாமா ஊருக்குப் போன பொழுது அவளுக்குக் கொடுத்த நாலணாவை வைத்திருக்கிறாளாம்.

கண்ணன் :—என்னிடம் மூன்றணாத்தான் இருக்கிறது. நான் சேர்த்து வைத்திருந்ததை எல்லாம் பந்து வாங்கிவிட்டேன்.

கமலா :—அப்படியானால், ஏழணா இருக்கிறது. நான் ஐந்தணா வைத்திருக்கிறேன். பாட்டிக்கு அறுபதுக் கறுப்து கலியாணம் வருவது தெரிந் திருந்தால், என் கையிலே இருந்ததைச் செலவழித் திருக்கமாட்டேன். இப்பொழுது என்ன செய்வது?

கண்ணன் :—கவலைப்படாதே, பன்னிரண்டணாவுக்கு ஏதாவது வாங்கிக்கொண்டு வந்து விடுவோம்.

பெரியவர்கள் ஒருவருக்கும் தெரியக் கூடாது. நாளைக் காலையில் எழுந்திருந்த உடனே பாட்டியிடம் கொடுத்துவிடவேண்டும்.

கமலா :—என்ன வாங்குவது ?

கண்ணன் :—என்னவா ? கலர்ப்பெட்டி ஒன்று வாங்குவோம். எஸ். ஆர். எஸ். கடையில் நேற்றுப் பார்த்தேன். கண்ணைப் பறிக்கிறது.

கமலா :—[சிரித்துக்கொண்டே] போடா பைத்தியமே, கலர்ப்பெட்டியை வைத்துக்கொண்டு பாட்டி என்ன செய்வாள் ? உன் மாதிரி தூங்குகிறவர்களுக்கு மீசை போடப் போகிருளா ?

கண்ணன் :—சரி, நீ என்ன வாங்கவேண்டும் என்கிருய் ? [பானுமதி வருகிருள்.]

கமலா :—இரு, பானுவைக் கேட்போம். இங்கே வா, பானு! நாலணு கொண்டு வந்திருக்கிருயா ?

பானு :—இதோ. [கொடுக்கிருள்.]

கமலா :—சரி, [வாங்கிக்கொண்டு] என்ன வாங்கலாம் ?

பானு :—நான் சொல்கிறேன். அக்கா! பாட்டி தினம் பிள்ளையார் கோவிலுக்குப் போகிருள். அவளுக்கோ நடக்கமுடியவில்லை. ஒரு பெரிய பிள்ளையார் பொம்மை வாங்கிக் கொடுப்போம். பாட்டி கோவிலுக்குப் போகாமல் இங்கேயே இருந்து விடுவாள்.

கண்ணன் :—போ, போ, பைத்தியம்; வீட்டுப்பொம்மையிலே பிள்ளையார் இருப்பாரா ?

பானு :—ஏண்டா. நல்ல தும்பிக்கையோடே வாங்கிக் கொண்டு வந்தால் ?

கண்ணன் :—அதெல்லாம் உனக்குத் தெரியாது. நீ சிறியவள், கோவில் பிள்ளையார் என்றால் அது ......உனக்குச் சொன்னால் தெரியாது.

[கோபு பம்பரமும் கையுமாக ஓடிவருகிறான்.]

கோபு :—கடைத் தெருவுக்கு என்னைக் கூட்டிக் கொண்டு போகவேண்டும். இல்லாவிட்டால் எல்லாரிடமும் போய்ச் சொல்லிவிடுவேன்.

கமலா :—இல்லையடா, கத்தாதே; உன்னைக் கூட்டிக் கொண்டு போகிறோம். பானு! பொம்மை வேண்டாம்.

பானு :—அழகாயிருக்குமே, அக்கா!...

கோபு :—பொம்மை வாங்கப் போகிறாயா? வேண்டாம். எனக்குப் பொம்மை பிடிக்கவில்லை. பெரிய பம்பரம் ஒன்று வாங்குவோம்.

கமலா :—ஆமாம். பாட்டி உன்னோடு பம்பரம் ஆடப் போகிறாள்! [எல்லோரும் சிரிக்கிறார்கள்.]

கோபு :—என்னோடு விளையாடாவிட்டால் தாத்தாவுடனாவது அப்பாவுடனாவது விளையாடட்டும். இரண்டு பம்பரம் வாங்கு. தாத்தாவுக்கு ஒன்று, பாட்டிக்கு ஒன்று.

கமலா :—நான் ஒன்று சொல்லுகிறேன்; சாயங்காலம் கடைத்தெருவுக்குப் போவோம். அங்கே போய் என்ன அகப்படுகிறதோ அதை வாங்கலாம். பாட்டிக்கு ஒரு மூக்குக் கண்ணாடி வாங்குவோம். பழைய மூக்குக் கண்ணாடி கீழே விழுந்து உடைந்து போயிற்று; பாட்டியால் இப்பொழுது இராமாயணம் படிக்க முடியவில்லை.

கண்ணன் :—சரி, கடைத்தெருவுக்குப் போய் யோசிக்கலாம். பானு! கோபு! ஒருவரிடத்திலேயும் சொல்லக் கூடாது. தெரியுமா? உஸ், இதோ அப்பா வருகிருர். ஓடிப்போங்கள்.

[குழந்தைகள் போகிருர்கள்.]

காட்சி 2

[கடைத் தெருவுக்குப் போகும் வழி—மரங்கள் அடர்ந்த சாலே]

கோபு :—கடைத்தெருவிற்கு இன்னும் அதிக தூரம் இருக்கிறதா?

கமலா :—இல்லேயடா, இதோ வந்து விட்டோம். இன்னும் கொஞ்ச தூரந்தான்.

கண்ணன் :—எனக்கு அலுப்பாயிருக்கிறது. பன்னிரண்டணுவையும் அப்படியே கொடுத்து விடுவோமா பாட்டியிடம்? கமலா! திரும்பிப் போகலாம், வா.

கமலா :—இல்லே, இல்லே. அது நன்ருயிருக்காது.

[பக்கத்திலுள்ள மரத்தின் பின்புறமிருந்து அழுக்கு வேட்டியும் கிழிந்த சட்டையும் அணிந்த பையன் ஒருவன் வருகிருன்.]

கோபு :—இங்கே பார், கமலா! அதோ யாரோ ஒருவன் வந்திருக்கிருன், எனக்குப் பயமாய் இருக்கிறது.

பையன் :—பயப்படாதீர்கள், நான் ஒன்றும் செய்ய மாட்டேன். எங்கே அம்மா போகிறீர்கள்? கடைத்தெருவிற்கா?

கண்ணன் :—எங்கே போனல் உனக்கென்ன?

கமலா :—கோபித்துக் கொள்ளாதே கண்ணா! [சிறுவனை நோக்கி] அப்பா! கடைத் தெருவிற்குத் தான் போகிறோம்.

பானு :—ஆமாம், கடைத் தெருவிற்குத்தான். நாளைக்கு எங்கள் பாட்டிக்கு அறுபதுக் கறுபது கலியாணம். அதற்காகப் பாட்டிக்கு ஒரு பரிசு வாங்கப் போகிறோம்.

பையன் :—ஏனம்மா, அப்படியா ?

கமலா :—ஆமாம்.

பையன் :—என்னிடம் ஒரு வைர மோதிரம் இருக்கிறது. வாங்கிக்கொள்கிறீர்களா ?

கமலா :—எங்கே? பார்க்கலாம்.

கோபு :—வைர மோதிரம் வேண்டாம்; இரண்டு பம்பரம் வாங்கு.

கமலா :—சற்றுப் பொறு, பார்க்கலாம்.

[கமலா மோதிரத்தை வாங்கிப் பார்க்கிறாள்.]

கண்ணா, இதைப் பார்த்தாயா ? மோதிரம் நன்றாயிருக்கிறது. இதை வாங்கி விடுவோமா? அப்பா ! என்ன விலை இதற்கு ?

பையன் :—ஆறு ரூபாய் கொடுங்கள்.

கமலா :—எங்களுக்கு வேண்டாம், அப்பா ! எங்களிடம் அவ்வளவு பணமில்லை.

பையன் :–பின்னர், நீங்கள் எவ்வளவு கொடுப்பீர்கள்?

கண்ணன் :—அடே, அப்பா, ஆறு ரூபாய் !

கமலா :—எங்களிடம் பன்னிரண்டு அணாதான் இருக்கிறது.

கோபு :—பம்பரம் இருக்கிறதா, பையா? வைர மோதிரம் வேண்டாம்.

பையன் :—முக்கால் ரூபாய்தானா இருக்கிறது? மிகவும் குறைவாயிருக்கிறதே.

கமலா :—இதோ, உன் மோதிரம் கண்ணா! நாம் கடைத் தெருவுக்குப் போவோம் வா.

[போகத் திரும்புகிறார்கள்.]

பையன் :—அம்மா! அம்மா! வாருங்கள். போனால் போகிறது. நீங்கள் நல்லவர்களாக இருக்கிறீர்கள். இதோ மோதிரம்! முக்கால் ரூபாயாவது கொடுங்கள்.

[கமலா மோதிரத்தை வாங்கிக் கொள்கிறாள். முக்கால் ரூபாயைக் கொடுக்கிறாள். பையன் ஓடிவிடுகிறான்.]

கண்ணன் :—எதற்காக அந்தப் பையன் ஓடினான்? எனக்கு என்னவோ பிடிக்கவில்லை.

கமலா :—நமக்கு என்னடா! அவன் ஓடினால் என்ன மெதுவாய்ப்போனால் என்ன? வா, வீட்டிற்குப் போவோம்.

கோபு :—எனக்கும் பிடிக்கவில்லை.

பானு :—எனக்கும் தான். பொம்மை வாங்காமல் மோதிரத்தை வாங்கிவிட்டாயே. [போகிறார்கள்]

## காட்சி 3

[வக்கீல் ஆத்மநாதன் வீட்டில் நடு அறை]

ஆத்மநாதன் :—வைர மோதிரமா!

பாட்டி :—ஆமாம், அப்பா முக்கால் ரூபாய்க்கு வாங்கிக் கொண்டு வந்திருக்கிறார்களாமே?

ஆத்மநாதன் :—எனக்கென்னமோ சந்தேகமா யிருக்கிறது. இரு இன்றைக்குப் பத்திரிகையில் கூட

ஏதோ ஒரு விளம்பரம் இருந்தது. இரு பார்க்கிறேன். [பத்திரிகையை எடுத்துப் பார்க்கிறார்.]

சரிதான். நான் நினைத்தது சரி. மங்குலால் சௌகார் வீட்டிலே வைரமோதிரம் களவுபோய் விட்டதாம். வீட்டு வேலைக்காரப் பையனை இரண்டு நாளாகக் காணவில்லையாம்.

பாட்டி:—அப்படியா? யார்? கோடி வீட்டுச் சௌகாரா? பிள்ளையார் கோவில் கட்டினாரே, அவரா?

ஆத்மநாதன்:—ஆமாம், ஆமாம். அவர்தான். கமலாவைக் கூப்பிடுவோம் கமலா! [கமலா வருகிறாள்.]

கமலா:—ஏன் அப்பா?

ஆத்மநாதன்:—ஏதம்மா வைர மோதிரம்?

கமலா:—முக்கால் ரூபாய்க்கு வாங்கினோம், ஒரு பையனிடம்.

ஆத்மநாதன்:—அப்படியா! பையனை உனக்குத் தெரியுமா?

கமலா:—எனக்குத் தெரியாது. வேலைக்காரப் பையன் மாதிரி இருந்தான். அழுக்குச்சட்டை ஒரே பறட்டைத் தலை; ஆனால் மிகவும் நல்லவன், அப்பா! ஆறு ரூபாய் சொல்லிவிட்டு முக்கால் ரூபாய்க்குக் கொடுத்தான் எங்களுக்காக.

ஆத்மநாதன்:—[சிரித்துக்கொண்டு] ஏன் கொடுக்கமாட்டான்?

கமலா:—இரு அப்பா, கண்ணனுக்கு அவனைத் தெரியுமோ என்று கேட்கிறேன். [கண்ணன், கோபு, பானுமதி வருகிறார்கள்.] என்னடா, கண்ணா, நேற்றைக்குப் பார்த்தோமே அந்தப் பையனை உனக்குத் தெரியுமா?

கண்ணன் :—தெரியாது, ஆனால் அவனைப் பார்த்தால் போக்கிரி மாதிரி இருந்தது.

கோபு :—ஆமாம் அப்பா, அவனிடம் பம்பரம் இல்லை.

பானு :—பொம்மைகூட இல்லையாம்.

ஆத்மநாதன் :—இங்கே பார். கமலா! அந்தப் பையன் நம்முடைய செளகார் வீட்டிலிருந்து இந்த மோதிரத்தைத் திருடிக்கொண்டு வந்திருக்கிறான். நீங்கள் செளகார் வீட்டுக்குப் போய் அவரிடம் இதைக் கொடுத்து விட்டு வர வேண்டும். என்ன ?

கமலா :—ஏனப்பா ? நாம் காசு கொடுத்துத்தானே வாங்கினோம். மோதிரம் பாட்டிக்குப் பிடிக்கவில்லையா ?

பாட்டி :—கண்ணே ! மோதிரம் நன்றாயிருக்கிறது. ஆனால், திருட்டுச் சாமானை நாம் வாங்கக் கூடாது.

கமலா :—அப்படியானால், முக்கால் ரூபாய் ?

கண்ணன் :—போயிற்று, நான்தான் அப்பொழுதே சொன்னேனே ! கலர்ப்பெட்டி வாங்கு என்று சொன்னேனே இல்லையா ?

ஆத்மநாதன் :—அவளை ஒன்றும் சொல்லாதே, கண்ணா ! நீயும் கமலாவும் போய் மோதிரத்தைக் கொடுத்து விட்டு வந்து விடுங்கள்.

பானு :—நானும் போகிறேன், அப்பா !

கோபு :—நான் மட்டும் ?

கமலா :—சரி, அப்பா ! கோடி வீட்டுச் செளகார் தானே ?

ஆத்மநாதன் :—ஆமாம்; நடந்ததைச் சொல்லி மோதிரத்தைக் கொடுத்துவிட்டு வந்துவிடுங்கள்.

கண்ணன் :—முக்கால் ரூபாய் போயிற்று? எனக்குத் தெரியுமே [குழந்தைகள் போகிறார்கள்]

## காட்சி 4

[மங்குலால் சௌகார் வீடு]

சௌகார் :—குழந்தைகாள், எங்கே வந்தீர்கள்? யாரப்பா இந்தக் குழந்தைகள்?

வேலைக்காரன் :—வக்கீல் ஐயா வீட்டுக் குழந்தைகள்.

மங்குலால் :—யார்? நம்முடைய வக்கீல் ஐயா வீடா? வாருங்கள் வாருங்கள்; அடே, குழந்தைகளுக்குப் பழம் கொண்டுவா.

கமலா :—பழம் வேண்டாம். இந்த மோதிரத்தை அப்பா கொடுத்துவிட்டு வரச்சொன்னார்.

மங்குலால் :—மோதிரமா? [மோதிரத்தை வாங்கிக்கொண்டு] ஏதிது? நம் மோதிரம் மாதிரி யல்லவா இருக்கிறது இது! எப்படியம்மா வந்தது?

கோபு :—நாங்கள் திருடவில்லை.

மங்குலால் :—சேச்சே, நீங்கள் திருடினதாக நான் சொல்லவில்லை. மோதிரம் முந்தின நாள் கெட்டுப் போய் விட்டது. எப்படி உங்களிடம் வந்தது என்று கேட்கிறேன்.

கமலா :—நேற்றுச் சாயங்காலம் கடைத்தெருவுக்குப் போனோம். போகிற வழியிலே ஒரு பையன் முக்கால் ரூபாய்க்குக் கொடுத்தான்.

மங்குலால் :—முக்கால் ரூபாய்க்கா!

கண்ணன் :—ஆமாம். எங்களிடம் முக்கால் ரூபாய் தான் இருந்தது. பாட்டிக்குப் பரிசு ஒன்று வாங்கப் போனோம்.

பானுமதி :—எங்கள் பாட்டிக்கு இன்று அறுபதுக் கறுபது கலியாணம்.

மங்குலால் :—ஓகோ! பையன் பறட்டைத் தலையாய் இருந்தானா? நீலச் சட்டை போட்டு இருந் தானா?

கமலா :—ஆமாம், சட்டை கிழிசல், முக்கால் ரூபாயை வாங்கிக்கொண்டு ஓடிப்போய் விட்டான்.

மங்குலால் :—சரிதான்.

கண்ணன் :—முக்கால் ரூபாய் போயிற்று.

பானு :—பாட்டிக்குப் பொம்மை இல்லை.

கண்ணன் :—பொம்மை யில்லையாம். பரிசு ஒன்றுமே இல்லை!

மங்குலால் :—[சிரித்துக்கொண்டு] அம்மா! கவலைப்படாதே. முக்கால் ரூபாய் போனால் போகட்டும். இதோ பத்து ரூபாய்.

கமலா :—வேண்டாம், வேண்டாம். அப்பாவிடம் முக்கால் ரூபாயை வாங்கிக் கொள்கிறேய். அப்பா கோபித்துக் கொள்வார்.

மங்குலால் :—கோபித்துக் கொள்ளமாட்டார். நான் கொடுத்தேனென்று சொல்லுங்கள். மோதி ரத்தைக் கண்டு பிடித்துக் கொண்டு வந்தால் பத்து ரூபாய் தருவதாக நானே சொல்லியிருக் கிறேன். சும்மா வாங்கிக் கொள்ளுங்கள்.

பானு :—வாங்கிக் கொள் அக்கா!

கமலா :—இதையும் அப்பா திருப்பிக் கொடுக்கச் சொல்லுவாரோ என்னமோ!

மங்குலால் :—மாட்டார், மாட்டார், அடே முருகா! குழந்தைகளுடன் போ. ரூபாயை எங்கேயாவது கீழே போட்டுவிடப் போகிருர்கள், கூடப்போய் வீட்டிலே வக்கீல் ஐயாவிடம் சொல்லிவிட்டு வா. அம்மா இந்த ரூபாயை வாங்கிக்கொள். [கமலா ரூபாயை வாங்கிக்கொள்கிருள்.]

கோபு :—ஜோர். மூன்று பம்பரம் வாங்கலாம். பாட்டிக்கு இரண்டு, எனக்கு ஒன்று.

கண்ணன் :—கமலா, மறந்து விடாதே. எனக்குக் கலர்ப்பெட்டி.

கமலா :—பேசாமலிரு. சௌகார் ஐயா, நான் போய் வருகிறேன்.

மங்குலால் :—போய் வா அம்மா! பழத்தை எடுத்துக் கொண்டு போ. [குழந்தைகள் பழத்தை எடுத்துக்கொண்டு போகிருர்கள் ]

போக்கிரிப் பயல் திருடியது மல்லாமல் குழந்தைகளையும் ஏமாற்றி விட்டானு? போகட்டும். மோதிரம் வந்ததே! குழந்தைகள் புத்தி சாலிக் குழந்தைகள்.

காட்சி முடிகிறது

---

# செய்யுட் பகுதி

## 1. ஆறும் சிற்றோடையும்

கல்லும் மலையும் குதித்து வந்தேன்—பெங்
காடுஞ் செடியுங் கடந்து வந்தேன்
எல்லை விரிந்து பரந்த சமநிலம்
எங்கும் தவழ்ந்து தவழ்ந்து வந்தேன். 1

கட்டும் அணையேறிச் சாடி வந்தேன்—அதன்
கண்ணறை தோறும் நுழைந்து வந்தேன்
திட்டுத் திடர்பல சுற்றிவந்தேன்—மடைச்
சீப்புகள் மோதித் திறந்து வந்தேன். 2

காயும் நிலத்தழல் ஆற்றி வந்தேன்—அதில்
கண்குளிரப் பயிர் கண்டு வந்தேன்
ஆயு மலர்ப்பொழில் செய்து வந்தேன்—அங்கென்
ஆசை தீர விளையாடி வந்தேன். 3

ஏறாத மேடுகள் ஏறிவந்தேன்—பல
ஏரி குளங்கள் நிரப்பி வந்தேன்
ஊறாத ஊற்றிலும் உட்புகுந்தேன்—மணல்
ஓடைகள் பொங்கிட ஓடி வந்தேன். 4

ஆயிரங்காலால் நடந்து வந்தேன்—நன்செய்
அத்தனையும் சுற்றிப் பார்த்து வந்தேன்
நேயமுறப் புன்செய்க் காட்டினிலும்—கொஞ்சம்
நீரை யிறைத்து நெடுக வந்தேன். 5

பஞ்சை யரைத்து நூல் நூற்றுவந்தேன்—சீனி
பாகமாய்ச் செய்து கொடுத்து வந்தேன்
நெஞ்ச முலர்ந்த நெடுநகரிற்—குழாய்
நீராகவுஞ் சென்று பாய்ந்து வந்தேன். 6

அல்லும் பகலும் அலைந்து வந்தேன்—என்றன்
ஆழி யிறைவனைக் காண வந்தேன்
நில்லும்! எனக்கினி நேரமில்லை—இன்னும்
நீண்ட வழிபோக வேண்டு மம்மா! 7

—தேசிக விநாயகம் பிள்ளை

# 2. பஞ்ச தந்திரக் கதை

## 1. காகம் நாகத்தைக் கொன்ற கதை

கோடுறு சினையிற் காகம் கூடுவைத்தனேக காலம்
பேடொடு கூடி வாழும் பெருமரப் பொந்தில் வந்தே
ஆடிய கரும்பாம் பொன்றங் கதுபெறு முட்டையெல்லாம்
நாடியே குடித்துப் போட நலிந்துளம் மெலுந்துவாடி. 1

தன்னுயிர்ப் பாங்கனை சம்புக னருகு போயிங்
கென்னசெய் குவனு னென்ன. 'இதைக்கொல அறிதோ ?
மன்னவன் தேவி யாடு மஞ்சனச் சாலை புக்குப் [போய்
பொன்னணி கொண்டுவந்து போடுக பொந்தி' லென்ன. 2

காகமப் படியே செய்யக் காவல னேவலாளர்
ஏகிமா மரத்தின் பொந்தை யீந்தனர் ஈரும் போதில்
நாகமங் கிருந்துசீற நறுக்கின ரிருதுண்டாக
ஆகையா லுபாயத் தாகா திலையென அறையும் பின்னும். 3

## 2. குரங்கும் குருவியும்

பாடுற மூடனுக்குப் பற்பல போதித் தாலும்
வீடுடை யவனை வீட்டை இழந்திடச் செய்வான் என்று
நேடுறு சன்மன் சொல்வான் நெடியதோர் பழம ரத்தில்
கூடு கொண்டன இரண்டு தூக்கணங் குருவி தாமே. 1

குளிரினுல் நடுங்கி, வானக் கொடு மழையால் நனை ந்து
நளிர்சுரத் தோடு தேகம் நடுங்கியே பற்கள் கிட்டி
வளம் அறு குரங்கொன் றங்கு வந்தது, குருவி பார்த்தே
இளகிய மனத்தினுலே இன்சொலால் ஒன்று சொல்லும். 2

'கைகள் கால் இருந்தும் இந்தக் கன்மத்தை அனுபவிக்கும்
செய்தி ஏன் ?' என்ன, 'ஊசி மூஞ்சிகொள் சிறிய மூடா !
வைது நீ புத்தி சொல்ல வல்லையோ ' எனக் கோபித்து
நெய்திடும் அதன் தன்கூட்டை நெடுங்கையால் பிய்த்த தன்றே. 3

—வீர மார்த்தாண்ட தேவர்

# 3. நீதி வெண்பா

வருத்தவளை வேயரசர் மாமுடியின் மேலாம்
வருத்த வளையாத மூங்கில்—தரித்திரமாய்
வேழம்பர் கைப்புகுந்து மேதினியெல் லாந்திரிந்து
தாழுமவர் தம்மடிக்கீழ்த் தான். 1

கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தங் கண்ணிற் றெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. 2

கர்ப்பூரம் போலக் கடலுப் பிருந்தாலும்
கர்ப்பூர மாமோ கடலுப்புப்—பொற்பூரும்
புண்ணியரைப் போல விருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியரா வாரோ புகல். 3

பொற்பறிவில் லாதபல புத்திரரைப் பேறிலினோர்
நற்புதல்வ னைப்பெறுத னன்றுமே—பொற்கொடியே
பன்றிபல குட்டி பயந்ததனு லேதுபயன்
ஒன்றமையா தோகரிக்கென் றோது. 4

ஆயுமலர்த் தேன்வண் டருந்துவது போலிரப்போர்
ஈயு மவர்வருந்தா தேற்றலறந்—தூயவிளம்
பச்சிலையைக் கீடமறப் பற்றி யரிப்பதுபோல்
அச்சமுற வாங்க லகம். 5

பொன்னுங் கரும்பும் புகழ்பாலுஞ் சந்தனமும்
சின்னம் படவருத்தஞ் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்று நலிந்தாலு முத்தமர்பால்
நற்குணமே தோன்று நயத்து. 6

தீயவர்பாற் கல்வி சிறந்தாலு மற்றவரைத்
தூயவரென் றெண்ணியே துன்னற்க—சேயிழையே
தண்ணொளிய மாணிக்கஞ் சர்ப்பந் தரித்தாலு
நண்ணுவரோ மற்றதனை நாடு. 7

# 4. நீதி மஞ்சரி

சேற்றிப் பிறக்கும் செழுங்கமலம்; மண்ணதனுள்
மாற்றுயர்ந்த பொன்பிறக்கும்; வாரிதியில்—போற்றும்
மணி பிறக்கும்; சான்ருேர் மருவுங் குலத்தைத்
துணிவுறயார் சொல்வார் துணிந்து. 1

காலே விளக்குக் கதிரவனும்; அங்ஙனமே
மாலே விளக்காம் மதியமே—நூலின்
விளக்கும் அறிவே விரியுலகின் தீபம்
திளேக்கும் குலவிளக்குச் சேய். 2

—ஸ்ரீ. வீரராகவ கவி.

# 5. அறநெறிச் சாரம்

வைகலும் நீருட் கிடப்பினுங் கல்லிற்கு
மைல்லென்றல் சால அரிதாகும்; அஃதேபோல்
வைகலும் நல்லறங் கேட்பினுங் கீழ்கட்குக்
கல்லினும் வல்லென்னும் நெஞ்சு. 1

பலகற்ருேம் யாமென்று தற்புகழ வேண்டா
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங் காக்கும்
சிலகற்ருர் கண்ணும் உளவாம் பலகற்ருர்க்
கச்சாணி யன்னதோர் சொல். 2

—முனேப்பாடியார்.

# 6. நாலடியார்

இம்மை பயக்குமால்; ஈயக் குறைவின்ருல்:
தம்மை விளக்குமால்; தாமுளராக்—கேடின்ருல்;
எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து. 1

கல்வி கரையில; கற்பவர் நாள்சில;
மெல்ல நினேக்கிற் பிணிபல—தெள்ளிதின்
ஆராய்ந்(து) அமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகில் தெரிந்து. 2

—ஜைன முனிவர்கள்.

# 7. தனிப்பாடல்கள்

காரென்று பேர்படைத்தாய்
ககனத் துறும்போது ;
நீரென்று பேர்படைத்தாய்
நீள்நிலத்தில் வீழ்ந்ததின்பின் ;
வாரொன்றும் மெல்மயில்நேர்
ஆய்ச்சியர்கை வந்ததின்பின் ;
மோரென்று பேர்படைத்தாய் ;
முப்பேரும் பெற்ருயே !

—காளமேகப் புலவர்.

மற்கொண்ட திண்புயத்தான்
மா நகர்விட் டிங்குவந்தேன் ;
சொற்கொண்ட பாவின்
சுவையறிவார் ஈங்கிலேயே !
விற்கொண்ட வாள்நுதலி
வேலி தருங்கூலி
நெற்கொண்டு போமளவும்
நில்லாய் நெடுஞ்சுவரே !

—கம்ப நாடர்.

# 8. விவேக சிந்தாமணி

வெள்ளத்தே போகாது வெந்தழலில்
வேகாது ; வேந்த ராலும்
கொள்ளத்தான் முடியாது, கொடுத்தாலும்
நிறைவன்றிக் குறைவு ருது ;
கள்ளர்க்கோ மிக அரிது, காவலோ
மிகஎளிது, கல்வி யென்னும்
உள்ளத்தே பொருளிருக்க ஊரெல்லாம்
பொருள் தேடி உழல்வ தென்னே !

## 9. இனியது நாற்பது

ஆற்றுந் துணையா லறஞ்செய்கை முன்னினிதே
பாற்பட்டார் கூறும் பயமொழி மாண்பினிதே
வாய்ப்புடைய ராகி வலவைக ளல்லாரைக்
காப்படையக் கோட லினிது.

கற்ருர்முன் கல்வி யுரைத்தல் மிகவினிதே
மிக்காரைச் சேர்தல் மிகமாண முன்னினிதே
எட்டுணை யானு மிரவாது தானீதல்
எத்துணையு மாற்ற லினிது.

—பூதஞ்சேந்தனுர்.

## 10. இன்ன நாற்பது

கொடுங்கோன் மறமன்னர்க் கீழ்வாழ்த லின்னு
நெடுநீர் புணையின்றி நீந்துத லின்னு
கடுமொழி யாளர் தொடர் பின்னு வின்னு
தடுமாறி வாழ்த லுயிர்க்கு.

ஆற்ற லிலாதான் பிடித்த படையின்னு
நாற்ற மிலாத மலரி னழகின்னு
தேற்ற மிலாதான் துணிவின்னு வாங்கின்னு
மாற்ற மறியா னுரை.

—கபிலர்.

## 11. திரிகடுகம்

தாளாள னென்பான் கடன்படா வாழ்பவன்;
வேளாள னென்பான் விருந்திருக்க வுண்ணுதான்;
கோளாள னென்பான் மறவாதான்; இம்மூவர்
கேளாக வாழ்தலினிது. 1

தன்னை வியந்து தருக்கலும், தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும்—முன்னிய
பல்பொருள் வெஃகுஞ் சிறுமையும், இம்மூன்றும்
செல்வ முடைக்கும் படை. 2

—நல்லாதனுர்.

# 12. நன்னெறி

என்றும் முகமன் இயம்பா தவர்கண்ணும்
சென்று பொருள்கொடுப்பர் தீதற்ருேர்—துன்றுசுவை
பூவிற் பொலிகுழலாய் பூங்கை புகழவோ
நாவிற்(கு) உதவும் நயந்து. 1

நீக்கம் அறும் இருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின் அவர்பெருமை நொய்தாகும்—பூக்குழலாய்
நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல்
புல்லினும் திண்மை நிலேபோம். 2

உள்ளம் கவர்ந்தெழுந்து ஓங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணம்என்க—வெள்ளம்
தடுத்தல் அரிதோ தடங்கரை தான்பேர்த்து
விடுத்தல் அரிதோ விளம்பு. 3

மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்
வலியோர் தமைத்தாம் மருவில்—பலியேல்
கடவுள் அவிர்சடைமேல் கட்செவி அஞ்சாதே
படர்சிறைய புள்ளரசைப் பார்த்து. 4

தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர் ;—திங்கள்
கறைஇருளே நீக்கக் கருதா(து) உலகில்
நிறைஇருளே நீக்குமேல் நின்று. 5

தம்மையும் தங்கள் தலேமையையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தமையடைந்தோர்—தம்மின்
இழியினுஞ் செல்வர் ; இடர்தீர்ப்பர், அல்கு
கழியினுஞ்செல் லாதோ கடல். 6

எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந்(து) என்றவன்
மைந்தர்தம் ஈகைமறுப்பரோ—பைந்தொடீஇ!
நின்று பயனுதவி நில்லா அரம்பையின் கீழ்க்
கன்றும் உதவும் கனி. 7

—சிவப்பிரகாச சுவாமிகள்.

# அரும்பத விளக்கம்

அகம் - மனம்
அக்குள் - கக்கம்
அங்கம் - அவயவம்
அணிந்த - அலங்காரம் செய்த
அறிகுறி - அடையாளம்
அறுபதுக்கறுபது - சஷ்டி யப்தப் பூர்த்தி
அவை - சபை
ஆட்சி - ஆளுகை
ஆதரவு - உதவி, துணை
இசைக்கும்வன்மை - இயற்றும் ஆற்றல்
இயன்ற - கூடிய
இரங்கினர் - துன்பப்பட்டார்
இரவல் - மீண்டும் தருவதாக வாங்கும் பொருள்
இலட்சியம் - குறி
இல்லறம் - இல்வாழ்க்கை
இழி குலம் - தாழ்ந்த குலம்
உகுத்தான் - சிந்தினன்
உதயம் - சூரியன் உதிக்கும் காலம்
உபவாசம் - பட்டினி
உய்ய - பிழைக்க
உரு - வடிவம்
உழவன் - விவசாயி
உழன்று - வருந்தி
உறவினர் - சுற்றத்தார்
உறை - கூடு
எய்தினன் - அடைந்தான்
ஏகினர் - சென்றார்
ஏரி - குளம்
ஏளனம் - இகழ்ச்சி
ஏற்க - தக, பொருந்த
ஒருமனப்பட்டு - ஒற்றுமைப்பட்டு
ஒளி - பிரகாசம்
கடகம் - காப்பு
கட்டாயம் - அவசியம்
கரியுண்டு - கறுப்படைந்து
கருதல் - எண்ணுதல்
கவர்ந்து - பற்றி
கவி - புலவன்
கழற்றி - நீக்கி
களை தீர்ந்து - இளைப்பாறி
காமதேனு - தெய்வப்பசு
காலி - கால் நடை, பசு
கானகம் - காடு
கிரணம் - கதிர்
கீழ்மை - தாழ்வு
சஞ்சலம் - துக்கம்
சமிக்கை - அடையாளம், குறிப்பு
சரிவு - சாய்வு
சாசுவதம் - நிலையானது
சான்றோர் - நற்குணம் நிறைந்தோர்
சிக்கனம் - செட்டு
சீர்திருத்த - செம்மையாக்க
சுதந்திரம் - உரிமை
சுபாவம் - இயற்கை
செருக்கு - கர்வம்
சேனை - படை
தகராறு - விவாதம்
தருணம் - சமயம்
தலைவன் - நாயகன்
தாயகம் - பிறப்பிடம்
தாலம் - தட்டு
திகில் - அச்சம், பயம்
திலகம் - பொட்டு
திவ்விய - சிறந்த

துப்பு-உளவு விவரம்
தும்பிக்கை-துதிக்கை
தெவிட்டாத-வெறுக்காத
தொடுத்து-ஆரம்பித்து
தொந்தரவு-துன்பம்
நகை - ஆபரணம்
நவீனம்-புதுமை
நிம்மதி - அமைதி
நியமம்-ஒழுங்கு
நுனி-முனை
படகு-தோணி, ஓடம்
பட்டயம்-பத்திரம், சாஸனம்
பருகி-குடித்து
பருவந்தொட்டு - பருவமுதல்
பல்லாண்டு - பலவருடம்
பறிபோதல் - கைவிட்டுப்போதல்
பறை - கொட்டு, தமுக்கு
பளு - பாரம்
பாண்டம் - பானை, சட்டி
பிணி - நோய்
பிரமாணம் - சத்தியம், மேற்கோள்
பிரயத்தனம் - முயற்சி
புகட்டு - ஊட்டு, போதி
புகன்று - சொல்லி
புதல்வி - மகள்
புதுவை - புதுச்சேரி
புலப்படுதல் - விளங்குதல்
புன்னகை - இலேசான சிரிப்பு
பூரணம் - நிறைவு
பேறு - பெறுதல்
பொய்த்தலை - போலித்தலை
பொறுத்தி - தங்கி
போதிய ஆதரவு - வேண்டிய துணை
முடிமணி - கிரீட ரத்தினம்
மூதலித்தார் - ஒப்புவித்தார்
மேதாவி - அறிவுள்ளவன்
மேனி - உடல்
யோகம் - நிஷ்டை
ரட்சகர் - காவலர்
ரொம்ப - நிரம்ப, மிகுதியாக
லேவாதேவி - கொடுக்கல் வாங்கல்
வண்மை - நகைத்தன்மை
வரலாறு - சங்கதி
வரையாது - அளவுபடுத்தாமல்
வல்லமை - சக்தி, திறமை
வழங்கி - கொடுத்து
வறுமை - தரித்திரம்
வாட்டம் - மெலிவு
விஜயம் செய்தல் - எழுந்தருளுதல்
விமரிசை - சிறப்பு
வினவு - கேள்
வீழ்ச்சி - விழுதல்
வெகுமதி - இனாம்



# செய்யுட் குறிப்புரை

**1. ஆறும் சிற்ருேடையும் :-** சாடி - தாக்கி. கண்ணறை-இடைவெளி, அழல் - நெருப்பு. நேயம்-அன்பு. அல்-இரவு, *ஆழி - கடல்.

**2. பஞ்ச தந்திரக் கதைகள் :-**

1. கோடு-கொம்பு, சினை-கிளை, பேடு-பெண். நாடி-விரும்பி, தேடி, நலிந்து-வருந்தி. பாங்கன்—தோழன். சம்புகன்-நரி, ஈர்ந்தனர் - பிளந்தனர். அறையும் - சொல்லும்.

2. நேடுறு - ஆராய்ச்சி மிக்க. நளிர் - நடுக்கம், மூஞ்சி - முகம். பிய்த்தது - கிழித்தது.

**3. நீதி வெண்பா :-**

1. வேய்-மூங்கில், வேழம்பர்-கழைக் கூத்தாடிகள். 2. கரி-யானை. வம்பு-தீமை. நெறி-முறை, வழி, 3. கர்ப்பூரம்-சூடம். பொற்பு-அழகு, புல்லியர் - அற்பர். 4. பேறலின் - பெறுவதைப் பார்க்கிலும். பயந்ததனல் - பெற்றதனுல். ஓது-சொல். 5. இரப்போர்-யாசகர். கீடம் - புழு, அச்சம் - பயம். 6. சின்னம்பட - சிறுமையடைய. நயந்து-விரும்பி. 7. தூயவர் - பரிசுத்தர், சேயிழை - செம்மையான ஆபரணம் அணிந்தவள், ஒள்ளிய-பிரகாசமுள்ள, நண்ணு-நெருங்கு.

**4. நீதிமஞ்சரி :-** 1. சேறு - சகதி, வாரிதி-கடல், மருவும் - பொருந்தும். 2. கதிரவன்-சூரியன், சேய்-குழந்தை.

**5. அறநெறிச்சாரம் :-** 1. வைகலும்-தினமும், சால-மிக, 2. அச்சாணி-அச்சிலுள்ள ஆணி. அலர் கதிர்-விரிந்த கிரணம், ஞாயிறு-சூரியன்.

**6. நாலடியார் :-** 1. இம்மை-இவ்வுலகம், கேடு-கெடுதி, மம்மர்-மயக்கம், 2. அமைவு-பொருத்தம். கற்ப-கற்க, குருகு-பறவை.

**7. தனிப்பாடல் :-** 1. கார்-மேகம், ககனம்-ஆகாசம், வார் - கச்சு, ரவிக்கை, ஆய்ச்சியர் - இடைப்பெண்கள். முப்பேர்-மூன்று பெயர். 2 மல்-மற்போர், திண்மை-வலிமை, உறுதி. சுவை-உருசி, ரஸம் விற்கொண்ட - வில்லைப் போன்ற. நுதலி-நெற்றியையுடையவள்.

**8. விவேக சிந்தாமணி :—** நிறைவு - பூரணம், நிறைதல், காவல்—காத்தல், உழல்வது - வருந்துவது.

**9. இனியது நாற்பது :—** 1. ஆற்றுந்துணை-செய்யும் அளவு. பாற்பட்டார்—ஒழுங்கு பட்டார். வலவை-வஞ்சகப்பெண், கோடல்-கொள்ளுதல். 2. மாண - சிறக்க, எட்டுணை-எள் அளவு. இரவாது - யாசியாமல்.

**10. இன்னா நாற்பது :-**1. மறம்-வலிமை, பாவம். நெடுநீர் - கடல், புணை-தெப்பம், ஓடம். கடுமொழி-வன்சொல், தொடர்பு - பற்று, நட்பு. இன்னா-துன்பம். 2. படை-ஆயுதம். நாற்றம்-மணம். தேற்றம்-தெளிவு. மாற்றம்-சொல்.

**11. திரிகடுகம் :-** தாளாளன் - முயற்சியாளன். வேளாளன் - உபகாரி, உழவன். கோள-கொள்ளுதல். கேள்-சுற்றம். 2. தருக்கல்-செருக்குதல். கொன்-வீண். வெகுளி-கோபம். வெஃகும் - விரும்பும்.

**12. நன்னெறி :—**1. முகமன்-உபசார வார்த்தை இயம்பாதவர். கண்ணும் - சொல்லாதவரிடத்தும், துன்று-நிறைந்த. குழல்-கூந்தல், பூங்கை-அழகிய கை. 2. நொய்து-அற்பம். நீக்கம்-நீங்குதல். புல்லினும்-சேர்ந்தாலும். திண்மை - உறுதி, வலிமை. 3. உள்ளம்-மனம். சினம்-கோபம். தடங்கரை-பெரியகரை. பெயர்த்து - வெட்டி. 4.விரவலர்-பகைவர். பலி - பிச்சை, அவிர் - விளங்குகின்ற, கட்செவி - பாம்பு. படர் சிறைய-பரந்த இறகுகளையுடைய. புள்ளரசு - கருடன். 5. தீர்வு-தீர்தல், உள்ளார்-நினையார். தீர்க்கிற்பார்-தீர்த்துவிடுவார். விழுமியோர் - மேலோர், திங்கள் - சந்திரன். கறை - களங்கம். 6. இழியினும் - தாழ்ந்திருந்தாலும். அல்கு-சுருங்கிய. கழி-உப்பங்கழி, 7. எந்தை-என் தகப்பன், நல்கூர்ந்தான்-வறுமையுற்றான். ஈந்து-கொடுத்து. பைந்தொடி-பசிய வளையல். அரம்பை-வாழை.

---



நவீன

# தமிழ்ப் பாட புத்தகம்

ஆறும் வகுப்பு



பதிப்பாசிரியர்:
வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை




எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை
பப்ளிஷர்ஸ் : : திருநெல்வேலி

 [விலை அணா 10

# மதிப்புரை

பாடப் புத்தகங்கள் மாணவர்களை வெருட்டும் சாதனங்கள் என்று ஒரு சிலர் வருந்துகிறார்கள். உண்மை அதுவன்று என்பதை இப் புத்தகங்கள் நிரூபிக்கின்றன. புத்தகங்களின் 'கவிதைப் பகுதி'யில் சுவை நிரம்பிய பாடல்கள் உள்ளன. எத்தனையோ தலைமுறையாகத் தமிழ் அறிஞர் பாராட்டி வந்துள்ள 'திரிகடுகம்', 'சிறு பஞ்சமூலம்', 'திருக்குறள்' முதலிய அற நூல்களிலிருந்தும், 'என்றுமுளதென் தமிழ்' என்பதற்கு எடுத்துக் காட்டாக விளங்கும் பிற்காலத்துப் புலவர் நூல்களிலிருந்தும், கலையுணர்வுடன் பொறுக்கியெடுக்கப்பட்ட அருமையான பாடல்களை இங்கே காணலாம். 'வசனப் பகுதி'யில் தமிழ் வசன இலக்கியத்திற்கு அடிகோலிய வேதநாயகம் பிள்ளை, வீரமாமுனிவர் முதலிய அறிஞர் சொற்களும், இக்காலத்துப் புலவர் பலருடைய கட்டுரைகளும் சேர்க்கப்பட்டுள்ளன. மாணவர் தகுதிக்குரிய தெளிந்த, எளிமையான தமிழும், அவர்கள் மனத்தைக் கவரவல்ல கற்பனை வளமும், பல திறப்பட்ட இலக்கியச் சுவையும், இப்புத்தகங்களில் அமைந்திருக்கின்றன. இதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை ; ஏனென்றால் புத்தகங்களைத் தொகுத்தவர் நிரம்பிய புலமை உடைய வித்வான் சிதம்பர ராமலிங்க பிள்ளை அவர்கள். பாடப் புத்தகங்களின் மூலமாகத் தமிழுணர்வை வளர்க்கக்கூடும் என்பதற்கு இப்புத்தகங்கள் சிறந்த அத்தாட்சி.

ம. தி. தா. இந்துக் கல்லூரி
திருநெல்வேலி
30—11—44

அ. சீனிவாசராகவன்

# முன்னுரை

'நவீன தமிழ்ப் பாட புத்தகம்' என்னும் புத்தக வரிசையில் ஆருவது, ஏழாவது வகுப்புப் புத்தகங்கள் சமீபத்தில் சென்னைக் கல்வி இலாகா அதிகாரிகள் வெளியிட்டிருக்கும் எட்டாவது வகுப்புப் புத்தகத்தை அனுசரித்து மாணவர்களுக்கு நமது வித்தியா இலாகா அதிகாரிகள் கொடுக்க விரும்பும் பாஷா ஞானத்தை அளிக்கப் பெரிதும் அனுகூலமாக இருக்கும்படி தொகுக்கப்பட்டிருக்கின்றன.

இப்புத்தகத்தின் செய்யுட் பகுதியில், 'புல்' என்னும் பகுதியைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த ஸ்ரீ. சி. தேசிக விநாயகம் பிள்ளை அவர்களுக்கும், 'எமனை எலி விழுங்கிற்று' என்னும் பகுதியைச் சேர்த்துக்கொள்ள அனுமதி அளித்த ஸ்ரீ. பாரதிதாஸன் அவர்களுக்கும், 'தமிழன்', 'இளந்தமிழருக்கு' என்னும் பகுதிகளைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த நாமக்கல் ஸ்ரீ. வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்களுக்கும், 'குழந்தைச் சிரிப்பு' என்னும் பகுதியைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த பரலி. ஸ்ரீ. சு. நெல்லையப்பர் அவர்களுக்கும், 'ஈசுர வருடத்துப் பஞ்சம்' என்னும் பகுதியைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த அதன் உரிமையாளருக்கும்,

இதன் உரை நடைப் பகுதியில் திருக்குறளால் வந்த பயன், கோப்பெருந் தேவியார், பருவயிர மணிமாலை, என் பாலிய சேஷ்டைகள், பிள்ளை விளையாட்டு, தாவரப் பொருள்கள், திரு நபி அவர்களின் குண ஒழுக்கம், உணவுப் பொருள்கள் என்னும் பாடங்களையும், நிகும்பலை என்னும் நாடகத்தையும் சேர்த்துக் கொள்ள அனுமதியளித்த அதனதன் ஆசிரியர்களுக்கும்,

விவேகானந்தர் சொற்பொழிவு என்னும் பாடத்தைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த ஸ்ரீ. ராமகிருஷ்ண மடத்தார் அவர்களுக்கும்,

அருந்தமிழ் ஆய்ந்த ஐயர், குற்றுலக் காட்சி, கடிதம் எழுதுதல் என்னும் பாடங்களை இப் புத்தகத்திற்கு என்றே எழுதித் தந்துதவிய அதனதன் ஆசிரியர்களுக்கும் நான் எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறேன்.

வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை




# பொருள் அடக்கம்

## செய்யுள்

## உரை நடை


CONNEMARA PUBLIC LIBRARY
26 MAY 1956

நவீன

# தமிழ்ப் பாட புத்தகம்

## ஆறும் வகுப்பு

## செய்யுள்

---

### I. கடவுள் வாழ்த்து

#### திருவருட்பா

தாயாகித் தந்தையுமாய்த்
தாங்குகின்ற தெய்வம் ;
தன்னைநிக ரில்லாத
தனித்தலைமைத் தெய்வம் ;

வாயார வாழ்த்துகின்றோர்
மனத்தமர்ந்த தெய்வம் ;
மலரடிஎன் சென்னிமிசை
வைத்தபெருந் தெய்வம் ;

காயாது கனியாகிக்
கலந்தினிக்குந் தெய்வம் ;
கருணைநிதித் தெய்வம் ; முற்றும்
காட்டுவிக்கும் தெய்வம் ;

சேயாக எனைவளர்க்கும்
தெய்வம் ; மகா தெய்வம்
திருச்சபையில் விளங்குகின்ற
தெய்வம் ; அதே தெய்வம்.

—இராமலிங்க சுவாமிகள்

# II. அறவழி

## 1. நல்வழி

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழும் அன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. 1

சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி. 2

செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்—வையத்
தறும்பாவ மென்னவறிந் தன்றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல்? 3

## 2. நன்னெறி

பிறர்க்குதவி செய்யார் பெருஞ் செல்வம் வேறு
பிறர்க்குதவி ஆக்குபவர் பேறும்—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடல்நீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு. 1

இன்சொலால் அன்றி இருநீர் வியன் உலகம்
வன் சொலால் என்றும் மகிழாதே—பொன்செய்
அதிர்வளையாய்! பொங்காது அழற்கதிரால் தண்என்
கதிர் வரவால் பொங்கும் கடல். 2

நல்லோர் வரவான் நகைமுகங்கொண் டின்புறீஇ
அல்லோர் வரவான் அழுங்குவார்—வல்லோர்
திருந்துந் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்துஞ் சுழல்கால் வர. 3

ஆக்கும் அறிவான் அலது பிறப்பினுல்
மீக்கொள் உயர்விழிவு வேண்டற்க—நீக்கு
பவரார் அரவின் பருமணிகண் டென்றுங்
கவரார் கடலின் கடு. 4

## 3. நீதி வெண்பா

தாமரை பொன்முத்துச் சாமரைகோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வா—தாமழல்மற்
றெங்கே பிறந்தாலும் எள்ளாரே நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என். 1

சிற்றுணர்வோர் என்றுஞ் சிலுசிலுப்பர் ஆன்றமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே—வெற்றி பெறும்
வெண்கலத்தின் ஓசை மிகுமே விரிபசும் பொன்
ஒண்கலத்தில் உண்டோ ஒலி. 2

பாலில் நீர் தீயணுகப் பால்வெகுண்டு தீப்புகுந்து
மேலுநீர் கண்டமையும் மேன்மைபோல்—நூலின் நெறி
உற்றோர் இடுக்கண் உயிர்கொடுத்து மாற்றுவரே
மற்றோர் புகல மதித்து. 3

பொன்னும் கரும்பும் புகழ்பாலுஞ் சந்தனமும்
சின்னம் படவருத்தஞ் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து. 4

## 4. சிறுபஞ்ச மூலம்

சிலம்பிக்குத் தன்சினை கூற்றம்நீள் கோடு
விலங்கிற்குக் கூற்றம் மயிர்தான்—வலம்படா
மாவிற்குக் கூற்றம்மா ஞெண்டிற்குத் தன்பார்ப்பு
நாவிற்கு நன்றல் வசை. 1

நாணிலான் சால்பும் நடையிலான் நன்ஞேன்பும்
ஊணிலான் செய்யும் உதாரதையும்—ஏணிலான்
சேவகமும் செந்தமிழ் தேற்ருன் கவிசெயலும்
நாவகமே நாடி நகை. 2

பூவாது காய்க்கும் மரமுமுள ; நன்றறிவார்
மூவாது மூத்தவர் ; நூல்வல்லார்—காவா
விதையாமை நாறுவ வித்துள ; மேதைக்
குரையாமை செல்லும் உணர்வு. 3

வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்ந்து விருந்தோம்பித்—திருவாக்குந்
தெய்வதையும் எஞ்ஞான்றுந் தேற்ற வழிபாடும்
செய்வதே பெண்டிர் சிறப்பு. 4

## 5. நீதிநெறி விளக்கம்

கற்ருேர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்ருேர் அணிகலம் வேண்டாவா—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார். 1

அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும், கல்லார்
அவையஞ்சா ஆகுலச் சொல்லும்—நவையஞ்சி
ஈத்துண்ணுர் செல்வமும், நல்கூர்ந்தார் இன்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று. 2

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன் செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு. 3

முற்றும் உணர்ந்தவ ரில்லை முழுவதூ உம்
கற்றனம் என்று களியற்க—சிற்றுளியால்
கல்லுந் தகரும் தகரா கனங்குழாய் !
கொல்லுலைக் கூடத்தி னால். 4

பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல். 5

வஞ்சித் தொழுகும் மதியிலிகாள் ! யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின்—வஞ்சித்த
எங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு. 6

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென்(று) அகமகிழ்க—தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்ற எல்லாம்
எற்றே இவர்க்குநாம் என்று. 7

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண் துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். 8

# III. கதைப் பகுதி

## 1. முயல் யானையை வென்ற கதை

துன்னரும் அடவி தன்னில்
தும்பிகள் அநேகம் சூழப்
பன்னரும் சதுர தந்தன்
எனும் இறை பண்பின் வாழ்நாள்
அன்னநாள் மழைஇல் லாமல்
அருஞ்சுனை எல்லாம் வற்ற
" உன்னுநீர் எங்குண்(டு) ?" என்ன,
ஒற்றர் பார்த்(து) ஓடி வந்தே. 1

" சந்திர சரசு தண்ணீர்
ததும்பிட நிற்கும் " என்ன,
அந்த நற் சுனையை நாடி
யானைகள் அனைத்தும் செல்ல,
முந்தி அச் சுனையைச் சூழ,
முயற்சிலீ முகவேந்(து) அஞ்சி
மந்திரி விசயன் தன்னை
வரவழைத்(து) உரைக்கும் அன்றே. 2

" இற்றைநாள் வரையின் நாமும்
இனமும்இச் சுனையைத் தானே
சுற்றி இங்(கு) இருந்தோம்; இந்தத்
தும்பிகள் வந்து புக்கால்
மற்றுநாம் இருக்க லாகா ;
வனத்தில் வே(று) இடமும் இல்லை ;
உற்(று) இவன் இருக்க வேறோர்
உபாயம்நீ நினைப்பாய்" என்ன. 3

" ஆனையை வெல்லுமா(று) இங்(கு)
அருமையோ ? விடைதா " என்று
ஞானமந் திரவி சாரம் :
நனிபெறு விசயன் கூறிச்

சேனகா வலனும் அந்தச்
சிலீமுகன் அனுப்ப ஏகிக்
கானில்வே ழக்கூட்டத்தைக்
கண்களால் கண்டு நின்றே. 4

“ நகைத்துடன் கொல்வர் துட்டர்
நாமவர் நடுவிற் பட்டால் ;
வகைப்பட ஓர் பால் நின்றால்
வந்தடித் திடுவர் ; மாறாய்
மிகைப்பட அவர்கள் கையில்
வீறுடன் நாமும் சும்மா
அகப்படின், நம்மை அந்த
ஆனை தான் கொல்லும் அன்றே,” 5

என்று நன் மனத்தில் எண்ணி,
“ இதன் கையில் அகப் படாமல்
நின்று நாம் வெல்வோம் ” என்று
நினைத்(து) ஒரு குவட்டில் ஏறித்
துன்றிய களிற்று வேந்தைத்
“ தும்பி ! நீ சுகமோ ?” என்ன
வென்றிகொள் களிறு கண்டு
வியந்து “ நீ யாரோ ?” என்ன, 6

“ இசை நிலா எறிக்கும் திங்கள்
ஏவிய தூதன் ; என்பேர்
விசயன்என் பார்கள் ; உன்பால்
விடுக்க வந்(து) உற்றேன் ” என்ன ;
அசைவிலா தாகி அந்த
ஆனையும் பயந்து நின்றே,
“ விசய ! நீ வந்த தென்னை ?
விளம்(பு) ” என விளம்பும் அன்றே. 7

“ சந்திர சர(சு) என்(று) எங்கள்
சசிபக வான்பே ராலே,
இந்தநற் கானகத்தில்
இருஞ்சுனை ஒன்(று) உண் டாக்கி,

அந்தநற் சுனையில் எங்கள்
ஐயனும் தேவி மாரும்
முந்திய சலக்கி ரீடை
முயங்கியே பகலைக்(கு) எல்லாம், 8

" தண்ணரும் சுனைக்குக் காவல்
வைத்(து) எமைத் தாங்கள் போவார்.
விண்ணவர் உலகத் தாரும்
விரும்பினும் தொடப்ப டாது
நண்ணிய சுனை நீர் உண்ண
நாடினை நீயென்(று) எங்கள்
அண்ணலார் சினந்(து) உன் பக்கல்
அனுப்பினார் 'தடுத்தி' என்றே ; 9

மூவரின் முதல்வ ரான
முனைவனார் முடிமேல் வாழும்
தேவனைப் பகைத்த சிந்தைச்
செயலினை இனித் தடுத்தே,
மேவுதண் சுனைமேல் வைத்த
வேட்கையை விடுத்(து) இந் நேரம்
போவதே கருமம்" என்று
புத்திகள் பலவும் சொல்லி ; 10

" இங்(கு) இவை அனைத்தும் நானே
இயம்பினன் உன்னை வேண்டித்
திங்கள் அம் பகவன் உன்மேல்
சினந்தது கொஞ்சம் அல்ல ;
அங்(கு) அவன் சினமும் நானே
ஆற்றுவன் அன்பாற் சென்றே ;
வெங்களிற்(று) இனத்தினோடே
மீள்கநீ" என்று கூற ; 11

தந்தியின் அரசும் அந்தச்
சசந்தனை நோக்கி, " நீ சொல்
சந்திரன் எனும் தே(வு) இந்தத்
தடந்தனில் குடைவ(து) எப்போ(து)

அந்தவே ளையினில் வந்(து) அங்(கு)
அவனடி போற்றி யானும்
உய்ந்துமீண்(டு) ஏகுவேன் '' என்று
ஓதலும், முயல், ' நன்(று) என்று ' 12

அன்(று) இர(வு) உடன்கொண்(டு) ஏகி
அலைபுனல் தடத்தில் தோன்றும்
துன்றுவெண் மதியின் சாயை
சுட்டி, '' நீ காண்க,'' என்ன
நன்(று) அதைக் கண்டு, ' திங்கள்
நாதனே ' என்றும், ' சூழல்
ஒன்றிய உடுக்கள் அன்னேற்(கு)
உரியநன் மாதர் ' என்றும் 13

ஏனைய நினைந்து நெஞ்சம்
அழிந்து பின் தெளிந்து நின்று,
'' நானிதை அறியேன் ; எங்கள்
நாதனே பொறுக்க '' என்று
வானுயர் மதியை நோக்கி
வணங்கியே மீண்டும் போகக்
கானுறு முயல்கள் எல்லாம்
களித்து வாழ்ந் திருக்க அன்றே 14

—பஞ்சதந்திரப் பாடல்.

## 2. எமனை எலி விழுங்கிற்று

சர்க்கா ருக்குத் தாசன் நான். ஓர் நாள்
பக்கத் தூரைப் பார்க்க எண்ணி
விடுமுறை கேட்டேன் விடுமுறை இல்லை,
விடுமுறை பலிக்க நோயை வேண்டினேன் ;
மார்புநோய் வந்து மனத்தில் நுழைந்தது ;
மலர்ந்த என் முகத்தினில் வந்தது சுருக்கம் ;
குண்டு விழிகள் கொஞ்சம் குழிந்தன.
என்பெண் டாட்டி என்னை அணுகினள்.

எதிரில் பந்து மித்திரர் இருந்தார்.
தூயஓர் பெரியார் என்னுடல் தொட்டுக்
காயம் அநித்தியம் என்று கலங்கினர்.
எதிரில் நிமிர்ந்தேன் எமன்! எமன்!! எமனும்!!!
இருகோ ரப்பல்! எரியும் கண்கள்!!
சுவாசமும் கொஞ்சம் சுண்டுவ தறிந்தேன்;
சூடு மில்லை உடம்பைத்தொட்டால்!
கடிகா ரத்தின் கருங்கோடு காணேன்;
கண்டது பிழையோ, கருத்தின் பிழையோ
ஒன்றும் சரியாய்ப் புரிய வில்லை
என்ற முடிவை ஏற்பாடு செய்தேன்!
என் கதி என்ன? என்று தங்கை
சொன்னதாய் நினைந்தேன், விழிகள் சுழன்றன!
பேசிட நாக்கைப் பெயர்த்தே னில்லை,
பேச்சடங்கிற்றென பெருந்துயர் கொண்டேன்.
இரும்புத் தூண்போல் எமன்கை இருந்ததே!
எட்டின கைகள் என்னுயிர் பிடிக்க!
உலகிடை எனக்குள ஒட்டுற வென்பதே
ஒழிந்தது! மனைவி ஓயா தழுதாள்!
எமனர் ஏறும் எருமைக் கடாவும்
என்னை நோக்கி எடுத்தடி வைத்தது.
மூக்கிற் சுவாசம் முடியும் தருணம்
நாக்கும் நன்கு நடவாச் சமயம்,
சர்க்கார் வைத்தியர் சடுதியில் வந்து
பக்குவஞ் சொல்லிப் பத்துத் தினங்கள்
விடுமுறை எழுதி மேசைமேல் வைத்து
வெளியிற் சென்றார், விஷய முணர்ந்தேன்.
"அண்டையூர் செல்ல அவசியம் மாட்டு
வண்டி கொண்டுவா" என்றேன். மனைவி
'எமனிழுக் கின்றான்' என்றாள். அத்ததி
சுண்டெலி ஒன்று துடுக்காய் அம்மி
மறைந்ததும் அம்மியை நகர்த்தினேன்!
இங்குவந்த எமனை அந்த
எலிதான் விழுங்கி யிருக்கும் என்பதை

மனைவிக் குரைத்தேன். வாஸ்தவம் என்ருள் !
மாட்டு வண்டி ஓட்டம் பிடித்தது !
முன்னமே லீவுதந் திருந்தால்,
இந்நேரம் ஊர்போய் இருக்கலாமே !

—பாரதி தாசன்

## 3. புல்

[புல் தனது சரித்திரத்தைத் தானே கூறுகின்றது.]

பசும்புல் என் பெயர். பட்ட பாடெல்லாம்
ஒரு பெருங்கதையாம், உரைப்பதும் எளிதோ ?
விரிவிடம் படுமொரு வீட்டின் முன்றிலில்
வளர்ந்தேன், அங்குள்ள மனிதரோ கொடியர்.
தத்தம் மக்களும் தாமுமே என்றும்

பெற்றுப் பெருகிப் பெருங்குடி யாகி
வாழக் கருதுவர், வகுத்திடலென் ? அவர்
வாயிற் படியில் வாடி வணங்கி
வயிற்றிற் கின்றிநா வறண்டு 'தண்ணீர்
தண்ணீர்' என்று தவித்துத் தவித்து

வாளு ளெல்லாம் வருந்தி நொந்தேன்
குடிக்க நீரும் கொடுத்திலர் பாவிகள்.
விண்ணி லிருப்பினும் மண்ணில் யான்படும்
வருத்தமும் வாட்டமும் கண்டவ் வானம்
அளித்த தமுதம் ; ஆர வுண்டனன்.

விசும்பில் துளிகள் வீழி னல்லால்
பசும்புல் தலையிப் பாரிற் காணுமோ ?
மனிதரும் போற்றி வாழ்வமோ யாமும் ?
கேளீர் கதையினும் : கிடைத்த நீரை
அருந்திப் பலநாள் அயர்வும் நீங்கித்

தெளிந்து நிமிர்ந்தேன். சிறிதென் உடலில்
பச்சையும் பிடித்தது. பார்த்தனர் பாவிகள்.
தரிக்கிலர் உள்ளம் தழைக்கும் தலையைக்
காலால் மிதித்தனர் கழுத்தையும் அறுத்தனர்.
ஆட்டையும் மாட்டையும் அடித்து மேய்த்தனர்.

படர்ந்த இடமெல்லாம் பாழே யாக்கினர்.
இருந்த இடமும் இல்லா தியற்றினர்.
உயிரும் உடலும் குறுகி ஒருசிறு
வேராய்த் தரையுள் வெகுநா ளாக
ஒளித்திருந் தேன். அவ் வுறைவிடந் தேடி

வான்மழைத் தோழன் வந்தெனைக் கண்டு
'அறிவிலி போலும் நீ? அஞ்சேல் அஞ்சேல்.
யாவையும் காப்பவன் ஈசன்' என்றெல்லாம்
தேற்றிய மொழியெனக் கூற்றமும் உறுதியும்
பெரிதும் அளித்தது. பெயர்த்தும் மெலமெலத்

தலையெடுத் தேன் அதைத் தறுகணர் கண்டு
பிடித்தனர் வெட்டினர் பிடுங்கி எறிந்தனர்
சாணியைக் கரைத்துத் தலையில் கொட்டினர்
துடைப்பங் கொண்டு துரத்தி யடித்தனர்.
யாவும் சகித்தங் கிருந்தனன். என் செய்வேன்?

தளர்ச்சி யுற்றிலேன். தரும்நற் காலம்
வருமெனச் சற்று மறைந்து தங்கினேன்.
இவரை விடயான் அதிபல சாலியோ?
மறைந்து சின்னாள் வாழுங் காலை.
ஒருதினம் வீட்டில் உள்ளார் அனைவரும்

உறவினர் இருக்கும் ஓரூர் சென்றனர்.
வெகுநா ளாகியும் மீண்டிலர். யானும்,
இதுவே தருணம் என்று நினைத்து,
விரைவின் வளர்ந்து, விரும்பியபடி யெலாம்
தழைத்துச் செழித்துச் சார்விட மெங்கும்

படர்ந்து பற்றிப் பல்கிளை யாகி,
வாய்த்த இவ் வித்தாம் மக்களைப் பெற்று
வாழ்ந்திருக்கின்றேன். மற்றவர் வாழும்
வீட்டையும் இடித்து விடும்வலி இந்நாள்
எனக்குண் டாயினும், இழிவென விடுத்தேன்.

செய்பிழை யாவும் தெரிந்து பொறுத்தேன்,
பொறுத்தவர் என்றும் பூமி யாள்வார்.
எனக்குச் சொந்த மில்லா இடமெதாம்?
புல்லே யாயினும் புல்லிய குணமிலை.
அற்பர் இகழினும் அறிவால் பொறுப்பேன்.

தலையில் மிதிப்பினும் தயவால் சகிப்பேன்.
முயற்சி கைவிடேன், முயற்சி கைவிடாத்
திறமுடை யோரைத் திருமகள்
பெரிதும் உவந்து பேணமுன் நிற்குமே.

—சி. தேசிக விநாயகம் பிள்ளை

# IV. பிற வகைகள்

## 1. நாடு

எந்தமது திருநாடு கேட்கிருயோ தம்பி?
ஏற்றமுள்ள இந்திரனர் ஆளும் எங்கள் நாடு;
சந்திரர்கள் சூரியர்கள் தவம்புரியும் நாடு;
தவமுனிவர் ரிஷிகளெல்லாம் வாழும் எங்கள் நாடு;
கொச்சிமலை குடகுமலை எங்களது நாடு;
குமரேசர் வாழுவதும் எங்களது நாடு;
பச்சைமலை பவளமலை எங்களது நாடு;
பரமசிவன் வாழுவதும் எங்களது நாடு.

## 2. நகர்

தேன் பெருகுஞ் சோலைத் தென்னன் வளநாடு
கனியுதிருஞ் சோலை கனமதுரை நன்ருடு
வாழை வடக்கீனும் வான் கமுகு மேற்கீனும்
கரும்பும் இளநீரும் கண் திறந்து மடை பாயும்
கட்டுக் கலங்காணும் கதிர் உழக்கு நெல்காணும்
அரிதாள் அறுத்துவர மறுதாள் பயிராகும்
அரிதாளின் கீழாக ஐங்கலத்தேன் கூடுகட்டும்
மாடுகட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல் என்று
ஆனைகட்டிப் போரடிக்கும் அழகான தென்மதுரை.

—அல்லி அரசாணி மாலை

## 3. ஏற்றப் பாட்டு

ஏழைகள்மேல் பட்சம் இரங்கவேணும் வேலா
ஐந்துடனே ஒன்று ஐப்பசியாம் மாதம்
மிக்கமழை பெய்து ஒதுங்கும் வயல்நீரும்
ஓங்கிநிற்கப் பயிரும் ஓச்சலில்லாக் கதிரும்
கண்களிக்கக் கண்டு, களிப்புடனே கொய்து
களிப்புடனே கொய்து காளை கட்டித் துவைத்து
குலத்தவருக் கீந்து குடிகளெல்லாம் வாழக்
குறைச்சலிலா வாழ்வைக் குழந்தை மனையோடு
கூட்டிவையும் வேலா! இனிமறவேன் வேலா!

## 4. ஈசுர வருடத்துப் பஞ்சம்

இராகம்—உசேனி. திசிரஜாதி—மத்தியதாளம்

பல்லவி

பஞ்சம்தீர் ஐயா! உனையன்றித்
தஞ்சம் ஆர் ஐயா! (பஞ்சம்)

அநுபல்லவி

வஞ்சக மேகம் உலோபர்கள் போலே
மண்ணில் மழைபொழி யாமையினாலே
சஞ்சல மாகித் தளர்ந்தோமேன் மேலே
சாமி! கதிஉன்தன்—தாமரைக் காலே (பஞ்சம்)

சரணங்கள்

எட்டுநாள் பத்துநாள் பட்டினி யோடே
இடையிலே கந்தை இருகையில் ஓடே
ஒட்டி உலர்ந்த உடல் என்புக் கூடே
ஒருகோடி பேர்கள் வசிப்பது காடே
ஊரும் இல்லாமல்—குடிக்கத்தண்
நீரும் இல்லாமல்—அன்னமெனும்
பேரும் இல்லாமல்—பசிதீர்க்க
ஆரும் இல்லாமல்
பாரில் அனேகர் பரதேசி ஆனாரே
ஊரில் அனேகர் உயிர் மாண்டு போனாரே, (பஞ்சம்) 1

தாரங்களையே புருஷர் கைவிட்டார்
தந்தைதாய் பிள்ளை களை விலையிட்டார்
வேரும் இலையும் கிழங்கும் சாப்பிட்டார்
வெறுங் கையராய் வெளி யே புறப்பட்டார்
வேலியும் அற்றார்—பெண்சாதிகள்
தாலியும் விற்றார்—வேலை செய்து
கூலியும் பெற்றார்—பலபல
சோலிகள் உற்றார்
தோலும் எலும்புமாய்த் தோன்றியே சோம்பினார்
பாலரும் தம் தாய்ப் பால் அற்றுத் தேம்பினார். (பஞ்சம்) 2

பஞ்சம் இதுபோலக் கண்டதிலேயே
பலபேர் அடுப்பில் வையார்கள் உலேயே
நஞ்சம்போல் நாட்குநாள் ஏறும் விலேயே
நாங்கள் படுந்துன்பம் நானூறு மலேயே
நரர்கள் மெய்வாடி—மனமிக
உருகித் தள்ளாடிக்—கண்ணீர் ஆருய்ப்
பெருகியே ஓடிப்—பிக்ஷை கேட்க
வருபவர் கோடி
இரவுபகல் ஏங்கும் ஏழைகள் சத்தமே
பரனே கலியொடு பண்ணினுர் யுத்தமே. (பஞ்சம்) 3

மண்ணனில் அனேகர் என் கண்ணின்முன் மாய்ந்தார்
மரஞ்செடி புல்லேயும் மாடுபோல் மேய்ந்தார்
எண்ணிலாப் பேர்கள் சருகுபோற் காய்ந்தார்
இளேத்துக் களேத்துத் தவித்துடல் ஓய்ந்தார்
ஏங்கிடு வாரும்—களே கொண்டு
தூங்கிடு வாரும்—அன்னம் உண்ண
வாங்கிடு வாரும்—உடன் உயிர்
நீங்கிடு வாரும்
ஈங்கிந்த வண்ணம் இருண்டது மேதினி
தாங்கும் வேத நாயகா! தஞ்சம் ஏதினி! (பஞ்சம்) 4

—வேதநாயகம் பிள்ளே

## 5. போலி வேடம்

காதிலே திருவேடம்; கையிலே
செபமாலே; கழுத்தின் மார்பின்
மீதிலே தாழ்வடங்கள்; மனத்திலே
கரவடமாம்; வேடமாமோ?
வாதிலே அயன் தேடும் தண்டலேநீள்
நெறியரே! மனிதர் காணும்
போதிலே மவுனம்; இராப் போதிலே
ருத்ராக்கப் பூனே தானே.

—தண்டலேயார் சதகம்

## 6. இளந் தமிழருக்கு

இளந் தமிழா! உன்னைக் காண
இன்பமிகப் பெருகுது,
இதுவரைக்கும் எனக்கிருந்த
துன்பம் சற்றுக் குறையுது,
வளந்திகழும் வடிவினோடும்
வலிமை பேசி வந்தனை
வறுமைமிக்க அடிமைநிற்கு
வந்தஊக்கம் கண்டுநான்
தளர்ந்திருந்த சோகம்விட்டுத்
தைரியம் கொண்டேனடா?
தமிழர் நாட்டின் மேன்மைமீளத்
தக்க காலம் வந்ததோ,
குளிர்ந்த என்றன் உள்ளம்போலக்
குறைவிலாது நின்றுநீ
குற்றமற்ற சேவை செய்து
கொற்ற மோங்கி வாழ்குவாய்.

அன்பினோடும் அறிவு சேர்ந்த
ஆண்மை வேண்டும் நாட்டிலே,
அச்சமற்ற தூயவாழ்வின்
ஆற்றல்வேண்டும் வீட்டிலே,
இன்பமான வார்த்தை பேசி
ஏழைமக்கள் யாவரும்
எம்முடன் பிறந்த பேர்கள்
என்ற எண்ணம் வேண்டுமே;
துன்பமான கோடிகோடி
சூழ்ந்துவிட்ட போதிலும்
சோறுதின்ன மானம் விற்கும்
துச்சவாழ்வு தொட்டி டோம்.
என்பதான நீதியாவும்
இந்த நாட்டில் எங்கணும்
இளந்தமிழா! என்றும் நின்று
ஏடெடுத்துப் பாடுவாய்.

—நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை

## 7. தமிழன்

தமிழன் என்றோர் இனமுண்டு
தனியே அவற்கொரு குணமுண்டு
அமிழ்தம் அவனுடைய மொழியாகும்
அன்பே அவனுடைய வழியாகும். (தமிழன்) 1
அறிவின் கடலைக் கடைந்தவனும்
அமிர்தத் திருக்குறள் அடைந்தவனும்
பொறியின் ஆசையைக் குறைத்திடவே
பொருந்திய நூல்கள் உரைத்திடுவான். (தமிழன்) 2
கவிதைச் சுவைகளை வடித்தெடுத்தான்
கம்பன் பாட்டெனப் பெயர் கொடுத்தான்
புவியில் இன்பம் பகர்ந்தவெலாம்
புண்ணிய முறையில் நுகர்ந்திடுவான். (தமிழன்) 3
கலைகள் யாவினும் வல்லவனும்
கற்றவர் எவர்க்கும் நல்லவனும்
நிலைகொள் ளும்பல அடையாளம்
நின்றன இன்னும் உடையோனும். (தமிழன்) 4
சிற்பம் சித்திரம் சங்கீதம்
சிறந்தவர் அவனினும் எங்கேசொல்
வெற்பின் கருங்கல் களிமண்போல்
வேலைத் திறத்தால் ஒளிபண்ணும் (தமிழன்) 5
உழவும் தொழிலும் இசைபாடும்;
உண்மை; சரித்திரம் அசைபோடும்.
இழவில் அழுதிடும் பெண்கூட
இசையோ டழுவது கண்கூடு. (தமிழன்) 6
யாழும் குழலும் நாதசுரம்
யாவுள தண்ணுமை பேதமெலாம்
வாழும் கருவிகள் வகைபலவும்
வகுத்தது தமிழெனல் மிகையலவாம். (தமிழன்) 7
மானம் பெரிதென உயிர்விடுவான்
மற்றவர்க் குதவிடத் துயர்படுவான்
தானம் வாங்கிட கூசிடுவான்
'தருவதுமேல்' எனப் பேசிடுவான். (தமிழன்) 8

—நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை

## 8. குழந்தைச் சிரிப்பு

ஆனந்தமான சிரிப்பு—எங்கள்
அருமை மணியின் சிரிப்பு.
ஈனமில்லாத சிரிப்பு—எங்கள்
இன்ப மணியின் சிரிப்பு.
கானம் நிலவும் சிரிப்பு—எங்கள்
கண்ணின் மணியின் சிரிப்பு.
வானத்துத் தேவர் மகிழும்—எங்கள்
வாழ்வு மணியின் சிரிப்பு. 1
துன்பங்கள் நீக்கும் சிரிப்பு—உளத்
துயரங்கள் போக்கும் சிரிப்பு.
இன்பங்கள் ஆக்கும் சிரிப்பு—எங்கள்
இதய மணியின் சிரிப்பு.
முன்பு தவங்கள் செய்துற்ற—எங்கள்
முத்து மணியின் சிரிப்பு.
வன்புக ளற்ற சிரிப்பு—எங்கள்
வைர மணியின் சிரிப்பு. 2
கள்ளம் கபடமற்ற சிரிப்பு—எங்கள்
காதல் மணியின் சிரிப்பு.
விள்ளற் கரிய சிரிப்பு—எங்கள்
வீட்டு மணியின் சிரிப்பு.
துள்ளிக் குதிக்கும் சிரிப்பு—எங்கள்
ஜோதி மணியின் சிரிப்பு.
வெள்ளத்தைப் போலின்பம் பொங்கும்—எங்கள்
வேந்தன் மணியின் சிரிப்பு. 3
நிலவொளி செய்யும் சிரிப்பு—எங்கள்
நீல மணியின் சிரிப்பு.
புலவர்கள் போற்றும் சிரிப்பு—எங்கள்
புதிய மணியின் சிரிப்பு.
கலகல என்ற சிரிப்பு—எங்கள்
கட்டி மணியின் சிரிப்பு.
நலமிகும் தெய்வச் சிரிப்பு—எந்த
நாளும் வாழியச் சிரிப்பு. 4

—பரலி. சு. நெல்லையப்பர்

## 9. சோம்பேறிப் பையன்

ஊரும் எறும்பே! ஒரு மணி நேரம்
ஒளித்து விளையாட வாராயோ ?
நேரமில்லை ; மழைக்காலம் நெருங்குமுன்
நெல் மணி சேர்த்திட வேண்டு மப்பா! 1

மாமலர் தோறும் திரியும் வண்டே !—பாண்டி
வட்டாட என்கூட வாராயோ ?
ஆமிந்த வேளை அலர் மலர் மூடுமுன்
அள்ளித்தேன் சேர்த்திட வேண்டு மப்பா. 2

காகமே ! கால்மணி நேரமென்னோடு
களித்து விளையாட வாராயோ ?
ஆஹா ! நேர மெனக்கில்லையப்பா !—மழைக்
காகும் கூடுகட்ட வேண்டுமப்பா ! 3

ஓடுசிற்றாறே ! ஒரு நிமிஷம் விளை
யாட உவந்து நீ வாராயோ ?
நாடு செழிக்கநன் னீர்விட வேண்டும்என்
நண்பனே ! போதெனக் கில்லையப்பா ! 4

வானத் துலாவிடும் சூரியனே ! கீழே
வந்து விளையாட வாராயோ ?
போனகம் கொள்ளவும் நேரமில்லை. புத்தி
கெட்ட பையா ! வரமாட்டேனப்பா ! 5

ஓகோ ! இதுவென்ன ஒருவரும் என்கூட
ஓடி விளையாட வாராரோ ?
ஆகாத பிள்ளையோ நான் மட்டும் அந்தப்பேர்
அண்டாமல் பார்த்திட வேண்டுமினி. 6

—எஸ். முத்துசாமிப் பிள்ளை

# உரை நடை

## 1. திருக்குறளால் வந்த பயன்

மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

தஞ்சாவூர் அரண்மனையில் சரசுவதி மகால் என்னும் பெயர் பெற்ற பழைய புத்தகசாலை ஒன்று உண்டு. அங்கே உள்ள ஏட்டுச் சுவடிகளையும் அச்சுப் புத்தகங்களையும் பார்க்கும்பொருட்டு ஒவ்வொரு நாளும் பலர் சென்று வருவார்கள். சரபோஜி அரசர் அமைத்த பல தர்மங்களுள் இப்பொழுது மிக்க பயனுடையதாக விளங்குவது அந்தப் புத்தகசாலை. அதில் அம்மன்னர் காலத்தில் பல்லாயிரக் கணக்கான சுவடிகள் இருந்தன. தென்மொழி, வடமொழி, தெலுங்கு, மகாராஷ்டிரம் முதலிய மொழிகளில் உள்ள சுவடிகள் அங்கே உண்டு. சங்கீதம், பரத சாஸ்திரம், வைத்தியம், சோதிடம், கஜ சாஸ்திரம், அசுவ சாஸ்திரம் முதலிய பல்வகைக் கலைகளுக்குரிய நூற் சுவடிகளும் இருந்தன. அந்த அந்த வகையில் தேர்ச்சிபெற்ற புலவர்களைக்கொண்டு அந்நூல்களை வருவித்துச் சரபோஜி மன்னர் தொகுத்து வைத்தார். அந்தப் புத்தகசாலையில் தமிழ் நூல்கள் பல சேகரிக்கப்பட்டதற்குக் காரணமான ஒரு நிகழ்ச்சியை நான் சிலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். அது வருமாறு :—

சரபோஜி மன்னர் ஒரு முறை காசி யாத்திரை சென்றார். அப்பொழுது கல்கத்தா நகரத்தில் இருந்த ராஜப் பிரதிநிதியைக் காண எண்ணினார். அவரைப் பார்க்கவேண்டியதற்குரிய அநுமதியை முன்னரே பெற்று ஏற்ற கையுறைகளுடன் சென்று கண்டார்.

அந்த ராஜப் பிரதிநிதி தமிழ் நாட்டிலுள்ள ஓர் அரசர் தம்மைப் பார்க்க வருவதை அறிந்து தமிழ் நாட்டின் சிறப்புகளை விசாரித்து வைத்திருந்தார். அவர் திருக்குறளின் ஆங்கில மொழி பெயர்ப்பைப் படித்து இன்புற்றவர். அது தமிழ் நாட்டில் உண்டான சிறந்த நூலாதலின் தமிழ் மூல

நூலைப்பற்றி சரபோஜி அரசரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்று எண்ணியிருந்தார்.

சரபோஜியும் ராஜப் பிரதிநிதியும் வழக்கம்போல ஒருவர்க்கொருவர் செலுத்தவேண்டிய மரியாதைகளைச் செலுத்திவிட்டுப் பிறகு சம்பாஷணை செய்தனர். அப்பொழுது ராஜப் பிரதிநிதி தஞ்சை யரசரைப் பார்த்து, "தமிழ் நாட்டில் உண்டான திருக்குறளின் ஆங்கில மொழி பெயர்ப்பை நான் படித்து இன்புற்றதுண்டு. அதன் தமிழ் மூலத்தைப்பற்றிக் கேட்க வேண்டுமென்ற ஆவல் எனக்கு இருக்கிறது. ஆதலின் சில செய்யுட்களைச் சொல்லவேண்டும்" என்றார். அரசர் அதுகாறும் தமிழின்பால் கவனங் கொண்டவரல்லர். தம் அரண்மனையில் சில புத்தகங்கள் உள்ள ஒரு சிறிய புத்தகசாலை இருப்பதைமட்டும் அறிந்திருந்தனர். பிரயாண காலத்திலும் வடமொழி, மகாராஷ்டிரம் முதலிய மொழிகளில் தேர்ச்சி பெற்ற வித்துவான்களையே உடன் வைத்திருந்தார். அவருடைய தாய்மொழி மகாராஷ்டிரமாதலின் திருக்குறளைப்பற்றி அந்த சமயத்தில் தாமாகவேனும் அருகிலுள்ள வித்துவான்கள் வாயிலாகவேனும் அறிந்து சொல்லும் நிலையில் அவர் இல்லை. இன்னது செய்வதென அவருக்கு முதலில் தோன்றவில்லை. மிகவும் கூரிய அறிவுடையவராதலின் அரசர் அப்பால் ராஜப்பிரதிநிதியை நோக்கி, "என்னுடைய புத்தகசாலையில் இதைப் போல ஆயிரக் கணக்கான தமிழ் நூல்கள் இருக்கின்றன. ஆனால் எல்லாவற்றையும் நான் தெரிந்துவைப்பது முடியாத காரியம். தாங்கள் உத்தரவு கொடுத்தால் நான் ஊர் போய்ச் சேர்ந்தவுடன் அந்தப் புத்தகத்தை அனுப்புகிறேன்" என்றார். ராஜப் பிரதிநிதி, "இதைப்போல எவ்வளவு தமிழ்ப் புத்தகங்கள் இருக்கின்றன?" என்று கேட்டார். "எவ்வளவோ இருக்கின்றன. ஊர் போனவுடன் அவற்றின் நாமாவளியையும் அனுப்புகிறேன்" என்றார் அரசர். ராஜப் பிரதிநிதி அங்ஙனமே செய்யலாமென்று சொல்லி விடை கொடுத்தனுப்பினர்.

தாம் அரசராகவுள்ள நாட்டுக்குரிய மொழியில் கவனம் செலுத்தாதிருந்தமை ஒரு பெருங்குறை யென்பது அதன்

பின்னரே சரபோஜி அரசர் மனத்திற்பட்டது. 'இனி அங்ஙனம் இருத்தல் கூடாது; தமிழ்ச் சுவடிகளைத் தொகுத்துத் தமிழ்ப் புலவர்களையும் ஆதரித்து வரவேண்டும் என்ற உறுதியை அவர் மேற்கொண்டார். ஆதலின், தஞ்சாவூர் சேர்ந்தவுடன் எங்கெங்கே தமிழ்ப் புலவர்கள் உள்ளார்கள் என்பதை அறிய அவர் தலைப்பட்டார். தமிழ் ஏட்டுச் சுவடிகளையும் விலை கொடுத்து வாங்கித் தொகுத்தார். அப்பொழுது ஒவ்வொரு நூலிலும் பல பிரதிகள் கிடைத்தன; திருக்குறளில் எத்தனையோ சுவடிகள் வந்து குவிந்தன. தமிழ் வித்துவான்களுடைய பரம்பரையில் பிறந்தவர்கள் பலர் தங்கள் முன்னோர்கள் சேர்த்துவைத்திருந்த சுவடிகளைப் பயன்படுத்த வகையறியாமல் இருந்தனர். அவை இடத்தை அடைத்துக்கொண்டு கிடப்பது அவர்களுக்கு வெறுப்பைத் தந்தது. அதனால் பலர் பதினெட்டாம் பெருக்கிற் காவிரியாற்றிலே சுவடிகளை விட்டும் அவற்றை நெய்யில் தோய்த்து விதிப்படி ஆகுதி பண்ணியும் அழித்துவந்தனர். தங்கள் வீட்டிலுள்ள சுவடிக் குவியல்களை வேறு வகையிலே பலர் குறைத்துவந்தனர். அத்தகைய சமயத்தில் சரபோஜி அரசர் செய்த முயற்சிகளால் அச் சுவடிகளுக்கு மதிப்பும் உயிரும் உண்டாக ஆரம்பித்தன. தங்கள் வீட்டில் சுமையாகக் கிடந்த சுவடிகளுக்கு விலை கிடைப்பதென்றால் யார் விடுவார்கள்? பலர் பல சுவடிகளைக் கொடுத்து விலை பெற்றார்கள். அக்காலத்தில் ஒரு சுவடியை ஏட்டில் எழுதவேண்டுமானால் நூலின் அளவுக்கு ஏற்றபடி ஒரு குறிப்பிட்ட கூலி உண்டு. தஞ்சை புத்தகசாலைக்கு அரசர் புத்தகங்களை வாங்குகின்றாரென்பது தெரிந்தவுடன் அவற்றின் விலைகள் ஏறின. நான்கு ரூபாய் விலை மதிப்புள்ள புத்தகம் நாற்பது ரூபாய்க்கு விற்கப்பட்டது. தமிழ்ப் புத்தகங்களை வாங்கியதோடன்றி அவற்றிற்கேற்ப மற்ற மொழிகளிலுள்ள புத்தகங்கள் பலவற்றையும் அரசர் வாங்கித் தொகுத்தார். இதனால் சரசுவதி மகால் ஒரு பெரிய புத்தகசாலையாயிற்று.

தமிழ் நூல்களைச் சேர்ப்பதற்கும் அவற்றின் சம்பந்தமான காரியங்களைக் கவனிப்பதற்கும் சில வித்துவான்களை அரசர் நியமித்தார். அங்ஙனம் நியமிக்கப்பட்டவர்கள்

கோடீச்சுரக்கோவை முதலிய நூல்களை இயற்றிய கொட்டையூர் ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர், காரைக்குறிச்சி வேலாயுத உபாத்தியாயர், திருவேங்கிடத்தா பிள்ளை, சுப்பராயக் கவிராயர், வெங்கடாசலம் பிள்ளை முதலியோர் ஆவர்.

தாம் வாக்களித்தபடியே சரபோஜி அரசர் திருக்குறட் பிரதியையும், தமிழ் நூற் பெயர்களையும் ராஜப் பிரதிநிதிக்கு அனுப்பி மகிழ்வித்தார்.

அந்தக் காலத்தில் தமிழ் வித்துவான்களல்லாத சிலர் ஏட்டுப் பிரதிகளை ஜாப்தா பண்ணி வைத்திருந்தனர். அதனை நான் பிற்காலத்தில் பார்த்ததுண்டு. 'சிவமயம் நாலடியார்,' 'கணபதி துணை நாலடியார்,' 'ராமஜெயம் நாலடியார்,' என்றும், 'நன்றாக குரு வாழ்க குருவே துணை நாலடியார்' என்றும் புத்தகங்களின் பெயர்கள் அதில் எழுதப்பட்டிருந்தன. அதைப் பார்த்த சாதாரண ஜனங்களும் தமிழறி வில்லாத வேறு பலரும் "இத்தனை நாலடியாரா? இவ்வளவையும் எப்படி வித்துவான்கள் படிக்கிறார்கள்?" என்று ஆச்சரிய முற்றார்கள். ஏட்டில் எழுதுபவர்கள் தங்கள் தங்கள் மதக் கொள்கைக்குத் தக்கபடி, கணபதி துணை யென்றும், சிவமய மென்றும், சிவாய நம என்றும், பிறவாறும் முதலில் எழுதி விட்டுப் பிறகு நூற் பெயரை எழுதியிருப்பார்கள். இடையே முற்றுப்புள்ளி முதலிய குறியீடுகள் இரா. ஆதலின் அவற்றைக் கண்டு ஜாப்தா செய்தவர்கள், தமிழறிவு இல்லாமையால் அவற்றைப் புத்தகப் பெயராக எண்ணிச் சேர்த்து எழுதிவிட்டார்கள். பின்பு தஞ்சையில் நீதிபதியாக இருந்தவரும் வடமொழி தென்மொழிகளில் பயிற்சியுடையவருமாகிய பர்னல் துரை யென்பவர் இந்த ஜாப்தாவின் விசித்திர அமைப்பை அறிந்து வியப்பும் வருத்தமும் அடைந்தார். அவர் தக்க வித்துவான்களைக் கொண்டு ஒழுங்கான ஜாப்தா ஒன்றை எழுதச் செய்தார்; அங்ஙனம் செய்வித்த பிரதிகளைத் தம் நாட்டுக்குச் செல்லுகையில் உடன்கொண்டு சென்றார்.

சரபோஜி அரசர் காலத்திற்குப் பின்பும் பர்னல் துரை வந்ததற்கு முன்புமாகிய காலத்தில் அப்புத்தக சாலையிலுள்ள நூல்களிற் பலவற்றைப் பலர் இரவலாக வாங்கிச்

சென்று திருப்பிக்கொடாமல் இருந்துவிட்டனர். அங்ஙனம் போன நூல்கள் பல. பர்னல் துரையின் கருத்து இதன்பால் செலுத்தப்பட்ட பிறகே இத்தகைய குறைபாடு நீங்கி ஒழுங்கு ஏற்பட்டது. இன்றும் பல அருமையான ஏட்டுச் சுவடிகள் சரசுவதி மகாலில் காணப்படுகின்றன.

### பயிற்சி

1. பொருள் கூறு: பெயர் பெற்ற, கஜம், அசுவம், கையுறை, நாமாவளி, தலைப்பட்டனர், பரம்பரை.

2. வழக்கம்போல், பிற்காலத்தில், உத்தரவு—தனித்தனி வாக்கியத்தில் அமைத்து எழுது.

3. பதம் பிரித்து எழுது: பார்த்ததுண்டு, தமிழறிவு.

4. அறிந்து, அரிந்து; கூறிய, கூரிய—பொருள் வேறுபாடு என்ன?

5. வெறுப்பு, புதிய, இன்புற்று—எதிர்ப்பதம் கூறு.

6. அவர் கல்கத்தா நகரிலிருந்த ராஜப் பிரதிநிதியைக் காண விரும்பினர்—எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் எழுது.

### கேள்விகள்

1. 'சரசுவதி மகால்' என்பது யாது? அதைப்பற்றி ஒரு பாரா எழுதுக.

2. சரபோஜி அரசர் ராஜப்பிரதிநிதியைச் சந்தித்த பொழுது ராஜப் பிரதிநிதி அரசரிடம் விரும்பிக் கேட்டது என்ன?

3. அச்சமயம் ராஜப் பிரதிநிதியின் விருப்பத்தை அரசரால் ஏன் நிறைவேற்ற முடியவில்லை? அரசர் ராஜப் பிரதிநிதியிடம் கூறிய பதில் என்ன?

4. ராஜப் பிரதிநிதி சரபோஜி அரசரிடம் திருக்குறளைப் பற்றி விசாரித்ததால் ஏற்பட்ட பலன் என்ன?

5. அக்காலத்தில் தமிழ்ப் புத்தகங்களின் ஜாப்தாவைத் தயாரித்தவர்கள் செய்த தவறு என்ன? அது யாரால், எவ்விதம் சீர்திருத்தப் பட்டது?

2617—3

# 2. கோப் பெருந் தேவியார்

ரா. பி. சேதுப்பிள்ளை, பி.ஏ., பி.எல்.

முன் ஒரு காலத்தில் பழம்பதியாகிய மதுரை மா நகரில் நெடுஞ்செழியன் என்னும் மன்னவன் நீதி தவறுது அரசாண்டு வந்தான். அவனது அரண்மனையில் மறை ஒலியாகிய மங்கல ஒலியேயன்றி அசையா மணியோசையை எந்நாளும் கேட்டதில்லை. அவ்வரசன் நீதியை உயிரினும் உயர்வாகப் போற்றி நெறி தவறுது அரசியல் நடத்தினன்.

அவ்வரசனது மனைவியாகிய கோப் பெருந் தேவி அழகால் திருமகளையும், கற்பால் அருந்ததியையும் போன்றவளாய், நல்லிசைப் புலமை வாய்ந்து விளங்கினுள்.

அவ்வரசனது மனைவியாகிய கோப் பேருந் தேவியார் கால்களில் அணிந்திருந்த சிலம்புகளில் ஒன்று காணுமற் போயிற்று. அழகிய பொற்சிலம்பைக் காணுத அரசி பெரிதும் மனம் வருந்தினுள். அரண்மனைச் சிலம்பைக் கவர்ந்து சென்ற கள்வனைக் கண்டுபிடிக்கப் பலவாறு முயன்றும் பயன்படவில்லை. இவ்வாறு அரசனது மனம் சிலம்பைக் காணுத கவலையால் பெரிதும் வருந்தியிருக்கையில், அரண்மனையைச் சார்ந்த பொற்கொல்லன் ஒருவன் அந்தப்புரத்தின் அருகே அரசனைக் கண்டு பணிந்து, "அரசே, கோப்பெருந் தேவியாரது காற்சிலம்பை ஒரு கள்வன் கையில் கண்டேன்; அக்கள்வன் என் சிறு மனையில் அகப்பட்டான்" என்ருன். அதைக் கேட்ட அரசன் அளவிலா மகிழ்வடைந்து வினை விளையும் காலமாதலால் "அக்கள்வனைக் கொன்று சிலம்பைக் கொண்டு வருக" என்று தன் காவலாளரை ஏவி அந்தப்புரம் சென்ருன்.

அரண்மனைச் சிலம்பைக் கவர்ந்து கொண்டு பிறன் மீது பழி சுமத்தக் கருதிய வன்னெஞ்சக் கள்வனுகிய பொற்கொல்லன், தான் எண்ணிய தீய எண்ணம் எண்ணியவாறே முற்றுப் பெற்றது என்று இறுமாந்து, வாளும் வேலும் தாங்கிய காவலாளர் பின்னேவரப் படைத் தலைவன் போல முன்னே சென்ருன். இவ்வாறு மிக ஊக்கத்தோடு வழி நடந்து தன்மனையை அடைந்து, யாதொரு குற்றமும் அற்ற

வனாய் அமர்ந்திருந்த கோவலனை அவ்வீரர்களிடம் காட்டி, "இவன்தான் அரசனால். கொலை செய்யுமாறு ஆணை செய்யப்பட்ட கள்வன்; இவனைக் கொல்லுங்கள்" என்றான். அதைக் கேட்ட கல்லாக் களிமகனாகிய வீரன் ஒருவன் தன் கையிலிருந்த கூரிய வாளால் கோவலனை வெட்டிக் கொன்றான்.

இஃதிவ்வா றிருக்கையில், அரசனது அரண்மனையில் கோப் பெருந் தேவி ஒரு தீக்கனவு கண்டாள். அரசனது செங்கோலும் வெண்குடையும் நிலைகுலைந்து விழுவதுபோல வும், விண்மீன்கள் உதிர்ந்து விழுவது போலவும், எண்டிசை யும் அதிர்ந்து நடுங்குவது போலவும் அரசமாதேவி கனவு கண்டு அதனை அரசனிடம் அறிவிக்கச் சென்றாள். அப் பொழுது அரசன் தனது அத்தாணி மண்டபத்தில் அரியா சனத்தில் இனிதமர்ந்திருந்தான். கோப் பெருந் தேவியும் அவனருகே அமர்ந்து தான் கண்ட தீக்கனவை மனங் கலங்கிக் கூறித் துயருற்றாள். அரசனும் அம்மொழியைக் கேட்டு அரசாங்கத்திற்கு என்ன தீங்கு நேருமோ என்று எண்ணி வாட்டமுற்றான்.

இவ்வாறு இருவரும் கவலைக் கடலில் மூழ்கியிருக்கையில், கோவலனது மனைவியாகிய கண்ணகி அரண்மனை வாயிலை அடைந்து, அங்கு நின்ற காவலாளனிடம் அரசனைத் தான் காண விரும்புவதாகக் கூறினாள். அரசனும் அவ்வாறே அனுமதி கொடுக்கக் கற்புடைய மங்கை காவலன் கண் ணெதிரே தோன்றினாள். அவளது சோர்ந்த மேனியும் கலங் கிய கண்களையும் கண்ட காவலன், "மாதே நீ யார்?" என்று வினவினான். அதற்கு அம்மாது, "ஓர் பசுவின் கன்றைக் கொன்ற தன் மகனைத் தானே கொன்று நீதி போற்றிய வள வன் ஆளும் சோழ நாட்டில், மாசாத்துவானுக்கு மகனாய்ப் பிறந்து வறுமையால் இந்நகர் புகுந்து, என் காற் சிலம்பை விற்க வந்து நின்றால் கொலைக் களப்பட்ட கோவலன் மனைவியே யான்" என்றாள். அது கேட்ட அரசன் "பெண்ணணங்கே! கள்வனைக் கொல்லுதல் கொடுங் கோலன்று; அது அறநூல் விதித்த முறையாகும்" என்று மொழிந்தான். தனது கணவனைக் கள்வன் என்று காவலன்

கூறிய கடுமொழியைக் கேட்டுக் கண்ணகி உள்ளம் பொருத வளாய், "மதியிழந்த மன்னனே !. என் கணவன் கள்வனே யல்லன்; அதனை நீயும் இந்நாட்டாரும் இப்பொழுதே அறியும் படி செய்வேன்" என்று உறுதியாய்க் கூறினுள். இவ்வாறு மாது கூறிய மொழியைக் கேட்ட மன்னவன் மனங் கலங்கிக் கோவலனிடமிருந்து தன் காவலாளர் மூலமாய்ப் பெற்ற சிலம்பை மாளிகையினின்றும் எடுத்துவந்து அவள் முன்னே வைத்தான். அதைக் கண்ட கண்ணகி, "இது என் சிலம் பேயாகும். இதன் உள்ளே இருக்கும் பரல் மாணிக்கம்" என்ருள். அரசன் அச்சிலம்பைத் தன் சிலம்பென்று சொல்லி "அதன் உள்ளே இருக்கும் பரல் முத்து" என்ருன். உடனே கண்ணகி அச்சிலம்பை எடுத்துப் படீரென்று உடைத்தாள்; அதன் உள்ளேயிருந்த மாணிக்கம் வீறிட்டெழுந்து அரியா சனத்தில் அமர்ந்திருந்த மன்னனது வாயில் தெறித்தது! அம்மணியை மன்னவன் கண்டான். அரச நீதி தவறிய தென்று அறிந்தான். உடனே அவனது வெண்குடை தாழ்ந் தது! செங்கோல் தளர்ந்தது! "பொன் செய் கொல்லன் சொல்லைக் கேட்டு இழி செயல் செய்த யானே அரசன்? யானே கோவலனது இன்னுயிரைக் கவர்ந்துகொண்ட கள்வ னுனேன்! இதுகாறும் எனது வழி முறையில் நீதி தவறிய தில்லை. நானே நீதிபிழைத்த பாவியானேன்! இனி இவ்வுல கில் நான் உயிர் வாழமாட்டேன்!" என்று மொழிந்தான். அரியாசனத்தில் மயங்கி விழுந்தான்; அங்கேயே உயிர் துறந்தான்.

இச்செயல் நிகழும்பொழுது கோப் பெருந் தேவி அரசன் அருகே நின்று கொண்டிருந்தாள். மன்னர் விழுந்ததைக் கண்டு மயங்கினுள். கண்ணகியின் கோலத்தைக் கண்டு கலங்கினுள். கற்புடைய தெய்வத்தின் கடுஞ்சினத்தை எவ் வாறு தணிப்பதென்று எண்ணி ஏங்கினுள். ஒரு வகையி லும் ஆறுதல் சொல்ல அறியாதவளாய்க் கண்ணகியின் கால் களில் விழுந்து வணங்கினுள். அப்பால் மயங்கிவிழுந்து கிடந்த தன் மணுளனை முடிமுதல் அடிவரை மெதுவாகத் தொட்டுப் பார்த்தாள். அவன் ஆவி அகன்றதென்று அறிந் தாள். அப்பொழுது கலக்கங் கொள்ளாது, கடுந்துயர்

பொருது, தன் கணவன் சென்ற இடத்திற்குத் தானுஞ் செல்லத் துணிந்து தன் உயிரைக்கொண்டு அவன் உயிரைத் தேடச் செல்பவள் போல அரசனது அடிகளில் மயங்கி விழுந்து, அரசமா தேவியும் மடிந்தாள்.

இவ்வாறு கணவன் இறந்த துயரம் பொருது உயிர் துறந்த கோப் பெருந் தேவியாரது தலையாய கற்பின் தன்மையை, அக்காலத்தில் வீரர் பெருமானாய் விளங்கிய சேரன் செங்குட்டுவனும், தமிழ் நாட்டு மக்களும் பலபடப் பாராட்டிப் போற்றினார்கள்.

### பயிற்சி

1. பதி, அடி—பல பொருள்கள் கூறு.
2. கடுமொழி, செங்கோல், தாழ்ந்தது—எதிர்ப்பதம் எழுது.
3. மறை, மரை—பொருள் வேறுபாடு என்ன?
4. மணியோசை—பதம் பிரித்து எழுது.
5. அரசி, மனைவி—ஆண்பால் என்ன?
6. கணவன்—இதே பொருள்ள வேறு சில வார்த்தைகள் கூறு.
7. இவனைக் கொல்லுங்கள்—இந்த வாக்கியத்தின் எழுவாய், பயனிலை செயப்படு பொருள் கூறு.
8. வீரன் ஒருவன் தன் கையிலிருந்த கூரிய வாளாற் கோவலனை வெட்டிக் கொன்றான்—'கோவலன்' என்பதை எழுவாயாக வைத்து வாக்கியத்தை மாற்றி எழுது.

### கேள்விகள்

1. நெடுஞ்செழியன் யார்? அவன் எவ்விதம் அரசு புரிந்து வந்தான்?
2. நெடுஞ்செழியனது மனைவியின் பெயர் என்ன? அவள் எவ்விதக் குணநலமுடையவள்? அவளுக்கு ஏற்பட்ட மனக்கவலை யாது?
3. ஒருநாள் அரண்மனையைச் சார்ந்த பொற்கொல்லன் அரசனிடம் வந்து கூறியது என்ன? ஏன் அவன் அவ்விதம் கூறினான்?
4. கோவலன் கொலையுண்டது எவ்விதம்?
5. கோப் பெருந் தேவி கண்ட கனா என்ன?
6. கண்ணகி தன் கணவன் கள்வனல்லன் என்பதை எவ்விதம் நிரூபித்தாள்?
7. நெடுஞ்செழியனும் கோப் பெருந் தேவியும் எவ்விதம் உயிர் நீத்தனர்?

# 3. பருவயிர மணிமாலை

ராவ்ஸாகிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார், ஜி. பி. வி. சி.

வயிர வர்த்தகத்துக்குப் பேர்போனதனுல் வழக்கமான பழைய பெயர் மாறி வயிரபுரமென வழங்கும் பெரிய நகரிலே பங்களாக்கள் மிகுந்துள்ள பாகத்திலே, அநேக ஏக்கர் களடங்கிய மிக விசாலமான தோட்டத்திலமைந்த பெரிய பங்களா ஒன்று உண்டு. அதனினும் பெரிய பங்களா அந்தப் பக்கத்தில் இல்லை. அதில், சில காலத்துக்கு முன்பு வசித்த வர்கள் சிலர் திரவியச் சேதமும், சிலர் உயிர்ச் சேதமும் தற்செயலாகத் தொடர்ந்து அடைந்தனர். ஆகவே பக்கத்தி லுள்ளவர்கள் அந்தப் பங்களாவை ஆக்கக் கேடானதென்று சொல்லுவாராயினர். அதன் முன் பக்கத்திலும் உள்ள 'கேட்டு' (Gate) களில் 'வாடகைக்கு விடப்படும்' என்ற விளம்பரப் பலகைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. ஆயினும், மேற்கூறிய காரணத்தினுல் ஒருவரும் குடியிருக்க வருவா ரில்லாமல் அந்தப் பங்களா பாழாய்க் கிடந்தது.

இனி இதில் யாரும் குடிவராரென்று எல்லாரும் எண்ணியிருந்தபோது ஒரு நாள் காலை ஒன்பது மணிக்கு ஒரு லாரி (Lorry) அந்தப் பங்களா முகப்பில் வந்து நின்றது. அதில் நெருக்கமாக நிரப்பப்பட்டிருந்த கட்டில்கள், சோப்பாக் கள், மேஜைகள், நாற்காலிகள், உடுப்புப் பெட்டிகள், குளிக் குந் தொட்டிகள் முதலிய குடியிருப்போருக்கு வேண்டிய பல தட்டுமுட்டுச் சாமான்களை லாரி ஓட்டியும் அவனுடன் வந்த வேலைக்காரனும் பங்களாவுக்குள்ளே கொண்டுபோய்ச் சேர்த் தார்கள். முன்னதாகவே வாடகை கொடுக்கப்பட்டிருந்த தனுல், லாரி தாமதித்து நில்லாமல் திரும்பிப்போய் விட்டது. வேலைக்காரன் கட்டட முழுவதும் பெருக்கிச் சுத்தம் செய்து, இருக்கத் தக்க இடங்களில் சாமான்களைச் சேர்த்து ஒழுங்கு படுத்தி வைத்துவிட்டு, ஒரு நாற்காலியில் உட்கார்ந் திருந்தான்.

லாரி போய் நெடுநேரமாகு முன்னே, அங்கே பல பதினு யிர ரூபாய் விலை பெறுமான பெரிய 'ரோல்ஸ் ராய்ஸ்' மோட்டார் வண்டி ஒன்று அந்தப் பங்களாப் படிப்பக்கத்தில்

வந்து நின்றது. அதிலிருந்து பேரழகுடைய மாதர்களிருவர் இறங்கி உள்ளே போனுர்கள். ஒருத்தி நடு வயசு கடவாத வளும் மற்றெருருத்தி சற்றேறக் குறையப் பதினறு வயசுப் பருவமானவளுமாயிருந்ததையும் இருவர் முகச் சாயலொற்று மையையும் பார்த்தவர்கள், அவர்கள் தாயும் மகளுமென்று சற்றும் சந்தேகமின்றித் தெரிந்து கொள்வார்கள். அவர்கள் அணிந்திருந்த பெருவிலை பெறும் ஆடையாபரணங்கள், அவர்கள் பெருஞ் செல்வப் பெருமாட்டிகளென்று எடுத்துப் பேசும்படியிருந்தன.

அவர்களைக் கண்டதும் எழுந்து நின்ற வேலைக்கார னிடம் அவர்கள் சில வேலைகள் செய்யும்படி சொல்லிவிட்டு, அவன் தங்களுக்காகச் சித்தப்படுத்தி வைத்திருந்த அறைக் குள்ளே சென்றுர்கள்.

வேலைக்காரன் ஒருவனுயிருந்தாலும் அவன் அந்த மாதர்களுக்கு அவசியமான எல்லா வேலைகளையும் செய்யத் தெரிந்தவனுயிருந்தான். அவன் அங்கு வந்த மோட்டார் வண்டியைப் பங்களாவின் பின்புறத்துக் கேட்டுப் பக்கத்தி லிருந்த மோட்டார் புறையில் ஓட்டிக்கொண்டு போய்விட்டு அந்தப் புரையைப் பூட்டிவிட்டுத் தன் எஜமானிகளுக்கும் தனக்கும் வேண்டிய உணவுப் பொருள்களைச் சமீபத்தி லிருந்த சாப்பாட்டு விடுதியில் வாங்கிவரப் போனுன்.

மாலை ஐந்து மணிக்கு மாதர்களிருவரும் தங்கள் மோட்டார் வண்டியிலேறி வெளியே புறப்பட்டுப் போனுர்கள். பக்கத்துப் பங்களா வாசிகள் அம்மாதர்களுடைய நடையுடை பாவனைகள் புதுமையா யிருந்ததையும் அவர்கள் எவருடனும் கலந்து கொள்ளாமல் பிரத்தியேகமாக இருக்கப் பிரியப்படு பவர்களாகத் தோன்றியதையும் கவனித்து, 'அவர்கள் யார்? எங்கிருந்து வந்தார்கள்? எதற்காக வந்தார்கள்? தங்கள் செல்வ நிலைமைக்குத் தக்கபடி பல வேலைக்காரர்களில்லாமல் ஒரு வேலைக்காரனுட னிருப்பானேன்? யாரும் பழக இடங் கொடாமலிருப்பானேன்?' என்பவைகளைத் தெரிய ஆவலுள்ள வர்களாயிருந்தார்கள்.

மாலை ஐந்து மணிக்கு வெளியே போனவர்கள், அநேக தினப் பத்திரிகைகளும் வாரப் பத்திரிகைகளும் புத்தகங்

களும் வாங்கிக்கொண்டு இரவு ஒன்பது மணியான பிறகு திரும்பி வந்தார்கள். இவ்வாருக, நாள்தோறும் மாலையில் வெளியே போவதும் இரவு நெடுநேரஞ் சென்று திரும்பு வதுமாயிருந்ததையன்றி, அவர்களைப்பற்றி வேறு யாதொன்றையும் அயலார்கள் அறியாதவாறு அம்மாதர்கள் ஜாக்கிரதையாக ஒழுகி வந்தார்கள்.

அப்படி இருக்கும்போது ஒரு நாள் மிகவும் மனோகரமாயிருந்த மாலை நேரத்திலே பொழுது மங்குந் தருணத்திலே இளையவள் முந்திய நாள்களிற்போல் மூத்தவள் துணையாகப் போகாமல் தனியாகத் தன் மோட்டார் வண்டியைத் தானே ஓட்டிக்கொண்டு சென்று ஒரு பெரிய வயிர வியாபாரியின் மாளிகையை அடைந்தாள்.

மாது: உங்களிடத்துள்ள வயிர நகைகளில் நான் தெரிந்தெடுத்து விலை முடிவு செய்து வேறு யாருக்கும் விற்று விடாமல் வைத்திருக்கும்படி சொல்லிப் போனேனே, அந்த வயிர மாலையை வாங்க வந்திருக்கிறேன்.

வியாபாரி: அப்படியே வைத்திருக்கிறேன். வாங்கிக் கொண்டு போகலாம்.

மாது: உடனே வாங்க முடியாது; என் தாயார் வியாதியாய்ப் படுத்திருக்கிருர்கள்; அவர்களிடம் காட்டி அவர்கள் ஒப்புக்கொண்ட பின் வாங்கவேண்டும், நீங்கள் அந்த மாலையை எடுத்துக்கொண்டு என்னுடன் வாருங்கள். அதை அவர்களிடம் காட்டிக் கிரயத்தைத் தந்து உங்களை என் வண்டியிலேயே திரும்ப அனுப்பிவிடுவேன்.

வியாபாரி: தங்களிஷ்டப்படி செய்யச் சித்தமாயிருக்கிறேன்.

இவ்வாறு இவர்கள் இங்கே பேசிக்கொண்டிருந்த போது தன் மகளோடு புறப்படாமல் பங்களாவில் தங்கியிருந்த தாய், சிறிது தூரத்திலே யிருந்த பிரபல வைத்தியரொருவரை ஒரு வாடகை மோட்டார் வண்டியிலே போய்ப் பார்த்தாள். அவர் அவளுடைய விலையுயர்ந்த நகை, உடைகளைக் கண்டு மிகுந்த மரியாதையோடு வரவேற்று, "அம்மணீ! தாங்கள் வந்த காரியம் என்ன?" என்று கேட்டார். அவள், "என் கணவர் என் பங்களாவில் இருக்கிருர். அவர் அசாதாரண

மான ஒருவகைப் பைத்தியநோய் கொண்டவர். அவரிட மிருந்து வயிர மாலேயை நான் வாங்கி வைத்துக்கொண்டு திருப்பிக் கொடுக்கவில்லே யென்று பல முறை இறைந்து சொல்லி என்னேயும் என் மகளேயும் உறங்க விடுகிருரில்லே. யாரேனும் அந்நியரைக் கண்டால் சிறிது தெளிவுற்றுப் புத்தி சுவாதீனமுள்ளவர் போலப் பேசித் தாம் பைத்தியக்காரரில்லே யென்று சொல்லுவார். அதனுல் அவருக்குப் பைத்தியமில்லே யென்று நீங்கள் கருதிவிடாமல் தக்க சிகிச்சை செய்து குணப்படுத்த வேண்டும். தாங்கள் தனியாய் அவரைப் பார்ப்பது நல்லது. என்னேக் கண்டால் கோபங்கொள்வார்'' என்று சொன்னுள். அவர் ''அம்மா இதற்காக இவ்வளவு சிரமப்பட்டு நீங்கள் இங்கே வந்திருக்கவேண்டாமே! இந்த விவரத்தை டெலிபோனில் தெரிவித்திருந்தால் நான் வந்து வேண்டியதைச் செய்திருப்பேனே' என்று சொல்லி அவள் வந்த வாடகை மோட்டார் வண்டியை அனுப்பிவிட்டுத் தம் சொந்த மோட்டார் வண்டியில் அவளுடன் புறப்பட்டார்.

இதற்குமுன் அவள் மகள் வயிர வர்த்தகனுடன் பங்க ளாவுக்கு வந்து, அங்கே பல பத்திரிகைகளும் சில கதைப் புத்தகங்களும் வைத்திருந்த மேஜைப் பக்கத்திலே மெத்தை யிட்டிருந்த நாற்காலியிலே அவனே அமரச் செய்து அவனிட மிருந்த வயிரமாலேயை வாங்கித் தன் தாயாரிடம் காட்டி வருவதாகச் சொல்லிப்போனுள். போனவள் பத்து நிமிடஞ் சென்றும் திரும்பி வராததனுல் அவன் பொறுமையிழந்து மனவருத்தங்கொள்ளும் சமயத்தில், வைத்தியருடன் வந்த தாய் அவருக்கு அவனிருக்கும் அறையைக் காட்டி அவனேப் பார்க்கும்படி சொல்லிவிட்டுத் தன் அறைக்குள்ளே போனுள்.

வைத்தியர் அவனிடம்போய் ''உமக்கு என்ன நோய்? அது செய்யும் குணங்களென்ன?'' என்று கேட்டார். அவ் வாறு கேட்கவே அவன் பிரமித்து, ''என்னே ஏன் இப்படிக் கேட்கிறீர்? உமக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா? எனக்கு யாதொரு வியாதியும் இல்லே. உமக்கு இங்கே என்ன வேலே?'' என்று மாறிக் கேட்டான். வைத்தியர் அந்நியரைக் கண்டால் அவனுக்கு அறிவு சிறிது தெளியுமென்று கேட்டிருந்தவ ராதலால் கடகடவெனச் சிரித்து அவனேத் திரும்பவுங் கேள்வி

கேட்பாராய், "நேற்று இராத்திரி நன்ருய்த் தூங்கினீரா? என்ன உணவுகள் உண்டீர்?" என்ருர். எனவே, அவன் கோபமூண்டு எரிச்சலுடன் இறைந்து "நீயும் உன் மருந்தும் நாசமாய்ப் போக! நான் நோயாளியல்ல' என்ருன்.

இவ்வாறு கூறிய அந்தச் சமயத்தில் அவன் மனத்தில் "வஞ்சிக்கப் பட்டுவிட்டோமோ" என்ற சந்தேகம் ஜனிக்க, "ஓ! என் வயிரமாலை; ஆ! என் வயிரமாலை! ஐயோ போய் விட்டது! அவள் எங்கே போனுள்?" என்று அலறினுன். அவன் அவ்வாறு அலறுதலும், அபார விலையுடைய ஆப ரணமிழந்த ஏக்கத்தால் உள்ளபடியே பைத்தியக்காரன் முகம் போலாய்விட்ட அவன் முகத்தின் அலங்கோலத் தோற்றமும் வைத்தியருக்கு அவன் பைத்தியக்காரனென்ற எண்ணத்தை உறுதிப்படுத்தின. உடனே, அவர், "நல்லது! நல்லது! நான் நன்ருய்த் தெரிந்துகொண்டேன். நான் கொடுக்கும் மருந்தை நீர் சிலநாள் உட்கொண்டு நான் சொல்லுகிறபடி பத்தியமான உணவுகளை உண்டு வந்தால் உமக்குக் குணமாய் விடும். பதருதேயும்" என்று அமைதியாகச் சொன்னுர்.

அதைக் கேட்டு அவன் அடக்கமுடியாத கோபங் கொண்டு ஆவேசத்துடன் எழுந்து "என் சொல்லைப் பொருட்படுத்தாமல் இவ்வளவு துணிவுடன் என்னிடம் பேசு கிறவனுக்குப் புத்தி வரச் செய்வேன்" என்றெண்ணி 'மரியாதையில்லாமல் என்னிடம் ஏன் வலிய வந்தாய்? உன் பாழான மருந்து யாருக்கு வேண்டும்? எனக்கு உன்னுடைய கேடுகெட்ட வைத்தியஞ் செய்யும்படி நான் கேட்டுக் கொண்டேனு? நான் நோயாளியு மல்ல. பைத்தியக்காரனு மல்ல" என்று சொல்லிவிட்டு என் வயிரமாலை! என் வயிர மாலை. என்னை ஏமாற்றிவிட்டாள்!" என்று கதறினுன். வைத்தியர், தமது பலத்த கைகளினுல் அவனை உறுதியாகப் பிடித்துப் பக்கத்திலிருந்த சோபாவில் இருத்தினுர். அவன் திமிறி எழ அவர் திரும்பப் பிடித்து இருத்த, அவன் அவர் பிடியை விடுவித்துக்கொண்டு மறுபடியும் எழ அவர் மாறிப் பிடித்திருத்த, இவ்வாருக இருவரும் மல்லாடிக்கொண் டிருக்கும்போது, தாயும் மகளும் வயிர மாலையை எடுத்துக் கொண்டு எவரும் அறியாமல் பங்களாப் பின்புறமாகப் போய்

முன்னமே அவர்கள் வேலைக்காரன் அவர்கள் கற்பனைப்படி பின் பக்கத்துக் 'கேட்'டினருகே சித்தமாக நிறுத்தி வைத்துக் காத்துக்கொண்டிருந்த 'ரோல்ஸ்ராய்ஸ்' வண்டியில் ஏறிப் போய்விட்டார்கள். சிறிது நேரம் சென்றபின்புதான் வைத்தியரும், வர்த்தகனும் வயிரமாலையுடன் மாதர்கள் மறைவாய்ப் போய்விட்ட விவரம் தெரிந்து வருந்தலுற்றார்கள்.

வைத்தியர், "கேவலம் வைத்தியந் தெரியாத ஒரு பெண் பிரபல வைத்தியரெனப் பேர்பெற்ற நான் எனக்குரிய வைத்தியத் தொழில் செய்தலில் ஏமாறும்படி செய்து விட்டாளே!" என்று வெட்கமும் விசனமும் அடைந்தார். வர்த்தகன் "நெடுங்காலம் எத்தனையோ கோடி ரூபாய் பொறும்படியான இரத்தினங்களையும் இரத்தினாபரணங்களையும் எத்தனையோ பேரிடம் ஏமாறாமல் வாங்கியும் விற்றும் பெரு லாபம் பெற்ற நான், இன்று ஒரு சிறிய பெண்ணின் உபாயத்தால் பெரிய அபாயத்துக்குள்ளாகிப் பெருநட்ட முற்றேனே!' என்று மனமுடைந்து பொறுத்தற்கரிய வருத்தம் அடைந்தான்.

### பயிற்சி

1. 'கட கட' எனச் சிரித்து—இதில் 'கடகட' என்பது இரட்டைச் சொல். வேறு நான்கு இரட்டைச் சொற்கள் கூறு.

2. ஆடையாபரணங்கள்—பதம் பிரித்து எழுது.

### கேள்விகள்

1. பாழாய்க் கிடந்த பங்களாவில் குடிபுகுந்தவர்கள் யார்?

2. அவர்கள் யாரை, எவ்விதம் ஏமாற்றினார்கள்?

3. வைத்தியருக்கும் வயிர வியாபாரிக்கும் நடந்த வாக்குவாதத்தை விவரி.

# 4. என் பாலிய சேஷ்டைகள்

ச. வேதநாயகம் பிள்ளை

நான் படிப்பு விஷயத்தில் மந்தமாயிருந்தாலும், விளையாடுகிற விஷயத்தில் அதிக முயற்சி உள்ளவனாக இருந்தேன். என்னுடைய பாலிய சேஷ்டைகள் யாவருக்கும் வியப்பாயிருக்குமானதால், அவைகளை அடியில் விவரிக்கிறேன்.

என் வீட்டில் என்னைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் சுரத்தினாலும் அம்மையினாலும் உபாதைப் பட்டார்கள். அவர்களைப் பலபேர் வந்து விசாரிக்கிறதும் உபசாரஞ் செய்வதுமாயிருந்தார்கள். என்னை ஒருவரும் விசாரிக்காதபடியால் நான் ஒரு மூலையில் அழுதுகொண்டிருந்தேன். எல்லோரும் ஓடிவந்து "ஏன் அப்பா! அழுகிறாய்?" என்று கேட்டார்கள். தேம்பித் தேம்பி அழுதேன்.

நானும் சில பிள்ளைகளும் தெருவில் விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது அவர்களில் ஒரு பையன் என்னைப் பார்த்து 'நான் இரண்டு கண்களையும் மூடிக்கொண்டு ஒரு வித்தை செய்கிறேன்; நீ அந்த வித்தையை இரண்டு கண் கண்களையும் திறந்துகொண்டு செய்வாயா?' என்று கேட்டான். அதற்கு நான், "நீ இரண்டு கண்களையும் மூடிக்கொண்டு செய்கிற வித்தையை நான் கண்களைத் திறந்துகொண்டு செய்யக்கூடாதா? அப்படி நான் செய்யாவிட்டால் உனக்கு இவ்வளவு பந்தயம் கொடுப்பேன்" என்று ஒப்புக்கொண்டேன். உடனே அந்தப் பையன் நடுத்தெருவில் உட்கார்ந்து, இரண்டு கண்களையும் மூடிக்கொண்டு, மண்ணை அள்ளி அள்ளித் தன் கண்மேல் போட்டுக்கொண்டான். பிற்பாடு அவன் என்னைப் பார்த்து "நீ இரண்டு கண்களையுந் திறந்துகொண்டு இந்த வித்தையைச் செய்" என்று மண்ணை அள்ளி என் கையில் கொடுத்தான். நான் கண்ணை இழந்து போவதைப் பார்க்கிலும் காசை இழப்பது நலமென்று நினைத்து பந்தயக் காசை அவனுக்குக் கொடுத்துவிட்டேன்.

எங்கள் வீட்டு மேல் மாடியில் அதிக விலைபெற்ற பெரிய நிலைக் கண்ணாடிகள் மாட்டியிருந்தன. ஒரு கண்ணாடியில் நானும் சில பிள்ளைகளும் எங்களுடைய முக அழகைப்

பார்த்தபோது, எல்லோருடைய முகமும் அழகாயிருக்க என் முகம் மட்டும் எனக்கே பார்க்கச் சகிக்காமல் விகாரமாயிருந்தது. அது கண்ணுடியினுடைய பிசகென்றெண்ணிக் கையை ஓங்கிக்கொண்டு அந்தக் கண்ணுடியில் பலமாக ஒரு குத்துக் குத்தினேன். அந்தக் கண்ணுடி ஆயிரம் துண்டாக உடைந்து போயிற்று.

எந்த வேலையிலும் சோம்பலாயிருக்கக் கூடாதென்றும் தொட்ட காரியத்தை உடனே முடித்துவிட வேண்டுமே தவிர நாளைக்கென்று நிறுத்திவைக்கக்கூடாதென்றும், என் தாயார் எனக்கு அடிக்கடி புத்திசொல்லி வருவார்கள். நான் அந்தப் புத்தியை பக்ஷண விஷயங்களில் உபயோகப்படுத்தி, எத்தனை பக்ஷணங்கள் அகப்பட்டாலும், நாளைக்கென்று வையாமல் உடனே சாப்பிட்டு மந்தப்பட்டு வைத்தியர்களுக்கு ஓயாத வேலை கொடுத்து வந்தேன்.

எல்லோரிடத்திலும் மரியாதையாய்ப் பேசவேண்டுமென்றும், யாராவது வந்தால் அவர்களுக்கு உடனே ஆசனம் கொடுத்து உபசாரம் செய்யவேண்டுமென்றும் என் தாயார் எனக்கு அடிக்கடி சொல்லி வருவார்கள். நான் அந்தப்படி எல்லா வேலையாட்களுக்கும் ஆசனங் கொடுத்து மரியாதை செய்யத் தலைப்பட்டேன்.

தினமும் பொழுது விடிந்தவுடனே உபாத்தியாயர் வந்து படிக்கச் சொல்லித் தொந்தரவு செய்தபடியால், பொழுது விடியாமலிருப்பதற்கு என்ன உபாயமென்று யோசித்துப் பார்த்தேன். கோழி கூவிப் பொழுது விடிகிறபடியால், கோழி கூவாவிட்டால் பொழுது விடியாதென்று நினைத்து, கோழி வளர்க்க வேண்டாமென்று அக்கம் பக்கம் வீட்டுக்காரர்களுக்கு உத்தரவு செய்தேன்.

ஒரு நாள் ஒரு பையனிடத்தில் நான் இரண்டு வராகன் கடன் வாங்கினதாகவும், அவன் என்னை அடித்ததாகவும், சொப்பனங் கண்டு விழித்துக்கொண்டு, அந்தச் சொப்பனத்தை அவனுக்குத் தெரிவித்தேன். உடனே அவன், "அந்தக் கடனைக் கொடு" என்று என் மடியைப் பிடித்துக் கொண்டான். நான் அவனுடைய கன்னத்தில் பளீர் பளீர் என்று இரண்டு மூன்று அறைகள் கொடுத்தேன். அவன்

"ஏன் அடிக்கிருய்" என்று கேட்டான். இராத்திரி நீ என்னை சொப்பனத்தில் அடித்தபடியால் அதற்காக இப்போது நான் உன்னை அடித்தேன்" என்றேன். அவன், "கடனுக்கும் அடிக்கும் சரியாய்ப் போய்விட்டது" என்று சொல்லிப் போய்விட்டான்.

ஒரு நாள் நான் வீதியில் விளையாடிக்கொண்டிருந்தபோது ஒரு துஷ்டன் அவனுடைய மாட்டை ஓங்கி, ஓங்கி அடித்து ஓட்டிக்கொண்டு போனுன். நான் "ஏன் அடிக்கிருய்?" என்று கேட்டதற்கு அவன், "என் மாட்டை எப்படியாவது நான் உபயோகிக்கிறேன், உனக்கென்ன?" என்ருன். நான் உடனே என் கையில் இருந்த கழியால் அவனை அடித்து, 'என் கழியை நான் எப்படியாவது உபயோகிக்கிறேன் உனக்கென்ன?' என்று சொல்லிப் போய்விட்டேன்.

நான் ஒரு நாள் கண்ணுடியில் என் முகத்தைப் பார்த்த பிறகு, முதுகின் அழகைப் பார்க்கும்பொருட்டு, கண்ணுடியை எனக்குப் பின்புறத்தில் வைத்து முதுகாலே பார்த்தேன். ஒன்றும் தெரியாமல் மயங்கினேன்.

என்னுடைய நேசன் ஒருவன் ஒரு புஸ்தகம் அனுப்ப வேண்டுமென்று எனக்குத் தபால் வழியாய்க் கடிதம் அனுப்பினுன். நான் அந்தப் புஸ்தகத்தை அனுப்பவில்லை. சில நாளைக்குப் பிறகு நான் அவனைக் கண்டபோது "புஸ்தகம் அனுப்பும்படி நீ எழுதிய கடிதம் என்னிடத்தில் வந்து சேரவில்லை" என்றேன். "கடிதம் வந்து சேராவிட்டால், நான் புஸ்தகம் வேண்டுமென்று எழுதிய சமாசாரம் உனக்கு எப்படித் தெரிந்தது?" என்று அவன் கேட்க, நான் ஆடு திருடின கள்ளன்போல் விழித்தேன்.

ஒரு முக்கியமான சங்கதியைப் பற்றி ஒரு சிநேகிதனுக்கு நான் கடிதம் எழுதி அதன் கடைசியில், "இந்தக் கடிதம் வந்து சேராவிட்டால், உடனே எனக்குத் தெரிவி" என்று எழுதினேன். கடிதம் போய்ச் சேராவிட்டால், என்ற அந்தக் கடைசி வாக்கியத்தால் என்ன பிரயோசனமென்பதை நான் கவனிக்கவில்லை.

ஒரு பிரசித்தமான பொய்யன் என்னிடத்தில் வந்து, தன்னுடைய ஆயுள் முழுமையும் தான் ஒரு நிசம் சொன்ன

தில்லை என்றான். "நீ ஒரு நிசம் சொல்லி யிருக்கிறாய் !" என்று நான் சொல்ல, அவன் "இல்லை! இல்லை !!" என்றான். ஆயுசு முழுவதும் நிசம் சொன்னதில்லை யென்று நீ சொல்வது நிசம் அல்லவா !" என்றேன். அவன் சரி யென்று ஒப்புக்கொண்டு என்னைப்பார்த்து, நீ ஒரு பொய் சொல்லவேண்டும்" என்றான். நான் உடனே 'நீ யோக்கியன்' என்றேன்.

என் பாட்டியாருக்கு மூன்றாம் முறைச் சுரம் வந்து கொண்டிருந்தது. எங்கள் வீட்டிலிருந்த கடியாரம் மத்தியானம் இரண்டுமணி அடித்தவுடனே சுரம் வருவது வழக்கமாயிருந்தபடியால் கடியாரம் ஓடாமல் நின்றுவிட்டால் சுரமும் வராமல் நின்று போகுமென்று நினைத்து, கடியாரத்தை நிறுத்தி விட்டேன். அப்படிச் செய்தும் அந்த திருட்டு சுரம் வராமலிருக்கவில்லை.

ஒரு நாள் எங்கள் குடும்ப வைத்தியர் வீதியில் வருகிறதைக் கண்டு, அவர் கண்ணிலே படாமல் நான் ஓடி ஒளிந்து கொண்டேன். கனகசபை, "ஏன் ஒளிகிறீர்கள் ?" என்று கேட்டார். "நமக்கு சில நாளாய் வியாதி வரவில்லையே ! வைத்தியருக்குக் கோபமாயிருக்குமென்று பயந்து ஒளிந்து கொண்டேன்" என்றேன். மறுபடி ஒருநாள் அந்த வைத்தியர் என்னைக் கண்டு, "பூர்வீக மனுஷர்களெல்லாம் தீர்க்காயுசாக இருந்தார்கள் ; இந்தக் காலத்து மனுஷர்களுக்கு ஆயுசு குறைந்து போனதற்குக் காரணம் என்ன ?" என்று கேட்டார். நான் அவரைப் பார்த்து, "பூர்வீகத்தில் வைத்தியர்கள் இல்லாதபடியால், பூர்வீக மனுஷர்கள் நீடிய ஆயுசு உள்ளவர்களாயிருந்தார்கள் ; இந்தக் காலத்தில் வைத்தியர்கள் அதிகமாயிருப்பதால், ஆயுசு குறைந்து போய்விட்டது" என்றேன்.

ஒரு புலவர் நான் பாடின ஒரு கவியைப் பார்த்து, அதை நான் கம்ப ராமாயணத்திலிருந்து திருடிக் கொண்டதாகக் குறை கூறினார். "நான் திருடவே இல்லை" என்றேன். அவர் அந்தக் கவி கம்ப ராமாயணத்திலிருப்பதாகக் காட்டினார். நான் உடனே அவரைப் பார்த்து, "நான் அந்தக் கவியைக் கம்ப ராமாயணத்திலிருந்து திருடி எடுத்துக்

கொண்டிருப்பேனுனல் பிறகு அந்தக் கவி கம்பராமாயணத்தில் எப்படி இருக்கக்கூடும்? ஆகையால் நான் திருடவில்லை யென்பதற்கு அந்தக் கவி கம்பராமாயணத்திலிருப்பதுவே சாக்ஷி'' என்று மெய்ப்பித்தேன்.

### பயிற்சி

1. பொருள் கூறு :—உபாதை, மரியாதை செய்யத் தலைப்பட்டேன், வராகன், மெய்ப்பித்தேன்.

2. அந்தப் பையன் நடுத்தெருவில் உட்கார்ந்து, இரண்டு கண்களையும் மூடிக்கொண்டு மண்ணை அள்ளி அள்ளித் தன் கண் மேலே போட்டுக் கொண்டான் :—இந்த வாக்கியத்தை நான்கு சிறு வாக்கியங்களாகப் பிரித்து எழுது.

3. என் கையை ஓங்கிக்கொண்டு அந்தக் கண்ணுடியில் பலமாக ஒரு குத்துக் குத்தினேன். அந்தக் கண்ணுடி ஆயிரம் துண்டாக உடைந்து போயிற்று—இந்த இரண்டு வாக்கியங்களையும் சேர்த்து ஒரு வாக்கியமாக எழுது.

### கேள்விகள்

1. பாலியத்தில் ஒருவன் ஒரு மூலையில் உட்கார்ந்து அழக் காரணம் என்ன?

2. தாயார் கூறிய புத்திமதிகளில் எது தவருமல் அனுசரிக்கப்பட்டு வந்தது?

3. யாராவது வந்தால் ஆசனம் கொடுத்து உபசரிக்க வேண்டுமென்ற புத்திமதி எவ்விதம் கையாளப்பட்டது?

4. கையில் வைத்திருந்த கழியால் மாட்டைத் துரத்திச் சென்றவனை அடித்த காரணம் யாது?

5. பாட்டியாருக்குச் சுரம் வராமலிருக்க நினைத்துச் செய்த காரியம் என்ன?

# 5. குரு குதிரை யேறிப்போனது

வீரமா முனிவர்

ஒரு நாட்காலையில் ஒரு கிருகஸ்தன் மேய்ந்துகொண்டிருந்த நாட்டுத் தட்டாகிய ஒரு குதிரையைப் பிடித்துக் கொண்டு வந்து குருவுக்கு முன்பாக விட்டு, அதை அவருக்குக் காணிக்கையாகக் கொடுத்தான். கொடுத்த குதிரையோ வயது சென்ற கிழமும், ஒரு கண் பொட்டையும், ஒரு காது மூளியும், முன் காலில் ஒரு கால் நொண்டியும், பின் கால் முட்டிக்காலுமான குரூபமாய் அந்தக் கிழக் குருவுக்குத் தக்க வாகனமாயிருந்தது. எப்படி யிருந்தாலும் குதிரை பணச் செலவில்லாமல் இலவசத்தில் அகப்பட்டதேயென்று எல்லோரும் அதிக மகிழ்ச்சி கூர்ந்தார்கள்.

மட்டி குதிரையைச் சுற்றிவந்து தடவியும், மடையன் அதன் நொண்டிக்காலைப் பிடித்திழுத்து முறுக்கியும் மூடன் மொட்டை வாலைப்பற்றி உருவியும், மூர்க்கன் தொள்ளைக் கண்ணைத் துடைத்தும், மிலேச்சன் பசும் புல்லைக்கொண்டு வந்து வாயிலே கொடுத்தும் இவ்விதமாக அதை மிகவும் பாராட்டிக்கொண்டிருந்தார்கள். அதற்குமேல் குதிரை முஸ்தீப்புத் தேடத் தலைப்பட்டார்கள். குதிரை கொடுத்தவன் பீற்றலாயிருந்த ஒரு பழஞ் சேணத்தைக் கொடுத்தான். அதிற் குதிரை வாலின்கீழ் மாட்டப்படும் பின் தட்டு வாரில்லாததனுற் பாலைக்கொடியைத் திரித்துக் கட்டினுர்கள். அப்படியே கடிவாளத்திற்கு வாரில்லாமையால், 'வழியில் கண்ட குதிரைக்கு வைக்கோற்புரி கடிவாளம்' என்ற பழமொழிப்படி பழுதையை முடிந்து வைத்தார்கள். தங்கப் பட்டையும் இறுக்குவாறும் சம்பாதிக்க வெகு பிரயாசைப் பட்டும் கிடையாததனுல் மடத்துக்குச் சமீபத்திலிருந்த பேட்டைக்குப்போய் அவ்விரண்டும் முன்கால் பின் கால்களிற் கட்டுகிற அசாடி பிசாடிக் கயிறுகளும் வாங்கிக் கொண்டு வந்தார்கள். இப்படி முஸ்தீப்பெல்லாம் அமைந்த பின்பு, குதிரைச் சவாரி பண்ணுகிறதற்கு ஜோதிஷ முறைப்படி வார சூலையைத் தள்ளி அமிர்த யோகமான சுப முகூர்த்தம் ஒன்று நிருணயம் பண்ணினுர்கள். அந்நேரத்தில்

'ஊர் கூடிச் செக்குத் தள்ளுகிறது' போல ஊரெல்லாம் வந்து கூடிப் பேரிரைச்சலிட்டு வாழ்த்திப் பரமார்த்த குருவை முதன் முதற் குதிரைமேல் ஏற்றிவைத்தார்கள். அப்பொழுது,

'முன்னே கடிவாள மூன்றுபேர் தொட்டிழுக்கப்
பின்னே யிருந்திரண்டு பேர்தள்ள—எந்நேரம்
வேதம்போம் வாயான் விகடரா மன்குதிரை
மாதம்போங் காதவழி,'

என்கிறபடியே ஐந்து சீஷர்களில் ஒருவன் முன்புறத்திலிருந்து கடிவாளத்தைப் பிடித்திழுக்க, ஒருவன் பின்புறத்திலிருந்து வாலைப் பிடித்து முறுக்கி அதட்டியோட்ட இருவர் பக்கங்களிலிருந்து குருவின் கால்களைக் கைலாகு கொடுத்துத் தாங்க, ஒருவன் முன்னே "பரமார்த்த குரு வருகிறார்! பராக்கு எச்சரிக்கை" என்று கட்டியங் கூறிப் பராபரி பண்ணக் கிழக் குருவானவர் மகா சம்பிரமத்துடனே குதிரைச் சவாரி பண்ணினார்.

இந்தப் பஞ்சதாளக் குதிரையின்மேல் உல்லாசமாக உடல் பூரிக்க வெகு தூரம் போன பிறகு நடுவழியில் வழிச்சாரி ஆயக்காரனொருவன் கண்டு ஓடிவந்து மறித்தான். இவர்கள் "ஏன் மறிக்கிறாய்?" என்றார்கள். அவன் "குதிரைக்கு ஐந்து பணம் ஆயங் கொடுக்கவேண்டும்; அது கொடாமற் போகக் கூடாது" என்றான்.

அதற்கிவர்கள், "இஃதென்னை புதுமை? குருவேறின குதிரைக்கும் ஆயுமுண்டோ? வியாபார சம்பந்தமா? உத்தியோக சம்பந்தமா? அவையெல்லா மல்லவே; எங்கள் குரு முதிர்ந்த வயதாய்ச் சரீரம் தளர்ந்திருக்கின்றதனால் கால் நடையாய் நடக்க மாட்டாததைக் கண்டு ஒரு புண்ணியவான் தர்மத்துக்குக் கொடுத்த குதிரையாக்கு மிது; இதற்கு ஆயம் வாங்கினதை நாங்கள் எங்கும் கண்டதில்லை. ஆனாலும் அநியாயம்" என்று அவர்கள் கூச்சல் போட, அவன் "அநியாயமோ நியாயமோ எனக்கொன்றுந் தெரியாது; பணத்தைக் கொடுத்துவிட்டுத்தான் போகவேண்டும்" என்று மத்தியான மட்டும் மறியலில் வைத்து "விடமாட்டேன்" என்றதனால், தப்பிப்போக வேறே வழி காணாமல் "நாம்

கொடாக்கண்டராயிருந்தாலும், இவன் விடாக் கண்டனு யிருக்கின்றனே, ஐயோ! வீண் தண்டமீது " என்று ஐந்து பணங்கொடுத்தார்கள். அவன் விட்டுவிட்டான்.

குரு, "குதிரையில்லாவிட்டால் இந்தச் சஞ்சலம் வர மாட்டாதல்லவா ?" என்று மிகவும் தம்மைத்தாமே வெறுத்துக் கொண்டு பின்பு இளைப்பாறும்படி சீஷர்களுடனே கிட்ட விருந்த சாவடிக்குப் போனர். அங்கே எதிர்ப்பட்ட ஒரு கிருகஸ்தனேடே குருவானவர் தாமே வலுவில் முறையிட்டுக் கொள்ளத் தொடங்கினர்! "அப்பா! நான் பிறந்த நாள் தொட்டு இது வரையில் ஒருக்காலும் குதிரை யேறினதில்லை! 'ஒருநாளுஞ் சிரியாதவன் திருநாளிற் சிரித்தான்', என்பது போல இன்றைக்குத்தான் முதன் முதற் குதிரையேறி வந்தேன், வந்த விடத்தில் இந்த அநியாயம் நடந்தது. இப்படி நீதியில்லாமல் வழிபறிக்கிற கள்ளனைப்போல நிஷ்டூரமாய்ச் சம்பாதிக்கிற பணம் யாருக்காவது நன்மையிருக்குமா? என் வயிறெரிய வாங்கின பணம் அவனுக்குச் செரிக்குமா? நெருப்பாய் மூளாதா? என்றர்.

அது கேட்டு அவன் "ஐயா பெரியவரே இது காலத்தின் சுபாவம், இந்நாளிற் பணமே குரு: பணமே தெய்வம்: 'பண மென்றல் பிணமும் வாயைத் திறக்கும்' என்பது முன்பு கேட்டோம். இப்போது 'பணம் பந்தியிலே குலம் குப்பை யிலே' என்பதற்குச் சரியாய்ப் பணத்தைவிட வேறே உறவும் சினேகமுமில்லையாக்கும்" என்றன். இதற்கேற்பக் குருவும் "அப்பா! இந்தக் காலத்திலே கட்டத்தில் அரைக்காசு கிடக்கக் கண்டாலும் அதை நாக்காலே நக்கி யெடுக்கக் கூசார்கள்" என்று சொன்னர். அவனும் 'சந்தேகமா? அப்படி நக்கி யெடுக்கும் பொழுது அஃது அவர்களுக்கு நாறுதையா; இதற்கு ஓர் அத்தாட்சி கேளும்" என்று சொல்லுகிறன்:

"ஓர் இராஜா பணத்தாசையினலே தன் சீமையில் ஒரு பொழுதும் இல்லாத வரியெல்லாம் ஏற்படுத்தி வைத்து அதன் பின்பு மூத்திர வரியும் வைத்தான். இஃது அவன் மகனுக்குச் சம்மதியாகாமல் 'குடிகளிடத்தில் இந்த நாறுகிற வரி கேட்டு வாங்குகிறது லச்சைக்கேடா யிருக்கிறது" என்று தகப்ப

னுக்குச் சொல்ல, இராஜா மகனுக்கு அப்பொழுது மறுமொழி சொல்லாமலிருந்து, பலநாள் போக வைத்து வரிப் பணம் பொக்கிஷம் நிறையச் சேர்ந்தபின் மகனை இராஜா அழைப்பித்து அந்தப் பணத்தை முகரச் சொல்லி "நாறுகிறதோ?" என்று கேட்டான். மகன் வேறென்றும் நினையாமல் 'நாறவில்லை, மணக்கிறது' என்றான். இராஜா 'இது மூத்திர வரிப் பணமாக்கும், என்றான். கேட்டீரா! பணம் வந்தாற் போதும் அஃது எப்படி வந்தாலும் பாரமன்று, ஐயா என்றான்.

இவ்வாறு பல பேச்சுக்கள் பேசிக்கொண்டிருந்து பொழுது போக்கினபின் சாயங்காலத்தில் மீளவுங் குதிரையேறிப் போய் ஒரு பட்டிக்காட்டிலே தங்கினார்கள். அன்று இராத்திரி குதிரையைக் கட்டாமல் மேயவிட்டுக் காலமே பயணத்துக்குத் தேடின விடத்தில் அகப்படாமையால், மூர்க்கன் வீட்டுக்கு வீடு நுழைந்து பார்க்கையில் அதை ஒருவன் தன் வளைவில் கட்டி வைத்திருந்தான். இவன் அதை விடச் சொன்ன விடத்தில் அவன் "இராத்திரி முப்பது நாழிகையும் என் பயிரில் மேய்ந்தது; எனக்கு வெகு சேதமாயிற்று. அதனாற் பரிச்சேதம் விடமாட்டேன்" என்றான். அதைக் குறித்து அடுத்த ஊர் நாட்டானே போய் நயபயமாகச் சொல்லி அமர்த்தியும் அவன் "பயிர்ச் சேதம் கொடுத்தால்தான் நான் குதிரையைவிட சம்மதிப்பேன்" என்றான். நாலுபேருங் கூடிக் குதிரை மேய்ந்த கொல்லையைப் பார்த்து மிதித்தது மேய்ந்த தெல்லாம் மதித்துப் பத்துப்பணத்துச் சேதம் எட்டுப்பணத்துச் சேதம் உண்டென்று சொல்லக் கடைசியிலே தீர்ந்தபடிக்கு நாலு பணத்தை வாங்கிக்கொண்டு குதிரையை விட்டு விட்டான்.

குருவோவென்றால் வெகுவாய்ச் சலித்துக்கொண்டு, "நமக்கு இந்தக் குதிரை என்னத்துக்கு? இது, வந்ததனாலே யணச் செலவுகளெத்தனை? சஞ்சலங்களெத்தனை? சங்கைக் கேடுகளெத்தனை? இவைகளெல்லாம் நமது மகிமைக்குத் தகாதய்யா" என்று கால் நடையாய்ப் போகத் துணிந்தார். அதற்குச் சிஷ்யர்கள், "ஆ!! ஆ!! அது சரியன்று" என்றும் "கால்நடை நடக்க உம்மாலாகாது" என்றும் சொல்லிக்

கொண்டிருக்க, அவ்விடத்தில் ஒரு வள்ளுவப் பண்டாரம் இவையெல்லாம் கேட்டுக் கிட்டவந்து, "கவலைப்படவேண்டா மையா" என்றான். மேலுமவன், "இந்தக் கஷ்ட நஷ்டங்களெல்லாம் குதிரையைப் பிடித்த தோஷத்தினால் வந்ததாக்கும். செலவோடே செலவாக எனக்கு ஐந்து பணங் கொடுத்தால் நான் கிரக சாந்தி செய்து அந்தத் தோஷத்தை நிவர்த்தியாக்கி விடுகிறேன்" என்றான். இவர்கள் செலவுக்காக அஞ்சிப் பார்ப்பது காரிய மன்றென்று நினைத்துப் பணங் கொடுக்கச் சம்மதித்துத் தோஷத்தைக் கழிக்கச் சொன்னார்கள்.

அப்பொழுது அந்த வள்ளுவன், "இவர்கள் நமது வலையிற் சிக்கினார்கள்: ஆகையால் இவர்களைச் சந்தேகமில்லாமல் நாம் ஏய்க்கலாம்" என்று நிச்சயித்துப் பணத்தை முன்னே கொடுக்கச் சொல்லிக் கழற்றிக்கொண்டு, அவர்கள் கண்ணுக்கு முன்பாகப் பலவிதத் தாட்டோட்டமான சடங்குகளைச் செய்து, நானாவிதப் பச்சிலைகளையும் பறித்து அபிமந்திரித்து, மெதுவாய் மிணமிணவென்று, சப்தமாக 'ஆஊஐயும் கிலியும் சௌவும் ஓம் சுவாகா' என்று அநேக முறை உச்சரித்து, மும்முறை குதிரையைப் பிரதக்ஷிணம் வந்து, வால் முதல் தலை பரியந்தம் அதைத் தடவி, அதன் ஒற்றைக் காதைக் கையினாற் பிடித்துக்கொண்டு "இந்தக் காதிலேயாக்கும் தோஷமெல்லாம் தங்கி நிற்கிறது: இப்படிப்பட்ட தோஷத்தைக் கழிக்கத்தான் அந்நாளில் அந்தக் காதையறுத்தார்கள். இப்பொழுது இந்தக் காதையும் அறுத்துப் போட்டால் இந்நாளில் வந்த தோஷமும் அற்றுப்போம்" என்றான். உடனே வெட்டரிவாளைத் தீட்டிக்கொண்டு அந்த ஒரு காதையும் திடீரென்று அறுத்துத் தோஷந் தொடராதபடி தூரக் கொண்டுபோய் ஆழக் குழி தோண்டிப் புதைத்து மேலே மண் போட்டுக் குறி செய்துவிட்டு வந்தார்கள். இதிலே அன்றெல்லாம் சென்றதாலும் மறு நாட் காலை வெகு தொந்தரவுப்பட்டு மடத்துக்குச் சென்றார்கள்.

## பயிற்சி

1. பொருள்கூறு :—காணிக்கை, இலவசம், பழுதை, கைலாகு கொடுத்து, ஆயம், நிஷ்டூரமாய், பரிச்சேதம்.

2. மடையன் குதிரையினது நொண்டிக்காலைப் பிடித்து இழுத்தான் —இந்த வாக்கியத்திலுள்ள பெயர்ச் சொற்களின் வகை, திணை, பால், எண், இடம், வேற்றுமை முடிபு இவைகளைக் கூறுக.

3. " நாம் கொடாக் கண்டராயிருந்தாலும் இவன் விடாக் கண்டனுயிருக்கிறனே "—சந்தர்ப்பம் கூறுக.

## கேள்விகள்

1. கிருகஸ்தன் குருவுக்குக் காணிக்கையாகக் கொடுத்த குதிரையின் லக்ஷணங்களைக் கூறுக.

2. சிஷ்யர்கள் அக்குதிரையை எவ்விதம் பாராட்டினர்கள்?

3. சிஷ்யர்கள் எவ்விதம் குதிரை முஸ்தீப்புத் தேடினர்கள்?

4. சிஷ்யர்கள் எவ்விதம் குதிரையின்மீது குருவை ஏற்றி வைத்து அழைத்துச் சென்றனர்கள்?

5. வழியில் அவர்களை மறித்தது யார்? ஏன்?

6. சத்திரத்தில் தங்கின குரு அங்கே எதிர்ப்பட்ட ஒரு கிருகஸ்தனிடம் முறையிட்டது என்ன? அவன் என்ன பதில் சொன்னன்?

7. பண ஆசை யுடையவர்கள், அதை அடைய எதையும் இழிவாகக் கருதமாட்டார்கள் என்பதை விளக்க கிருகஸ்தன் கூறிய கதை என்ன?

8. குருவும் சிஷ்யர்களும் ஒரு பட்டிக்காட்டில் தங்கின சமயம் ஒருவன் குதிரையைத் தன் வளைவில் கட்டிக்கொண்டது ஏன்? அவனிடமிருந்து குதிரை எவ்விதம் மீட்கப்பட்டது?

9. குரு மனஞ் சலித்துக்கொண்டு கால் நடையாய்ப் போகத் துணிந்தபொழுது அவ்விடம் வந்தது யார்? அவன் என்ன கூறினன்?

10. குதிரையைப் பிடித்த தோஷத்தை நிவர்த்திப்பதாகக் கூறி வள்ளுவன் என்னென்ன செய்தான்?

# 6. அருந்தமிழ் ஆய்ந்த ஐயர்

ச. குருஸ் அந்தோணி, பி. ஓ. எல்.

தமிழ்நாடு போந்து தமிழ்ப் பணியாற்றிய மேலை நாட்டு அறிஞர்களுள் கால்டுவெல் ஐயரவர்கள் சிறந்தவர் ஆவர். அவர்கள் திராவிட மொழிகளின் ஒப்புமை இலக்கணம் எழுதி அழியாப் புகழ் கொண்டார்கள். அவர்களைப் பற்றி நீங்கள் தெரிந்துகொள்வது அவசியமல்லவா?

கால்டுவெல் ஐயர் அயர்லாந்து தேசத்தில் கிளாடி என்னும் ஆற்றின் கரை அருகில் அமைந்த ஒரு சிறிய ஊரில் பிறந்தார். பத்தாண்டுகளாகப் பல நூல்களைக் கற்று உணர்ந்தார். இவர் படித்துக் கொண்டிருக்கையில் இவருடைய பெற்றோர்கள் தங்கள் தாய் நாடாகிய ஸ்காட்லாந்து தேசம் வந்து வசிக்கத் தொடங்கினர்கள். அக்காலத்தில் ஐயரவர்கள் ஆங்கில நூல்களைப் பதினறு ஆண்டுகள் ஆசையோடு படித்தார்கள். அவருக்கு ஓவியக் கலையில் ஒய்வில்லா ஊக்கம் இருந்தது. அதனை யறிந்த தாய் தந்தையர் ஐயரவர்களை அருகிலுள்ள ஓர் ஓவியக் கலைச் சாலைக்கு அனுப்பினர்கள்.

ஓவியக் கலையில் ஊக்கமிருந்தாலும் அறிவியற் கலைகளைக் கற்கவேண்டுமென்று ஆவல் கொண்டார். அறிவியற் கலை ஆராய்ந்த ஐயர் ஆண்டவனின் பெருமையை உணர்ந்தார். எனவே இறைவனை என்றும் வழிபட்டுக்கொண்டிருக்கும் வாழ்க்கையைப் பெரிதும் விரும்பினர். இறைவனின் பெருமையை எல்லார்க்கும் எடுத்து இயம்பும் எளிய வாழ்க்கையைத் தெரிந்துகொண்டது ஆச்சரியமல்ல. ஏழை மக்கட்குத் தொண்டாற்றுவதே இறைவனுக்குச் செய்யும் பணி என்று கொண்டு, அதற்குத் தகுந்த வாழ்க்கையாகிய 'நற்செய்தி உரைக்கும் தொண்டராக'ச் (Gospelist) சேர்ந்தார்.

இருபதாம் வயதில் கால்டுவெல் ஐயர் இலண்டன் நகரில் அமைந்த 'நற்செய்தி யுரைக்கும் நல்-தொண்டர் குழு'வில் (Society of the Propagation of Gospel) சேர்ந்தார். அக்காலத்தில் அவர் ஐரோப்பிய உயர்தனிச் செம்மொழிகளைப் பயின்றர். அப்பொழுதுதான் தாம் பின்னல் இயற்றப்

போகும் 'திராவிட மொழிகளின் ஒப்புமை இலக்கணம்' என்னும் நூலுக்கு அடிப்படை கோலினர். அக் கலைச்சாலை கிரேக்க மொழிப் பேராசிரியர் மொழித்திறம் அறியும் வழியை ஐயருக்கு உணர்த்தினர்.

அப்பொழுது நற்செய்திக் குழுவினர் தமிழ்நாடு சென்று தன்னோரில்லாக் கிறிஸ்து பெருமானின் புதுநெறியை உய்யக் கூறுவார் உளரோவெனத் தேடும்பொழுது, ஐயர் தாம் அரும் பணியாற்ற ஆர்வமுற்றிருப்பதாக அறிவித்தார். பின்னர் பெற்றோரிடத்தில் பிரியா விடைபெற்று மரக்கலமேறிச் சென்னை வந்து சேர்ந்தார்.

பெரும்பணி செய்யப் போந்த பெரியார் தமிழைக் கற்றார். தமிழ் மொழியை எடுத்து இயம்பும் ஆற்றல் பெற்றபிறகு பாண்டி நாடு வந்து பணியாற்றத் திருநெல்வேலியை அடைந் தார். அக்காலத்தில் கிறிஸ்துவ சமயம் பெருந் துன்பத்தில் அழுந்தியிருந்தது என்றாலும், இன்னற் காலத்தில் இறைவன் பெருமையை எடுத்துச் சொல்லுவதே என்றும் புகழையும் வீட்டின்பத்தையும் தரும் நெறி என்றுணர்ந்து, திருநெல் வேலியைச் சார்ந்த இடையன்குடிக்குப் புறப்பட்டார்.

செந்தேரியில் அமைந்த இடையன்குடியைக் கண்டு இரங்கிய வள்ளல் ஒரு சிறிதளவும் தளர்வுறாது அதைச் சீர்திருத்தத் தொடங்கினர். அங்குப் பெரும்பாலும் ஏழைக் குடிகளே வாழ்ந்து வந்தார்கள். குடிசைகள் ஆங்காங்கு காணப்பட்டன. அந்த ஊரின் மூலையில் ஒரு சிறு திருக் கோயில் அமைந்திருந்தது. அதன் அருகே வேதியர் வீடும் இருந்தது.

பின்னர்ப் பல நிலங்களை விலைகொடுத்து வாங்கி அவற் றில் வீடுகள் கட்டினர். கோவிலையும் குடியிருப்பையும் திருத்தியமைத்தார். தெருக்களைத் திருத்தமாக அமைத்தார். கிணறுகள் வெட்டினர்; நல்ல முறையில் வீடுகள் கட்டினர். நிழல் கொடுக்கும் நீண்ட மரங்களைப் பயிர் செய்தார். இவ் வாறு செய்தபின் சிறுவர் சிறுமியர்க்குக் கல்வி கற்றுக் கொடுக்கத் துணிந்தார். பாடசாலை கட்டி, பாலகர்க்குப் பாடம் கற்றுக் கொடுத்தார். கல்வியின் பெருமையைக் கருத்

தோடு எடுத்துச் சொன்னார். மக்கள் அவர் உரையை ஏற்றுக் கல்வியில் ஆர்வமுள்ளவரானார்கள்.

நல்ல ஒரு கோயில் கட்டவும் விழைந்தார். அதற்கு வேண்டிய கருவிகளை எல்லாம் பெற்றபின், பொருள் திரட்ட அறவோர் பலரை நாடி அதில் வெற்றியும் பெற்றார். இன்றும் அத்திருக்கோயில் அவருடைய பெருமையை எடுத்துப் புகன்று கொண்டிருக்கிறது. சென்னைக் கவர்னராயிருந்த நேப்பியர் பிரபு ஐந்நூறு ரூபாயும் கொடுத்து ஐயரவர்களின் விருந்தாளியாகவும் சிலநாள் இருந்து சென்றார்.

ஐயர் ஐம்பத்து மூன்றாண்டுகள் அரும்பணியாற்றினார். மூப்பின் தளர்ச்சியால் ஓய்வு எடுத்துக்கொண்டு கொடைக் கானல் குன்றில் வசிக்கத் தொடங்கினார் ; இவ்வாறு வாழும் பொழுது அந்தோ ! காலன், உயிரைக் கவரத் தொடங்கினான். ஒருநாள் மலைவளங் கண்டு வீடுவந்த ஐயர் குளிரால் நடுங்கிப் படுக்கையில் அமர்ந்தார். மருத்துவர் பலர் பார்த்தும், பணி செய்து கிறிஸ்து பெருமான் சமயத்திற்கே அணியாக விளங் கிய ஐயர், இம்மண்ணுடம்பை நீங்கிப் புகழுடம்பை அடைந் தார். இறைவன் திருவடி சென்று ஆண்டு என்றும் புகழ்ந்து கொண்டிருக்கப் பொன்னுலகம் புகுந்தார்.

பின்னர் அவரது திருமேனியைப் பேழையில் வைத்துத் தொண்டர்கள் இடையன்குடிக்குக் கொண்டு வந்தார்கள். ஏழைகள் கண்ணீர் விட்டார்கள். உற்றவர்களும் மற்றவர் களும் அழுது அழுது புலம்பினார்கள். இள நங்கையர் ;

ஏழைகளுக் கிரங்கிடும் எந்தாய் சென்றனையோ
எளியவர்க் கிரங்கிடும் எம் மன்பே சென்றனையோ
வேதம் போதித்த வித்தகனே சென்றனையோ
கல்வியளித்த கனவானே சென்றனையோ
அப்பா இறந்தனையோ அம்மா இறந்தனையோ
என்று உமைக் காண்போம் என்றென் றழுத னரே.

பல கிறிஸ்துவத் தொண்டர்கள் அணி அணியாக முன்னே சென்றனர். ஐயர் அருமந்த மகனார் சோகமுற்றார். உயர்ந்தோரும் தாழ்ந்தோரும், பெரியாரும் சிறியாரும், ஆண்

களும் பெண்களும், சிறுவரும் சிறுமியரும் தம் கண்களின் நீரால் திருமுழுக்காட்டி அவர் திரு உடலை ஆலயத்தில் அடக்கஞ் செய்தார்கள்.

### பயிற்சி

1. பொருள் கூறு:—ஒய்வில்லா ஊக்கம், அடிப்படை, கோலினர், ஆர்வம், இன்னல், நாடி, மூப்பின் தளர்ச்சி, பேழை, குழு.

2. பெருமை—எதிர்ப்பதம் என்ன?

3. ஆண்டு, பணி—பல பொருள்கள் கூறு.

4. கீழ்க்கண்ட வாக்கியங்களிலுள்ள பெயர்ச் சொற்களையும் வினைச் சொற்களையும் குறிப்பிடு—அவ்வூரில் ஏழைக் குடிகள் வாழ்ந்து வந்தார்கள். குடிசைகள் ஆங்காங்கு காணப்பட்டன. அந்த ஊரில் ஒரு மூலையில் ஒரு சிறு திருக்கோயில் அமைந்திருந்தது.

### கேள்விகள்

1. கால்டுவெல் ஐயரவர்கள் பிறந்த இடம் எது?

2. ஐயரவர்கள் இளமையில் எங்கெங்கிருந்து என்னென்ன கற்று வந்தார்?

3. ஐயரவர்கள் 'நற்செய்தி உரைக்கும் நல்-தொண்டர் குழு'வில் சேரக் காரணம் என்ன?

4. ஐயரவர்கள் இந்தியாவுக்கு வரக் காரணம் என்ன? அவர் இந்தியாவுக்கு வந்து முதலில் எங்கு தங்கியிருந்தார்? எம்மொழியைக் கற்றுக் கொண்டார்? பின்னர் எங்குச் சென்று வசித்தார்?

5. ஐயரவர்கள் இடையன்குடிக்குச் சென்ற சமயம் அவ்வூர் எவ்வித நிலையில் இருந்தது? அங்கு ஐயரவர்கள் செய்த தொண்டுகள் யாவை?

6. ஐயரவர்கள் இடையன்குடியில் வசித்த காலத்தில் அங்கு விஜயம் செய்த கவர்னர் யார்? அவர் செய்த உதவி என்ன?

7. முதுமைப் பருவத்தில் ஓய்வு எடுத்துக்கொள்ளும் பொருட்டு ஐயரவர்கள் எங்கு சென்று வசித்தார்?

8. ஐயரவர்கள் மரணமடைந்த விதத்தையும் அவர்களது உடல் அடக்கம் செய்யப்பட்ட விதத்தையும் கூறு.

9. ஐயரவர்கள் தமிழ் மொழிக்குச் செய்த பேருதவி என்ன?

# 7. பிள்ளை விளையாட்டு

பெ. நா. அப்புஸ்வாமி, பி. ஏ., பி. எல்.

நூறு நூற்றிருப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னே பாரிஸ் நகரத்திலே ரேனெ லானெக் என்றவர் ஒருவர் இருந்தார். அவர் ஒரு வைத்தியர்.

ஒரு சமயம் அவர் நோயாளிக்கு வைத்தியம் பார்த்துக் கொண்டிருந்தார். அவனுக்கு இருதய வியாதி. அவனுடைய இருதயம் சீரான நிலையில் இல்லை; அது கெட்டுப் போயிருந்தது. அதனால் அவன் நோயுற்றுக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தான். அவனுடைய உடலை அடிக்கடி சோதித்துப் பார்த்து வந்த போதிலும், அவனுடைய நோயின் தன்மையைப்பற்றி அந்த டாக்டரால் நன்றாக அறிந்து கொள்ள முடியவில்லை. உடலுக்குள் இருப்பதாயும், ஒய்வேயின்றி வேலை செய்து வருவதாயுமுள்ள இவ்வளவு முக்கியமான உறுப்பைப்பற்றிச் சீராக அறிய வழி இல்லையே என்று அவர் பலவிதமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தார். இருதயத்தைச் சோதித்துப் பார்ப்பதற்கு வேண்டிய துணைக் கருவிகள் ஒன்றும் அந்தக் காலத்தில் கிடையா. நோயாளியின் உடலில் வெளியில் தோன்றும் நோய்க் குறிகளைக்கொண்டு உத்தேசமாக வியாதி இன்னது என்பதை ஊகித்து, வைத்தியம் செய்யவேண்டியதாயிருந்தது. நோயுற்ற உறுப்பைப்பற்றி ஒன்றையும் திட்டமாய்த் தெரிந்து கொண்டு முறையாய்ச் சிகிச்சை செய்யவழியில்லை.

"இரத்தம் உடலிலே எப்படி ஓடி வருகிறது?—துரிதமாகவா? — தடைப்பட்டா? — தடுக்கியும் தடுக்காமலுமா? என்றெல்லாம் உறுதியாக அறிந்து கொள்ளக் கூடுமானால் எவ்வளவு சௌகரியமாய் இருக்கும்" என்று அவர் எண்ணமிட்டார். 'ஆனால் இந்தக் காரியம் எப்படி முடியும்? உடலுக்கு வெளிப்புறத்தில் இல்லையே இருதயம், உடலுக்குள்ளே அல்லவா இருக்கிறது? தோல், சதை, எலும்பு ஆகிய இவை எல்லாவற்றையும் தாண்டிப்போனால் அல்லவா நெஞ்சின் பக்கம் போகலாம். இவற்றுள் ஒவ்வொன்றும் இருதயத் துடிப்பின் ஒலியை வெளியே கேட்க வொட்டாமல் தடுக்கின்

றனவே. இத்தனை தடைகளையும் கடந்தாலன்றி இருதயத் துடிப்பின் தத்துவத்தை—இயற்கையை—குணத்தை எப்படி அறிய முடியும்? பயிருக்குத் தண்ணீர் இறைக்கும் பம்பைப் போல உடலுக்கு இரத்தத்தை இறைத்துப் பாய்ச்சி வரும் இருதயத்தின் இரத்த ஓட்ட வேலையை அறிவது எப்படி? இதற்கு ஒரு வழியையும் காணேமே' என்று அவர் சிந்தித்துக் கொண்டிருந்தார். "ஏதாவது வழி அகப்படாதா?" என்று பலவாருன ஆலோசனைகளைச் செய்துகொண்டிருந்தார்.

ஒரு நாள் அவர் இப்படி எண்ணமிட்டுக் கொண்டு நோயாளி வீட்டிற்கு நடந்து போய்க்கொண்டிருந்தார். வழியில் ஓரிடத்தில் மரக் கட்டைகள் முதலியன அடுக்கிக் கிடந்தன. சில பிள்ளைகள் அவற்றின்மீது ஏறிக் குதித்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய கவலையற்ற சிரித்த முகங்கள் அவரை வசீகரித்தன. நோவுற்று நோவினுலும் மனக் கவலையினுலும் உடலின் சோர்வினுலும் களைத்து வருந்திய நோயாளிகளின் முகங்களையே அடிக்கடி பார்த்து வரும் வைத்தியருக்குக் களங்கமற்று மலர்ந்த குழந்தை முகங்களின் பொலிவு அளவற்ற ஆனந்தத்தை அளித்தது. ஆதலால் அவர் நோயாளியினுடைய வியாதியையும் தம்முடைய கவலைகளையும் மறந்து, அந்தக் குழந்தைகளையும் அவர்களுடைய விளையாட்டையும் சற்றே பார்த்துப் போகலாமென்று நின்ருர்.

நீளப் பலகை ஒன்று அங்கே கிடந்தது. அதன் கோடி ஒன்றிலே ஆணி ஒன்று அடித்திருந்தது. ஒரு பையன் வீணைத் தந்தியை மீட்டுவதுபோல் அந்த ஆணியின் தலையைத் தன்னுடைய விரலால் மீட்டிக்கொண்டிருந்தான். அந்தப் பலகையின் மற்ருெரு கோடியிலே வேருெரு பையன் தன் காதை ஒட்ட வைத்துக்கொண்டு, உற்றுக் கேட்பது போல் பாவனை செய்துகொண்டிருந்தான்.

இதைக் கண்டு ஆச்சரியப்பட்ட டாக்டர், 'அவன் அந்த ஓரத்தில் மீட்டுவதா உனக்கு இந்த ஓரத்தில் கேட்கிறது?' என்ருர். பையன் 'ஆம்' என்ருன். டாக்டர் நம்பவில்லை. அவ்வளவு இலேசாக அவ்வளவு தூரத்திற்கு அப்பால் அவன்

மீட்டுவது இவனுக்கு வாஸ்தவத்தில் கேட்கும் என்பதை அவர் ஒப்புக்கொள்ள முடியவில்லை. 'ஒரு கோடியில் இருக்கும் பையன் மறு கோடியில் உண்டாக்கப்படும் மிகவும் மெல்லிய ஓசையும் கேட்கிறது என்கிறானே. அந்தப் பையனைக் காட்டிலும் நான் கிட்ட நின்று கொண்டிருக்கிறேனே. எனக்கு ஒன்றும் கேட்கவில்லையே. இவ்வளவு கிட்ட உள்ள எனக்கே கேளாமல் இருக்கும் பொழுது, அவ்வளவு தள்ளி உள்ள பையனுக்கு எப்படிக் கேட்கும்? ஆகையால் அந்த ஓசை கேட்கிறது என்று பையன் சொல்லுவது முழுப் பொய். நிச்சயமாய் அவன் கேட்பதுபோல் பாசாங்கு செய்கிறானே தவிர வேறில்லை' என்று அவர் எண்ணினார். பையனைப் பார்த்து, 'என்னையா ஏமாற்றப் பார்க்கிறாய்? எனக்கே கேட்கவில்லையே? உனக்கு எப்படிக் கேட்கும்' என்றார். அந்தப் பையன் 'உங்களுக்கு நம்பிக்கை இல்லையானால், நீங்களே வேண்டுமானால், இங்கே காதை வைத்துக் கேட்டுப் பாருங்கள்' என்றான்.

டாக்டருக்கு நம்பிக்கை இல்லை. ஆயினும் விளையாட்டாகச் சிரித்துக்கொண்டே 'இதோ தெரியப் போகிறது உன் வம்பு' என்று சொல்லிக் கொண்டு பலகையில் தம்முடைய காதை வைத்தார். 'மீட்டுடா?' என்றான் பையன். மறு கோடியிலிருந்த பையன் முன்போலவே மெதுவாக ஆணியை மீட்டினான்.

அவன் மீட்டிய ஒலியானது நன்றாக மிகவும் தெளிவாகக் கேட்டது! டாக்டர் பிரமித்துப் போனார். ஒரு வேளை அவன் முன்னைக் காட்டிலும் பலமாக மீட்டுகிறானோ என்னவோ என்று நினைத்து, அதைக் கவனிப்பதற்குப் பலகையை விட்டுக் காதை எடுத்துத் தலையை நிமிர்த்தினார். பையன் மெதுவாகத்தான் மீட்டிக்கொண்டிருந்தான். ஆனால் அந்த ஓசை காதில் விழவில்லை. கண்ணுக்குத் தெரிந்தது; காதுக்குக் கேட்கவில்லை. மறுபடியும் பலகையில் காதை வைத்தார்; மீட்டும் ஒலி நன்றாகக் கேட்டது. பையன் சொன்னது பொய்யன்று என்று பையனைத் தட்டிக் கொடுத்தார். அவருடைய மனம் மறுபடியும் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டது.

இந்த விசித்திர நிகழ்ச்சியின் தத்துவம் என்ன என்று

யோசித்துப் பார்த்தார். அறிவாளியாகியபடியால் தெரிந்து கொண்டார். மெல்லிய காற்றின் வழியாகப் பரவி ஒருவனுடைய காதை வந்து அடைய வன்மையில்லாத ஒலியுங்கூட, மரக்கட்டையாகிய திண்ணிய பொருளின் வழியாகப் பரவுமானால், காதில் வந்து படக்கூடியதாகும் என்பதுதான் தத்துவம் என்பதை உணர்ந்து கொண்டார். இதிலிருந்து அவருக்கு ஒரு யுக்தி தோன்றிற்று.

நேரே நோயாளியின் வீட்டிற்குப் போனார். பெரிதான கெட்டிக் காகிதம் ஒன்றை எடுத்தார். ரூல்தடி மாதிரியாக அதை இறுகக் கெட்டியாகச் சுற்றினார். சுருட்டி அதன் ஒரு கோடியை நோயாளியின் இருதயத்தின் மேல் வைத்தார். அதன் மறுகோடியைத் தன்னுடைய காதோடு ஒட்டிப் பிடித்துக் கொண்டார். இருதயத் துடிப்பு நன்றாய்க் கேட்டது. அந்த ஓசையின் தன்மையிலிருந்து நோயாளியின் இருதயத்தின் நிலைமை இப்பேர்ப்பட்டது என்று தெரிந்துகொள்ள முடிந்தது. இதுதான் முதல் முதலில் அமைக்கப்பட்ட 'ஸ்டெதஸ்கோப்' எனப்படும் துடிப்பறி கருவி.



ஸ்டெதஸ்கோப்

பிறகு அந்த டாக்டர் பலவகையான பொருள்களைக் கொண்டு ஸ்டெதஸ் கோப் செய்து பார்த்தார். நாளடைவில் அதற்கு எத்தனையோ சீர்திருத்தங்கள் ஏற்பட்டன. இப்பொழுது, அது டாக்டருக்குத் துணை செய்யும் கருவிகளுள் மிகவும் முக்கியமானது ஒன்று. அதுவே டாக்டரைக் குறிக்கும் அறிகுறி என்றுகூட ஆகி விட்டது. பிள்ளைகளின் விளையாட்டினால் உலகத்துக்கு உண்டான பேருபகாரம் இது.

பயிற்சி

1. பொருள் கூறு :—உத்தேசமாக, வசீகரித்தன, நோவுற்று, பொலிவு, வாஸ்தவம், பாசாங்கு.

2. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது:—அடிக்கடி, வழியில், அளவற்ற, முதல் முதலில், நாளடைவில்.

3. பதம் பிரி: —வழியில்லை, ஓரிடத்தில், வேறில்லை, கேட்கவில்லை, நம்பிக்கையில்லை, நோவுற்று, அளவற்ற.

4. எதிர்ப்பதம் எழுது :—துரிதமாக, சௌகரியமாக, நம்பிக்கை.

5. ஒலி, ஒளி, ஒழி ; வலி, வளி, வழி—அர்த்த வித்தியாசத்தை விளக்கு.

6. 'என்னையா ஏமாற்றப் பார்க்கிருய் ?'—சந்தர்ப்பம் கூறு.

7. கீழ்க்கண்ட வாக்கியங்களிலுள்ள எழுவாய், பயனிலை, செய்ப்படு பொருள் இவைகளை எடுத்தெழுது.

(அ) ஓரிடத்தில் மரக்கட்டைகள் அடுக்கிக் கிடந்தன.

(ஆ) டாக்டர் பலவகையான பொருள்களைக்கொண்டு 'ஸ்டெதஸ்கோப்' செய்து வந்தார்.

## கேள்விகள்

1. ரேனெ லானெக் என்பவர் யார் ?

2. ஒரு சமயம் ரேனெ லானெக் என்ன வியாதியுள்ள நோயாளிக்கு வைத்தியம் செய்து வந்தார் ? அவரால் ஏன் நோயாளிக்கு முறையாய்ச் சிகிச்சை செய்ய முடியவில்லை ?

3. அவர் ஒரு நாள் நோயாளியின் வீட்டுக்குச் செல்லும் வழியில் என்ன எண்ணமிட்டுக் கொண்டிருந்தார் ?

4. வழியில் பிள்ளைகள் என்ன விளையாட்டு ஆடிக்கொண்டிருந் தார்கள் ?

5. அந்த விளையாட்டைக் கண்டு ரேனெ லானெக் ஆச்சரியப்படக் காரணம் என்ன ?

6. அந்த விளையாட்டைப்பற்றி ரேனெ லானெக் கொண்ட சந்தேகம் எவ்விதம் நீங்கியது ?

7. பிள்ளைகளின் விளையாட்டிலிருந்து ரேனெ லானெக் அறிந்து கொண்டது என்ன ?

8. ரேனெ லானெக் நோயாளியின் இருதயத் துடிப்பை எவ்விதம் கண்டறிந்தார் ?

## கட்டுரை எழுதுதல்

'ஸ்டெதஸ்கோப்' எனப்படும் கருவி முதல் முதலில் கண்டு பிடிக்கப் பட்ட விதத்தைப்பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

# 8. தாவரப் பொருள்கள்

டாக்டர். பா. நடராஜன், டி. லிட்.

ஒரு நாடு தொழில் வளர்ச்சி அடைய வேண்டுமானல் நான்கு சாதனங்கள் இன்றியமையாதன : 1. மூலப்பொருள் கள் ; 2. மூலதனம் ; 3. ஆக்குவோர் ; 4 வாங்குவோர்.

மூலப்பொருளாவன பெரும்பாலும் இயற்கை விளை பொருள்களே. ஆயினும் சிறுபான்மையாகச் செயற்கைப் பண்டங்களும் சில தொழில்களுக்கு மூலப்பொருளாய் அமை வதுண்டு. உதாரணமாக ஆளி விதையை எடுத்துக்கொள் வோம். ஆளி எண்ணெய் செய்வதற்கு இது மூலப் பொரு ளாய் இருக்கிறது. ஆதலால் ஆளி விதையை இயற்கைப் பொருளாகவும், எண்ணெயைச் செயற்கைப் பொருளாகவும் கருதலாம். ஆனல் செயற்கைப் பொருளான இந்த எண் ணெயே பல சாயங்களுக்கும், வார்னிஷ் முதலியவற்றிற்கும் மூலப் பொருளாக அமைகின்றது. இவ்வாறே மேலும் பார்ப்போமானல் செயற்கைப் பொருள்களான இந்த சாயங் கள் பின்னும் பல தொழில்களுக்கு மூலப்பொருள்களாய் அமைகின்றன. இவ்வாறு படிப்படியாகப் பார்த்துக் கொண்டே போனல் எதுதான் மூலப்பொருள், எதுதான் செயற்கைப் பொருள் என்று வரையறுக்க முடியாமற் போய் விடும். ஆகவே பொதுவாகத் தொழில் வளர்ச்சிக்கு இன்றி யமையாத அடிப்படையான இயற்கைப் பொருள்களே மூலப் பொருள் என்னும் பெயரால் இந்நூலிற் குறிக்கப்படும்.

இவ்வியற்கைப் பொருள்களைத் தாதுப் பொருள்கள், தாவரப் பொருள்கள், விலங்குப் பொருள்கள் என மூவகை யாகப் பிரிக்கலாம். தாவரப் பொருள்களுள் பல விவசாயப் பொருள்களும் உண்டு; காட்டுப் பொருள்களும் உண்டு. பருத்தி, சணல், எண்ணெய் விதைகள், கரும்பு, ரப்பர் முதலிய விவசாயப் பொருள்கள் தொழில் வளர்ச்சிக்கு மிகச் சிறந்தவை, இவற்றுள் மிகவும் முக்கியமானது பருத்தி யாகும்.

1942 கணக்குப்படி—தாவரப்பொருள்களின் உற்பத்தி அளவு கொடுக்கப் பட்டுள்ளன.

**பருத்தி** :—ஆண்டொன்றுக்கு இருநூறு கோடி ராத்தல் பருத்தி இந்தியாவில் சாகுபடியாகின்றது. உலகத்திலேயே ஐக்கிய அமெரிக்காவுக்கு அடுத்தபடியாக இந்தியா பருத்தி உற்பத்தியில் சிறந்ததென்று சொல்லலாம். இதில் சுமார் முக்கால் பாகம் பம்பாய் ராஜ்யத்தில் மட்டும் சாகுபடி யாகிறது. மொத்த விளைவில் பாதி உள் நாட்டிலேயே பயன் படுத்தப்படுகிறது. எஞ்சிய பாதி மூலப் பொருள்களாகவே அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றது. இந்தியா வில் பல பருத்தி வகைகள் சாகுபடி செய்யப்பட்ட போதிலும் அவை யாவும், அமெரிக்காவிலும் எகிப்திலும் சாகுபடியாகும் பருத்திக்கு நிகராகமாட்டா. இந்தியப் பருத்தி நீளத்திலும் பருமனிலும் குறைவாயிருக்கிறது. எனவே, அப்பருத்தி, உயர்ந்த நம்பர் நூல்கள் நூற்கப் பயன்படுவதில்லை. உயர்ந்த வகைப் பருத்தியை இந்தியாவிலும் உற்பத்தி செய்ய அரசாங் கத்தார் நெடுங்காலமாகப் பல முயற்சிகள் செய்துள்ளார்கள். அவற்றின் பயனாக ஓரளவு உயர்ந்த இனப் பருத்தி நாட்டில் சாகுபடி ஆகி வருகிறது. ஆயினும் நயம் மிகுந்த நூல்கள் இழைப்பதற்குப் பெரும்பாலும் இறக்குமதியையே நம்பி யிருக்கவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. இவற்றையும் நம் நாட்டிலேயே சாகுபடி செய்வது அவசியமாகும். ஆராய்ந் தறிந்த முறைகளைக் கைக்கொண்டு பருத்தி சாகுபடி நடை பெறுமானால், இந்தக் குறை நாளாவட்டத்தில் நீங்கிவிடும்.

**சணல்** :—பருத்திக்கு அடுத்த மூலப்பொருள் சண லாகும். இது பெரும்பாலும் வங்காளத்தில் கங்கை, பிரம புத்திரா என்ற இரு நதிகளும் கலக்கும் இடத்தில் உள்ள டெல்டாக்களில் (கழிமுகப் படுகை) பயிராகின்றது. இது வன்றியும், ஆஸாம், பீகார், ஒரிஸா முதலிய ராஜ்யங்களி லும் சில இடங்களில் பயிராகின்றது. தென் அமெரிக்கா விலும் வேறு பல தேசங்களிலும் இதனைப் பயிர் செய்ய முயன்றனர். ஆனால் பயன்படாது போயிற்று. எனவே, இப்பொருளில் இந்தியாவிற்குத் தனி உரிமை இருக்கின்ற தெனலாம். ஆண்டொன்றுக்கு சுமார் 31 லக்ஷம் ஏகராக்கள்

பயிராகின்றன. 96 லக்ஷம் கட்டு உற்பத்தியாகிறது. இவற்றுள் பாதி ஏற்றுமதியாகின்றது. பயிரிடும் நிலத்தின் அளவையும் சாகுபடியையும் இன்னும் எவ்வளவோ பெருக்க இடமுண்டு.

**எண்ணெய் விதை :**—எண்ணெய் விதைகள் பல வகைப்படும். உலகத்திலேயே இந்தியாவின் சாகுபடி இவைகளில் தலை சிறந்து நிற்கின்றது. சுமார் ஒன்றே முக்கால் கோடி ஏகரா நிலங்களில் எண்ணெய் விதை பயிராகின்றது. கோடிக்கணக்கான டன்கள் ஆண்டுதோறும் உற்பத்தியாகின்றன. பயிர் முறையைச் சீர்திருத்தினால் இந்தச் சாகுபடியை எளிதில் பெருக்கலாம்.

**கரும்பு :**—அடுத்தபடியாகக் கரும்பு ஒரு முக்கியமான மூலப்பொருளாய் இருக்கிறது. சுமார் 31 லக்ஷம் ஏகராக்கள் ஆண்டுதோறும் பயிராகின்றன. சமீபத்தில் கரும்பு சாகுபடி மிகுந்திருக்கின்றது. ஆயினும் ஜாவா முதலிய நாடுகளை ஒப்பிடும்போது இந்தியக் கரும்பு சாறு குறைந்ததாய் இருக்கிறது. திருந்திய விவசாய முறையைக் கையாண்டதினால் கரும்புச் சாகுபடியில் அண்மையில் தகுந்த முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. மேலும் இத் திருத்தங்கள் தொடர்ந்து நடைபெறுமானால், இந்தியாவில் கரும்பு விளைவு பன்மடங்கு பெருகுமென்பதில் ஐயமில்லை.

**ரப்பர் :**—தற்காலத் தொழிலுலகத்துக்கு இன்றியமையாத மற்றொரு மூலப்பொருள் ரப்பராகும். ரப்பர்த் தோட்டங்கள் சென்னை ராஜ்யத்தில் நீலகிரி, சேலம் ஜில்லாக்களிலும் மைசூர், கொச்சி, குடகு முதலிய நாடுகளிலும், வட இந்தியாவில் அஸ்ஸாமிலும் சிறந்து காணப்படுகின்றன. சுமார் $1\frac{1}{2}$ லக்ஷம் ஏகரா பயிர் செய்யப்படுகிறதென்றும், 3 கோடி ராத்தலுக்கு மேலாக ரப்பர் ஆண்டொன்றுக்கு உற்பத்தியாகிறதென்றும் புள்ளி விவரங்களால் வெளியாகின்றது. இன்னும் எவ்வளவோ ரப்பர் மரங்களை வெட்டாமல் விட்டிருக்கிறார்கள். இன்னும் எவ்வளவோ நிலப்பரப்பில் ரப்பர் சாகுபடி செய்ய இடமிருக்கின்றது. ரப்பரைப் பொருத்தவரையிலும் உள்நாட்டின் தொழில்களுக்கு மட்டுமல்ல, அயல் நாடு

களுக்கு ஏற்றுமதி செய்யவும் போதிய அளவு இந்தியாவில் உற்பத்தியாகின்றது.

காட்டுப் பொருள்களிலே தடி, மூங்கில், பதஞ் செய்ய உதவும் பட்டைகள், பசைகள், மெழுகுகள், குங்கிலியம், சிலவகை எண்ணெய்கள் முதலியன முக்கியமானவை. இந்தியாவிலே காடுகளின் மொத்தப் பரப்பு சுமார் எட்டுக் கோடி ஏகராக்களாகும். மரத்தடியும், விறகுகளுமாகச் சுமார் மூன்றரைக் கோடி கன அடிகள் உற்பத்தியாகின்றன. இதைத் தவிர மற்றைச் சில்லரை விளைபொருள்களிலிருந்து சுமார் ஒன்றரைக்கோடி ரூபாய் வருவதாக மதிப்பிடப்படுகின்றது. அன்றியும் சுதேச சமஸ்தானங்களில் இருக்கும் காடுகளின் பரப்பு ஏராளமாய் இருக்கிறது. ஆயினும் ஏற்ற இடங்களில் ஏற்ற மரங்களை வளர்ப்பித்து அவைகளை உரிய காலத்தில் காட்டிலிருந்து நாட்டில் கொண்டு சேர்க்க அரசாங்கத்தார் தகுந்த வசதிகள் செய்தாரில்லை. இவ்வழியில் அரசாங்கமும் முனையவேண்டும்.

## பயிற்சி

1. பொருள் விளக்கு :—இன்றியமையாதன, வரையறுக்க முடியாமற் போய்விடும், தலை சிறந்து நிற்கின்றது, புள்ளி விவரங்கள், அரசாங்கமும் முனையவேண்டும்.

2. எதிர்ப்பதம் எழுது :—சிறுபான்மை, ஏற்றுமதி, அவசியம், அண்மை.

3. விலங்கு, கூண்டு—இருபொருள் கூறு.

## கேள்விகள்

1. ஒரு நாடு தொழில் வளர்ச்சி அடைவதற்கு வேண்டிய சாதனங்கள் எவை ?

2. தொழிலுக்கு வேண்டிய மூலப் பொருள்களை என்னென்ன வகைகளாகப் பிரிக்கலாம் ?

3. இந்தியாவில் நடைபெறும் பருத்திச் சாகுபடியின் தன்மையை விவரி.

4. இந்தியாவில் ரப்பர் பயிரிடப்படும் இடங்கள் எவை ?

5. இந்தியாவில் எண்ணெய் விதைகள் சாகுபடியாகும் அளவைக் குறிப்பிடு.

6. காடுகளிலிருந்து கிடைக்கும் பொருள்கள் யாவை ?

# 9. நபிபெருமானவர்களின் திவ்விய குண வொழுக்கம்

முு. ந. மஹமத் சாகிப்

ஆண்டவன் தனது திருவேதத்தில், "நீர் மேலான குணத்தை யுடையவரா யிருக்கிறீர்" என்று பெருமானவர்களைப் பற்றிப் புகழ்ந்து கூறியிருக்கின்ருன். பெருமானவர்களின் குணவொழுக்கம் எவ்வாறிருந்ததென அவர்களின் நெருங்கிய சகவாசத்திலிருந்த பிராட்டியரான ஹஸரத் ஆயிஷா (ரலி) நாயகியவர்களிடம் ஒருவர் கேட்டபோது அவர்கள், "பெருமானவர்களின் குண வொழுக்கம் திருக் குர்-ஆனுயிருந்தது" எனக் கருத்து நிறைந்த சுருக்கமான விடையளித்தார்கள். அதன் கருத்தாவது :—எத்தன்மையான குணத்தையும் ஒழுக்கத்தையும் கைக்கொள்ள வேண்டுமென்று திருக் குர்-ஆனில் கட்டளையிடப்பட்டிருக்கின்றனவோ, அவைகளெல்லாம் நம் பெருமானவர்களின் வாழ்க்கையில் பூர்ணமாய் அமையப் பெற்றிருந்தன. மனித வாழ்க்கையை ஒழுங்குபடுத்தி, மனிதனை மேலேற்றுவதற்காக, ஆண்டவன் திருக் குர்-ஆனில் அருளியிருக்கும் சகல போதனைகளையும் பெருமானவர்கள் தங்கள் தினசரி வாழ்க்கையில் அனுஷ்டித்துக் காட்டியிருக்கிருர்கள். அதனுலேயே போதனு முறையில் திருக் குர்-ஆனும் அனுபவ முறையில் பெருமானவர்களின் வாழ்க்கையும் முஸ்லிம்களுக்கு வழி காட்டியா யமைந்திருக்கின்றன.

மனித சக்தியினுல் அடையக்கூடாத உன்னத பதவியைப் பெருமானவர்கள் அடைந்திருந்தும் அவர்கள் தங்களை மற்றவர்களைவிட மேலாகக் கருதுவதேயில்லை. அவர்கள், "நானும் ஓர் அடிமை; அடிமையைப் போலச் சாப்பிடுகிறேன்; அடிமையைப்போல உட்காருகிறேன்" என்று சொல்லுவார்கள். மக்காவிலிருக்கும்போது எத்தன்மையான ஆடம்பரமற்ற சாதாரண வாழ்க்கையை அவர்கள் அனுஷ்டித்து வந்தார்களோ, அதே வாழ்க்கையைத்தான் அவர்கள் அரசுரிமை பெற்றுச் சகல சௌகரியங்களையும் அமைக்கக் கூடிய சந்தர்ப்பம் வாய்ந்த காலத்திலும் அனுஷ்டித்து

வந்தார்கள். அவர்களிட்ட வேலையைச் சிரமேற்கொண்டு செய்வதற்கு எண்ணிறந்தவர்கள் காத்திருந்தும், எல்லா வேலையையும் அவர்களே செய்து கொள்வார்கள். எந்த வேலையையும் அவர்கள் கேவலமாகக் கருதுவதில்லை. கடைகளுக்கு அவர்களே சென்று சாமான்கள் வாங்கி வருவார்கள். ஒரு சமயம் பெருமானவர்கள் கடைவீதிக்குச் சென்று ஸ்ரா பீல் (கட்டை) வாங்கினுர்கள். அச்சமயம் அங்கு அவர்களுடனிருந்த ஹஸரத் அபூஹுரைரா அவர்கள் அதை வீட்டிற்குக் கொண்டு போவதற்காகத் தூக்க முயன்றபோது பெருமானவர்கள் அவர்களைத் தடுத்து, "இந்த வேலையை வஸ்துவின் சொந்தக்காரர் செய்யவேண்டும். நீர் என்னைவிடத் தாழ்ந்தவரென்று நான் எவ்வாறு கருதக் கூடும்?" என்று சொல்லிப் பெருமானவர்களே அதை வீட்டிற்குத் தூக்கி வந்தார்கள்.

வீட்டு வேலைகளுக்காகவும் மற்றவர்களுக்குத் தொந்தரை கொடுப்பதில்லை. வீட்டிலுள்ள ஆட்டின் பாலை அவர்களே கறந்து கொள்வார்கள். ஒட்டகத்தைக் கட்டி அதற்குப் புல் முதலியன போட்டு அவர்களே கவனித்துக் கொள்வார்கள். ஒரு சமயம் ஹஸ்ரத் அன்ஸ் அவர்கள், பெருமானவர்களிடம் சென்றபோது, அவர்கள் ஒட்டகத்திற்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். பெருமானவர்கள் வீட்டைப் பெருக்குவதையும் கேவலமாகக் கருதாமல் அவர்களே பெருக்கிக்கொள்வார்கள். வீட்டு வேலைகளிலும் பெண்களுக்கு உதவி செய்வார்கள். கிழிந்த ஆடைகளை அவர்களே தைத்துக்கொள்வார்கள்; பாதரக்ஷை செப்பனிட்டுக் கொள்வார்கள்.

மற்றவர்கள் வேலை செய்து கொண்டிருக்கும்பொழுது பெருமானவர்கள் சும்மாயிருக்கப் பிரியப்படமாட்டார்கள். ஒரு தடவை பெருமானவர்களும் ஸஹாபாக்களும் பிரயாணம் சென்றுர்கள். வழி மத்தியில் தங்கிச் சமையல் செய்வதற்கான ஏற்பாடு செய்யப்பட்டது. ஸஹாபாக்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வேலையைச் செய்வதாய் ஏற்றுக் கொண்டார்கள்! அப்போது பெருமானவர்கள் "நான் விறகு சேகரித்து வருகிறேன்" என்று சொல்ல, ஸஹாபாக்கள் யாரசூலுல்லா; இவ்வேலைகளை அடியார்களாகிய நாங்கள் செய்து கொள்

வோம்'' என்று சொன்னார்கள். அப்போது பெருமானவர்கள் ''உங்கள் எல்லோரிலும் என்னை மேலானவனாகக் கருத எனக்குப் பிரியமில்லை. தன்னுடனிருக்கும் பிரயாணிகளில் தன்னை மேலானவனாக்கிக் கொள்கிற அடியானை ஆண்டவன் பிரியங்கொள்ளமாட்டான்'' என்று கூறிவிட்டு அவர்களே சென்று விறகு கொண்டு வந்தார்கள்.

மதினாவில், புதிதாகப் பள்ளிவாசல் கட்டியபோது ஸஹாபாக்களுடன் பெருமானவர்களும் சேர்ந்து வேலை செய்தார்கள். பெருமானவர்களை வேலை செய்ய வேண்டாமென்று ஸஹாபாக்கள் எவ்வளவோ தடுத்துச் சொல்லியும், வேலை செய்யாமல் சும்மாவிருக்கப் பெருமானவர்கள் பிரியப்பட வில்லை. பெருமானவர்கள் நபியாயிருந்தும் அரசருக்கு மேலான அரசராயிருந்தும், ஒரு தொழிலையும் அவர்கள் கேவலமாகக் கருதுவதில்லை. மனிதனுடைய மேன்மையும் தாழ்மையும் தொழிலினால் உண்டாவதில்லையென்றும், அவனுடைய சத்தியத்தினாலும் ஒழுக்கத்தினாலுமே உண்டாவதென்றும் அவர்கள் அனுபவத்தில் காட்டினார்கள்.

பெருமானவர்கள் தங்களுக்குமட்டும் இவ்வாறு வேலை செய்தார்களென்றில்லை, பிறருக்காகவும் வேலை செய்து வந்தார்கள் அவர்களிடம் யாராவது ஒரு வேலையைச் செய்து கொடுக்கும்படி கேட்டால் உடனே அதைச் செய்து கொடுப்பார்கள். ஒரு சமயம் கப்பாப் இப்னு அரத் என்னும் ஸஹாபியானவர் யுத்தத்திற்காக மதினாவை விட்டு அயல்நாடு சென்றிருந்தார். அவரின் மனைவியும் பையனும் ஆட்டின் பாலைக் கொண்டே ஜீவனம் செய்யவேண்டியதிருந்தது. ஆனால் பால் கறப்பதற்கோ வீட்டில் ஒருவருமில்லை. அதனால் அவ்வம்மையார் அவ்வாட்டைத் தமது பையன் வசமாகக் காலையிலும் மாலையிலும் பெருமானவர்களிடம் அனுப்பி வந்தார். பெருமானவர்களும் யுத்தத்திற்குச் சென்றிருந்த ஸஹாபி திரும்பி வரும்வரை காலையிலும் மாலையிலும் பால் கறந்து கொடுத்து வந்தார்கள்.

பெருமானவர்களின் இல்லற வாழ்க்கையைக் கவனித்தோமானால் அதுவும் சாதாரணமானதாகவே யிருந்தது. பச்சை மண் செங்கலினால் கட்டப்பட்டு பேரீச்ச இலைகளி

ணுல் வேயப்பட்ட சிறிய அறைகளிலேயே பெருமானவர்கள் வசித்து வந்தார்கள்.

ஆகாரத்திலும் பெருமானவர்கள் குறிப்பிட்ட ஓர் உணவு வேண்டுமென்று வைத்துக்கொள்வதில்லை. அவர்களுக்கு முன்பு எது வைக்கப்பட்டதோ அதையே சாப்பிடுவார்கள். எது கிடைத்தாலும், அதில் திருப்திகொள்வார்கள். பலவித மான உணவு முன் வந்தால், அவர்களுக்குப் பிரியப்படாத தைச் சாப்பிடுவதில்லை. பெருமானவர்கள் உணவைப்பற்றிச் சிலாகித்தும் குறைவு படுத்தியும் பேசுவதில்லை. கடவுளா லருளப்பட்டதால் அதை யிகழ்வதுமில்லை. உணவுப் பொருளில் ஆசை வைப்பின், உலக இச்சை பெருகுமாத லால், அதைப்பற்றிப் புகழ்வதுமில்லை. தெள்ளாத வாற் கோதுமை மாவினுல் செய்யப்பட்ட ரொட்டியே அனேகமாய் அவர்களுடைய உணவாயிருக்கும். பெருமானவர்கள் சாப் பிட ஆரம்பிக்கும்பொழுது, அல்லாவின் நாமத்தைச் சொல்லியே ஆரம்பிப்பார்கள். சாப்பிட்டபின் முடிவில் ஆண்டவனுக்கு ஹம்து (ஸ்தோத்திரம்) செலுத்துவார்கள்.

பெருமானவர்கள் வாழ்க்கையின் மிகுதியான நாட்கள் பட்டினியிலேயே கழிந்திருக்கும். எத்தனையோ நாட்கள் அவர் கள் வீட்டில் நெருப்புப் பற்றவையாமலிருக்கும். பேரீச்சம் பழமும் தண்ணீரும் மட்டுமே அநேக நாட்கள் அவர்க ளுடைய ஆகாரமாயிருந்து வந்தது. குளிர்ந்த ஜலமே அவர் களுக்கு மிகப் பிரியமானது. சில சமயங்களில் பாலுடன் ஜலம் கலந்தும் சாப்பிடுவார்கள். ஜலத்தைச் சிறுகச் சிறுகவே யருந்துவார்கள். வயிறு நிறைந்திருப்பதைவிடப் பட்டினியாயிருப்பதையே அவர்கள் மிகவும் பிரியப்படு வார்கள்.

உடையிலும் பெருமானவர்கள் குறிப்பான ஓர் உடை அணிந்துகொள்வதென்ற வழக்கமில்லை. அவர்கள் உடையும் சாதாரணமானதாகவே யிருந்தது. அநேகமாக முரடான வஸ்திரங்களையே அணிந்து கொள்வார்கள். ஒன்றிற் கதிக மான ஆடை அவர்கள் வைத்துக்கொள்வதில்லை. ஆடம்பர மான உடையில் அவர்கள் பிரியங்கொள்வதில்லை. ஒட்டுப் போட்டுத் தைக்கப்பட்ட உடைகளையும் மிகுதியாய் அணிந்து

கொள்வார்கள். சில சமயங்களில் பல நிறமான உடைகளை யணிந்திருந்தாலும், வெள்ளை நிறமான உடை யணிவதே அவர்களுக்கு மிகப் பிரியமானது. சிவப்பு நிறத்தை அவர்கள் விரும்புவதில்லை.

அவர்கள் படுக்கையும் சாதாரணமாகவே யிருந்தது. சில சமயம் தரையின்மீதும், சில சமயம் தோலினால் செய்யப் பட்டுப் பேரீச்ச இலைகள் அடைக்கப்பட்டிருக்கும் மெத்தை யின் மீது சயனம் செய்துகொள்ளுவார்கள். சில சமயம் பேரீச் சமரத்தினால் செய்யப்பட்டிருக்கும் கட்டிலிலும் யாதொரு விரிப்புமின்றி படுத்துக்கொள்ளுவார்கள். அதனால் அவர்கள் திருமேனியில் அடையாளங்கள் பதிந்திருக்கும். ஒரு நாள் பெருமானவர்கள் ஒரு பாயின்மீது படுத்து எழுந்தபோது, அவர்கள் சரீரத்தில் அப்பாயின் அடையாளம் பட்டிருப்பதை ஸஹாபாக்கள் கண்டு, பெருமானவர்களிடம் "யாரசூ லுல்லா! நாங்கள் மெத்தை செய்து கொடுக்கிறோம்" என்று சொல்லப் பெருமானவர்கள் "எனக்கு உலகத்தினால் என்ன ஆகவேண்டியிருக்கிறது. சவாரி செய்து போகிற ஒருவன் வழியில் கொஞ்ச நேரத்திற்காக ஒரு மரத்தின் நிழலில் உட்கார்ந்து பின் அதை விட்டு முன் செல்வதைப் போலவே, உலகத்தோடு என்னுடைய சம்பந்தமிருக்கிறது" என்று சொன்னார்கள்.

ஒரு சமயம் ஹஸரத் உமரவர்கள் பெருமானவர்களின் வீட்டிற்குச் சென்றபோது ஒரு கட்டிலும், பேரீச்ச இலை களால் நிரப்பப்பட்ட ஒரு தலையணையும், வாற்கோதுமை நிறைந்த ஒரு மண் பாத்திரமும், விரிப்பதற்கு உபயோகிக் கும் ஒரு தோலும், தண்ணீர் வைப்பதற்காகச் சில தோற் கூசாக்கள் மட்டும் அங்கிருப்பதைக் கண்டு கண்ணீர் சொரிந்தார்கள். எதற்காக அழவேண்டுமென்று பெருமா னவர்கள் கேட்க ஹஸரத் உமரவர்கள் "யாரசூலுல்லா! நான் அழாது எப்படி இருக்க முடியும். கட்டிலிலுள்ள கயிறுகளால் தங்களுடைய சரீரத்தில் தழும்புகள் பட்டிருக் கின்றனவே, தங்களுடைய வீட்டுச் சாமான்கள் வைக்கப்பட் டிருக்கும் அறை என் பார்வையிலிருக்கிறது. (ரோம சக்கர வர்த்தியாகிய) கெய்ஸரும் (பாரசீக சக்கரவர்த்தியாகிய

கிஸ்ராவும்) சந்தோஷத்திலும் ஆடம்பரத்திலும் மூழ்கி யிருக்கின்றார்கள். தாங்கள் ஆண்டவனுடைய (தூதர்) அவனால் தெரிந்தெடுக்கப் பட்டவர்களாயு மிருக்கத் தங்களுடைய வீட்டுச்சாமான்களின் நிலைமையோ இப்படி இருக்கிறது'' என்று சொன்னார்கள். அப்போது பெருமானவர்கள் ''கர்த்தாவுடைய குமாரரே! அவர்கள் உலகத்தைப் பெற்றுக் கொள்ளவும் நாம் ஆகிரத்தை (மறுமையை)ப் பெற்றுக் கொள்ளவும் உங்களுக்குப் பிரியமில்லையா?'' என்று சொன்னார்கள்.

### பயிற்சி

1. பதம் பிரித்து எழுது :—குண வொழுக்கம், அரசுரிமை; வழக்கமில்லை.
2. ''நான் விறகு சேகரித்து வருகிறேன்,''—சந்தர்ப்பம் கூறு.
3. நாயகி—ஆண்பால் என்ன?
4. கிழிந்த ஆடைகளை அவர்களே தைத்துக்கொள்வார்கள். 'கிழிந்த ஆடைகள்' என்று வாக்கியத்தை ஆரம்பித்துப் பூர்த்தி செய்.
5. யுத்தத்திற்குச் சென்றிருந்த ஸஹாபி திரும்பி வரும்வரை பெருமானவர்கள் காலையிலும் மாலையிலும் பால் கறந்து கொடுத்து வந்தார்கள்.—பெயரெச்சம், வினையெச்சம், வினைமுற்று இவைகளைக் குறிப்பிடு.

### கேள்விகள்

1. நபிபெருமானவர்களின் குண வொழுக்கத்தைப் பற்றி ஹஸரத் ஆயிஷா (ரவி) பிராட்டியார் அவர்களிடம் ஒருவர் கேட்டபொழுது அந்த அம்மையார் கூறிய பதில் என்ன? அதன் கருத்து என்ன?
2. 'நபி பெருமானவர்கள் எல்லா வேலைகளையும் அவர்களே செய்து வந்தார்கள்' என்பதை ஓர் உதாரணத்தால் விளக்கு.
3. பெருமானவர்கள் எவ்விதமான வீட்டில் வசித்து வந்தார்கள்?
4. பெருமானவர்களது உணவைப் பற்றிக் கூறு.
5. பெருமானவர்கள் எவ்வித உடை உடுத்தி வந்தார்கள்?
6. ஸஹாபாக்கள் பெருமானவர்களுக்கு ஒரு மெத்தை செய்து கொடுப்பதாகக் கூறியபொழுது நபி அவர்கள் கூறிய பதில் யாது?
7. நபி பெருமானவர்களது வாழ்க்கைச் சரித்திரத்திலிருந்து நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டிய விஷயங்கள் யாவை?

# 10. விவேகானந்தரின் சொற்பொழிவு

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தார்

விவேகாநந்தர் 1863-ம் வருஷம் ஜனவரி மாதம் 12-ம் தேதியில் கல்கத்தாவில் ஒரு கண்ணியமான குடும்பத்தில் பிறந்தவர். இவருடைய தகப்பனுரின் பெயர் விசுவநாத தத்தர் ; தாயாரின் பெயர் புவனேசுவரி. விவேகானந்தருக்கு அவருடைய பெற்ருேர்களால் இடப்பட்ட பெயர் நரேந்திரர். இவர் கலாசாலையில் கல்வி பயின்று வருங்காலத்திலேயே கல்கத்தாவைச் சார்ந்த தக்ஷிணேசுவரம் என்னு மிடத்தி லிருந்த ராமகிருஷ்ண பரமஹம்ஸரென்ற பெரியாருடன் பழகி, அப்பெரியாரின் உபதேசங்களைக் கேட்டு வந்தார். அதன் பயனுகப் பின்னர் துறவியாகி, ராமகிருஷ்ண பரம ஹம்சருடைய சிஷ்யர்களுள் சிறந்தவராக விளங்கினுர். விவேகானந்தர் என்னும் பெயர் இவருக்கு இவரது குருவால் இடப்பட்டது.

விவேகானந்தர் மேல்நாடுகளுக்கும் சென்று மதச் சம் பந்தமான சொற்பொழிவுகளை நடத்தியுள்ளார். 1893-ல் வட அமெரிக்காவிலுள்ள சிகாகோவில் எல்லா மதத்தைப் பற்றியும் ஆராய்ச்சி செய்யும் பொருட்டு ஒரு பெரிய சபை கூடியது. அந்தச் சர்வமத சபையில் பலர் சொற்பொழிவு களை நிகழ்த்தினர். அவ்வாறு அங்கு சொற்பொழிவுகளை நிகழ்த்தியவருள் விவேகானந்தரும் ஒருவர் ஆவர். அச் சமயம், (1893-ம் வருஷம் செப்டம்பர் மீ 15 வ) விவேகா னந்தர் அருளிச் செய்ததாவது :

" நான் உங்களுக்கு ஒரு சிறுகதை சொல்லுகிறேன். சிறிது முன்பாக மிகவும் அழகாகப் பேசி முடித்த உரையாளர் ஒருவர் ' ஒருவரை யொருவர் நிந்திப்பதை ஒழித்து விடுவோ மாக,' என்க்கூறி வேறுபாடுகள் எக்காலத்திலும் அதிகரித் துக் கிடப்பதை யுன்னி மனம் வருந்தினுர்.

" இந்த வேறுபாட்டினது காரணத்தைத் தெளிவுபடுத்து கிற ஒரு கதையை உங்களுக்குச் சொல்லலாமென நான் நினைத்தேன்.

"ஒரு கிணற்றிலே ஒரு தவளை வசித்து வந்தது. அது அங்கு நீண்ட காலமாக உயிர் வாழ்ந்தது. அது அங்கே பிறந்து அங்கே வளர்ந்து வந்தது. ஆயினும் அது சிறிய தவளையே. 'அதனுடைய கண்கள் இருந்தனவா அல்லா விடின் இல்லாது போயினவா,' என ஆராய்வதற்குப் பரிணும வாதிகள் ஒருவரும் அக்காலத்தில் அவ்விடத்தில் இருக்க வில்லை. ஆயினும் நம்முடைய கதையின் பொருட்டாக அத்தவளைக்குக் கண்கள் இருந்தனவென்றே வைத்துக்கொள் ளுவோம். நாள்தோறும் அது புழுக்களையும் கிருமிகளையும் அகற்றி இக்காலத்திலுள்ள கீடவிஞ்ஞான சாஸ்திரிகளை ஒப்ப மிகவும் வலிமையோடு வாழ்ந்து வந்தது. இவ்வண்ணம் வாழ்ந்து சிறிது பருத்து கொழுத்திருந்தது. ஒரு நாள் கடலிலே வாழுகின்ற ஒரு தவளை வந்து அந்தக் கிணற்றி னுள்ளே விழுந்தது. கிணற்றுத் தவளை கடல் தவளையை நோக்கி 'நீ எங்கிருந்து வருகிருய்? என்று கேட்கக் கடல் தவளை 'நான் கடலிலிருந்து வருகிறேன்' எனப் பதில் மொழிந்தது.

'கடலா!' அது எவ்வளவு பெரியது! என்னுடைய கிணற்றளவு பெரியதாக விருக்குமா?' என்று கூறிக் கிணற் றின் ஒரு பக்கத்திலிருந்து மற்றப் பக்கங்களுக்குப் பாய்ந் தது. 'என் நண்பனே! கடலினை உன்னுடைய சிறிய கிணற்றுக்கு எவ்வாறு ஒப்பிடுதல் கூடும்?' எனக் கடலி லிருந்து வந்த மண்டூகம் கூறியது.

மற்றத் தவளை ஒரு பாய்ச்சல் பாய்ந்து 'உன்னுடைய கடல் இவ்வளவு பெரிதா?' என வினவினது. கடல் தவளை 'கடலை உன்னுடைய கிணற்றுக்கு ஒப்பிடுவது வீண் வார்த்தை யன்ருே?' என்று கூற, 'நல்லது, என்னுடைய கிணற்றினும் பார்க்க ஒன்றும் பெரிதாயிருத்தல் கூடாது. உண்டு என்று சொல்லுகின்ற இவன் பொய்யன். இவனை வெளியே அகற்றி விடல் வேண்டும்,' என்று கூப மண்டூகம் (கிணற்றுத் தவளை) கூறியது.

எப்பொழுதும் இத்தகைய இடைஞ்சலே இருந்து வரு கிறது.

நான் ஒரு இந்து. என்னுடைய சிறிய கிணற்றுக்குள்ளே இருந்துகொண்டு உலக முழுவதும் எனது சிறு கிணறென்று நான் நினைத்துக்கொண்டிருக்கிறேன். கிறிஸ்தவன் தனது சிறிய கிணற்றில் இருந்துகொண்டு உலக முழுவதும் தனது கிணறென்று எண்ணுகிருன். முகம்மதியனும் தனது சிறிய கிணற்றினுள் இருந்துகொண்டு அதுவே உலக முழுவதுமென எண்ணுகிருன். நாங்கள் ஏற்படுத்திக்கொண்ட சிறுசிறு உலகங்களின் எல்லைகளை அழித்துவிடுகிற பெரிய முயற்சியிலே முற்பட்டு நிற்கின்ற அமெரிக்கா வாசிகளாகிய உங்களுக்கு நான் நன்றி கூறுகின்றேன். மேல் வருங்காலத்தில் உங்கள் நோக்கத்தை நீங்கள் அடைவதற்கு ஆண்டவன் உங்களுக்கு உதவி புரிவாருக!''

### பயிற்சி

1. பொருள் கூறு :—கண்ணியமான, துறவி, நிந்திப்பது, உன்னி, பரிணும வாதிகள், கீடம், மண்டூகம், கூபம், இடைஞ்சல்.

2. செங்குத்துக் கோடுகள் இடப்பட்ட இடங்களில் தகுந்த குறிகளை இடு :—

| ராமன் தன் வீட்டுக்கு வந்த கிருஷ்ணனை நோக்கி | நீ எங்கிருந்து வருகிருய் | என்று கேட்டான் |

3. 'ஆண்டவன் உங்களுக்கு உதவி புரிவாருக!'—இவ் வாக்கியத்தினுள்ள சொற்களுக்கு இலக்கணம் கூறுக. 'புரிவாருக'—இது எவ்வித வினைச் சொல்?

### கேள்விகள்

1. விவேகானந்தர் யாருடைய உபதேசங்களைக் கேட்டு வந்து துறவியானுர்?

2. அவர் ஒரு சமயம் சிகாகோவுக்குச் சென்றது ஏன்?

3. விவேகானந்தர் சிகாகோவில் நிகழ்த்திய சொற்பொழிவின் சாராம்சத்தை உன்னுடைய சொந்த வாக்கியங்களில் சுருக்கி எழுது.

4. கிணற்றுத் தவளை, கிணற்றுக்கு வந்த கடல் தவளையை வெளியே அகற்ற விரும்பியது ஏன்?

5. ஒவ்வொரு மதத்தினனும் தன் மதத்தைப்பற்றி எவ்வித அபிப்பிராயம் கொண்டுள்ளதாக விவேகானந்தர் எடுத்துரைத்தார்?

6. அமெரிக்கா வாசிகள் எவ்வித முயற்சியில் முற்பட்டு நிற்பதாக விவேகானந்தர் கூறினுர்?

# 11. இன்புளுயென்ஸா என்னும் ஜுரமும் அதனைத் தடுக்கும் வகையும்

கோடைக் காலத்தில் இந்த ஜுரத்தினால் ஜனங்களுக்கு அபாயம் ஒன்றும் ஏற்படுவதில்லை. ஆனால், இலையுதிர் காலத்தில் தோன்றும் ஜுரத்தினால் அபாயம் ஏற்படுவதுண்டு.

இன்புளுயென்ஸா ஜுரம் காண்பதற்கு முன் தும்மலும் இருமலும் சாதாரணமாய் உண்டாகின்றன. ஆகவே, ஒரு மனிதனுக்குத் தும்மலும் இருமலும் உண்டாயிருந்தால் இதர ஜனங்கள் அவனை விட்டு விலகியிருக்கவேண்டும். மேலும் ஒருவனுக்கு ஜுரமும், இருமலும், தும்மலும் இருந்தால் அவன் இதர ஜனங்களுக்குச் சமீபத்தில் போகக்கூடாது.

உடம்பை நல்ல ஸ்திதியில் வைத்துக் கொண்டு இந்த ஜுரம் கண்டிருப்பவர்களுக்குச் சமீபத்தில் போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். ஜுரம் கண்டவர் இதர ஜனங்களுக்குச் சமீபத்தில் போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

கிரமமான வேளைகளில் ஆகாரம் எடுத்துக்கொள்ள வேண்டும். நன்றாகத் தூங்க வேண்டும். தேகப் பயிற்சி செய்யவேண்டும். சீதளம் சேராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். சாராயம் முதலியவை குடிக்கக் கூடாது. இந்தப் படியெல்லாம் செய்தால் ஜுரம் வந்தாலும் ஜனங்கள் அதைத் தாங்கக் கூடியவர்களாயிருப்பார்கள். தும்மல் மூலமாகவும் இருமல் மூலமாகவும் ஜுரம் இதர ஜனங்களுக்குப் பரவும். தும்மும்போதும் இருமும்போதும் மூக்கையும் வாயையும் எப்போதும் மூடிக்கொள்ளவேண்டும்.

வேலை செய்யும்போதும் தூங்கும்போதும் ஜன்னல்களை எப்போதும் திறந்து வைத்திருக்க வேண்டும். ஒரு தேயிலைக் கரண்டி உப்பு கலந்த ஒரு பைன்ட் தண்ணீரினால் மூக்கின் உட்புறத்தைக் கழுவி, தொண்டையில் அந்த உப்புத் தண்ணீரை விட்டுக் கொப்புளிக்க வேண்டும்.

ஜனங்கள் நிறைந்திருக்கும் அறைக்குள் போகக் கூடாது. கூட்டங்களில் சேராமல் விலகியிருக்க வேண்டும்.

எவருக்காகிலும் ஜுரமாவது தும்மலாவது கண்டால் அவர் உடனே ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டும்; அல்லது வீட்டுக்குப் போய்ப் படுத்துக்கொண்டு உடம்பைச் சூடாக வைத்திருந்து கூடுமானால் வைத்தியர் ஒருவரை வரவழைக்க வேண்டும். காலியாயிருக்கும் அறை கிடைக்குமானால் அதில் படுத்து கொள்ளவேண்டும். அப்படி கிடைக்காவிட்டால், அறையின் மற்றப் பாகத்துக்கும் படுக்கைக்கும் மத்தியில் மறைப்பு வைக்கவேண்டும். மூக்கில் வடியும் சளியைத் துடைப்பதற்காகக் கைக்குட்டைகளை உபயோகிக்கும் பட்சத்தில், அவைகளைத் தண்ணீரில் போட்டு வேகவைக்க வேண்டும். துணிகளையாவது காகிதத்தையாவது உபயோகித்தால் அவைகளைக் கொளுத்திவிடவேண்டும்.

பூர்த்தியாய்ச் சொஸ்தமாகும் வரையில் மறுபடியும் வேலைக்குப் போகக்கூடாது. அந்தப்படி போவது இதர ஜனங்களுக்கு அபாயத்தை விளைவிப்பதாகும். மேலும், அதி சீக்கிரத்தில் வேலை செய்யத் தொடங்கினால், வேறே வியாதிகளும் காணக்கூடும். ஜுரம் நின்று ஏழு தினம் ஆகும் வரையில் கூட்டங்களுக்கும் வேடிக்கைகள் நடக்கும் இடத்திற்கும் போகக் கூடாது. இந்த ஜுரம் கண்டவர் படுத்துக் கொண்டிருந்த அறைக்குள் வெயில் காயும்படி செய்யவேண்டும்.

இன்புளுயென்ஸா ஜுரம் கண்டிருக்கும் ஜனங்களைப் போய்ப் பார்க்கக்கூடாது. ஒருவரோடொருவர் நெருங்கியிருப்பதனாலேயே இந்த வியாதி அநேகமாய் ஒரு மனிதனிடத்திலிருந்து இன்னொரு மனிதனுக்குப் பரவுகின்றதென்பதை மறக்கக் கூடாது. வெளிக்காற்றிலிருப்பதும், அறைகளில் காற்றுத் தாராளமாய் வீசும்படிச் செய்வதுமே இந்த ஜுரத்தைத் தடுப்பதற்குச் சிறந்த உபாயங்களென்பதையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

### கேள்விகள்

1. இன்புளுயென்ஸா ஜுரம் ஏற்படுவதற்கு மூன் காணப்படும் அறிகுறிகள் யாவை?
2. இன்புளுயென்ஸா ஜுரம் எவ்வாறு பரவுகிறது?
3. ஜுரம் கண்டவர்கள் எவ்விதம் நடந்து கொள்ளவேண்டும்?

# 12. உணவுப் பொருள் பிரச்சினை

எஸ். வி. இராமச்சந்திரன்
விவசாய இலாக்கா டிமான்ஸ்டிரேட்டர்

இரண்டாவது உலக மகா யுத்தம் நடந்து கொண்டிருக்கும்போது நாட்டில் உணவுப் பொருள் பிரச்சினை மக்களை மிகவும் பாதித்தது. அச்சமயம் நம் நாட்டின் நிலைமையும், உணவுப் பொருள் பிரச்சினையைத் தீர்க்கும் முறையும் ஆசிரியரால் விவரிக்கப்பட்டுள்ளன.

இப்பொழுது நடந்த பெரிய யுத்தம் இதுவரைபோலில்லாது, எவ்வளவோ தூரத்தில் நடந்தபோதிலும், நம்மை ஒவ்வொரு நாளும் நம்முடைய நித்திய வாழ்க்கையில் பாதிக்கிறது என்பதை நாம் அறிவோம். முன்னணியில் நம்முடைய பட்டாளம் தீவிரமாகச் சண்டைசெய்ய வேண்டுமென்றால், உள்நாட்டில் ஒரு வெற்றி மனப்பான்மையும் உறுதியும் உற்சாகமும் அவசியம். அதற்காகத்தான் தேசீயப் போர் முன்னணி என்று ஓர் இயக்கம் மேன்மைதங்கிய வைசிராய் அவர்களால் ஆரம்பிக்கப்பட்டு, அதில் சகல ஜனங்களும் வித்தியாசமின்றி ஒத்துழைப்பதை நாம் நன்கறிவோம். அதற்கு முக்கியமாக ஏற்பட்ட தூண்களில், உணவுப் பொருள் பிரச்சினை என்பது ஒன்று. வயிற்றுக்கு வேண்டிய உணவு இருந்தால்தான் எதுவும் தீவிரமாகச் செய்ய முடியும். தவிர உள் நாட்டில் கலக்கமின்மையும், உற்சாகமும் இருப்பதற்கு உணவே முக்கிய ஆதாரம். ஆகையினால் உணவு தற்பொழுது நம்மைப் பாதிக்கும் விஷயத்தைப்பற்றி ஆராய்வோம்.

முக்கிய உணவுப் பொருள்களாவன; அரிசி, சோளம், கம்பு, கேப்பை, தினை, வரகு, பருப்பு வகைகள்.

(i) அரிசி : 1936—41-ல் சராசரி வருஷ அரிசி உற்பத்தி 47 இலக்ஷம் டன். நம்முடைய தேவை 50·9 இலக்ஷம் டன். சராசரி வருஷத்திற்கு மேலும் வேண்டியது 3·9 இலக்ஷம் டன். இதுவரை சண்டைக்கு முன்னால் இது பர்மா, சைனா, ஸயாம், இந்தோ-சைனா முதலிய இடங்களிலிருந்து வரவழைக்கப்பட்டது. ஆனால் தற்சமயம் தற்காலிகமாக

மேற்படி இடங்கள் நம்முடைய விரோதி ஜப்பானியர் வசமிருப்பதால் குறையை நிவர்த்திக்க வழி வேண்டும்.

மேலும் பர்மாவிலிருந்து வாங்கிக் கொண்டிருந்த ஸிலோன், திருவிதாங்கூர், கொச்சி, பாம்பே முதலிய இடங்களுக்கும், மற்றும் ஏற்கெனவே நாம் கொடுத்துக் கொண்டு வந்த மைசூர், ஹைதராபாத்துக்கும், தவிர தற் சமயம் இராணுவத்திற்கும், பர்மாவிலிருந்து இலக்ஷக்கணக் காக வந்திருக்கும் நம்முடைய சகோதர சகோதரிகளுக்கும் நம் மாகாணமே ஈடுகொடுக்க வேண்டியதாயிருக்கிறது.

(ii) **கோதுமை:** நாம் உற்பத்தி செய்யும் 2000 டன் போக நமக்குத் தேவையான 80,000 டன் வட இந்தியாவி லிருந்து தருவித்து ஆகவேண்டும். இதன் உற்பத்தியை நம் மாகாணத்தில் அதிகமாகச் செய்வதற்கு வசதிகள் சொற்பமே.

(iii) **இதர தானியங்கள்:** சாதாரண வருஷங்களில் விளைவு நமக்குப் போதுமானது. ஆனால் மழை குறைந்த காலங்களில் சோளமும், கேப்பையும் மைசூரிலிருந்தும், ஹைதராபாத்திலிருந்தும் தருவிக்கப்படுகின்றன.

(iv) **பருப்பு வகை:** சராசரி வருஷ உற்பத்தி 2,80,000 டன். நம்முடைய தேவை 4,90,000 டன். குறைவைப் பர்மா, சிந்து, பாம்பே, ஐக்கிய மாகாணம், பஞ்சாப் முதலிய இடங்களிலிருந்து தருவித்துக் கொண்டிருந்தோம்.

இப்பொழுது போக்குவரத்து சாதனங்கள் இராணு வத்திற்கு முக்கியமாய் வேண்டியிருப்பதனால், இலகுவாய் ஓர் இடமிருந்து மற்றோர் இடத்திற்குச் சாமான் கொண்டு வரு வது சாத்தியமில்லை. வெளி நாடுகளிலிருந்தும் கிடைப்ப தற்கு வழியில்லாது போனதினால்தான் நம்முடைய மாகாணம் நமக்கு ஏற்பட்ட தேவையையாவது உற்பத்தி செய்யவேண் டிய அவசியத்தில் நாமிருக்கிறோம். மேலும் முடியுமானால் அதிகமான உற்பத்தி செய்து, அவசியமாயிருக்கிற மற்ற இடங்களுக்கும் அனுப்புவித்து, எல்லோரும் ஒற்றுமையாக இச் சண்டையிற் பங்கு எடுத்துக் கொள்ளவேண்டும். கொழும்பு, திருவிதாங்கூர், பம்பாய் முதலிய இடங்களில் இருக்கும் இராணுவ சிவில் ஜனங்கள் அங்கே தங்களுக்கு

மட்டும் அல்லாமல், நம்முடைய மாகாணத்தின் க்ஷேமத்திற் காகவும் உழைக்கின்றனர். ஆகையால் நம்முடைய கடமை யைப்பற்றி நாம் மேலும் விரிவாகச் சொல்லவேண்டியதில்லே.

மேற்சொன்ன உணவுப் பொருள் பிரச்சினேயை எம் மாதிரி தீர்க்கலாம் என்று யோசிப்போம் :

(i) விளேவு விஸ்தீரணத்தை அதிகமாக்குவது.

(ii) ஒரு குறிப்பிட்ட இடத்தில் வரும் மேனி, அல்லது மகசூலேக் கூடிய மட்டும் அதிகப்படுத்துவது.

**விஸ்தீரணம் :**—ஒவ்வொரு நிலச்சுவான்தாரும் தங்கள் நிலத்தில் கூடியமட்டில் உணவுப் பொருள்களேயே உற் பத்தி செய்யவேண்டும். உணவுப் பொருள் அல்லாத பயிர்க ளாகிய புகையிலே, பருத்தி, மிளகாய்ச் செடி முதலியவை களே மிகக் குறைவாய்ச் சாகுபடி செய்யவேண்டும். ஒரு சிறு இடமாவது தரிசாகப் போடுவது தப்பு. இதற்காக சர்க்கார் அநேக சலுகைகள் செய்து கொடுத்திருக்கிருர்கள்.

சர்க்கார் தரிசு நிலங்களிலும், காடுகளுக்கென்று பிரத்தி யேகமாக ஒதுக்கப்படாத நிலங்களிலும், சில ரெயில்வே நிலே யங்களிலும், ஏரிப் படுகை நிலங்களிலும், கவர்ன்மெண்டு விடுதி, வாசஸ்தலங்களிலும், மாதா கோயில்கள், பாடசாலே கள், ஆஸ்பத்திரிகள் முதலியவற்றிற்குச் சொந்தமான காலி இடங்களிலும் உணவுக்கு வேண்டிய தானியங்களோ அல் லது காய்கறி வகைகளோ பயிர் செய்வதற்கு வேண்டிய வசதிகளே அளித்து வருகிருர்கள். இவ்விதம் பயிரிடப்படும் நிலத்தின் விஸ்தீரணம் அதிகப்படுத்தப்படுகிறது.

**மேனியை அதிகப்படுத்துவது :** மூன்று வழிகளின் மூலம் மேனியை அதிகப்படுத்தலாம்.

(1) தெரிந்தெடுக்கப்பட்ட விதை தினுசுகள் விவசாய டிபார்ட்மெண்டிலிருந்து வாங்கி விதைத்தால், இவ்விதைகள் நல்ல ஜாதியும், அதிக மேனியும் கொடுக்கக் கூடியவைகளி லிருந்து, பொறுக்கி எடுக்கப்பட்டு, வேலே செய்து 5, 6 வரு ஷத்திற்குப் பின்னுல்தான் சம்சாரிகளுக்கு வழங்கப்படுவ தால் மேனி குறைந்த பட்சம் 10 சத வீதம் கூடக்கிடைக்கும். நெல், கேப்பை, சோளம், கம்பு இவைகளிலெல்லாம் டிபார்ட் மெண்டு விதையுண்டு.

(2) நெல் நாற்றை நாற்றங்காலில் குறைத்துப் பாவி நல்ல நாற்றை, 2, 3 ஆக நடுவதால் விதை மிச்சம், மேனியும் கூடுதலாகக் கிடைக்கும். நாற்றைக் குறைத்துப் பாவினதினால் தஞ்சாவூர் ஜில்லாவில் மட்டும் 56,000 டன் விதை நெல் மிச்சமென்று ஆராயப்பட்டிருக்கிறது.

சோளம், கம்பு முதலியவைகளை கொருக் கலப்பையால் விதைத்துப் பயிர் அடித்தால் விதை மிச்சம். மேனியும் கூடுதல்.

(3) **உரம்:** 'உரம் செய்தல் உறவுடையான் செய்யான்' என்ற பழமொழி எல்லோரும் அறிந்ததே. ஒவ்வொரு உணவுப் பயிருக்கும் நிலக்கடலைப் புண்ணுக்கே முக்கியமாகப் போடுதல் நலம். தவிர வசதி இருக்கக் கூடிய இடங்களில், நெட்டி, அவுரி முதலிய பயிர்களை வளர்த்து அந் நிலங்களிலேயே மடக்கி உழுது விதைத்தல் மிகவும் நலம். மாட்டெருவைத் தற்பொழுது சேமித்து வைக்கும் முறை மிகக் கெடுதலாயிருப்பதால், எருவைச் சிறிய குழிகளில் போட்டு, கரம்பையால் அடிக்கடி மூடவும். மாட்டு நீரை நஷ்டமடையாமல் டிபார்ட்மெண்டு சொல்லுகிற இலகுவான ஏதாவது ஒரு முறையில் சேமித்து வைத்தாலும், உரத்தின் அளவும், சக்தியும் மிகவும் அதிகப்படும். இம்மாதிரியாகப் பக்குவமான உரங்களினுல் மேனியை அதிகப்படுத்த வழிகள் உண்டு.

கூடிய இடங்களில் உணவுப் பொருள் விதைகளை கலவனுக விதைக்கலாம். (பருத்தியுடன் தினை, துவரை முதலியன.) பனிவரகு, வரகு முதலிய சத்துக் குறைவாயுள்ளவைகளுக்குப் பதிலாக உரமிட்டுச் சோளம், கம்பு, கேப்பை முதலியனவகளை விதைத்தல்.

காய்கறிகளை அதிகமாகச் சாகுபடி செய்து நித்திய ஆகாரத்தில் காய்கறிகளைச் சேர்த்துக்கொண்டு வந்தால் அரிசியின் அளவு குறையும். தற்காலம் அரிசியைச் சாப்பாட்டிற்கு உபயோகப் படுத்துகிறவர்கள் முடிந்தமட்டில் சோளம், கேப்பை, கம்பு ஆகிய இவைகளையும் உட்கொள்ளுதல் வேண்டும்.

மிஷின் அரிசிக்குப் பதில் கைக்குத்து அரிசியையே

உபயோகப்படுத்துவதால், அதிகச் சத்துள்ள ஆகாரமும் கிடைக்கும். 6 சதவீதம் அதிகமுள்ள அரிசி நமக்குக் கிடைக்கிறது. மில்லில் அரைக்கப்படும் நெல் முழுவதும் கையால் குத்தப்பட்டால் சுமார் 2 லட்சம் டன் அரிசி அதிகமாகக் கிடைக்கும் என்று சொல்லுகிறார்கள்.

தவிர, விசேஷங்களிலும் மற்றும் தினப்படியும் வீணாக வெளியில் எறிவதை அவசியம் குறைத்தல் வேண்டும்.

ரெவினியூ அல்லது விவசாய டிபார்ட்மெண்டு உத்தியோகஸ்தர்களிடம் யோசனை கேட்டுக்கொண்டு சர்க்கார் கொடுக்கும் சலுகைகளை அடைந்து, உணவுப் பொருள்களை அதிகமாக உற்பத்திசெய்து, இப்பொழுது நடக்கும் யுத்தத்தில் நாமும் நம்முடைய கடமையைச் செய்ததாக ஆகி, வெற்றியைப்பெற்று, நம்முடைய கஷ்டத்தையும் உலகத்திலே அக்கிரமத்தையும் ஒழிப்பதற்கு நாமும் காரணமாகவிருந்து இறுதியில் வெற்றியின் இலாபத்தை அடையும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேலே குறிக்கப்பட்ட விவரங்கள் திருநெல்வேலி ஜில்லா விவசாய உத்தியோகஸ்தர் ஸ்ரீ கே. கே. ராகவன் அவர்களுடைய குறிப்பின்பேரில் விஸ்தரிக்கப்பட்டுள்ளன. அவர்களுக்கு என்னுடைய நன்றியை அறிவித்துக்கொள்கிறேன்.

### பயிற்சி

1. உள்நாடு, விரோதி, சொற்பம், சாத்தியம், வெற்றி—எதிர்ப் பதங்கள் எழுது.
2. தற்காலிகமாக, நிவர்த்திக்க, மேனி, சம்சாரி—பொருள் கூறு.

### கேள்விகள்

1. தற்சமயம் உணவுப் பொருள் பிரச்சினை ஏன் மிகவும் முக்கியமானது?
2. உணவுப் பொருள்களின் உற்பத்தியை எவ்விதங்களில் அதிகப்படுத்திக் கொள்ளலாம்?
3. பயிரிடப்படும் நிலத்தின் விஸ்தீரணம் எவ்விதம் அதிகப்படுத்தப்பட்டு வருகிறது?
4. மேனியை எவ்விதங்களில் அதிகப்படுத்தலாம்?

# 13. குற்றாலக் காட்சி

வித்துவான் எஸ். இராமதாஸ்

(திருநெல்வேலியிலிருந்து ஓர் உல்லாசப் பிரயாணம்)

திருநெல்வேலி தாம்பிரவர்ணி நதிக்கரையிலுள்ள ஒரு சிறிய பட்டணம். இப்பட்டணத்தின் ஒரு பகுதி 'திருநெல்வேலி ஜங்ஷன்' என்றும், மற்றொரு பகுதி 'திருநெல்வேலி டவுன்' என்றும் பெயர் பெறும். இப்பட்டணத்தில் பல எலிமெண்டரிப் பாடசாலைகளும், உயர்தரக் கலாசாலைகளும் உள்ளன. நான் ஆறுவது வகுப்பில் வாசித்து வருகிறேன். ஒரு சமயம் நான் என் தோழர்களுடனும் ஆசிரியர்களுடனும் குற்றாலம் என்னுமிடத்திற்குப் புறப்பட்டேன்.

குற்றாலம் சுகவாசத்திற்கு ஏற்ற இடம். இது திருநெல்வேலி ஜில்லாவில் தென்காசிக்கு மேற்கில் சுமார் மூன்றரை மைல் தூரத்தில் இருக்கிறது. திருநெல்வேலியிலிருந்து ரயில் மூலமாகவோ அல்லது பஸ் மூலமாகவோ பிரயாணம் செய்து குற்றாலம் போய்ச் சேரலாம். நாங்கள் எல்லோரும் ரயில் மூலம் பிரயாணம் செய்யத் தீர்மானித்துக் கொண்டோம். திருநெல்வேலி ஜங்ஷனில் ரயிலேறிச் சென்று தென்காசி அடைந்தோம்.

தென்காசிக்கும் குற்றாலத்திற்கும் அடிக்கடி பஸ்கள் போய்க்கொண்டும் வந்துகொண்டும் இருக்கின்றன. நாங்கள் ஒரு பஸ்ஸில் ஏறிக்கொண்டு குற்றாலத்திற்குச் சென்றோம். வழியில் ஓங்கி வளர்ந்த மரங்கள் வழிப்போக்கர்களுக்குக் குளிர்ந்த நிழலைத் தந்து நிற்கின்றன. வழியிலுள்ள விசாலமான தோட்டங்களின் அழகு எங்கள் கண்களைக் கவர்ந்தன. மரக்கிளைகளில் குரங்குகள் அங்குமிங்கும் தாவி விளையாடுவதைக் கண்டு களிப்புற்றோம்.

குற்றாலம் ஒரு சிற்றூர். அது மேற்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியான குற்றால மலையின் அடிவாரத்திலுள்ளது. இவ்வூரில் பல மாளிகைகளும் அறச்சாலைகளும் சாப்பாட்டு விடுதிகளும் உள்ளன. எங்கள் ஆசிரியரது நண்பர்களுள் ஒருவரது பங்களா அங்கு இருக்கிறது. நாங்கள் அந்தப் பங்களாவில் நான்கு நாட்கள் தங்கியிருந்து

ஊரையும் சுற்றுப் புறத்தையும் அருவிகளையும் பார்த்து வந்தோம்.

இங்குள்ள சிவாலயத்தில் எழுந்தருளியுள்ள சுவாமியின் பெயர் திருக்குற்ருல நாதர். அம்பிகையின் பெயர் குழல் வாய்மொழி அம்மை. நடராஜப் பெருமான் எழுந்தருளி யுள்ள ஐந்து சபைகளுள் ஒன்ருன சித்திர சபை என்பது இத்தலத்திலே யுள்ளது.

மேற்கூறிய திருக்கோயிலின் வாசற் பக்கம் நின்று தென்திசை நோக்கும்பொழுது மஞ்சு தவழும் முடியை யுடைய திருக்குற்ருலமலை பசும் படாம் போர்த்தப்பட்டது போல் காணப்படுகிறது. கோயிலிலிருந்து சிறிது தூரத்தில் கண்ணுக்கெட்டாத மலைச்சாரலிலிருந்து 'திடு, திடு' என்று ஓர் அருவி விழுந்துகொண்டிருக்கிறது. இந்த அருவிக்கு வடஅருவி என்று பெயர். இந்த அருவிக்குச் செல்லும் பாதையிலுள்ள சிற்ருேடையைக் கடக்க ஒரு பாலம் அமைக் கப்பட்டுள்ளது.

வட அருவி சுமார் நூற்றைம்பதடி உயரத்திலிருந்து விழுகிறது. இவ்வருவி வீழ்ந்து செல்லுமிடம் கற்பாறை யாக இருக்கிறது. மக்கள் நீராடும்போது விபத்து ஏற்படாத வாறு பிடித்துக்கொண்டு நிற்கப் பலமான இரும்புக் கம்பி க்ள் போடப்பட்டுள்ளன. அருவியில் நீராடுவதால் பல நோய்கள் நீங்குகின்றன. நீர் ஆட ஆட ஆரோக்கியமாகவும் ஆனந்தமாகவும் இருக்கும். ஆகையால் இங்கு வருவோர் நாள்தோறும் முப்பொழுதும் நீராடுவர். நாங்கள் குற்ரு லத்தில் தங்கியிருந்த நான்கு நாட்களிலும் இந்த அருவியில் நீராடி மகிழ்ச்சி அடைந்தோம். நீராடுவதற்கு வைகாசி, ஆனி மாதங்கள் மிகவும் தகுந்த காலம் ஆகும். இந்த அருவி நீர் சித்திரா நதி, என்ற பெயருடன் ஓடி சீவலப்பேரிக்கு அருகில் தாம்பிரவர்ணி நதியுடன் கலக்கிறது.

குற்ருலத்தில் வட அருவியைத் தவிர சண்பக அருவி, தேனருவி, ஐந்தருவி என்ற சிறிய நீர் வீழ்ச்சிகளும் உள்ளன. இரண்டாவது நாள் நாங்கள் சண்பக அருவி யையும், தேனருவியையும் பார்க்கப் புறப்பட்டோம். கோயி லுக்குப் பின் பக்கமாக் மலையில் ஏறிச்செல்ல, பெரிய

பாதை ஒன்று இருக்கிறது. அதன் வழியே சுமார் ஒன்றரை மைல் தூரம் சென்று சண்பக அருவியை அடைந்தோம். இவ்வருவி சண்பக மரக்காடுகளின் இடையே ஒரு மலை இடுக்கில் இருப்பதால் சண்பக அருவி என வழங்கப் படுகிறது. இந்த அருவியின் உயரம் சுமார் முப்பது அடி.

சண்பக அருவியின் பக்கத்திலுள்ள மண்டபத்திற்குப் பின் பக்கமாக நேரே ஓர் ஒற்றையடிப்பாதை செல்கிறது. அதன் வழியாக இரண்டு மைல் தூரம் சென்றோம். அங்கே பேரொலியுடன் விழும் தேனருவியைக் கண்டோம். இந்த அருவி செங்குத்தான ஒடுங்கியுள்ள மலை இடுக்கிலே சுமார் 200 அடி உயரத்திலிருந்து விழுகிறது. இதன் பக்கம் சென்று நீராட முடியாது. இந்த அருவி விழுகின்ற இடத்தின் இரு புறங்களிலும் தேன் கூடுகள் மிகுதியாகக் காணப்படு கின்றன. இக்காரணங்கொண்டே இவ்வருவி தேனருவி எனப் பெயர் பெற்றது. நாங்கள் தேனருவியைப் பார்த்துக் கொண்டு திரும்பினோம்.

மூன்றாவது நாள், நாங்கள் ஐந்தருவியைப் பார்க்கப் புறப்பட்டோம். மலையடிவாரத்தை ஒட்டி மேற்குத் திசைப் பக்கமாகச் செல்லும் ஒரு சிறிய சாலை வழியாகச் சுமார் மூன்று மைல் தூரம் சென்று ஐந்தருவியைப் பார்த்துக் கொண்டு திரும்பினோம். அங்கு ஐந்து அருவிகள் தனித் தனியே வந்து ஒரே இடத்தில் அடுத்தடுத்துச் சுமார் முப்பது அடி உயரத்திலிருந்து விழுவதால்தான் அதற்கு ஐந்தருவி என்ற பெயர் வழங்குகிறது. அந்த அருவிக்குச் செல்லும் சாலையின் இருபுறங்களிலும் ஒட்டு மாமரத் தோப்புகள் உள்ளன.

மலையின் செழிப்பமைந்த தோட்டங்களும், காடுகளும் மிகுதியாக இருக்கின்றன. ஏலம், கிராம்பு, கடுக்காய் முதலிய பொருள்களும் விளைகின்றன. ஒட்டு மாமரத் தோப்புகளும் கமுகு மரங்களும் பலா மரங்களும் மலையடிவாரத்தில் எங்கும் அதிகமாய்க் காணப்படுகின்றன.

திருக்குற்றாலத்தின் பெருமைக்குக் காரணம் அங்குள்ள வடவருவியே. வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் இங்கே நீராடப் பல இடங்களிலிருந்தும் மக்கள் மிகுதி

யாக வருவார்கள். அம்மாதங்களில் அரசியல் தலைவர்களும், பிரபுக்களும் மற்றும் பலரும் உடல் நலம் கருதியும் நீராடும் பொருட்டும் இங்குப் பல நாள் தங்குவர்.

முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்த மேலகரம் திரிகூட ராசப்பக் கவிராயர் என்பவரால் இயற்றப்பட்ட 'குற்ருலக் குறவஞ்சி' குற்ருல மலையின் வளத்தைச் சிறப்பித்துக் கூறுகின்றது. எங்கள் ஆசிரியர் அந்த நூலிலிருந்து சில பாக்களை எடுத்துச்சொல்லி அவற்றின் பொருளை எங்களுக்கு விளக்கினுர்.

நாங்கள் எல்லோரும் நான்காவது நாள் மத்தியான்னம் குற்ருலத்திலிருந்து புறப்பட்டு தென்காசி ஸ்டேஷனுக்கு வந்து ரயிலேறி, அன்று மாலை திருநெல்வேலி ஜங்ஷன் வந்து சேர்ந்தோம்.

### பயிற்சி

1. குற்ருலம் சுகவாசத்திற்கு ஏற்ற இடம். இது திருநெல்வேலி ஜில்லாவில் தென்காசிக்கு மேற்கில் சுமார் மூன்றரை மைல் தூரத்தில் இருக்கிறது.—இந்த இரண்டு வாக்கியங்களையும் சேர்த்து ஒரே வாக்கியமாக எழுது.

2. வழியில் ஓங்கி வளர்ந்த மரங்கள் வழிப்போக்கர்களுக்குக் குளிர்ந்த நிழலைத் தந்து நிற்கின்றன.—இந்த வாக்கியத்திலுள்ள பெயரெச்சம், வினையெச்சம் இவைகளைக் குறிப்பிடு.

3. பொருள் கூறு :—அறச்சாலை, பாடம், உடல் நலம் கருதி.

### கேள்விகள்

1. குற்ருலம் எங்கு உள்ளது ? அவ்வூரின் பொதுவான தோற்றத்தைப் பற்றிக் கூறுக.

2. வட அருவியைப்பற்றி ஒரு பாரா எழுதுக.

3. ஐந்தருவிக்குச் செல்லும் பாதையையும், அந்த அருவியின் தோற்றத்தையும் கூறுக.

### கட்டுரை எழுதுதல்

நீ செய்துள்ள ஏதாவது ஒரு பிரயாணத்தைப்பற்றி ஒரு கட்டுரை எழுது.

# 14. கடிதம் எழுதுதல்

நாம் தூரத்திலுள்ள உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் கடிதங்கள் மூலம் சமாசாரங்களைத் தெரிவிக்கிறோம் அல்லவா? கடிதத்தில் விஷயங்களைத் தெளிவான நடையில் திருத்தமாக எழுதவேண்டும். எழுதப்படுவோர் நமது முன்னிலையில் இருந்தால் நாம் எவ்விதம் அவருடன் பேசுவோமோ, அவ்வித நடையில் சமாசாரங்களை எழுத வேண்டும். எழுதப்படும் சமாசாரங்கள் சுருக்கமாகவும் இருத்தல் நலம்.

ஒரு கடிதத்தில் கீழ்க்கண்ட விஷயங்களைக் கவனிக்க வேண்டும்.

1. எழுதுவோரின் விலாசமும் தேதியும்.
2. தொடக்கம், அதாவது எழுதப்படுவோரை அழைக்கும் மரியாதை முறை.
3. சமாசாரம்.
4. முடிவு, அதாவது மரியாதை முறையும் கையொப்பமும்.
5. கடிதம் போய்ச் சேரவேண்டிய விலாசம்.

கடிதம் எழுதுவோரின் விலாசமும் தேதியும் கடிதத்தின் ஆரம்பத்தில் வலக்கை ஓரத்தில் இருத்தல் வேண்டும். கடிதத்தின் தலைப்பிலும் முடிவிலும் இருக்கவேண்டிய மரியாதை முறைகள் எழுதுவோர்க்கும் எழுதப்படுவோருக்குமுள்ள சம்பந்தத்தைப் பொறுத்திருக்கும். எழுதுவோரின் கையொப்பம் கடிதத்தின் முடிவில் வலக்கைப் பக்கம் இருத்தல் வேண்டும். கடிதம் போய்ச் சேரவேண்டிய விலாசத்தில் எழுதப்படுவோரின் பெயர், உத்தியோகம், வீட்டு நம்பர், தெருவின் பெயர், ஊரின் பெயர் முதலியன இருக்க வேண்டும். பெயருக்கு முன்பு மரியாதைக்காக மகா-ா-ா-ஸ்ரீ ஸ்ரீமான், திருவாளர், உயர்திரு, கனந்தங்கிய முதலிய அடை மொழிகளுள் எழுதப்படுவோரின் தன்மைக்குப் பொருத்தமானதை எழுதிக்கொள்ளவேண்டும். தபால் ஆபீசு இல்லாத ஊருக்குப் போகவேண்டிய கடிதத்தில் அவ்வூரின் சமீபமாகவுள்ள தபாலாபீசின் பெயரையும் எழுதவேண்டும்.

சில சமயங்களில் விலாசத்தில் கடிதம் செல்லவேண்டிய வழி, ஜில்லா முதலியனவும் குறிப்பதுண்டு.

கடிதங்களைப் பொதுவாக நான்கு வகைகளாகப் பிரிக்கலாம் :—1. உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் எழுதும் சொந்தக் கடிதங்கள். 2. அழைப்புக் கடிதங்கள். 3. விண்ணப்பக் கடிதங்கள். 4. வியாபாரக் கடிதங்கள்.

மாணாக்கர் ஆசிரியர்களுக்கு எழுதும் கடிதங்களில் :— 'வணக்கத்திற்கு உரிய ஆசிரியர் அவர்களுக்கு' என்ருவது 'கனம் தங்கிய ஆசிரியர் அவர்களுக்கு,' என்ருவது ஆரம்பித்து, முடிவில் 'வணக்கமுள்ள மாணவன்,' கீழ்ப்படிதலுள்ள மாணவன்,' என்னும் மரியாதையான அடைமொழிகளில் ஏதேனும் ஒன்றை எழுதி அதனடியில் கையொப்பமிடவேண்டும்.

### மாதிரிக் கடிதம்

மாணாக்கன் ஆசிரியருக்கு எழுதுவது :

12, மேற்கு ரத வீதி,
திருநெல்வேலி டவுன்,
2–10–'44.

கனம் தங்கிய ஆசிரியர் அவர்களுக்கு மாணவன் தனபாலன் வணக்கத்துடன் எழுதிக்கொள்வது :

கனந்தங்கிய ஐயா,

என் சகோதரனது திருமணத்திற்காக நான் என் வீட்டிலுள்ளாருடன் நாளைக்குப் புறப்பட்டு வள்ளியூர் போகவேண்டி யிருப்பதால் நாளை முதல் ஐந்து தினங்கள் அதாவது 3—10—'44 முதல் 7—10—'44 முடிய விடுமுறை அளிக்குமாறு வேண்டுகின்றேன்.

இங்ஙனம்,
தங்கள் கீழ்ப்படிதலுள்ள மாணவன்,
தனபாலன்.

திருவாளர்
..............................அவர்கள்,
6-ஆம் வகுப்பு ஆசிரியர்,
..........................பாடசாலை,
திருநெல்வேலி டவுன்.

உறவினர்களுள், பெரியோர்களுக்கு எழுதும் கடிதங்களில் தலைப்பிலும் முடிவிலும் அமைக்க வேண்டிய மரியாதை முறைகள் :

தொடக்கம் :

1. தேவரீர் தகப்பனர் அவர்களுக்கு,
2. தேவரீர் மாமா அவர்களுக்கு,
3. தேவரீர் அண்ணு அவர்களுக்கு,
4. தேவரீர் தாயார் அவர்களுக்கு,

முடிவு :

இங்ஙனம்,

1. தங்கள் கீழ்ப்படிதலுள்ள குமாரன், (குமாரி)
2. தங்கள் வணக்கமுள்ள,
3. வணக்கமுள்ள தம்பி, (தங்கை)
4. தங்கள் வணக்கமுள்ள குமாரன், (குமாரி)

வயதில் சிறியவர்களுக்கு எழுதும் பொழுது :—

தொடக்கம் :

1. சிரஞ்சீவி கிருஷ்ணனுக்கு,
2. நிறைநாட் செல்வன் மணிக்கு,
3. சௌபாக்கியவதி தங்கை மீனுவுக்கு,
4. நிறைநாட் செல்வி மருமகள் லீலாவுக்கு,

முடிவு :

இங்ஙனம்,

1. உன் அன்புள்ள தந்தை,
2. உன் அன்புள்ள மாமன்,
3. உன் அன்புள்ள சகோதரன்,
4. உன் அன்புள்ள தாயார்,

சம நிலையில் உள்ளவர்களுக்கு எழுதும்பொழுது மேற்கூறிய தொடக்கம், முடிவுகளில் பொருத்தமானவற்றைச் சமயோசிதமாக உபயோகிக்கவேண்டும்.

நண்பர்களுள், பெரியோர்க்கு எழுதும்போது :—

தொடக்கம் :

1. நண்பர்—அவர்களுக்கு,
2. அருமை நண்பர்—அவர்களுக்கு,
3. ஸ்ரீமதி—அம்மாள் அவர்களுக்கு,
4. திருவாட்டி—அம்மாள் அவர்களுக்கு,

நண்பர்களுள் சம நிலையிலுள்ளவர்களுக்கும், சிறியவர்களுக்கும் எழுதும்பொழுது :

1. நண்பன்—க்கு
2. அருமை நண்பன்—க்கு,
3. சிநேகிதி—க்கு,
4. அருமை—சிநேகிதி—க்கு,

முடிவு :

இங்ஙனம்,

உங்களது (உனது) அன்புள்ள நண்பன் (சிநேகிதி).

முன்பின் அறியாதவர்களுக்கு எழுதும் பொழுது :—

தொடக்கம் :

1. மகா-ா-ா-ஸ்ரீ—அவர்களுக்கு,
2. திருவாளர்—அவர்களுக்கு,
3. உயர் திருவாளர்—அவர்களுக்கு,
4. ஸ்ரீமதி—அம்மாள் அவர்களுக்கு,
5. திருவாட்டி—அம்மாள் அவர்களுக்கு,

முடிவு :

இங்ஙனம்,

தங்கள் உண்மையுள்ள

———

'ஸ்ரீ' என்னும் அடைமொழியை ஆண், பெண் இரு பாலர்க்கும் உபயோகிக்கலாம்.

**மாதிரிக் கடிதம் :**

மகன் தந்தைக்கு எழுதுவது :

15, பெருமாள் சந்நிதித் தெரு,
திருநெல்வேலி ஜங்ஷன்,
4–10–44

தேவரீர் தகப்பனுர் அவர்களுக்கு,

வணக்கம்.

இங்கு எல்லோரும் நலம். நான் நேற்று ஊரிலிருந்து புறப்படும்பொழுது என்னுடைய பவுண்டன் பேனுவை எடுத்துக்கொள்ள மறந்துவிட்டேன். அது அண்ணு அவர்களது அலமாரியில் இருக்கிறது. தயவு செய்து அதை இவ்விடம் வருபவர் மூலம் கொடுத்தனுப்பும்படி கேட்டுக்கொள்கிறேன்.

கால் வருஷப்-பரீக்ஷைத் 'தேர்ச்சி ரிப்போர்ட்'டை இக் கடிதத்துடன் தங்களுக்கு அனுப்பியுள்ளேன். கணக்குப் பாடத்தில் தேர்ச்சி குறைவாக இருப்பதைப்பற்றி வருந்துகிறேன். அரை வருஷப்-பரீக்ஷயில் அதிக மார்க்குக் கிடைக்கும்படி முயற்சி செய்கிறேன். இப்பொழுது மன்னிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

இம்மாதம் 12உக்குள் பள்ளிக்கூடச் சம்பளம் செலுத்த வேண்டும். தவிர, ஒரு தமிழகராதியும் வாங்க வேண்டியிருக்கிறது; ஆகையால் 12உக்கு முன்னர் தயவு செய்து ரூ. 10 அனுப்பும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,
தங்கள் கீழ்ப்படிதலுள்ள குமாரன்,
நாராயணன்.

விலாசம் :

திருவாளர்
ராஜகோபாலேயர் அவர்கள்,
ஜவுளி வியாபாரம்,
கீழைத் தெரு,
கங்கைகொண்டான் (திருநெல்வேலி ஜில்லா)

**மாதிரிக் கடிதம்:**

தந்தை மகனுக்கு எழுதுவது:

கீழைத்தெரு,
கங்கை கொண்டான்,
6–10–'44.

சிரஞ்சீவி நாராயணனுக்கு,

அநேக ஆசீர்வாதம். இங்கு எல்லோரும் க்ஷேமம். நீ அனுப்பிய கடிதம் கிடைத்தது. கணக்குப் பாடத்தில் மார்க்குக் குறைவாக இருப்பதைக் கண்டு வருத்தப்படு கிறேன். ஆனால் நீ அடுத்தப் பரீக்ஷையில் அதிக மார்க்கு வாங்க முயற்சி செய்ய உறுதி கொண்டதைப் பற்றிச் சந்தோஷம். 'முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்' என்பதை மறவாதே.

உன்னுடைய பவுண்டன் பேனா உன் அண்ணாவினது அலமாரியில் இருக்கிறது. நாளை இவ்விடமிருந்து நமது பக்கத்து வீட்டு ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர் அவ்விடம் வருகிறார். அவர் மூலம் பத்து ரூபாயும் உன்னுடைய பவுண்டன் பேனா வும் அனுப்புகிறேன். கவனமாகப் படித்து வா.

இங்ஙனம்,
உன் அன்புள்ள தந்தை,
ராஜகோபாலையர்.

விலாசம்:

சிரஞ்சீவி நாராயணன்,
16, பெருமாள் சந்நிதித் தெரு,
திருநெல்வேலி ஜங்ஷன்.

## மாதிரிக் கடிதம் :

### சிநேகிதியை விருந்துக்கு அழைப்பது :

26, வட இடைத் தெரு,
திருச்சி,
4-6-'44.

அருமைச் சிநேகிதி செல்லத்துக்கு,

நாளை என் தங்கை விமலாவுக்குப் பிறந்த தினம். இதை முன்னிட்டு நாளை மாலை 4-மணிக்கு நடைபெறும் தேநீர் விருந்துக்கு நீ வந்திருந்து என்னைச் சந்தோஷப்படுத்தும்படி கேட்டுக்கொள்கிறேன்.

நீ வரும்போது உன்னுடைய பிடிலை எடுத்துக்கொண்டு வா. நமது சிநேகிதி கமலத்துக்கும் அழைப்புக் கடிதம் அனுப்பி யிருக்கிறேன். அவள் வரும்பொழுது அவளது வீணையைக் கொண்டு வருவாள். நாம் எல்லோரும் அன்றைத் தினம் ஒரு பாட்டுக் கச்சேரி நடத்தி உற்சாகமாகப் பொழுது போக்கலாம் என்று நம்புகிறேன்.

இங்ஙனம்,
உனது அன்புள்ள சிநேகிதி,
பங்கஜம்.

விலாசம் :

செல்லம்,
C/o மகா-ா-ா-ஸ்ரீ ராமநாத பிள்ளை அவர்கள்,
24, கீழை ஆண்டார் வீதி,
திருச்சிராப்பள்ளி.

## மாதிரிக் கடிதம்

### வியாபாரிக்கு எழுதும் கடிதம் :

27, தெற்கு மாசி வீதி,
மதுரை,
3–7–'44.

அன்புமிக்க ஐயா,

தங்களால் பிரசுரிக்கப்பட்டுள்ள 'மாணவர் விஞ் ஞானம்' ஆறும் வகுப்புக்குரிய புஸ்தகம் ஒரு பிரதி வி. பி. தபால் மூலம் கூடிய சீக்கிரம் அனுப்பும்படி கேட்டுக்கொள்ளு கிறேன்.

இங்ஙனம்,
தங்கள் உண்மையுள்ள,
பாலசுப்பிரமணியன்.

விலாசம் :

ஸ்ரீ எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை,
பப்ளிஷர்ஸ்
திருநெல்வேலி ஜங்ஷன்.

### பயிற்சி

1. உன் தகப்பனாரின் விலாசத்தை எழுது.
2. உன் ஊரில் நடைபெறவிருக்கும் திருவிழாவுக்கு அயலூரிலுள்ள உனது நண்பனை அழைக்கும் முறையில் ஒரு கடிதம் எழுது.

### கேள்விகள்

1. ஒரு கடிதத்தின் முக்கியமான பாகங்கள் எவை ?
2. கடிதத்தில் எழுதப்படும் சமாசாரத்தின் தன்மை எவ்விதமிருக்க வேண்டும் ?
3. ஒரு சிறுவன் தன் மாமாவுக்கு எழுதும் கடிதத்தில் தொடக்கம், முடிவு எவ்விதமிருக்கவேண்டும் ?
4. விலாசத்தில் என்னென்ன எழுதப்பட வேண்டும் ?
5. கடிதங்கள் எத்தனை வகைப்படும் ?

# 15. நிகும்பலை

அ. சீனிவாச ராகவன், எம். ஏ.

[மகா கவி கம்பனுடைய இராமாயணத்தில் யுத்த காண்டம் மிக விரிந்தது மிக அழகானது. அரக்கர் வேந்தன் இராவணன் சீதையைச் சிறை யெடுத்து வந்த பிறகு இலங்கையில் ஓயாத யுத்தம். அரக்கர்களுக்கு ஒரே கலக்கம். கும்பகர்ணன்-இராவணனுடைய வீரத்தம்பி-இராம பாணத்தால் அடிபட்டு வீழ்கிறன். இந்திரஜித்தன் வலிமை, இலக்குவன் வில்லுக்கு ஆற்ருமல் சோர்வடைகிறது. மாயா சீதையை வெட்டி சாய்த்து விட்டு, "இதோ அயோத்தியை அழித்து விடுகிறேன் பார்" என்று மறைந்து நேரே நிகும்பலை யாகத்திற்குப் போகிருன் இந்திரஜித்தன். யாகம் நிறைவேறி விட்டால், பிறகு அஃவனுக்குத் தோல்வி ஏது? ஆனல் அரக்கர் சூழ்ச்சி பலிக்குமா? நள்ளிருளில் இராமனுடைய வானர சைனியம் நிகும்பலைக் காவலை விரட்டி, யாகத்தைச் சிதைத்து மேகநாதன் நம்பிக்கையை வீழ்த்தி விடுகிறது.]

## காட்சி 1

நாடக பாத்திரங்கள்

| | |
|---|---|
| காவலாளி | லக்ஷ்மணன் |
| வக்ரகேசி | இந்திரஜித்தன் |
| விபீஷணன் | அனுமான் |

பல வானர வீரரும் அரக்கரும்

இடம் : நிகும்பலைப் போர்க்களம்

[நிகும்பலை, அரக்கர் பாசறையை அடுத்த உயர்ந்த மலைச் சரிவிலே கருங் கல்லில் செதுக்கிய பதுமைபோல் காவலாளி ஒருவன் நிற்கிருன். அவன் பின்புறம், மலைமுகடு நெளிந்து இருளில் கலக்கிறது. தூங் கும் நிகும்பலை மலையின் கைவீச்சோ என்னும்படி எங்கிருந்தோ நகர்ந்து வந்து, மேகமொன்று நட்சத்திரங்களை மறைக்கிறது. காலடிச் சத்தம் கேட்கவே, காவலாளிகள் வில்லை வளைத்து.]

காவலாளி: யாரது? யாரங்கே? நெருங்கினல் உன் உயிர் உன்னிடம் இல்லை.

குரல்: நிகும்பலை.

காவ: வில்லா? வேலா?

குரல்: இந்திரனை வளைத்த வில்.

காவ : நல்லது, நெருங்கி வா யாரென்று பார்க்கலாம். ஓகோ, வக்ரகேசியா ? வா, வா, இந்த மழை இருட்டில் ஒன்றும் தெரியவில்லை.

வக்ரகேசி : நானும் உன்னைப் பார்க்கவில்லை. உன் குரலைக் கேட்டபிறகுதான், நிகும்பலை தூங்கவில்லை என்பது தெரிந்தது.

காவ : (கொட்டாவியுடன்) தூங்கவா ? இன்றிரவு தூக்கம் ஏது ? பொழுது விடியும்போது யாகம் முடிந்துவிடும். அதன்பின், இளவரசர் தேரின் பின்போய், இந்தக் குரங்குகளையும் மனிதர்களையும் கடலில் வாரி எரிந்து விட்டுத் தூங்குவதற்கு அசோக வனம் போய்விடலாம்.

வக்ர : ஆமாம், இருந்தாலும் யாகமுடிவு நெருங்க நெருங்க எனக்கென்னவோ கவலை அதிகமாகிறது. உன்னிடம் சொல்ல என்ன வெட்கம் ? கொஞ்சம் பயம் கூட உண்டாகிறது. இந்த மனிதர்களைத்தான் பாரேன், எப்படியோ கடலைத் தாண்டி வந்து, இந்த லங்கையைக் கலக்கி விட்டார்களே ! மனிதர்களா அவர்கள் ?

காவ : உஷ்......இரைந்து பேசாதே. நமக்கேன் இதெல் லாம் ? ராவணேசுவரன் பாடு. அவர் மகன் பாடு. நமக் கென்ன வீண் வம்பு ? சொன்னதைச் செய்வது தானே நமக்கு வேலை.

வக்ர : அது சரிதான், இருந்தாலும் இந்தக் குரங்குகள் குரங்குகளா ?...இல்லை, வாலுள்ள பேய்கள்.

காவ : உஷ்......மறுபடியும் பாரேன் !

வக்ர : இல்லை, ஊரைக் கொளுத்தி விளைய வந்ததே அந்த யமன் இங்கே வந்து விட்டால்...

காவ : வராது. பயப்படாதே.

வக்ர : (சிறிது கோபத்துடன்) பயமா ? யாரிடம் பேசுகிறாய் என்று...

காவ : இல்லை இல்லை கோபித்துக்கொள்ளாதே, நீ தானே இப்பொழுது பயப்படுவதாகச் சொன்னாய். எனக்கும்

கொஞ்சம் அப்படித்தான். ஆம் பயந்தான். இருந்தாலும்...

வக்ர : இருந்தாலும் என்ன ?

காவ : குரங்கும் வராது, மனிதனும் வரமாட்டான். நாளை யாகம் முடிந்தபின் யார் வேண்டுமானாலும் வரட்டுமே. இந்திரஜித்தைப் பிறகு வெல்ல முடியுமா ?

வக்ர : (தணிவாக) இப்பொழுது வந்தால்...?

காவ : (நகைத்து) வரமாட்டார்கள் ஐயா, வரமாட்டார்கள். உனக்கு விஷயம் தெரியாதா ? நீ மேற்கு வாசற் போரில் கலந்துகொள்ளவில்லையா ?

வக்ர : இல்லையப்பா...ஆனால் இந்தப் பசங்கள் ஏதேதோ சொல்லிக்கொண்டார்கள்.

காவ : உண்மைதான், குரங்கும் மனிதனும் இப்போது ஒப்பாரி வைத்துக்கொண்டிருப்பார்கள். அவர்களால் ஒன்றும் செய்ய முடியாது. இளவரசர்தான் மேற்கு வாசலில் எல்லோரும் காண, சீதையை வெட்டிவிட்டாரே.

வக்ர : யார் ? சீதையையா ?

காவ : (நகைத்து) ஆம்,...மாயா சீதையை...(நகைக்கிறான்)

வக்ர : ஒகோ—அப்படியா ? நல்ல வேடிக்கை (நகைக்கிறான்) நம்முடைய இளவரசரை வெல்லவா முடியும் ?

காவ : அதைத்தானே சொல்ல வந்தேன். நாளைக் காலையில் யாக குண்டத்திலிருந்து ரதம் புறப்படுமே, அதிலே ஏறிக்கொண்டு.........இரு. அதென்னப்பா சத்தம் ? (சலசல வென்ற சத்தம்)

வக்ர : ஒன்றுமில்லையே.

காவ : அந்தப் புதருக்குள் ஏதோ சலசலவென்று...

வக்ர : என்னப்பா, காற்றைக்கண்டு மிரள்கிறாயே. இந்த மழைக்காற்றுத்தான் ஊளையிடுகிறதோ, அல்லது ஏதாவது காட்டுமிருகம்...

காவ : இல்லை, அதோ (மறுபடியும்...சலசலவென்ற சத்தம்) புதரின் பின்புறம் ஏதோ நிழலாடியது, அந்தப் பக்கம் இல்லை. இங்கே, இந்தப் பாறை யருகில்...

**வக்ர :** ஒன்றுமில்லை. உனக்கென்ன சித்தப்பிரமையா ?

**காவ :** (தணிந்த குரலில்) உஷ்......இரையாதே. இங்கே பார். அதென்ன அங்கே அசைவன. நிழல்களா... இதோ மைதானத்தில், தெரியவில்லையா ?

**வக்ர :** (குரலைத் தணித்துக்கொண்டு) ஆம், இந்த மங்கல் வெளிச்சத்தில் ஏதோ...

**காவ :** (கவலையுடன்) எத்தனை நிழல்கள் ? ஏன் இப்படி அசைகின்றன ? (இரைந்து) யாரங்கே ? போவது யார் ?

**வக்ர :** என்னடா பைத்தியம், நிழல் பதில் சொல்லுமா ? ஏன் பதறுகிறாய் ?

**காவ :** ஆனால், போவது யார் என்றதும், நிழல்கள் நிற்பதுண்டா ? எனக்கு என்னவோ......அதோ பார் ! மறுபடியும், (திகைப்புடன்) அங்கே என்ன வக்ரகேசி. தெற்கு மலைச் சரிவிலே வெளிச்சம் ?

**வக்ர :** (பயத்துடன்) என்ன ? என்ன ?

**காவ :** (இரைந்து) போவது யார் ? (தணிந்த குரலில்) ஆமடா, தெற்கு மலைக் காவல் செக்கர்ப்பனை எரிகிறது. (பதட்டத்துடன்) குரங்குகள் வந்துவிட்டன நிகும்பலையைத் தாக்க. ஓடு......படைத் தலைவரிடம் செய்தியைச் சேர்த்துவிடு. (இரைந்து) போவது யார் ? பதில் இல்லை. இனி, சங்கும் வில்லும் பேசும்.

[சங்கை எடுத்து ஊதுகிறான். வில்லை எடுத்து இருளிலே அம்பு எய்கிறான். சங்கொலியும், நாணொலியும் மறையுமுன் முனுங்கல் ஒன்று கேட்கிறது. கோரச் சிரிப்பு புதரில் ஒலிக்கிறது. பிரும்மாண்டமான உருவம் ஒன்று புதரிலிருந்து தாவி, காவலாளியின்மேல் விழுகிறது. இன்னொரு உருவம் வக்ரகேசியின் மேல் பாய்கிறது. காவலாளி பெருமூச்சு விட்டுக் கொண்டு சிரமத்துடன் பேசுகிறான். பேச்சின் நடுவே அமானுஷ்யச் சிரிப்பு கலக்கிறது.]

**காவ :** (திணறிக் கொண்டு) வா, உம். அப்படியா...முடியுமா ? உம்...உம்...உம்...உம்...வக்ரகேசி (குரல் ஒடுங்கி வாய் குழறுகிறது) ப...டைத்...தலைவ...ரி...போய்...ழ்......ழ்... உம் உம்...உம்.

[காவலாளி விழுந்து விடுகிறான். புதரிலே கோரநகைப்பு. பல திசைகளிலிருந்து சங்கத்வனி. தூரத்தில் பயங்கர ஆரவாரம். நிகும்பலை மலைகளில் எதிரொலியும் போர் முரசும் அதிர்கின்றன.]

## காட்சி 2

நிகும்பலைப் போர்க்களம்

**விபீஷணன் :** அரசே, இனித் தாமதிக்க வேண்டாம். இந்தக் காவற்படையை அழிப்பதில் முனைவானேன்? அம்புக்கு இலக்காக உள்ளவன் இந்தச் சக்கர வியூகத்துக்குள் பதுங்கி, யாகம் செய்கிறான். பொழுது விடிந்தால் காரியம் மிஞ்சிவிடும்.

**லக்ஷ்மணன் :** (நாணொலி சுருதியாக) இரு. விபீஷணா, ராக்ஷஸ சைனியம் என்ற காட்டிலே பாதை போடுவது எளிதா? அரக்கர் வீரம் அல்லவா நம்மைத் தயங்க வைக்கிறது. வியூகத்தின் தென் புறத்தைத் தாக்க மாருதி போனானே அவன்......

(சங்கநாதம்—தொலைவிலே ஆரவாரம். தூரத்திலே சங்கு விட்டு விட்டு ஒலிக்கிறது.)

அதோ, சுக்ரீவன் சமிக்ஞை செய்கிறான். தென்புறத்திலே அரக்கர் வியூகத்தை உடைத்து, மாருதியும் வானர வீரர்களும் உள்ளே புகுந்து விட்டார்கள். தருமமும் போர் முனையிலே தயங்குமா? வா, விபீஷணா, கவலைப் படாதே, பொழுதுவிடியுமுன் அதர்மம் இடிந்துவிடும். (போகிறார்கள்)

## காட்சி 3

[போர்க் களத்திலே வேறொரு இடம். இந்திரஜித்தன், யாக குண்டம் அருகில் இருக்கிறது. இருளில் போரின் பயங்கர த்வனி ஓங்குகிறது.]

**இந்திரஜித்தன் :** (தளர்ச்சி தோன்றும் நகைப்புடன்) வந்துவிட்டார்களா?—யாகம் குலைந்துவிட்டது. ராவணேசுவரனுடைய கொற்றமும் இன்றோடு முறிந்தது. நிகும்பலைக் காவலின் சக்ர வியூகத்தையும் பிளந்துவிட்டார்கள்! யாகத் தீ ஒடுங்கி விட்டது...அரக்கர் புகழைப்போல. இந்திரஜித்தா, உன் மனக்கோட்டை இடிந்தது. இனி வெற்றியேது? (ஆரவாரம் வலுக்கிறது; அனுமானும் வானர வீரர்களும் பாய்ந்து யாக குண்டத்தை அழிக்கின்றனர்) யாரது அனுமானா? அழிந்த தீயிடமா வீரம் காட்டுவது? இதோ, நிற்கிறேன். இந்திரஜித்தன் வீரம் இன்னும் அணையவில்லை.

**அனுமான் :** (சிரித்து) அணையவில்லையா? அதற்கும் காலம் வந்து விட்டது. வீரமாம்! லக்ஷ்மணன் வந்த பிறகல்லவா மாயா சீதையை வெட்டிய வாள் வீரம் வெளியாகும்? அயோத்தியிலிருந்து எப்பொழுது திரும்பினாய்? பரதனை எப்போது வென்றாய்? நிகும்பலையில் ஒளிந்து யாகம் தொடங்கிய பிறகா? அதற்கு முன்பா? உன் வீரம் நான் அறியாததா? வீரன் கணைக்கு ஆற்றாமல் மறைவாய், வஞ்சனையால் வகுத்த பெண்ணைப் போர்க் களத்தில் கொல்வாய், நிகும்பலைக் காட்டில் மறைந்து யாகத்தில் முனைவாய், உன் வீரம் மகத்தானதுதான். (நாணொலி கேட்கிறது) இதோ கேட்கிறது லக்ஷ்மணன் நாணொலி. நிகும்பலை யாகத்திற்கு மந்திரம் அதுதான். உன்னை அழைக்க வந்துள்ள யமனுடைய குரலும் அதுதான். வா, சாவது என்னவோ சதம். ஏதோ இந்திரனை வென்றதாகச் சொல்லுகிறாயே, அந்த வில் வலிமையைக் காட்டு பார்க்கலாம்.

**இந்திரஜித் :** ஏன் அனுமா, பட்டதெல்லாம் ஞாபகமில்லையா? அல்லது மருத்து மலையை முன்னதாகவே கொண்டுவந்திருக்கிறாயா? நாகபாசமும் பிரம்மாஸ்திரமும் விளைத்த கலக்கம் அதற்குள்ளாகவா மறந்து விட்டது? யாகத்தைக் குலைத்து விட்டோமென்று வீரம் பேசுகிறாய்? யாகம் குலைந்தால், புதிய ரதம்தானே இல்லை? இந்திரஜித்தனுடைய பழைய வில் என்றும் புதியதுதான். ஆனால் அதற்குப் போர்த்தொழில் புதியதன்று. கூனுடைக் குரங்கையும், மனிதர்களையும் கொன்று, அவர்களை மீளா வகைக்கு அவர்களை வானத்திலும் தொடர்ந்து செல்லும் என் வாளி என்பதை... ஆனால் உன்னோடு என்ன வீண் பேச்சு? இதோ, இந்திரஜித்தன் வில் பேசுகிறது.

[நாணொலி ஆரவாரம். போர் புரிந்த வண்ணம் போகிறார்கள். விபீஷணனும் லக்ஷ்மணனும் வருகிறார்கள்.]

**விபீ :** வாருங்கள், வாருங்கள். அதோ மாருதி இந்திரஜித்தன் பாணங்களுக்கு ஆற்றாமல் மலைக்கிறான்.

**லக்ஷ் :** எங்கே, விபீஷணா?

விபீ: அதோ பாருங்கள். சுக்ரீவனும் அவன் படைகளும் இந்திரஜித்தன் மேல் விழுகின்றன.

லக்ஷ்: ஆம், ஆனால் விபீஷணா, இந்திரஜித்தன் வீரத்தைப் பார்த்தாயா? அவனுடைய ஒரு வில் அல்லவா? இத்தனை வானர வீரர்களையும் வெட்டுகிறது. அவன் சொல்வது காதில் விழுகிறதா?

இந்திரஜித் குரல்: யார், சுக்ரீவனா? அனுமான் பட்ட பாட்டைக் கண்டும் ஏன் வருகிறீர்கள்? அவனைவிட நீங்கள் வலிமையுள்ளவர்களா? வீணாக ஏன் சாகிறீர்கள்? அந்த மனிதன் எங்கே, இளைய வில்லாளி? அவனை எனக்குக் காட்டிவிட்டு, உங்கள் மலைக் குகைக்கு ஓடி உயிர்தப்புங்கள்.

விபீ: காட்டுவானேன்? நாங்களே வந்துவிட்டோம். மாருதி...! மாருதி...!

வாழ்க ராகவன் என்ற கோஷம். அனுமன் வருகிறான்.

அனு: இதோ இருக்கிறேன்.

விபீ: தளர்ச்சி ஒன்றுமில்லையே? இந்திரஜித்தன் ரதத்திடம் ஓடுகிறான்...இதோ, இளையவரைத் தோளில் ஏற்றிக் கொள்ளும். (லக்ஷ்மணனைப் பார்த்து) அரசே இனி கண கணவென்று அகத்தியன் அளித்த வில் வளைந்து சீற வேண்டும். இதோ நெருப்பைக் கக்கி வருகின்றன. இந்திரஜித்தன் சரங்கள்.

அனு: வாழ்க ராகவன்.

குரல்கள்: தர்மம் வெல்க.

சங்கு, காளம், நாணொலி இவை கலந்த ஆரவாரம், இடையிடையே குரல்கள் 'நிகும்பலைக் காவல்—வாழ்க ராகவன்' 'இந்திரனை வளைத்த வில்' என்று கோஷமிடுகின்றன.

# குறிப்புரை

## 1. கடவுள் வாழ்த்து

### திருவருட்பா

திருவருட்பாவை இயற்றியவர் ராமலிங்க சுவாமிகள். இவர் கருணீகர் எனப்படும் கணக்கர் குலத்தில் சுமார் 130 வருஷங்களுக்கு முன் சிதம்பரத்திற்கு அருகிலுள்ள மருதூரிற் பிறந்தார். இவரது தந்தையார் பெயர் ராமையா பிள்ளை, தாயார் பெயர் சின்னம்மை. இவரது சமயம் சைவம்.

இவர் ஆறுமாதக் குழந்தையாயிருந்த காலத்தில் இவரது தந்தையார் இறந்துவிட்டபடியால், சென்னப்பட்டணத்திலிருந்த தமது தமையனாரால் போஷிக்கப்பட்டார். தெய்வ பக்தி இவருக்கு இளமையிலே உண்டாயிற்று. அதனால் நடராசப் பெருமாள் மீது பல பாடல்கள் பாடினார். பின்பு வடலூர் என்னும் இடத்தில் சத்திய ஞான சபை என்னும் பெயரால் சபை யொன்று கட்டினார். அச்சபையில் கடவுளை உருவத்தில் வழிபடுவதை நீக்கச் சோதி வடிவில் வழிபடும் முறையை அமைத்தார். அங்கே தரும சாலை ஒன்று ஏற்படுத்தி அதில் மனிதர்கட்கும் மிருகம் முதலியவற்றிற்கும் பசி தீர்த்து வந்தார். கடவுள் ஒருவர் உண்டு என்றும், அவரை வழிபடுவோர்க்கு ஜீவகாருண்யம் இன்றியமையாதது என்றும், அவரை அடைவதற்கு வழி சமரச சன்மார்க்க மென்றும் இவர் தமது பாடலில் கூறுகின்றார். இவர் பாடிய பாடல்கள் ஆறு பகுதி (திருமுறை) களாக வகுக்கப்பட்டிருக்கின்றன.

இவர் 1873-ம் வருஷம் தமது 50-வது வயதில் சிறிய அறை யொன்றினுட் சென்று மறைந்தாரென்ப. இவர் பாடிய பாடல்கள் இக் காலத்திற்கு ஏற்ப எளிதிற் பொருள் விளங்குவனவாயும் இனியனவாயும் இருக்கின்றன.

இந்தச் செய்யுளில் கடவுள் நமக்கு உபகாரம் செய்யும் முறைகள் பலவும் கூறப்படுகின்றன. அவர் நமக்குத் தாய்போலவும் தந்தைபோலவும் அன்பு கொண்டு காக்கிறார். நிகர் - ஒப்பு, அவருக்கு ஒப்பாயுள்ளவர்கள் யாருமில்லாததால் அவர் தனித் தலைமைத் தெய்வமாகிறார். தனி - ஒப்பற்ற. தலைமை - முதன்மை. அமர்ந்த - இருக்கின்ற. மலரடி - தாமரை மலர் போன்ற பாதம். சென்னிமிசை - தலையின்மேல். கடவுளைக் கனியென்று கூறியவர். உலகிற் காணும் கனிக்கும் கடவுட் கனிக்கும் வேறுபாடு தோன்றக் "சாயாது கனியாகி" என்றார். இனிக்கும் - தித்திக்கும். நிதி - செல்வம். இரக்கமே செல்வமாகவுடைய தெய்வம். முற்றும் - முழுவதும். தன்னையும் உயிராகிய என்னையும் ஏனைப் பொருள்களையும் நமக்குக் காட்டுகிறபடியால் முற்றும். காட்டுவிக்கும் தெய்வம். சேய் - பிள்ளை. திருச்சபை - அழகிய சபை. அதே தெய்வம் - அவ்வாறெல்லாம் விளங்குகின்ற தெய்வமே முதற் கடவுள் என்பது.

## II. அறவழி

### 1. நல்வழி

இது ஔவை யென்னும் மூதறிவாட்டியால் சிறுவர்களுக்கும் பயன் படும் முறையில் இயற்றப்பட்ட சிறுநூல், இந்நூல் 41 வெண்பாக்கள் கொண்டது.

1. அரசு அறிய - அரசன் அறியும்படியாக. வீற்றிருந்த - பெருமை யோடிருந்த. விழும் - அழியும். அன்று, ஏ - அசைச்சொற்கள். ஏற்றம் - மேலானது. வாழ்வு - வாழ்தல். கண்டீர் - முன்னிலை அசைச்சொல். பழுது - குற்றம். பணி - தொழில்.

2. இரண்டு ஒழிய - இரண்டு தவிர. சாற்றுங்கால் - சொல்லுமிடத்து. நீதி வழுவா - நியாயத்தினின்றும் தவறுத. நெறி - வழி. மேதினி - பூமி. இட்டார் - தருமம் செய்தவர்கள். இடாதார் - தருமம் செய்யாதவர்கள். இழிகுலத்தோர் - தாழ்ந்த குலத்திற் பிறந்தவர்கள். பட்டாங்கு - சாஸ் திரம். தர்மம் செய்தவரே மேலார் - தர்மம் செய்யாதவர்கள் கீழோர் என்று விரிவுபடுத்திச் சொல்லியது இச் செய்யுள்.

3. செய் தீவினை - நாம் செய்த பாவம். நொந்தக்கால் - நொந்தால். எய்த - அடைய. இருநிதியம் - மிகுந்த செல்வம். வையம் - பூமி. பாவம் அறும் - பாவம் நீங்கும். அன்று இடார்க்கு - முற் பிறப்பில் தருமம் செய் யாதவர்க்கு. வெறும் பானை - உள்ளே நீர் இல்லாத பானை.

### 2. நன்னெறி

இதை இயற்றியவர் சிவப்பிரகாச சுவாமிகள். இவர் இயற்றிய நூல்கள் சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தம் என்றழைக்கப்படும். பிரபு லிங்க லீலை என்ற கற்பனைக் களஞ்சியத்தையும் இயற்றியுள்ளார். சிந்து பூந்துறை தருமபுரி ஆதீனம் வெள்ளியம்பலத் தம்பிரானிடம் இலக்கணம் கற்றவர். ஆசிரியருடைய எதிரியைச் செந்தில் நீரோட்டக யமக வந்தாதி பாடி அடக்கியவர்.

1. செய்யார் பெருஞ்செல்வம் - செய்யாதவருடைய மிகுந்த செல் வம். ஆக்குபவர் - செய்பவர். பேறு - இங்கே செல்வம். புயல் - மேகம். சென்று நீர் முகந்து - போய் நீரைக் கிரகித்து. பெய்யா - பெய்து.

2. இன்சொல் - இனிமையான சொல். அன்றி - அல்லாமல். இருநீர் - பெரிய நீர் நிரம்பிய கடல் சூழ்ந்த. வியன் உலகம் - பெரிய உலகத்திலுள்ள வர்கள். வன்சொல் - கொடிய சொல். மகிழாது - சந்தோஷம் அடையமாட் டார்கள். பொன்செய் - பொன்னுற் செய்யப்பட்ட. அதிர்வளையாய் - சப்திக் கின்ற வளையல்களை யணிந்த பெண்ணே. இது மகடூஉ முன்னிலை. அழற் கதிர் - நெருப்புக் கிரணங்களையுடைய சூரியன். தண் என் கதிர் - குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரன். வரவு - வருகை. சந்திரன் வருகையாற்

பொங்குகின்ற கடல், சூரியன் வருகையாற் பொங்காது. அதுபோல உலகத்தார் இன்சொல்லால் மகிழ்வாரன்றி வன் சொல்லால் மகிழார்.

3. நகை முகம் - சிரிப்போடு கூடிய முகம். இன்பு உறீஇ - இன்பத்தை அடைந்து. உறீஇ - உயிரளபெடை. அல்லோர் - நல்லவர் அல்லாதவர்கள் தீயோர். அழுங்குவார் - துன்பம் அடைவார்கள். நல்லோர் - பெரியோர். நல்லோர் அழுங்குவார் என்று கூட்டுக. தென்றல் - தெற்கிருந்து வீசும் காற்று. தேமா - மாமரத்திற்கு சிறந்த வகைமரம். தளிர் காட்டித் திருந்தும் - தளிர்விட்டுச் செம்மையாயிருக்கும். சுழல்கால் - சூருவளிக் காற்று.

4. அறிவான் - அறிவால். அலது - அல்லாமல். மீக் கொள் உயர்வு - மேலாகக் கொள்ளப்படுகின்ற மேன்மை. வேண்டற்க - விரும்பாமலிருப்பாளுக. நீக்குபவர் - வேண்டாமென்று தள்ளுபவர். ஆர் - யார்? அரவு - பாம்பு. கண்டு நீக்குபவர் - ஆர் என்று முடிவு செய்க. என்று - எக்காலத்திலும். கடல் - பாற்கடல். கடு - விஷம். பருமணி - கொடிய பாம்பினிடம் பிறந்தாலும் அதனை யாரும் விலக்கமாட்டார்கள். ஆலகால விஷம் மேலான பாற்கடலில் பிறந்தாலும் அதனை யாரும் கொள்ளமாட்டார்கள். அவ்வாறு ஒருவர் எங்கே பிறந்தாலும் அவரது குண விசேடத்தால் உயர்வும் இழிவும் உண்டாகும் என்பதாகும்.

## 3. நீதி வெண்பா

நீதியை வெண்பாப் பாட்டால் விளக்கும் நூல். இது வடமொழிப் பயிற்சியுடையார் செய்துள்ளதாகக் கருதப்படுகிறது. ஆசிரியர் சைவர்.

1. கோரோசனை - பசுவினின்று கிடைக்கும் சிறந்த பொருள்: இது கடவுள் வழிபாட்டிற்கும் மருந்துக்கும் உபயோகப்படுவது. எள்ளார் - இகழார்.

2. சிற்றுணர்வோர் - அற்ப அறிவுடையவர்கள். சிலு சிலுப்பார் - ஆரவாரம் செய்வார்கள். ஆன்று - நிரம்பி. அமைந்த - அடங்கிய. ஒண்கலம் - பிரகாசம் பொருந்திய பாத்திரம்.

3. பாலின் நீர் - பாலிலுள்ள நீர். வெகுண்டு - கோபித்து. அமையும் - கொதிப்பு அடங்கும். நூலின் நெறி - சாஸ்திர வழி. இடுக்கண் - துன்பம். புகல - விரும்ப, உயர்த்துச் சொல்ல என்றுமாம்.

4. சின்னம்பட - சிறுமை யுண்டாக. நலிந்தாலும் - வருந்தினாலும். உத்தமர் - மேலோர்.

## 4. சிறுபஞ்ச மூலம்

சிறு பஞ்ச மூலம் என்பது பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்று. வைத்திய நூலில் கூறப்பட்ட ஐந்து மருந்துகள் உடல் நோயைத் தீர்ப்பதுபோல சிறுபஞ்ச மூலம் என்னும் நூலில் ஒவ்வொரு செய்யுளிலும்

கூறப்பட்டுள்ள ஐந்து விஷயங்கள் மனிதரின் அறியாமையை நீக்கும் தன்மையுள்ளன. இந்நூலின் ஆசிரியர் காரியாசான்.

1. சிலம்பி - சிலந்திப் பூச்சி. சினை - கருவாகிய முட்டை. கூற்றம் - யமனுகும். நீள் - நீண்ட. கோடு - கொம்பு. வலம்படா - வலிமையில்லாத. ஞெண்டு - நண்டு. பார்ப்பு - குஞ்சு. வசை - இகழ்ச்சிச் சொல்.

2. நாண் - வெட்கம். சால்பு - ஊக்கம், மேன்மை. நோன்பு - தவம், விரதம். ஊண் - உண்டி, சோறு. உதாரம் - கொடை. ஏண் - வலிமை. சேவகம் - வீரம். செந்தமிழ் தேற்றுன் - தமிழை ஐயமறக் கற்றுக்கொள்ளாதவன். நாவகமே - நாவினுள். நாடி - விரும்பி.

3. மூவாது மூத்தவர் - இயற்கையில் மூவாமல் அறிவில் மூத்தவர். விதையாமை - விதைக்கப்படாமல். நாறுவ - முளைப்பனவாகிய. மேதை - பேரறிவுள்ளோன். உணர்வு - தெளிவு.

4. வழக்கு - செலவை. சுற்றம் - உறவினர். வெருவாமை - பயந்து ஒதுங்காமல். வீழ்ந்து விரும்பி - உபசரித்து. திரு - செல்வம். எஞ்ஞான்றும் - எப்பொழுதும்.

## 5. நீதிநெறி விளக்கம்

இதனை இயற்றியவர் ஸ்ரீ வைகுண்டம் குமரகுருபர அடிகள். இவர் இளமையில் ஐந்தாண்டு வரை ஊமையாயிருந்து பின் செந்தில் முருகன் திருவருளால் பேசுந்திறனும் பாடுந்திறனும் பெற்றவர். இவர் கந்தர் கலிவெண்பா, மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ், மதுரைக் கலம்பகம் முதலிய பல நூல்களைச் செய்தவர். கி. பி. 17-ஆம் நூற்றுண்டில் மதுரையினை ஆண்ட திருமலை நாயக்கரது விருப்பப்படி நீதி நெறி விளக்கம் என்னும் இந்நூலை இயற்றி வரிசையும் பரிசும் பெற்றுர் என்ப. இந்நூல் சங்க நூல் நடையை யுடையது. திருக்குறள் சாரமாகப் போற்றப்படுவது. காப்புள்பட 102 செய்யுளுடையது.

1. நலன் - அழகு, நலம் நலன் போலி. கலன் - ஆபரணம், கலம் கலன் போலி. முழுமணிப்பூண் - பருத்த ரத்தினத்தாற் செய்த ஆபரணம். முற்ற - அழகு பூர்த்தியாக.

2. அவை - சபை. மெய்விதிர்த்தல் - சரீரம் நடுங்குதல். கல்லார் - பாடியாதவர்கள். ஆகுலம் - ஆரவாரம். நவை - குற்றம். அஞ்சி - பயந்து. ஈத்து - ஈந்து. உண்ணுர் - உண்ணுர்கள். நல் கூர்ந்தார் - தரித்திரர். இன் நலம் - இனிய குல முதலிய நன்மைகள். பூத்தலின் - உண்டாவதை விட. பூவாமை - உண்டாகாதிருத்தல்.

3. கலைமகள் - சரசுவதி. வாழ்க்கை - வாழ்தல். முகம் - இங்கே வாய். முகத்து - வாயில் உள்ளது. எனினும் - என்றுலும். மலரவன் - தாமரையிலிருக்கும் பிரமன். வண்தமிழோர் - சிறந்த தமிழிலே வல்ல வித்துவான்கள். வெற்றுடம்பு - அழிவில்லாத சரீரம். மாய்வனபோல் -

இறப்பதைப் போலே. மாயா - அழியமாட்டா. உவர்,- வண்டமிழோர், புகழ் கொண்டு வண்டமிழோர் செய்யும் உடம்பு மாயா. ஆதலால் மலரவன் ஒவ்வான் என்பதாம்.

4. முழுவதூ உம் - எல்லாவற்றையும், உயிரளபெடை. கற்றனம் - படித்துவிட்டோம். களியற்க - செறுக்குக் கொள்ளாதிருப்பானாக. கனங் குழாய் - கனமுள்ள குழையையுடைய பெண்ணே ; மகடூஉ முன்னிலே. குழைகள் - பெண்டிர் காதணி. கொல் உலே - கொல்லனது உலேயில் உள்ள. கூடம் - சம்மட்டி, உளியால் கல்தகரும் சம்மட்டியால் தகரா. உவமைக்குப் பொருள் தருவிக்க.

5. சுட்டு - நன்மதிப்பு. யாண்டு - எப்பொழுதும். நோற்பது - அனுஷ்டிப்பது. சீர் - சிறப்பு. தூற்றி - பலர் அறியச் சொல்லி. சிறுமை - தீக்குணம் முதலியன. புறம்காத்து - வெளியே புலப்படாமல் அடக்கி. தாழ்ச்சி - பணிவு.

6. வஞ்சித்து - ஏமாற்றி. மதியிலிகாள் - அறிவில்லாதவர்களே. மகிழன்மின் - சந்தோஷப்படாதீர்கள். வஞ்சித்த - ஏமாற்றிய விஷயங் களே, வினேயாலணேயும் பெயர். எங்குமுளன் ஒருவன் - கடவுள். காணும் கால் - காண்பானே. அங்கம் குலேவது - சரீரம் நடுங்குவது. அறிவு - புத்திசாலித்தனம்.

7. மெலியார் - இங்கே பொருட் செல்வத்திற் குறைந்தவர்கள். தமது உடைமை - தம்முடைய செல்வம். அம்மா - வியப்பிடைச்சொல். அகம் - மனம். மகிழ்க - சந்தோஷம் அடைவானாக. கருத்து அழிக - மனம் வருந்துக. கற்ற எல்லாம் - படித்தவைகள் எல்லாம். நாம் கற்றதெல் லாம் இவர்க்கு எற்று என்று கருத்து அழிக என முடிபு செய்க. எற்று - எவ்வளவு. செல்வ விஷயத்திலும் நாம் இவ்வாறு நடக்க வேண்டுமெனக் கூறப்பட்டது.

8. இச்செய்யுள் எடுத்த காரியத்தில் கண்ணுயிருப்பவர் செய்கை கூறுகின்றது. மெய் - சரீரம். பாரார் - நோக்கார். பொருட்படுத்தமாட் டார் என்பதாம். துஞ்சார் - உறக்கங்கொள்ளார். எவ்வெவர் - எவர் + எவர். செவ்வி அருமை - காலத்தின் அருமை. கருமம் - காரியம்.

## III. கதைப் பகுதி.

### முயல் யானேயை வென்ற கதை

1. துன் அரும் - சமீபத்திற் கிட்டுதற்கு அரிய. அடவி - மலேப் பக்கத்துக் காடு. தும்பு - யானே. பன்ன அரும் - சொல்லுதற்கு அரிய. சதுர தந்தன் - அரசானேயின் பெயர். இறை - அரசன். பண்பு - தன்மை, இங்கே அரசத் தன்மை. அன்ன நாள் - அந்தக் காலத்தில். சுனே - மலேயிலுள்ள நீர் நிலே. உன்னும் நீர் - நாம் (குடிக்கக்) கருதும் நீர். ஒற்றர் - தூதர்.

2. சந்திர சரசு - நீர் நிலையின் பெயர், சந்திரனுக்கு உரிய நீர் நிலை என்பது சொற் பொருள். ததும்பிட - விளிம்புவரை நிறைய. நாடி - விரும்பி, தேடி. சிலி முகன் - முயல் அரசன் பெயர். வேந்து - வேந்தன், விசயன் - முயலரசனுகிய சிலீ முகனது மந்திரி பெயர். உரைக்கும் - சொல்லும். அன்று ஏ - அசைகள்.

3. இன்று + நாள் - இற்றை நாள். புக்கால் - புகுந்தால். வனம் - காடு. உற்று இருக்க - பொருந்தி வசிக்க. உபாயம் - தந்திரம்.

4. விடை - உத்தரவு. ஞானம் - சிறந்த அறிவு. மந்திரம்-ஆராய்ச்சி. விசாரம் - விசாரித்தல், இவைகளில் மிகவும் தேர்ச்சிபெற்ற விசயன். காவலன் - அரசன். வேழம் - யானை.

5. நகைத்து - (இகழ்ச்சி பற்றிச்) சிரித்து. ஓர்பால் - ஒரு பக்கமாக. மாறு - விரோதம். மிகை - மிகுதி.

6. மருடு - மலைச்சிகரம். துன்றிய - வந்து சேர்ந்த. களிற்று வேந்து - யானையரசனுகிய சதுரதந்தன். வியந்து - ஆச்சரியப்பட்டு.

7. இசை - பொருந்திய. நிலா எறித்தல் - நிலாவை வீசுதல். திங்கள்- சந்திரன். விடுக்க - அந்தச் சந்திரன் அனுப்ப. அசைவு - நடுக்கம். பயந்து - அஞ்சி. விளம்பு - சொல்.

8. சசி - சந்திரன். பகவான் - கடவுள். கானகம் - காடு. ஐயன் - இங்கே சந்திரன், தேவிமார் என்றது நக்ஷத்திரங்கள் இருபத்தேழினையும். சலக்கிரீடை - நீர் விளையாட்டு. முயங்கி - இங்கே செய்து என்னும் பொருள் உடையது. பகல் - பகற்காலம். பகலைக்கு என்பதில் ஐ சாரியை. பகல் முழுதும் சலக்கிரீடை செய்து.

9. தண் அரும் சுனை - குளிர்ந்த அரிய சுனை. எமை என்றது முயல்களை, சந்திரனிடத்திலுள்ள களங்கம் முயலெனும் பெயருடைய தாயிருத்தலின், இந்தக் காட்டு முயலும் சந்திரனேடு தங்களுக்கு உறவு உண்டென்று கூறத்தொடங்கிற்று. இது மந்திரியின் ஆலோசனை. விண்ணவர் உலகத்தார் - தேவர்களுடைய உலகத்திலே யுள்ளவர்கள். நாடினை - விரும்பினுய். அண்ணலார் – தலைவராகிய சந்திரக் கடவுள். சினந்து - கோபம் கொண்டு. பக்கல் - பக்கம். தடுத்தி – தடுப்பாய்.

10. மூவர் - பிரமா, விஷ்ணு, ருத்திரர். இவர்களுக்கு முதல்வர் - சிவபெருமான். முனைவனுர் - பெரியோர். சிவபெருமான் தனது திருமுடிமேல் சந்திரனைச் சூடியிருத்தலின் மூவரின் முதல்வரான முனைவனுர் முடிமேல் வாழுந்தேவன் என்றது. பகைத்த - சிந்தைச் செயல், அவன் பெயரால் அமைந்து அவன் தேவிமாரோடு சலக்கிரீடை செய்யும் சந்திர சரசில் யானைகள் இறங்கி நீரைக் கலக்கிச் செல்வது. தடுத்து - நீக்கி. வேட்கை - விருப்பம். கருமம் - செய்யத்தக்கது.

11. ஆற்றுவன் - தணிப்பேன்.

12. சசம் - முயல். சந்திரனுக்கு சசி என்னும் பெயர் இக்காரணம்

பற்றி வந்தது. குடைவது - நீர் விளையாடல் செய்வது. போற்றி-பணிந்து. உய்ந்து - பிழைத்து. ஓதலும் - சொல்லவும். நன்று - நல்லது.

13. அலைபுனல் தடம் - அலைகின்ற நீருள்ள தடாகம். சாயை - பிரதிபிம்பம். சூழல் - பக்கம். மாதர் - பெண்கள்.

14. அழிந்து - வருந்தி. பொறுக்க - பொறுத்துக் கொள்க. (வியங் கோள் முற்று). களித்து - சந்தோஷம் கொண்டு.

### 2. எமனை எலி விழுங்கிற்று

தாசன் - அடிமை.
விடுமுறை - ரஜா.
குண்டுவிழி - உட்குழிந்த கண்.
காயம் - சரீரம், அநித்தியம் - நிலையில்லாதது × நித்தியம்.
நிமிர்த்தல் - தலையைத் தூக்குதல்.
தங்கை - ரஜா கேட்டவன் தங்கை.
ஒட்டு - உறவு, சம்பந்தம்.
அத்ததி - அந்தச் சமயம்.

### 3. புல்

விரிவு இடம் - பரந்த இடம். முற்றில் - முற்றம்.
உள்ளம் தரிக்கிலர் - மனம் பொறுத்தார்களில்லை.
உறைவிடம் - வசிக்கும் இடம்.
தறுகண்ணீர் - அஞ்சாதவர்.
ஐவர் - பாண்டவர்கள்.
வலி - வலிமை ; பலம்.
செய்வினை - செய்யும் காரியம்.
வையகம் - பூமி.
புல்லிய - அற்புதமான, இழிவான.
திருமகள் - இலக்குமி.
உவந்து - மகிழ்ந்து. பேண - காப்பாற்ற. முன்னிற்கும் - முன் நிற்பாள்.

## IV. பிற வகைகள்

### 1. நாடு

குமரேசர் - முருகப்பெருமான்.

### 2. நகர்

தென்னன் - பாண்டியன். கரும்பு கண் திறத்தலாவது - கரும்பிலே யுள்ள கணுக்கள் முதிர்ந்து வெடித்தல். கட்டுக் கலம் காணும் - ஒரு கட்டு நெற்கதிர் ஒரு கலம் நெல்லுள்ளதா யிருக்கும். கதிர் உழக்கு நெற்காணும் -

ஒரு கதிர் காற்படி நெல்லுள்ளதா யிருக்கும். அரிதாள் - நெற் பயிரின் தாள். மறுநாள் பயிராகும் - மறுபடியும் அத்தாளிலே பயிர் உண்டாகும். செந்நெல் மாளாது - செந்நெல் முற்றும் போரடிக்க முடியாதென்று.

## 3. ஏற்றப் பாட்டு

பட்சம் - நேசம். கலிக்க - சந்தோஷப்பட. களிப்பு - அதிக சந்தோஷம். கொய்து - அறுத்து. ஈந்த - கொடுத்த.

## 4. ஈசுர வருடத்துப் பஞ்சம்

### பல்லவி

தஞ்சம் - அடைக்கலம்.

### அனுபல்லவி

உலோபர் - பொருளிருந்தும் வறியவர்களுக்குக் கொடாதவர்கள். சஞ்சலம் - துன்பம். கதி - அடைக்கலம்.

### சரணம்

1. என்பு - எலும்பு. பரதேசி - தேசமெங்கும் திரிபவர்.
2. பற்ருர் - போதாதவரானர்கள். சோலி - வேலை.
3. நஞ்சம் - நஞ்சு. நரர் - மனிதர். சலி - வறுமை.
4. மாய்ந்தார் - இறந்தார். மேதினி - பூமி.

## 5. போலி வேடம்

வேடகம் - காதணி. தாழ்வடங்கள் - ருத்ராக்ஷ மணிகளாலான மாலைகள். கரவடம் - துர் எண்ணம். வாது - தருக்கம். அயன் - பிரமன். மவுனம் - பேசாமை, யோகம்.

## 6. இளந் தமிழருக்கு

1. பெருகுது - குறையுது - பெருகுகிறது, குறைகிறது என்பனவற்றின் மரூஉ. நிற்கு - உனக்கு. கொற்றம் - வெற்றி.
2. துச்சம் - அற்பம்.

## 7. தமிழன்

1. தனியே - பிறருக்கு இல்லாத.
2. அறிவைக் கடலாகவும் திருக்குறளை அமிர்தமாகவும் கூறியது மகிழத்தக்கது.
3. நுகர்தல் - அனுபவித்தல்.

4. கலைகள் - நூல்கள்.
5. வெற்பு - மலை.
6. இழவு - பிறர் இறந்ததால் உண்டாகும் துக்கம்.
7. தண்ணுமை - மத்தளம்.
8. துயர் - துன்பம். கூசுதல் - வெட்கப்படுதல்.

## 8. குழந்தைச் சிரிப்பு

1. கானம் - இசைப்பாட்டு.
2. இதயம் - இருதயம் போன்ற. வன்பு - அழிவழக்கு.
3. விள்ளல் - சொல்லுதல்.

## 9. சோம்பேறிப் பையன்

1. அலர்மலர் - விரிந்த பூ.
2. போனகம் - சோறு, உணவு.
3. அண்டாமல் - நெருங்காமல்.




---

நவீன

# தமிழ்ப் பாட புத்தகம்

## ஏழாம் வகுப்பு






பதிப்பாசிரியர் :
வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை






எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை
பப்ளிஷர்ஸ் : : திருநெல்வேலி

 [விலை ரூ. 0-12-0




# முன்னுரை

'நவீன தமிழ்ப் பாட புத்தகம்' என்னும் புத்தக வரிசையில் ஆருவது, ஏழாவது வகுப்புப் புத்தகங்கள் சமீபத்தில் சென்னைக் கல்வி இலாகா அதிகாரிகள் வெளியிட்டிருக்கும் எட்டாவது வகுப்புப் புத்தகத்தை அனுசரித்து மாணவர்களுக்கு நமது வித்தியா இலாகா அதிகாரிகள் கொடுக்க விரும்பும் பாஷா ஞானத்தை அளிக்கப் பெரிதும் அனுகூலமாக இருக்கும்படி தொகுக்கப்பட்டிருக்கின்றன.

இப்புத்தகத்தின் செய்யுட் பகுதியில், 'புத்தரும் ஏழைச் சிறுவனும்' என்னும் பகுதியைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த ஸ்ரீ. சி. தேசிக விநாயகம் பிள்ளை அவர்களுக்கும், 'பிருதிவிராஜ் சம்யுக்தை' என்னும் பகுதியைச் சேர்த்துக் கொள்ள அனுமதியளித்த ஸ்ரீ. ம. பெரியசாமி (பெ. தூரன்) அவர்களுக்கும், 'கம்பன்', 'எது சுதந்திரம்' என்னும் பகுதிகளைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த நாமக்கல் ஸ்ரீ. வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்களுக்கும், 'தொல்லையிழைத்திடும் பையல்' என்னும் பகுதியைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த பரலி, ஸ்ரீ. சு. நெல்லையப்பர் அவர்களுக்கும், 'சிரித்த முல்லை' என்னும் பகுதியைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த ஸ்ரீ. பாரதிதாஸன் (கனக-சுப்புரத்தினம்) புதுச்சேரி அவர்களுக்கும் 'உத்தியோக சங்கடம்' என்னும் பகுதியைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த அதன் உரிமையாளருக்கும்,

இதன் உரைநடைப் பகுதியில், 'நமது நாற்கால் நண்பர்கள்' 'ஜெரோஸப்பா நீர் வீழ்ச்சி', 'புதிய போர் முறைகள்' என்னும் பாடங்களைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த கலைமகள் காரியாலயத்தாருக்கும், அதனதன் ஆசிரியர்களுக்கும்,

'என்ன விளையாட்டு' என்னும் பகுதியைச் சேர்த்துக் கொள்ள அனுமதியளித்த ஆனந்த விகடன் காரியாலயத்தாருக்கும், அதன் ஆசிரியருக்கும்,

'தமிழ்த் தாயின் முறையீடு', 'ஒலி பரப்பும் நிலையங்கள்', 'விந்தைகள்', 'சீதக்காதி', 'பட்டு' என்னும் பாடங்களையும் 'நிரும்பலை' என்னும் நாடகத்தையும் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த அதனதன் ஆசிரியர்களுக்கும், 'குமர குருபரர்', 'குடிகள் இயல்பு - ராஜபக்தி - அநியாய பஞ்சகம்' என்னும் பாடங்களைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த அதனதன் உரிமையாளர்களுக்கும்,

'உரை நடை கண்ட உத்தமர்' என்னும் பாடத்தை இப் புத்தகத்திற்கு என்றே எழுதிக் கொடுத்த அதன் ஆசிரியர் அவர்களுக்கும் நான் எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை






# மதிப்புரை

பாடப் புத்தகங்கள் மாணவர்களை வெருட்டும் சாதனங்கள் என்று ஒரு சிலர் வருந்துகிறார்கள். உண்மை அதுவன்று என்பதை இப்புத்தகங்கள் நிரூபிக்கின்றன. புத்தகங்களின் 'கவிதைப் பகுதி'யில் சுவை நிரம்பிய பாடல்கள் உள்ளன; எத்தனையோ தலைமுறையாகத் தமிழ் அறிஞர் பாராட்டி வந்துள்ள 'திரிகடுகம்', 'சிறு பஞ்சமூலம்', 'திருக்குறள்' முதலிய அற நூல்களிலிருந்தும், 'என்று முளதென் தமிழ்' என்பதற்கு எடுத்துக் காட்டாக விளங்கும் பிற்காலத்துப் புலவர் நூல்களிலிருந்தும், கலையுணர்வுடன் பொறுக்கியெடுக்கப்பட்ட அருமையான பாடல்களை இங்கே காணலாம். 'வசனப் பகுதி'யில் தமிழ் வசன இலக்கியத்திற்கு அடிகோலிய வேதநாயகம் பிள்ளை, வீரமா முனிவர் முதலிய அறிஞர் சொற்களும், இக்காலத்துப் புலவர் பலருடைய கட்டுரைகளும் சேர்க்கப்பட்டுள்ளன. மாணவர் தகுதிக்குரிய தெளிந்த, எளிமையான தமிழும், அவர்கள் மனத்தைக் கவரவல்ல கற்பனை வளமும், பல திறப்பட்ட இலக்கியச் சுவையும், இப்புத்தகங்களில் அமைந்திருக்கின்றன. இதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை; ஏனென்றால் புத்தகங்களைத் தொகுத்தவர் நிரம்பிய புலமை உடைய வித்வான் சிதம்பர ராமலிங்க பிள்ளை அவர்கள். பாடப் புத்தகங்களின் மூலமாகத் தமிழுணர்வை வளர்க்கக்கூடும் என்பதற்கு இப்புத்தகங்கள் சிறந்த அத்தாட்சி.

ம. தி. தா. இந்து கல்லூரி<br>திருநெல்வேலி<br>30—11—44

அ. சீனிவாச ராகவன்

# பொருள் அடக்கம்

## செய்யுள்

## உரை நடை




நவீன

# தமிழ்ப் பாட புத்தகம்

## ஏழாம் வகுப்பு

## செய்யுள்

### 1. கடவுள் வாழ்த்து

#### திருவருட்பா

அப்பா! நான் வேண்டுதல்கேட்
டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான்
அன்புசெயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும்
எங்கணும்நான் சென்றே
எந்தைநின தருட்புகழை
இயம்பியிடல் வேண்டும்
செப்பாத மேல் நிலைமேல்
திவ்வியசன் மார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்சோதி
செலுத்தி யிடல்வேண்டும்
தப்பேது நான் செயினும்
நீ பொறுத்தல் வேண்டும்
தலைவ! நினைப் பிரியாத
நிலைமையும் வேண்டுவனே.

—ராமலிங்க சுவாமிகள்

# 2. அறவழி

## 1. திருக்குறள்

### அன்புடைமை

அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. 1

### ஒழுக்கமுடைமை

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். 2

### பொறையுடைமை

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வாரைப் பொறுத்தல் தலை. 3

### கல்வி

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு. 4

### கேள்வி

எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். 5

## 2. இனிது நாற்பது

மன்றில் முதுமக்கள் வாழும் பதி இனிதே ;
தந்திரத்தின் வாழும் தவசிகள் மாண்பினிதே ;
எஞ்சா விழுச்சீர் இருமுது மக்களைக்
கண்டெழுதல் காலை இனிது. 1

தங்கண் அமர்வுடையார் தாம்வாழ்தல் முன்னினிதே ;
அங்கண் விசும்பின் அகல்நிலாக் காண்பினிதே ;
பங்கமில் செய்கைய ராகிப் பரிந்து யார்க்கும்
அன்புடைராத லினிது. 2

கயவரைக் கையிகந்து வாழ்தல் இனிதே ;
உயர்வுள்ளி ஊக்கம் பிறத்தல் இனிதே ;
எளியர் இவரென்(று) இகழ்ந்துரையா ராகி
ஒளிபட வாழ்தல் இனிது. 3

## 3. இன்னா நாற்பது

பொருள் உணர்வார் இல்வழிப் பாட்டுரைத்தல் இன்னா,
இருள்கூர் சிறுநெறி தாந்தனிப் போக்கு இன்னா ;
அருளில்லார் தங்கண் செலவின்னா ; இன்னா
பொருளில்லார் வண்மை புரிவு. 1

புல்ஆர் புரவி மணிஇன் றிஊர்(வு) இன்னா ;
கல்லார் உரைக்கும் கருமப் பொருள் இன்னா ;
இல்லாதார் நல்ல விருப்பின்னா ; ஆங்கின்னா
பல்லாருள் நாணப் படல். 2

கள்ளுண்பான் கூறும் கருமப் பொருள் இன்னா ;
முள்ளுடைக் காட்டில் நடக்கல் நனி இன்னா ;
வெள்ளம் படும்மாக் கொலை இன்னா ; ஆங்கின்னா ;
கள்ள மனத்தார் தொடர்பு. 3

உண்ணாது வைக்கும் பெரும் பொருள் வைப்பின்னா ;
நண்ணாப் பகைவர் புணர்ச்சி நனி இன்னா ;
கண்ணில் ஒருவன் வனப்பின்னா ; ஆங்கின்னா ;
எண் இலான் செய்யும் கணக்கு. 4

## 4. திரிகடுகம்

இல்லார்க்குஒன் றீயும் உடைமையும், இவ்வுலகில்
நில்லாமை உள்ளும் நெறிப்பாடும், எவ்வுயிர்க்கும்
துன்புறுவ செய்யாத தூய்மையும் இம் மூன்றும்
நன்றறியும் மாந்தர்க்கு உள. 1

முறைசெய்யான் பெற்ற தலைமையும், நெஞ்சின்
நிறையிலான் கொண்ட தவமும்,—நிறை ஒழுக்கம்
தேற்றாதான் பெற்ற வனப்பும் இவை மூன்றும்
தூற்றின்கண் தூவிய வித்து. 2

ஈதற்குச் செய்க பொருளை ;—அறநெறி
சேர்தற்குச் செய்கபெருநூலை ;—யாதும்
அருள்புரிந்து சொல்லுக சொல்லை ; இம் மூன்றும்
இருள் உலகம் சேராத ஆறு. 3

வைத்தனை இன்சொல்லாக் கொள்வானும் நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும், ஊறிய
கைப்பதனைக் கட்டியென் றுண்பானும் இம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார். 4

## 5. நான்மணிக்கடிகை

நிலத்துக் கணியென்ப நெல்லுங் கரும்பும் ;
குளத்துக் கணியென்ப தாமரை ; பெண்மை
நலத்துக் கணியென்ப நாணம் ; தனக்கணி
தான்செல் லுலகத் தறம். 1

நல்லார்க்குந் தம்மூரென் றூரில்லை ; நன்நெறிச்
செல்வார்க்குந் தம்மூரென் றூரில்லை ;—அல்லாக்
கடைகட்குந் தம்மூரென் றூரில்லை ; தங்கைத்
துடையார்க்கு மெவ்வூரு மூர். 2

கண்ணிற் சிறந்த உறுப்பில்லை ; கொண்டானின்
துன்னிய கேளிர் பிறரில்லை ;—மக்களின்
ஒண்மையவாய்ச் சான்ற பொருளில்லை ; ஈன்றளோடு
எண்ணக் கடவுளும் இல். 3

மனைக்குப்பாழ் வாணுதல் இன்மை, தான்செல்
திசைக்குப்பாழ் நட்டோரை இன்மை ; இருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை இன்மை ; தனக்குப்பாழ்
கற்றறி வில்லா உடம்பு. 4

## 6. பழமொழி

நெடியது காண்கிலாய் நீ எளியை நெஞ்சே
கொடியது கூறினுய் மன்ற—அடியுளே
முன்பகல் கண்டான் பிறன்கேடு தன்கேடு
பின்பகல் கண்டு விடும். 1

பெரிய குடிப்பிறந் தாரும் தமக்குச்
சிறியார் இனமாய் ஒழுகுதல்—எறியிலே
வேலொடு நேர்ஒக்கும் கண்ணுய்! அஃதன்றே?
பூவொடு நார் இயைக்கும் ஆறு. 2

பூத்தாலும் காயா மரம்உள மூத்தாலும்
நன்கு அறியார் தாமும் நனிஉளர்—பாத்தி
விதைத்தாலும் நாருத வித்துள பேதைக்கு
உரைத்தாலும் தோன்ரு(து) உணர்வு. 3

பெரியார்க்குச் செய்யும் சிறப்பினைப் பேணிச்
சிறியார்க்குச் செய்து விடுதல்—பொறிவண்டு
பூமேல் இசைமுரலும் ஊர அது அன்ரே
நாய் மேல் தவிசிடும் ஆறு. 4

## 3. கதைப் பகுதி

### 1. மைனாவும் முயலும்

பாவிகள் மோனர் போலும்
பலவிர தியர்கள் போலும்
ஓவறு சகாயர் போலும்
உறைமுறைச் சுற்றம் போலும்
மேவுவர் ; அவரைச் சேரின்
மேன்மைய ரேனும் உய்யார் ;
பூவையும் முயலும் முன்னேர்
பூனையைச் சேர்ந்த வாறே. 1

என்ன அக் கதையே தென்றே
இனப்பற வைகள்வி னுவ
முன்னமோர் மரத்தின் மேலே
முயங்கிநான் இருக்கும்போது
தன்னிக ரின்றி வாழும்
தனிமுயல் ஒன்று வந்தே
உன்னுமோர் பொந்திற் சேர்ந்தங்(கு)
உட்புகுந் திருந்த தன்றே. 2

பூவையொன் றங்கு வந்திப்
பொந்துநான் இருக்கும் வீடு ;
நீவரு வானேன் ? என்ன
நிழலொடு தருக்கள் சாலே
வாவிநற் கூபம் செல்லும்
வழியினில் தண்ணீர்ப் பந்தல்
சாவடி இவைக ளெல்லாம்
சகலர்க்கும் பொதுவே என்ன. 3

அங்கவை இரண்டும் சண்டை
ஆகிப்பின் மத்தி யஸ்தர்
தங்களைக் கேட்போம் என்று
தனிமுயல் அழைத்துப் போக

இங்குநாம் வழக்கா வந்தோம்
இருதலை வழக்கும் தீர்க்கும்
துங்கர் ஆர்? என்று பூவை
சொல்லவே முயலும் சொல்லும். 4

கருதிய யமுனை யாற்றங்
கரையிலே தவத்தைப் பண்ணும்
பொருவில்கூர்ம் பல்லன் என்னும்
பூனையார் சொல்வார் என்ன
வெருவியே பூனை பக்கல்
மேவி நாம் செல்வதெவ்வா(று)
உரையெனத் தூர நின்றே
உரைப்பம்என் றழைத்துப் போக, 5

இருவரும் போனார்; அந்த
இருடியார் தவத்தைக் கண்டார்;
பெரியவர் இவர்தாம் நம்மைப்
பிடிப்பதும் செய்யார் என்று
கருதினர்; பணிந்தெழுந்தார்
கைகளும் கட்டி நின்று
பரவினார்; யோகம் நீங்கிப்
பார்த்தனர் பூனையாரும். 6

ஆரெவர்? நீங்கள் நம்மை
அறிந்தனிர் இங்கு வந்த
காரியம் சொல்லும்? என்று
கபடனார் உரைக்கத் தங்கள்
பேரொடு வழக்கும் சொல்லப்
பெருகிய மூப்பி னாலே
நீருரைப் பதுகே ளாது
நெருங்கிவந் துரைக்க என்ன, 7

சற்றிடம் கிட்டி வந்து
சாற்றஇம் மாற்றம் காதில்
உற்றது போலும் பாதி
உறுதது போலும் கேட்டோம்.;

மற்றினிப் பட்ச பாத
வழக்குநாம் உரைப்பதில்லை ;
குற்றமிங்(கு) ஒருவர் மீதில்
கூறிடில் * கோப மாமே. 8

தருமமே விரும்பு வாரைத்
தருமமே விரும்பிக் காக்கும் ;
தருமமே இகழு வாரைத்
தருமமே இகழ்ந்து நிற்கும் ;
தருமமே மெய்யாய் நின்று
சகலமும் செய்த லாலே
தருமமே சொல்வதல்லால்
சற்றுநாம் பொய்சொல்லோமே. 9

எண்ணிய விரதம் எல்லாம்
இயற்றினம் ; இவைக்கும் மேலாம்
புண்ணிய விரதம் என்றும்
பொய்சொல்லா விரதம் என்றும்
நண்ணிய உயிரைக் கொல்லா
நலந்தரும் விரதம் ஒன்றும்
மண்ணினில் அனுட்டிப்போம் ; நாம்
வழக்கினிலோ ரம்சொல் லோமே. 10

கிட்டநீர் வந்து சொன்னால்
கேட்கும்நம் காது ; நம்மை
விட்டுநீர் தூர நின்று
விளம்பினால் கேளா தென்று
துட்டனூர் மாரீ சத்தால்
துலங்குகூர்ம் பல்லன் என்னும்
இட்டமார்ச் சாலன் சொல்ல
இவைதம(து) உள்ளத்தில் எண்ணி, 11

* பாபம் ஆமே என்றும் பாடம்.

மெய்கள்போல் சொன்ன எல்லாம்
விசுவசித்திரண்டும் செல்லக்
கைகளாற் பிடித்துக் கண்டம்
கடித்திரத் தங்குடித்தே
செய்கபடான பூனை
செருக்கியங் கிருக்கச் சேர்ந்த
மொய்சிறைப் பூவை யோடே
முயலுமங் கிறந்த அன்றே. 12

—பஞ்சதந்திரப் பாடல்

## 2. புத்தரும் ஏழைச் சிறுவனும்

[அரண்மனையிலிருந்து வெளிப்பட்டுச் சென்ற புத்தர் வழி நடந்த களைப்பால் சோர்ந்து கிடந்தார். அவரைக் கண்ட ஓர் ஆடு மேய்க்கும் சிறுவன் தான் தாழ்ந்த குலத்தின னாதல்பற்றி, தன் கலயத்தில் பால் கறந்து அவருக்குக் கொடுக்கத் தயங்கினான். அப்பொழுது பிறப்பினால் உயர்வு தாழ்வுகள் பாராட்டலாகாது என்று புத்தர் அவனுக்குப் போதித்த வரலாறு இதனுள் கூறப்படுகிறது.]

புண்ணிய மூர்த்தி புத்தமா முனிவன்
உண்மையை உணர்ந்திவ் வுலகினிலென்றும்
அழியா இன்பம் அடையும் அவாவினால்
மன்னர் வாழ்வையும் மறுத்தவ னாகித்
தந்தையை மறந்து தனயனைத் துறந்து
மங்கை யசோதை மதிமுகம் நீத்து
நள்ளிர வதனில் நன்னகர் நீங்கி
உண்ணு முணவும் உறக்கமு மின்றி
இரவும் பகலும் இடைவிடா தெங்கும்
நடந்து மெலிந்து நலிவுற் றொருநாள்
வேனில் வெய்யிலில் வெந்தெரி கானலில்
கைகால் தளர்ந்து கண்களும் மூடி
மூச்சும் அடங்கி முகமும் வெளிறி
உயிரும் உடம்பில் ஊசலாட
விஞ்சிய மயக்கால் வீழ்ந்து கிடந்தனன். 1

வேறு

ஆடுகள் மேய்த்து வரும்—ஒருவன்
ஆயர் குலச் சிறுவன்
வாடிக் கிடந்தவனைச்—செல்லும்
வழியின் மீது கண்டான். 2

வையகம் வாழ்ந்திடவே—பிறந்த
மாதவச் செல்வன் முகம்
வெய்யிலில் வெந்திடாமல்—தழைகள்
வெட்டி யருகில் நட்டான். 3

தெய்வகுலத் திவனை—எளியேன்
தீண்டலும் ஆகாதினிச்
செய்வதும் யாதெனவே—சிறிது
சிந்தை தயங்கி நின்றான். 4

உள்ளந் தெளிந்திடவே—வெள்ளா(டு)
ஒன்றை யழைத்து வந்து
வள்ளல் மயக்கொழிய—மடுவை
வாயில் கறந்து விட்டான். 5

நட்ட தழைகளெல்லாம்—வளர்ந்து
நாற்புறமும் கவிந்து
கட்டிய மாளிகைபோல்—வானத்தில்
காட்சி யளித்த அம்மா. 6

ஐயனை இவ்வுலகம்—காணுதற்
கரிய வோர் தெய்வ மெனக்
கைகள் தொழுது நின்றான்—சிறுவன்
களங்க மிலா வுளத்தான். 7

நிலத்திற் கிடந்த ஐயன்—மெல்ல
நிமிர்ந்து தலை தூக்கிக்
"கலத்தினிலே கொஞ்சம்—பாலைக்
கறந்து தருவாய்" என்றான். 8

"ஐயையோ! ஆகா" தென்றான்—சிறுவன்
"அண்ணலே! யானும் உனைக்
கையினால் தீண்ட வொண்ணா—இடையன் ஓர்
காட்டு மனிதன்" என்றான். 9

அதற்குப் புத்தர்,

"இடர் வரும் போதும்—உள்ளம்
இரங்கிடும் போதும்
உடன் பிறந்தவர் போல்—மாந்தர்
உறவு கொள்வாரப்பா. 10

"ஓடும் உதிரத்தில்—வந்து
ஒழுகும் கண்ணீரில்
தேடிப் பார்த்தாலும்—சாதி
தெரிவதுண்டோ அப்பா. 11

"எவர் உடம்பினிலும்—சிவப்பே
இரத்த நிற மப்பா
எவர் விழி நீர்க்கும்—உவர்ப்பே
இயற்கைக் குணமப்பா. 12

"பிறப்பினா லெவர்க்கும்—உலகினில்
பெருமை வாராதப்பா
சிறப்பு வேண்டுமெனில்—நல்ல
செய்கை வேண்டுமப்பா. 13

"நன்மை செய்பவரே—உலகம்
நாடும் மேற்குலத்தார்
தின்மை செய்பவரே—அண்டித்
தீண்ட வொண்ணாதார்." 14

நிலத்துயர் ஞானி—இவை
நிகழ்த்தி "என் தம்பீ!
கலத்தினி லேகொஞ்சம்—பாலைக்
கறந்து தா" என்றான். 15

ஆயர் சிறுவனும்—கலத்தில்
அளிக்க வாங்கியுண்டு
தாயினும் இனியன்—கொண்ட
தளர்ச்சி நீங்கினனே. 16

—சி. தேசிக விநாயகம் பிள்ளை

## 3. பிருதிவிராஜ்–சம்யுக்தை

மங்கை சுயவர நாளிது ;
வந்தனர் மன்னர் பல்லாயிரம்
அங்கையில் மாலையை ஏந்தியே
அவையிற்சம் யுக்தையும் போந்தனள். 1

ஆரங் கரங்கொண்ட ஆரம்போல்
அசைந்து நடக்கிறார் கூட்டத்தில்
ஆரங்கு அவள் முகம் நோக்கிடார் ?
ஆர்முக மும்அவள் நோக்கிலள். 2

பிருதிவி ராஜனுக் கோலைதான்
போக்க மறுத்ததோ டாங்கவன்
உருவச் சிலையொன்று செய்தனன்
ஒள்ளணி வாயிலைக் காக்கவே. 3

சேவகன் போலவே வைத்தனன்
தெளிவில் ஜயசந்திர ராஜனே ;
பூவைதன் காதலற் கத்தனும்
புன்மை புரிந்ததைக் கண்டனள். 4

நையு முளத்தின ளாகியே
நாடிப் பலபல வெண்ணினாள் ;
பைய நடந்தவள் வாசலில்
பதுமை இருப்பிடம் நண்ணினாள். 5

" நற்சிலையாகவே வந்த நீ
நாதன் " எனமாலை சூடினாள் ;
பொற்சிலை போன்றவள் சோகத்தால்
பொருமியே சாய்ந்தனள் மூர்ச்சையாய். 6

தறையினிற் பூவுடல் சேருமுன்
    தாங்கின காதலன் கைகளே!
மறைவினில் நின்றவன் பிருதிவி
    மங்கையை ஏந்தியே பாய்ந்தனன். 7

ஒருத்தர் துணையின்றிச் சிங்கம்போல்
    ஓங்கிய காதலால் வந்தவன்
கருத்தை உணர்த்திடும் புரவிதான்
    காற்றினைப் போலப் பறக்குமால். 8

கொம்பனை யானையோர் கையினில்
    கூரிய வாளொரு கையினில்
நம்பிக் குதிரையை விட்டனன்
    நாலுகாற் பாய்ச்சலில் சென்றதே. 9

கூடிய மன்னர் திகைத்தனர் ;
    கூறினர் வஞ்சினம் கோபமாய் ;
ஓடிய பேர்களோ ராயிரம் ;
    உறுபரி ஊர்ந்தவராயிரம் ; 10

வாள்களோ ராயிரம் மின்னின ;
    வளைத்து முறுக்கினர் மீசையை.
வேளினைப் போன்றவன் தன்னையும்
    மின்னிடை யாளையும் கண்டதார் ? 11

—பெ. தூரன்

# 4. பிற வகைகள்

## 1. கபிலர் அகவல்

[வாழ் நாள் சிலவே ; நன்று இன்றே செய்க]

உலகத்தீரே ! உலகத்தீரே !
நாக்கடிப்பாக வாய்ப்பறை அறைந்து
சாற்றக் கேண்மின், சாற்றக் கேண்மின் !
மனிதர்க்கு வயது நூறல்ல(து) இல்லை.
ஐம்பது இரவில் அகலும் துயிலினால்
ஒட்டிய இளமையால் ஓரைந்து நீங்கும்
பெருக்காறு ஒத்தது செல்வம் ; பெருக்காற்(று)
இடிகரை ஒத்தது இளமை ; இடிகரை
வாழ்மரம் ஒத்தது வாழ்நாள் ; ஆதலால்,
ஒன்றே செய்யவும் வேண்டும் ; ஒன்றும் ;
நன்றே செய்யவும் வேண்டும் ; நன்றும்,
இன்றே செய்யவும் வேண்டும் ; இன்றும்,
இன்னே செய்யவும் வேண்டும் ; இன்னும்,
நாளை நாளை என்பீர் ஆகில்,
நமனுடை முறைநாள் ஆவதும் அறியீர் ;
நம்முடை முறைநாள் ஆவதும் அறியீர் ;
எப்போ தாயினும் கூற்றுவன் வருவான் ;
அப்போ(து) அந்தக் கூற்றுவன் தன்னைப்
போற்றவும் போகான் ; பொருளோடும் போகான் ;
சாற்றவும் போகான் ; தமரொடும் போகான் ;
நல்லார் என்னான் ; நல்குர(வு) அறியான் ;
தீயார் என்னான் ; செல்வரென்(று) உன்னான்.

## 2. தனிப் பாடல்

வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்
தேன்சிலம்பி யாவர்க்குஞ்செய்யரிதாம்—யாம்பெரிதும்
வல்லோமே யென்று வலிமைசொல வேண்டாங்காண்
எல்லார்க்கு மொவ்வொன் றெளிது. 1

காணுமல் வேணதெல்லாங் கத்தலாம் ; கற்ருேர்முன்
கோணுமல் வாய்திறக்கக் கூடாதே—நாணுமல்
பேச்சுப்பேச் சென்னும் பெரும்பூனே வந்தக்கால்
கீச்சுக்கீச் சென்னும் கிளி. 2

## 3. நாட்டு சிறப்பு

சீரும் சிறப்புமுள்ள தேசிங்கு மகராசன்
பேரும் பிரபலமும் பெருகி வரும்படியாய்ச்
செந்நெல் கதிர்பருத்துச் செழித்து வளர்கிறதும்,
கன்னல் கொழித்துக் காட்டை மறைப்பதுவும்,
வன்புலியும் பசுவும் மருவியே வாழ்கிறதும்,
தெம்புடனே யானே செழித்துத் திரிகிறதும்,
புன்னேமலர்ச்சோலே பொருந்தி நிறைவதுவும்,
தென்னேமரம் வாழைமரம் செழித்து வளர்வதுவும்,
சந்தனச் சோலேகளில் ஜாதிமல்லி பூப்பதுவும்,
மந்தாரை கோங்கு மல்லிகைப்பூ மலர்வதுவும்,
தாமரைப் பொய்கைகளும், தங்குநீர் ஏரிகளும்,
வாமமுறும் கான்யாறும் வாய்ப்புகளும் என்சொல்வோம்.

—தேசிங்கு ராஜன் கதை

## 4. மழை

சோழனது சீமையிலே சொலித்தனவே மின்னல்கள்
கடலிரைச்சல் போலே குமுறினவே மேகங்கள் ;
குமுறிய அம்மேகமெல்லாம், குடம்கொண்டு வார்த்தாற்போல்
நல்லமழை பெய்ததனுல் நாடும் செழித்ததுவே,
பூமி குளிர்ந்ததுவே பொய்கை நிரம்பியதே,
ஏரி நிரம்பிக் கால்வாய்கள் தாம்நிரம்பி,
ஊற்று மிகச்சுரந்து, ஓடிற்றே சலம்விசையாய் ;
தடாகங்கள் தாம்நிரம்பித் தாமரைகள் பூத்தனவே ;
உலர்ந்த மரங்களெல்லாம் உயிருண்டாய்ப் பிழைத்தனவே ;
இலேயும் தளிர்களெல்லாம் ஏகமாய்த் தளிர்த்தனவே ;
செடிகள் கொடிகளெல்லாம் செழித்துத் தழைத்தனவே ;

கிள்ளப் பழுத்தனவே, கிளிகள் வந்து சேர்ந்தனவே ;
அள்ளப் பழுத்தனவே, அளிகள்வந்து பாய்ந்தனவே ;
செந்நெல் விளைந்தனவே, தேசம் செழித்தனவே ;
பயிர்கள் விளைந்தனவே, பலனைக் கொடுத்தனவே ;
சோலைகள் சாலைகள் சூழ்ந்த தடாகங்களில்
குயில்கள் அடுத்தனவே, குருவிகளும் வந்தனவே ;
மயில்கள் அடுத்தனவே, வான்கோழி வந்தனவே.

—அல்லி அரசாணி மாலை

## 5. உத்தியோக சங்கடம்

இராகம்—நாதநாமக்கிரியை ஆதி தாளம்

பல்லவி

அப்பா இதென்ன அதிகாரம்—ஐயோ
எப்போ பக்திசெய்ய இல்லையே நேரம் (அப்பா)

அநுபல்லவி

சுப்பனே அபத்த மூட்டை அந்தச்
சுந்தரன் வழக்கிலே தொள்ளாயிரம் ஓட்டை
அப்பனே கற்பிப்பான் பொய்ச்சீட்டை அந்த
அனந்தனும் கட்டுவான் ஆகாசக் கோட்டை (அப்பா)

சரணங்கள்

சிலர் கேட்பார் கற்பகச்சோலை—வேறு
சிலர் கேட்பார் நமன் அணுகாமலே ஓலை
பலர் கேட்பார் நூறுபுலிப்பாலை—அல்லும்
பகலும் உலகில் நமக்கிது தானேவேலை (அப்பா)

அண்டப்புரட்டன் அந்தவாதி—அகி
லாண்டபுரட்டன் அப்பா அவன் பிரதிவாதி
சண்டப்பிரசண்டன் நியாயவாதி—நாளும்
சகஸ்ரப்புளுகன் சாக்ஷிக்காரனெனும் கியாதி (அப்பா)

எப்போதும் பொய்வழக்கர் கூட்டம்—அவர்க்
கிந்திரலோகங் கிடைத்தாலும் இன்னமுந்தான் வாட்டம்
தப்புச் சாக்ஷிகள் வாய் நீட்டம்—பொய்ச்
சத்தியம் ஆணையென்றால் அவர்க்குக் கொண்டாட்டம்
(அப்பா)

பேராசைக்காரன் குப்பன் செட்டி—அவன்
பிரமாதிகளிடத்தும் வாங்குவான் வட்டி
சோரான் வழக்கில் சிங்கக்குட்டி—இவர்
சூதால் வேதநாயகன் பதந்தொழ அட்டி (அப்பா)

—வேதநாயகம் பிள்ளை

## 6. இராம நாடகக் கீர்த்தனை

[சீதாதேவி அனுமாருக்கு அடையாளம் ஈதல்]

கொச்சகம்

உன்னித்தான் அனுமன் இந்த உறுதிசொல்ல மனந்துணிந்தான்
வன்னம்உள்ள அணிசூடா மணிகொடுத்தாள் சாமி அவள்
என்னசொன்னாள் எனக்கேட்கில் ஏதுரைப்பாய் எனச்சீதை
சொன்னபடி அடையாளம் சொல் என்று சொல்வாளே.

ஆனந்த பைரவி ராகம்—ஜம்பை தாளம்

பல்லவி

அனுமானே சாமிக்கிந்த—அடையாளம் சொல் ஐயா

அநுபல்லவி

சனகி இலங்கைச் சிறையில் தன் உயிரைத் தானே தின்று
மனதில் ராமாமிர்த சீவனம் செய்திருக்கிறாள் என்று (அ)

சரணங்கள்

உலகறிய நகரை விட்டுக் கோட்டை வாசல் நடக்குமுன்னே
ஓங்கும் வனம் எங்கே என்று நான் கேட்க நேரே
தொலை தூரம் வழிநடந்தாய் சமத்து நீ என்று சொல்லித்
துளிர் ஆன வாய்மலர்ந்து குளிர நகைசெய்தாரே (அ)

தாழ்வில்லா நகர் நீங்கி வருகிற பேர் எல்லாம்
தனித்தனியே துணிவுசொல்லி அனுப்பினார் பொய்யோ
சூழும் அந்த வழி நடுவே வேள்வி செய்ய வேணும் என்று
தொடங்கும் வேதியனுசை அடங்கப்பசு கொடுத்தார் ஐயோ (அ)

கனம் ஆன கங்கைக் கரை
வனவேடன்முன் எங்களைக்
காட்டி இவர் ஆர் என்று நீ
கேட்டாயோ குகனே
உனது தம்பி எனது தம்பி
உன் கொழுந்தி இவள் நானும்
உன்ஆசைத்தோழன் என்று
சொன்னாரே மகனே (அ)

உளத்தில் மறுமாதர் பேர்
உரைத்தார் என் சாமிக்கது
வளர்த்த கிளியும் மானும்
வைத்திருக்கச் சுமந்திரர்உடன்
குறிக்கேன் என்றந் தரங்கம்
கருத்தில் உண்டுதானே
தளர்ச்சியில்லா தபடி
பத்திரமாகச் சொன்னேனே (அ)

ஒருநாள் என்மேற் பாய்ந்த
ஒரு கணையிட்டார் இதென்ன
சரணம் என்றது வீழ
தாமே கொடுத்தாரே அந்த
காக்கைதனை நோக்கிப் புல்லால்
தெரியாது போச்சோ
இருவிழிக்கும் ஒருமணியாய்த்
மானமும்தான் எங்கேபோச்சோ (அ)

—சீ. அருணாசலக் கவிராயர்

## 7. கம்பன்

எண்ணி எண்ணித் திட்டம் போட்
டெழுதி னானே!
எண்ணாமல் எங்கிருந்தோ
கொட்டினானே!
புண்ணியத்தால் உடன்பிறந்த
புலமை தானே!
போந்தபின்பு ஆய்ந்தறிந்து
புகன்ற தாமோ!
தண்ணியல்சேர் தமிழணங்கின்
தவமே தானே!
தயரதனும் ஜனகனுமே
தரித்த நோன்போ!
விண்ணமுதின் சுவைகெடுத்த
கம்பன் பாடல்
விரிந்தவிதம் என்றென்றும்
வியப்பே ஆகும்.
ஜாதிமத விலங்கினம் வாழ்
காட்டை மாற்றி

சமனுக்கிச் சமரசமாம்
தளத்தின் மேலே
நீதிநெறி கருணையெனும்
நிலைகள் நாட்டி
நித்தியமாம் சத்தியத்தின்
சிகரம் நீட்டி
காதல் அறம்வீரம் என்னும்
கொடியைத் தூக்கி
கம்பனென்பான் கட்டிவைத்த
கனக மாடம்
ஆதிபரா பரம்பொருளின்
சக்தி யாகும்
அன்னை யெங்கள் தமிழ்த்தெய்வம்
அமரும் கோவில்.

—நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை

## 8. எது சுதந்திரம்

1. அச்சம் விட்டது சுதந்திரம்
அன்பு விடாதது சுதந்திரம்
இச்சைப்படிசெயல் சுதந்திரம்
இடர்செய்யாதது சுதந்திரம்
பிச்சை கொள்ள விரும்பாது
பிறருக்கீய வருந்தாது
கொச்சை மொழிகளைச் சொல்லாது
கோணல் வழிகளிற் செல்லாது. (அச்சம்)

2. மடமை விட்டது சுதந்திரம்
மானம் விடாதது சுதந்திரம்
கடமை கற்றது சுதந்திரம்
கபடம் அற்றது சுதந்திரம்
கொடுமை கண்டு பொறுக்காது
கொடியர் தமையும் வெறுக்காது
அடிமை செய்து சுகிக்காது
யாரையும் அடிமை வகிக்காது. (அச்சம்)

3. தன்சோ றுண்பது சுதந்திரம்
தன் துணி யணிவது சுதந்திரம்
என்னே வறுமை வந்தாலும்
எத்தனை துன்பம் தந்தாலும்
தன்னேர் செம்மை பிரியாது
தன்குறை சொல்லித்திரியாது
பொன்சேர் போகம் மதிக்காது
பொய்ப்புகழ் பாடித் துதிக்காது (அச்சம்)

4. தாழ உரைப்பது சுதந்திரம்
தன்மதிப் புள்ளது சுதந்திரம்
ஏழை செல்வனென் றெண்ணுது
எவருக்கும் குறை பண்ணுது
ஊழியனுகப் பணிசெய்யும்
உலகுக்கெல்லாம் அணிசெய்யும்
வாழிய மக்கள் எல்லாரும்
வாழிய வென்றே அது கோரும் (அச்சம்)

—நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை

## 9. தொல்லை யிழைத்திடும் பையல்

தொல்லை யிழைத்திடும் பையல்—மிகத்
துஷ்டத்தனஞ் செய்யும் பையல்
சொல்லினைக் கேளாத பையல்—மிகச்
சுட்டித்தனஞ் செய்யும் பையல்
பல்லினைக் காட்டிடும் பையல்—மிகப்
பாசாங்கு செய்திடும் பையல்
அல்லும் பகலுமிங் கென்றும்—ஓயா
ஆட்டங்கள் காட்டிடும் பையல். 1

கல்லையும் மண்ணையும் நாடி—என்றும்
கருத்துடன் தின்றிடும் பையல்
நல்லதுந் தீயதும் ஒன்றுய்—என்றும்
நாட்டத்தில் கொண்டிடும் பையல்

வெல்லற் கரியதோர் பையல்—பொய்
வேஷங்கள் போட்டிடும் பையல்
செல்வச் சிறுமணிப் பையல்—பெருந்
தெய்வங்கள் வாழ்த்திடும் பையல். 2

விளக்கைப் பிடித்திடும் பையல்—அது
வேண்டுமென்றுடிடும் பையல்
களக்கமில் உள்ளத்துப் பையல்—எங்கள்
கண்ணினுள் வாழ்ந்திடும் பையல்
சழக்குகள் செய்திடும் பையல்—என்றும்
சண்டைகள் போட்டிடும் பையல்
அளக்கருந் தொல்லைசெய் பையல்—எங்கள்
ஆர்வ மிகும் மணிப் பையல். 3

—பரலி, சு. நெல்லையப்பர்

## 10. சிரித்த முல்லை

மாலைப் போதில் சோலையின் பக்கம்
சென்றேன். குளிர்ந்த தென்றல் வந்தது.
வந்த தென்றலில் வாசம் கமழ்ந்தது.
வாசம் வந்த வசத்தில் திரும்பினேன்.
சோலை நடுவில் சொக்குப் பச்சைப்
பட்டுறை பூண்டு படர்ந்து கிடந்து
குலுக்கென்று சிரித்த முல்லை
மலர்க்கொடி கண்டேன்; மகிழ்ச்சி கொண்டேனே.

—பாரதி தாசன்

# உரை நடை

---

## 1. குமர குருபரர்

மகா மகோபாத்தியாய டாக்டர். உ. வே. சாமிநாதையர்

### இளமைப் பருவம்

ஒன்பது கைலாசங்களும் ஒன்பது திருப்பதிகளும் தன் கரையில் அமையப்பெற்ற தாம்பிரபரணி நதி தீரத்தில் ஸ்ரீ வைகுண்டமென வழங்கும் நகரின் வடபாலுள்ள ஸ்ரீ கைலாசத்தில் சண்முக சிகாமணிக் கவிராயர் என்பவருடைய திருக்குமாரராகக் குமர குருபரர் தோன்றினர். ஐந்து பிராயம் வரையில் இவர் பேசாமல் இருந்தார். இவர் தந்தையார் அதனை அறிந்து வருந்தித் தம் குல தெய்வமாகிய செந்திலாண்டவனைத் தரிசிக்கத் திருச்செந்தூருக்குச் சென்று அங்கேயுள்ள கலியுக வரதனை வணங்கித் தம் பிள்ளையைக் காப்பாற்றுதல் அக்கடவுள் கடனென்று முறையிட்டதோடு குமர குருபரரைச் சண்முக விலாசத்திலே கிடத்திவிட்டுத் தாமும் அதில் வரங்கிடப்பா ராயினர். சண்முக சிகாமணியின் புத்திரர் சண்முக விலாசத்திற் கிடந்ததும் பொருத்தமானதுதான்.

### தமிழ்ப் பயிற்சி

பின்னர், முருகக் கடவுளுடைய திருவருளால் இவர் பேசத் தொடங்கித், தமிழ் நூல்களைப் பயில ஆரம்பித்தார். முருகப் பெருமானுடைய திருவருள் வாய்ந்திருந்தமையின், பல தமிழ் நூல்களையும் எளிதில் விரைவிலே கற்றுச் சிறந்த புலமை பெற்றதுடன் வடமொழியையும் பயின்றனர். அதன்பின், தம்மை ஆட்கொண்ட முருகக் கடவுள்மீது கந்தர் கலிவெண்பா வென்ற ஒரு நூலை இயற்றினர். அதனைத் தமிழ் நாட்டிற் பெரும்பாலோர் பாராயணம் செய்து வருவதே அதன் பெருமையை நன்கு புலப்படுத்தும்.

## நூல்கள் இயற்றல்

பின்பு தாம் பிறந்த தலத்திலுள்ள இறைவன் விஷயமாகக் கைலைக் கலம்பகம் என்ற ஒரு நூலை இவர் இயற்றினர். அதன் முழுப்பாகம் இப்பொழுது அகப்படவில்லை.

சிவஸ்தலங்களைத் தரிசிக்கவேண்டுமென்றும், புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம்செய்ய வேண்டுமென்றும், குமரகுருபரர் எண்ணி மதுரை முதலிய ஸ்தலங்களையடைந்து தரிசித்துக்கொண்டு சென்று காசியை அடைந்தார். அங்கே கங்கா ஸ்நானமும், விசுவேசுவர தரிசனமும் செய்துகொண்டு டில்லி பாதுஷாவைப் பார்த்துவிட்டு, மீண்டும் தாம்பிரபரணி தீரத்தை அடைந்தார். அங்கே ஸ்ரீ வைகுண்டம் முதலியவற்றில் சில தினங்கள் தங்கியிருந்து திரும்ப மதுரைக்கு வந்தார். அவ்விடத்தில் அப்பொழுது திருமலை நாயக்கர் அரசாட்சி செய்து வந்தார். ஸ்ரீ மீனாட்சி விஷயமாக ஒரு பிள்ளைத் தமிழ் பாடித் திருமலை நாயக்கர் முன்னிலையில் அரங்கேற்றினர். அதில் வருகைப் பருவம் படிக்குங்கால் அங்கயற்கணம்மை ஒரு சிறு பெண்ணுகை வந்து அவ்வரசர் மடியில் வீற்றிருந்து கேட்டருளியதாகச் சொல்லுவார்கள். அப்பிள்ளைத் தமிழைக் கேட்ட அரசர் வியந்து குமரகுருபரருக்கு இரண்டு கிராமங்களையும் சில விருதுகளையும் கொடுத்தார். பின்பு அவர் மதுரைக் கலம்பகம் பாடினர். மீனாட்சியம்மை இரட்டைமணிமாலையும் மீனாட்சியம்மை குறமும் இவரால் பாடப்பட்டனவென்பர். ஆயினும் அதற்குரிய ஆதாரங்கள் கிடைக்கவில்லை. பின்பு தருமபுர ஆதீனத்தையடைந்து அதில் நான்காம் பட்டத்து ஆசிரியராக இருந்த ஸ்ரீ மாசிலாமணித் தேசிகரை வணங்கி அவர்பால் ஈடுபட்டுக் காஷாயமும் ஞானோபதேசமும் பெற்றனர். அப்பொழுது அவ்வாசிரியர் விஷயமாக இவரால் செய்யப்பட்ட நூல் பண்டார மும்மணிக்கோவை யென்பது; அது யாவருடைய மனத்தையும் உருக்கும்.

பின்பு இவர் திருவாரூர் சேர்ந்து தியாகராஜப் பெருமானை வணங்கித் திருவாரூர் நான்மணி மாலையையும், புள்ளிருக்கு வேளூர் (வைத்தீசுவரன் கோயில்)க்குச் சென்று

ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி விஷயமாகப் பிள்ளைத் தமிழையும் இயற்றினார். அதன்பின் சிதம்பரம் சென்று ஸ்ரீ ஆனந்த நடராஜப் பெருமானையும் சிவகாமசுந்தரி யம்மையையும் வணங்கிச் சில நாள் அங்கே இருந்தார். அப்பொழுது சிதம்பர மும்மணிக்கோவை இவரால் இயற்றப்பெற்றது. யாப்பிலக்கணத்திற்கு இலக்கியமாகச் சைனமதக் கொள்கைகளையுடைய செய்யுட்கள் காரிகையில் மேற்கோளாகக் காட்டப்பெற்றிருந்ததனை அறிந்து சிலர் வேண்டுகோளின்படி சிவபரமாகச் சிதம்பரச் செய்யுட் கோவையை இவர் இயற்றினார். நீதிநெறி விளக்கம் என்ற நூலையும் அப்பொழுது தான். இயற்றினரென்பர். குறள் மிக விரிந்திருப்பதால், அந்நூற் கருத்துக்களைச் சுருக்கி அமைத்து ஒரு சிறிய நூல் செய்து தரவேண்டுமென்று திருமலை நாயக்கர் கேட்டுக் கொள்ள அதனைப் பாடினாரென்று சிலரும், டில்லி பாதுஷாவிற்குத் தமிழின் பெருமையையும் நீதிகளையும் அறிவுறுத்தப் பாடினாரென்று வேறு சிலரும் கூறுவர். அந்நூல் முதற் செய்யுளில், "நமரங்காளென்னே, வழுத்தாத தெம்பிரான் மன்று" என்று ஸ்ரீ நடராஜப் பெருமானது மன்றம் சொல்லப்படுவதால் சிதம்பரத்தில் இருக்கையிலேயே இவர் அதனைப் பாடினாரென்று கொள்வது பொருத்தமாகும்.

### காசி வாசம்

பின்னர், மறுமுறை காசிக்குச் சென்று கங்கையில் நீராடி ஸ்ரீ விசுவேசுவரரையும் விசாலாட்சி யம்மையையும் தரிசித்துக் காசிக் கலம்பகம் என்று ஒரு பிரபந்தம் பாடினார். யாத்திரையாக வருவோர் இருத்தற்கு வசதியில்லாமல் வருந்துவதையறிந்து காசியிலேயே இருந்து தருமம் செய்து வரவேண்டுமென்ற நோக்கம் இவருக்கு உண்டாயிற்று. ஆயினும் அதற்கு வேண்டிய இடம் பொருள் முதலிய சௌகரியங்கள் இல்லாமையால், அப்பொழுது டில்லியிலிருந்த பாதுஷாவினிடம் அவற்றைப்பெற எண்ணினார். எனினும், அவ்வரசரிடம் பேசுவதற்கு அந்தத் தேச பாஷையாகிய இந்துஸ்தானி தெரியாமையால், அதனை அறிந்து கொள்ள இவர் சரசுவதியைக் குறித்துச் சகலகலா வல்லி

மாலையென்ற ஒரு தோத்திர நூலைப்பாடினார். அம்மாலையி லுள்ள "மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன் னருமென், பண்கண்டளவிற்பணியச் செய்வாய்" என்னும் பகுதி இந்தக் கருத்தைப் புலப்படுத்தும். சரசுவதியின் திருவருளால் இந்துஸ்தானி பாஷையிற் பயிற்சியுற்றுத் தமிழ் நூல்களிலுள்ள விஷயங்களை அந்தப் பாஷையிலேயே பெயர்த்துப் பிரசங்கிக்கத்தக்க வன்மையையும் பெற்றார். பிறகு டில்லி பாதுஷாவைக் கண்டு தம்முடைய உரை வன்மையினால் அவ்வரசருடைய உள்ளத்தைக் கவர்ந்து, அவரிடமிருந்து நன்கொடையாக நிலங்கள் முதலியனபெற் றார். கேதாரக் கட்டத்திலுள்ள சிவலிங்கத்தை மூடி மேலே முகம்மதியர்கள் மசூதி கட்டியிருப்பதை யறிந்து அவ்விடத் தைப் பாதுஷா வழங்கத் தமக்குரிமையாக்கிக் கொண்டு அங்கே சிவபெருமானுக்குக் கோயில்கட்டி நித்தியநைமித்தி யங்களை நடத்தினார். இன்றும் அங்கே தமிழ் நாட்டு முறை யில் திருவிழாக்கள் நடைபெற்று வருகின்றன. தாம் இருப் பதற்குரிய மடம் ஒன்று அமைத்து அதில் அரசர்கள் மட்டும் கட்டிக்கொள்ளும் ஸர்ஜா என்று வழங்கப்படும் முன் கட்டி டத்தையும் அரசரது வேண்டுகோளின்மேற் கட்டிக்கொண் டார். இதனால் அரசருக்கு இவரிடம் இருந்த பெருமதிப்பு விளங்குகின்றதன்றோ? அந்த மடம் இப்பொழுதும் '**குமார சாமி மடம்**' என வழங்கும்.

## புராண சாலை

தம்முடைய மடத்தில், புராணசாலையென்னும் பெய ருடன் ஒரு மண்டபம் அமைத்து அங்கே நாள்தோறும் தமிழ்ப் புராணங்களையும் பிற தமிழ் நூல்களையும் வாசித்து இந்துஸ்தானி பாஷையில் அந்நூல்களின் பொருளை விரிவாக எடுத்து இவர் பிரசங்கித்து வந்தார். அக்காலத்தில் பல பக்தர்களும் வந்துகேட்டு மகிழ்ந்து போவதுவழக்கம். அங்ஙனம் வருவோர்களில் இராம பக்தர்கள் பெரும்பான்மை யோராவர். கம்பராமாயணம் முதலியவற்றையும் வாசித்து இவர் பொருள் சொல்லி வருவதுண்டு. அவ்வாறு இராமா யணம் வாசிக்கையில் இராம பக்தராகிய துளசிதாஸர்

அதனை அறிந்து அங்கு வந்து கேட்டுப் போவாரென்று பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். அவ்வாறு கேட்டதற்கு அறிகுறியாக அவர் ஹிந்தியில் இயற்றிய இராமாயணத்தில், கம்பராமாயணத்தில் உள்ள பல கருத்துக்கள் காணப்படுகின்றனவாம்.

## நூல்களின் வகை

இவ்வாறு தமிழைப் பிறநாட்டிலும் விருத்திசெய்து விளங்கிய குமர குருபர முனிவருடைய தமிழ் நூல்கள் எல்லோராலும் போற்றற்குறியன. பல பிரபந்தங்களேயும், தோத்திரங்களேயும், நீதி நூல்களேயும் இவர் செய்திருக்கிருர். இன்னும் இவரால் இயற்றப்பட்ட நூல்கள் பல இருக்கலாம். அவை இப்பொழுது அகப்படாமையால் அவற்றின் பெயர் தெரியவில்லே.

## பரம்பரை

குமர குருபரர் காசியிலேயே இருந்து தர்மபரிபாலனமும் சைவபரிபாலனமும் செய்து வந்தார். இவருக்குப்பின் இவருடைய தர்மங்களே நடத்துவதற்கு ஒரு தம்பிரான் நியமிக்கப்பட்டார். அது முதல் ஒருவர்பின் ஒருவராக அந்தத் தர்மங்களே நடத்திப் பாதுகாத்து வருகின்றனர்.

காசி வாசிகளாகிய இப்பரம்பரையினரில் தில்லே நாயக ஸ்வாமிகள் என்பவர் ஸ்ரீ குமாரசாமி மடத்திற்குரிய பல அற்புதங்கள் சோழ நாட்டில் இருந்ததை அறிந்தும் வேறு சிலவற்றை நினேந்தும் திருப்பணந்தாளில் ஒரு கிளே மடத்தை நிறுவினுர். அப்பால் ஸ்ரீ குமர குருபரருடைய பரம்பரையினர் திருப்பணந்தாளிலேயே இருந்து தம்முடைய கடமைகளே நிறைவேற்றி வருவாராயினர்.

திருப்பணந்தாளிலுள்ள மடம் காசியிலுள்ள குமாரசாமி மடத்தோடு தொடர்புடையதாதலின், காசி மடமென்று வழங்கப்பெறும். அங்கே தலேவர்களாக இருப்பவர்கள் காசிவாசி யென்னும் பட்டத்தைப் பெற்று வருகிருர்கள். முதல் முதலில் தலேமை ஸ்தாபனத்தை ஸ்ரீ காசியில் அமைத்தமையாலும், பிற்காலத்தில் குமர குருபரர் என்ற

பெயருடைய வேறு சிலர் தலைவர்களாக இருந்தமையாலும் இவர் ஆதி குமர குருபர ஸ்வாமிகளென்று வழங்கப்படுவர்.

குறிப்பு :—திருப்பணந்தாள், சோழ நாட்டில் காவிரியாற்றின் வட கரையிலுள்ளது. இது பாடல்பெற்ற சிவஸ்தலம். சுவாமி பெயர் அருணஜடேசர்.

## பயிற்சி

1. பொருள் வேறுபாடு கூறு :—கரை, கறை ; தந்தையார், தந்தை யார் ; அறிந்து, அரிந்து ; இலக்கணம், இலக்கியம் ; வன்மை, வண்மை ; உரை, உறை.

2. எதிர்ப்பதம் கூறு :—பெருமை, சௌகரியம், விரிவாக, இளமை.

3. சொந்த வாக்கியங்களில் உபயோகித்து எழுது :—பெரும் பாலோர், மீண்டும், ஈடுபட்டு, நாள்தோறும், ஒருவர்பின் ஒருவராக.

4. பொருள் கூற :—விருதுகள், நன்கொடை, அறிகுறி, போற்றற் குரியன, பிரபந்தங்கள், தொடர்பு.

5. பிரசங்கி :—இதனடியாக உண்டாகும் தொழிற் பெயர் என்ன ?

## கேள்விகள்

1. ஐந்து வயது வரையிலும் பேசாமலிருந்த குமர குருபரர் பேசும் திறமை பெற்றது எவ்விதம் ?

2. குமர குருபரர் பிள்ளைத் தமிழ் பாடி அரங்கேற்றினபொழுது நிகழ்ந்த சம்பவம் யாது ?

3. நீதிநெறி விளக்கம் எக்காரணங்களைக்கொண்டு எங்கு பாடப் பட்டதாகச் சொல்லப்படுகிறது ?

4. குமரகுருபரர் இந்துஸ்தானி பாஷையை அறிந்துகொள்ள விரும்பியது ஏன் ? எவ்விதம் அறிந்துகொண்டார் ?

5. குமர குருபரர் காசியில் தங்கியிருக்கத் தீர்மானித்தது ஏன் ? அவர் அங்கு செய்த பணிகள் யாவை ?

6. குமர குருபரருடைய பரம்பரையினர் இக்காலத்தில் எங்கிருந்து தம் கடமைகளை நிறைவேற்றி வருகின்றனர் ?

## 2. நமது நாற்கால் நண்பர்கள்

ராவ்சாகிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் ஜி. பி. வி. சி.

பல்லாயிர வருடங்களுக்கு முந்திய காலத்தில் மனிதர்கள் வீடுகளில்லாமல் காடுகளில் மிருகங்கள் போல வாழ்ந்து வந்தார்கள். அந்தக் காலத்தில் அவர்கள் மிருகங்களை வேட்டையாடிக்கொண்டும், மிருகங்களால் வேட்டையாடப்பட்டுக் கொண்டு மிருந்தார்கள். இப்படியிருந்து வந்த நெடுங்காலத்துக்குப் பின்பு அவர்கள் காட்டு மிருகங்களை வீட்டு மிருகங்களாகப் பழக்கி, யுத்த காலங்களிலும் சமாதான காலங்களிலும் தங்களுக்கு வேண்டியவாறு பலவகையாக உபயோகப்படுத்துவா ராஞர்கள்.

இவ்வாறு பழக்கப்பட்ட மிருகங்கள், மனிதர்களுக்குப் புலிகள் போலப் பகையாயிராமல் நாய்கள்போல நட்பாயிருப்பதஞல், 'நமது நாற்கால் நண்பர்கள்' எனத் தக்கவையாயின. பழக்கப்பட்ட மிருகங்களில் பிரதானமானவை யானை, குதிரை, ஒட்டகம், மாடு என்பவைகளாம். இவற்றுள் நமக்கு மிகவும் உதவி புரிந்துவரும் மாடுகளைப்பற்றி ஈண்டுக் கவனிப்போம்.

மாடுகள் (காளைகளும், பசுக்களும்) திமில் உள்ளவை, திமில் இல்லாதவையென இருவகைப்பட் டிருக்கின்றன. இந்தியா தேசத்து மாடுகள் திமிலுடையவை. ஐரோப்பிய கண்டத்து மாடுகள் திமில் இல்லாதவை.

இந்தியா தேசத்தைப்போல மாடுகள் இன்றியமையாத தேசம் உலகத்தில் ஒன்றுமில்லை. இந்தியரில் நூற்றில் எண்பது பங்கினருக்கு விவசாயமே பிழைப்புத் தொழிலாயிருக்கிறது. (எஞ்சிய இருபது பங்கினரில் பதினைந்து பங்கினர் விவசாயத்தோடு நெருங்கிய தொடர்புடைய தொழில்களே சீவனேபாயமாக உடையவர்.) அதஞல், விவசாயம் இந்தியாவுக்கு முக்கியமானவற்றுள் முக்கியமானதென்பது தெளிவாம். இந்திய விவசாயத்துக்கு மாடு இன்றியமையாததென்பது சொல்லித் தெரியவேண்டியதில்லை. ஆதலால் 'இந்தியாவுக்கு உயிர் நிலை விவசாயம்'[1] என்றும், 'இந்திய

1. "Agriculture is the backbone of India."

விவசாயத்துக்கு உயிர் நிலை மாடு'[2] என்றும் கூறப்பட்டிருப்பது முழுதும் உண்மையே.

குடியானவர்கள் விவசாய வேலைகள் கொஞ்சங் குறைய எல்லாவற்றையும் மாடுகளைக்கொண்டே செய்விக்கின்றார்கள். உழுதல், விதைத்தல் முதலாக அறுவடையிறுதியாகப் பயிர்த்தொழில் முழுவதும் இயந்திரங்களைக் கொண்டு செய்யும் அமெரிக்கா முதலிய மேல்நாட்டுக் கிருஷிகர்போல் இந்திய விவசாயிகள் மாடுகளுக்குப் பதிலாக இயந்திரங்களை உபயோகிக்கும் காலம் சமீபமாக இல்லை. காளை மாடுகள் உழுதலும், பரம்படித்தலும், பயிரடித்தலும், தண்ணீர் இறைத்தலும் செய்கின்றன; நெல் முதலிய விளைபொருள்களைப் பொதியெருதுகளாகச் சுமந்தும், வண்டிக் காளைகளாக வண்டியில் வைத்து இழுத்தும் மணல், சேறு, மேடு, பள்ளம் மிகுந்துள்ள கஷ்டமான பாதைகள் வழியாகக், களஞ்சியங்கள், சந்தைகள் முதலிய இடங்களுக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கின்றன; எண்ணெய் வித்துக்களைச் செக்கில் ஆட்டலும், கரும்புகளை ஆலையில் அரைத்தலுமாகிய உழைப்புகளைச் செய்கின்றன. பசுமாடு அநேகமாக வருடந்தோறும் ஒரு கன்று ஈனுதலோடு, குழந்தைகள், நோயாளிகள் முதலியோர்க்கு உபயோகமான பாலுங் கொடுக்கின்றது. மாடுகள் நிலத்தை வளப்படுத்தி விளைவை மிகுவிப்பதற்கு உதவுகின்ற சாணமும் மூத்திரமும் தருகின்றன.

ஹிந்துக்களின் சமயச் சடங்குகளான சுபாசுப கருமங்களில், மாடுகள் பிராமணருக்கும், கோயில்களுக்கும் தத்தம் பண்ணப்படுகின்றன. இறந்து போனவர்களுக்கு இந்த உலகத்தில் பிரசித்தி உண்டாகவும், மேல் உலகத்தில் நன்மை விளையவுங் கருதி, அவர்களுடைய சந்ததியார் இளங் காளைகளைக் கோவிற் காளைகளாகச் சுவாமிக்கு நேர்ந்து விடுகிறார்கள். அவைகள் தெய்வமாகக் கருதப்பட்டு, பயிராயிருக்கும் புலங்களுள்பட எல்லா நிலங்களிலும் எவராலும் தடை செய்யப்படாமல் யதேச்சையாய்த் திரிந்து மேய்ந்து செழிப்பாக வளர்கின்றன.

---

2. "Cattle in India are the backbone of agriculture."

பசுவின் பால், தயிர், நெய், சாணம், மூத்திரம் ஆகிய ஐந்தும் கலந்த பஞ்சகவ்வியம் சுத்தம் செய்யும் சடங்கில் பிரயோகிக்கப்படுகின்றது.

மாடுகள் இறந்த பின்னும் உபகாரப்படுவதில் ஒழிவதில்லை. கோரோசனை சில மாடுகளின் பித்தநீர்ப் பையினின்.று எடுக்கப்படுகிறது. செத்த மாட்டின் முழு உடம்பையும் உரம் (எரு) ஆக உபயோகிக்கலாம். ஒரு மாட்டின் உடலானது மழை, வெயில், காற்றுக்குட் படாதபடி பாதுகாத்துப் பருவப்படுத்திய முப்பது வண்டி எருவுக்குச் சமானமென மதிப்பிட்டிருக்கின்றது. பின் வருவது டாக்டர் ஷார்ட் என்பவரது 'இந்திய கால்நடைச் சுவடியில்' உள்ள தன் கருத்து :—

கொல்லப்பட்ட மாட்டு மாமிசம் உலகத்திற் பெரும்பாலாரான மனிதருக்கு உணவாகின்றது. அதன் தோல் பதனிடப்பட்டு பலவாறு உபயோகப்படுகின்றது. கொம்புகள் பெட்டிகளாகவும், சீப்புகளாகவும், கத்திக் கைப்பிடிகளாகவும், பான பாத்திரங்களாகவும் உருவாக்கப்படுகின்றன. எலும்புகள் தந்தங்களுக்கு அடுத்தபடியாக உபயோகிக்கப்படுகின்றன. தோற் கழிவுகளையும் குளம்புகளையும் கொதிக்க வைத்து வச்சிரப்பசை உண்டாக்கப்படுகின்றது. நரம்புகளைச் செம்மார்களும் பிறரும் நூலுக்கும் கயிற்றுக்கும் பதிலாக உபயோகிக்கிறார்கள். குளம்புகளிலிருந்து செய்யப்படும் நீற்ருயில் என்ற எண்ணெய் மிருதுவாக்குவதற்கு மிகச் சிறந்த சாதனமாயுள்ளது. கொழுப்பிலிருந்து மெழுகு வத்திகள் செய்யப்படுகின்றன. இவ்வாருக மாட்டின் உடம்பின் எந்தப் பகுதியும் பயன்படுத்தப்படாமல் வீணுவதில்லை.

குடியானவர்கள் தங்கள் பிள்ளைகள் இறந்ததற்கும் அதிகமாக மாடுகள் இறந்ததற்குத் துக்கப்படுவதை, இதனை எழுதுபவர் மிருக வைத்திய இலாகா உத்தியோகஸ்தராயிருந்தபோது பார்த்திருக்கின்ருர். இப்படிப்பட்ட காட்சி மாடுகள் குடியானவர்களுக்கு எவ்வளவு உபகாரமாயிருக்கின்றன வென்பதைத் தடிகொண்டடித்துத் தெரிவித்தாற் போல மனத்துள் என்றும் மறவாதழுந்தும்படி வற்புறுத்தித் தெரிவிப்பதாம்.

மாடுகளால் ஆதிமனிதர் அடைந்த நன்மைகள் அடியில் வருவனவற்ருல் விளங்கும் :

தமிழ் மொழியில் மாடு என்ற சொல் செல்வம் என்று பொருள்படுவதுபோலவே பல பாஷைகளில் மாட்டைக் குறிக்கும் சொற்களுக்குச் செல்வம் என்ற பொருளும் இருத்தல் கவனிக்கத் தக்கது. இதன் காரணம், அதிபூர்வ காலத்திலிருந்து மனிதருக்கு மாடே செல்வமாயிருந்ததேயாம். அக்காலத்தில் அதிக மாடுகளுடையவர்கள் அதிகச் செல்வமுடையவர்களாகவும், குறைந்த மாடுகளுடையவர்கள் குறைந்த செல்வமுடையவர்களாகவும் மதிக்கப்பட்டிருந்தார்கள்.

மனிதர்கள் காட்டு மாட்டைப் பிடித்து அடக்கி வசப்படுத்திய காலமே நாகரிகம் துவங்கிய காலமென்றும், அதுவரையும் நிலேப்பிடமின்றி மிருகங்கள் போலத் திரிந்து கொண்டிருந்த மனிதர்களே தமக்கு அகப்பட்ட மாடுகள் தப்பியோடிவிடாமல் கட்டுப்பட்டுத் தங்கி நிற்கும் (தொழு) இடங்களேயும் அவைகளேத் தாங்கள் பக்கத்திலிருந்து காத்துக் கொண்டிருக்கும் (குடில்) இடங்களேயும் நிலவரமாக உபயோகிப்பராளுர்களென்றும் பசியை நீக்க வேட்டையாடும் அவசியமின்றித் தம்வசமிருந்த மாடுகளின் மாமிசத்தைப் புசித்தும் வாடை குளிர்களால் வருந்தாமலிருக்க அந்த மாடுகளின் தோலே உடுத்தும், சுமைகளேச் சுமத்தலும் இழுத்துக் கொண்டு போதலுமாகிய கட்டமான வேலேகளே அம் மாடுகளேச் செய்யச் செய்தும் வாழ்வார்களாளுர்களென்றும், இவ்வாருக நாகரீகத்திற்கு முதற் காரணம் மாடு என்றும் விஞ்ஞான சாஸ்திரிகள் விளம்புகின்ருர்கள்.

முன் இந்திய விவசாய விசாரணேக் கமிட்டித் தலேவராயிருந்து இந்தியாவெங்குஞ் சென்று, இந்தியாவின் பல நிலேமைகளேயும் தாமே நேரில் பார்த்தும் விசாரித்தும் தெரிந்துகொண்டு செய்த முதிர்ந்த ஆலோசனேயின் முடிவாக, இந்தியாவின் செல்வ முன்னேற்றத்துக்கு முதற்படி மாட்டின் முன்னேற்றமே யென்ற கொள்கையுடையவரும், இராசப் பிரதிநிதியாயிருந்தவருமான லின்லித்கோ பிரபு, தாம் இந்திய இராச்சியாதிகாரத்தை மேற்கொண்ட தொடக்கத்தில் மாடுகளே அபிவிருத்தி செய்தலே இந்தியாவின் முன்னேற்றத்

துக்கு முதன் முதற் செய்யவேண்டியதாகக் கருதித் தம் சொந்தச் செலவில் சில எருதுகளை விலைக்கு வாங்கிவிட்டு மற்றவர்களையும் அவ்வாறு செய்யும்படி தூண்டிவந்தா ரென்றால் மாட்டின் சிறப்பை வற்புறுத்த வேண்டுமோ?

இப்பொழுது இந்தியாவிலிருக்கின்ற உயர்சாதி மாடு களுக்குத் தாழ்வானவைகளாயிருந்த இங்கிலாந்து தேசத்து மாடுகளில் சிறந்தவைகளைத் தெரிந்தெடுத்து, அவைகளை ஆங்கிலக் கால்நடை அபிவிருத்தியாளர் ஏறக்குறைய இரண்டு தலைமுறைக் காலமாகச் சாஸ்திர முறையாக அபிவிருத்தி செய்த விடாமுயற்சியின் பயனாக, அம் மாடுகளிலே சிறந்த காளை ஆறு வயசாயிருந்தபோது 1 டன் 6 அந்தர் நிறை யுள்ளதா யிருந்ததும், சிறந்த பசு 338 நாளில் 3,001 காலன் பால் கொடுத்ததும் கால்நடைகள் வைத்திருப்பவர் யாவரும் கவனிக்கத் தக்கவை. (ஒரு டன் இரண்டாயிரத்து இருநூற்று நாற்பது ராத்தல்; இரண்டு வண்டிப் பாரம். ஒரு அந்தர் நூற்றுப் பன்னிரண்டு ராத்தல். ஒரு காலன் இரண்டரைப் பட்டணம் படி).

ஆங்கிலேய கால்நடைக்காரரை அடியொற்றி இந்திய மன்னர்களும், ஜமீன்தார்களும், பிரபுக்களும், பெருஞ் செல்வவான்களும், குடியானவர்கள் கூட்டுறவுச் சங்கங் களும், இடைவிடாமல் தொடுத்து ஒரு தலைமுறைக் கால மாவது கால்நடையை அபிவிருத்தி செய்வார்களானால், இந்தியக் கால்நடைகள் இங்கிலாந்தின் கால்நடைகளுக்குப் பிந்தாத சிறப்புடையனவா மென்பது மிகையாகாது.

### பயிற்சி

1. சுபாசுபம்—பிரித்து எழுது.
2. செய்கிறார்கள் - செய்வினை; செய்விக்கின்றார்கள் - பிறவினை. உண்கிறான்—இதைப் பிறவினையில் எழுது.

### கேள்விகள்

1. ‘நமது நாற்கால் நண்பர்கள்’ என்று கூறப்படுபவை எவை? ஏன்?
2. ‘இந்திய விவசாயத்துக்கு உயிர் நிலை மாடு’ என்பதை விளக்கு.
3. ஆதி மனிதரது செல்வ அளவு எவ்வாறு கணக்கிடப்பட்டு வந்தது?
4. ‘நாகரிகத்துக்கு முதற் காரணம் மாடு’ என்று கூறுவது ஏன்?

# 3. தமிழ்த் தாயின் முறையீடு

ரா. பி. சேதுப்பிள்ளை, பி.ஏ., பி.எல்.

தமிழ்மொழி வழங்கும் தென்னாடு தெய்வத் திருநாடென்று போற்றத்தக்கதாகும்; ஆன்றோர் வாழும் நாடென்று அறிந்து வழுத்தத் தக்கதாகும். "பழமறைகள் முறையிடப் பைந் தமிழ்ப் பின்சென்ற" பெருமாள், வட சொற்கும் தென் சொற்கும் வரம்பாய் அமைந்த வேங்கட மலையில் நின்று அருந்தமிழைக் காக்கின்றார். நீலத்திரைக் கடலோரத்தில் நின்று நித்தம் தவஞ் செய்யும் கன்னித் தெய்வம் கருங்கடலைக் கையமர்த்திக் காவல் புரிகின்றாள். இன்னும் நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்த முத்தமிழ் முனிவர் புகழ் தீத்த பொதிய மாமலையில் அமர்ந்து தமிழகத்தைக் கண்ணினைக் காக்கும் இமைபோற் காத்தருள்கின்றார். இங்ஙனம் வடபால் நீலமேனி நெடியோனும், தென்பால் கன்னித் தெய்வமும், குடபால் அருந்தவ முனிவரும், கருத்துற நோக்கிக் காவல் புரிதலால் செந்தமிழ் நாடு தெய்வக் காவலில் அமைந்த திரு நாடாகப் பாரதியார் உள்ளத்தில் தோன்றுகின்றது.

இத்தகைய திருநாட்டில் வளர்ந்த தமிழ் மொழியின் முற் காலப் பெருமையையும், பிற்காலச் சிறுமையையும் தமிழ் மக்களுக் குணர்த்தக் கருதிய பாரதியார், தமிழ்த்தாய் முறை யிடும் பான்மையில் உருக்கமாகப் பாடியுள்ளார்.

தலையிலணிந்த சூளாமணி சரிய இடையிலணிந்த மணி மேகலை தளர, இணையடிச் சிலம்புகள் புலம்ப, கண்கலங்கி நிற்கும் தமிழன்னை தன் தகைசான்ற மக்களை நோக்கி, 'என் ஆருயிர் மக்காள்! ஆதி சிவனருளால் இந்நானிலத்தில் தோன்றினேன்; முத்தமிழறிந்த முனிவரருளால் திருந்தி னேன்; நற்றமிழ் மன்னரது செல்வச் சிறுமியாய்ச் செழித்து வளர்ந்தேன்; அறிவறிந்த மக்கள் ஆக்கியளித்த காவியக் கலனணிந்து விளங்கினேன்; இடைக்காலத்தில் பல நல் லணிகளைக் கால மென்னும் கள்வனிடம் பறி கொடுத்தேன்; இன்று வறுமையுற்று வாடுகின்றேன். பசையற்ற மாக்கள் பேசும் வசை மொழி என் செவியினைச் சுடுகின்றது; உள்ளத்தை அறுக்கின்றது. புத்தம் புதிய கலைகள் மேலை

நாடுகளில் மெத்த வளர்கின்றனவாம். அக்கலைகள் ஐம்பெரும் பூதங்களின் திறத்தினை நுணுக்கமாக உணர்த்துகின்றனவாம்; அம்மேன்மைக் கலைகள் என்பால் இல்லையாம். மேலை நாட்டு மொழிகளே இனி மேலோங்கி வளர்ந்து வாழுமாம். யான் மெல்லத் தளர்ந்து மேன்மையிழந்து அழிந்து ஒழிவேனும்;' இவ்வாறு மதியிலார் உரைக்கும் மாற்றம் அறியீரோ? பேதையர் கூறும் புன்மொழி உணரீரோ? இவ்வசை மொழி என்பாலமைய நீர் வாளா இருத்தலாகுமோ? எட்டுத் திசையும் சென்று கிட்டிய கலைகள் யாவும் கொணர்வீர். புத்தணி புனைந்து என் நலத்தினைப் புதுக்குவீர். நல்ல கலைப்பொருள் அனைத்தையும் வாரிக் கொணர்ந்து நல்குவீர். ஆதிபகவான் அருள் வலியாலும், இன்று சார்ந்த புலவரது தவவலியாலும் அப்பேதையர் உரைத்த பெரும்பழி ஒழியும்; புகழ் ஏறிப் புவிமிசை என்றுமிருப்பேன்' என்று தன் ஆற்றுமையை அறிவித்துத் தமிழ் மக்களைத் தட்டி எழுப்புகின்றாள்.

இங்ஙனம் தமிழ்த்தாயின் வாய்மொழியாகப் பாரதியார் எழுதியுள்ள பாட்டின் கருத்து அறிந்து போற்றுதற்குரியதாகும். மேலை நாடுகளில் நாள்தோறும் நலமுற்றோங்கி வளரும் நவீனக் கலைகள் தமிழ் மொழியில் இல்லையென்பது உண்மையே. அக்குறைபாடறிந்து தமிழன்னை வருத்தமுற்றாளேனும் சீற்றமுற்றாளல்லள். மேலை நாட்டுக் கலைகளிலமைந்த அரும்பொருள்களை எடுத்துரைக்கும் திறம் தமிழ் மொழிக்கில்லை என்றும், அத்திறமின்மையால் இனி மெல்லத் தமிழ்மொழி இறந்துபடுமென்றும் விரிவிலா அறிவினர் கூறும் வசைமொழி கேட்டுத் தமிழ்த்தாய் வெகுள்கின்றாள். அருந்தமிழின் ஆற்றலறிந்தவர் எவரும் அவ்வாறு உரை செய்யாராதலால் 'கூறத்தகாதவன் கூறினன்' என்றான்.

...... ........

மெல்லத் தமிழினிச் சாகும்—அந்த
மேற்கு மொழிகள் புவிமிசை யோங்கும்.

* * * * * *

என்றந்தப் பேதை உரைத்தான்—ஆ!
இந்த வசையெனக் கெய்திட லாமோ!

...... ........

தமிழ் மொழியின் நீர்மை உணராத முழுமகனே அவ்வாறு உரைக்கத் துணிவதனால் 'அந்தப் பேதை உரைத்தான்' என்று அன்னை அவனைச்சுட்டி இகழ்ந்துரைத்தாள். ஆயினும் அத்தீய வெஞ்சொல் அன்னையின் உள்ளத்தில் ஊடுருவிப் பாய்கின்றது; வாள்போல் அழுந்தி நின்று அறுக்கின்றது. தகவிலார் கூறும் வசையினைத் தீர்த்து இசையினை நல்குமாறு அருந்தமிழ் மக்களை அன்னை வருந்தி அழைக்கின்றாள்.

ஆங்கிலம் முதலிய மேலைநாட்டு மொழிகளை யறிந்த மாணவர் கடமையைப் பாரதியார் பண்புறக் கூறுகின்றார். பிறநாட்டு நல்லறிஞர் இயற்றிய புத்தம் புதிய கலைநூல்களைத் தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும். அக்கலைகளிலமைந்த புதிய கருத்துக்களை உணர்த்தும் பெற்றி வாய்ந்த பழந்தமிழ்ச் சொற்கள் பண்டைப்பனுவலிற்பதிந்து கிடக்குமாயின் அவற்றைப் புதிப்பித்தல் வேண்டும். நல்ல நூல்களை மொழிபெயர்த்தும், நவீன நூல்களை இயற்றியும் தமிழ் மொழியின் கலைச் செல்வத்தைப் பெருக்கவேண்டும். இங்ஙனம் விரைந்து பணிசெய்ய முற்படாது தமிழ் மொழியின் பழம் பெருமை பேசி மகிழ்தலாற் பயனில்லை. "மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமையில்லை. 'கண்ணுதற் பெருங்கடவுளும் கழக மோடமர்ந்து, 'பண்ணுறத் தெரிந்தாய்ந்த இப்பசுந் தமிழ்' என்று பாராட்டுவதனால் தமிழ்மொழி பரவிவிட மாட்டாது. 'என்று முளதென்றமிழ்' என்று இறுமாந்து பேசுதலால் தமிழ் மொழி ஏற்றமுற மாட்டாது. 'சங்கத்திருப்பிலே யிருந்து வையை ஏட்டிலே தவழ்ந்த பேதை' என்று வாய்ப்பறை சாற்றுவதால் தமிழ் மொழி வளர்ந்துவிட மாட்டாது. தாய் மொழித் தொண்டு செய்யக் கருதும் தகைசான்ற அறிஞர் பழம் பெருமை பேசும் பழக்கத்தை விட்டொழித்து, தமிழ்மொழியின் குறைகளை அறிந்து, பணி செய்ய முற்படவேண்டும். தமிழ் நாட்டில் அமைந்த பல்கலைக் கழகங்கள் மேலை நாட்டுக் கலைகளை மொழி பெயர்க்கும் விழுமிய பணியை மேற்கொள்ளவேண்டும். அரசியலார் அம்முயற்சியை ஆதரிக்க வேண்டும். தமிழன்னை மீண்டும் தலைசிறந்து விளங்கும்

காலம் வருமோவென்று ஏங்கி தளர்பவர் இந்நாளிற் பலராவர். இங்ஙனம் தமிழ்ச் சேய்களிற் சிலர் மயங்கித் தளர்ந்தாலும் தமிழ்த்தாய் மனம் தளரவில்லை. உரனிழந்த மக்கள் மனத்தைத் தேற்றுகின்ருள். எத்திசையும் புகழ் மணக்க மீண்டும் தான் ஏற்றமுறுங்காலம் அண்மையில் வருமென்று அறிவிக்கின்ருள். ஆதிசிவன் அருளாலும் அறிவறிந்த என்மக்கள் ஆர்வத்தாலும் வீறுபெற்று விளங்குவேன் என்று தமிழன்னை வாயிலாகப் பாரதியார் கூறும் வாய்மொழி கார்மேகத்தினிடையே இலங்கும் கதிரொளியாகும்.

## பயிற்சி

1. பொருள் கூறு :—ஆன்ருேர், வழுத்த, மறை, வரம்பு, சூளாமணி, மணிமேகலை, கலன், மாற்றம், சீற்றம், நீர்மை, பெற்றி, பனுவல்.

2. திரை, நேமி—பல பொருள் கூறு.

3. வலி, வளி ; பலி, பழி ; ஒலி, ஒளி ; வால், வாள்; வாழ்—பொருள் வேறுபாடு என்ன ?

4. இகழ்—எதிர்ப்பதம் என்ன? இதனடியாக உண்டாகும் பெயர்ச் சொல் யாது ?

## கேள்விகள்

1. செந்தமிழ் நாடு தெய்வக் காவலில் அமைந்த திருநாடாகக் கூறப் பட்டுள்ளது ஏன் ?

2. தமிழன்னை தான் எவ்விதச் சிறப்புக்களுடன் முன் வாழ்ந்ததாகக் கூறுகிருள் ?

3. பேதையர் கூறும் எப் புன்மொழிகளைக் கேட்டுத் தமிழன்னை வருந்துகின்ருள் ?

4. தமிழ் மொழியிலுள்ள குறைபாடு யாது ?

5. தமிழ் மொழியின் கலைச் செல்வத்தைப் பெருக்க ஆங்கிலம் முதலிய மேல்நாட்டு மொழிகளை யறிந்த மாணவர் செய்ய வேண்டுவது என்ன ? மற்றும் யார் யார் என்னென்ன செய்ய வேண்டும் ?

அருஞ்சொற்பொருள் :—வேங்கடமலை-திருப்பதி மலை, முத்தமிழ்-இயல், இசை, நாடகமென்னும் மூன்றுமாம். குடக்கு - மேற்கு, குணக்கு - கிழக்கு, நானிலம் - குறிஞ்சி, நெய்தல், மருதம், முல்லை. இவை முறையே மலைநாடும், கடலையடுத்த பிரதேசமும், வயற்பிரதேசமும், நாடுமாம். ஐம்பெரும்பூதங்கள் - பஞ்சபூதங்கள்.

# 4. மூர்க்கனது மூடச் செய்கை

வீரமா முனிவர்

குருவானவர் ஒரு நாள் சீஷர்களைத் தமது சந்நிதானத்திற் கூட்டி வைத்துக்கொண்டு ஞான விஷயத்தைப் பற்றிப் பேசத் தொடங்கினர் :—

"தம்பிமாரே! வரவர இந்தப் பிரபஞ்ச வாழ்வைப் பார்க்குமிடத்தில் முயற் கொம்பு போலவும் கானற் சலம் போலவும் சூனியமாயிருக்கிறதென்று காண்கிறேன். தீமை கலவாத நன்மையும்; கசப்புக் கலவாத இனிப்பும்; துக்கங் கலவாத சந்தோஷமும் இங்கே கிடைக்கமாட்டா. ஐயோ விலை கொடுத்து வாங்காமல் உபகாரமாய்க் குதிரை வந்ததென்று நாம் மிகவும் மகிழ்ந்தோமல்லவோ? அன்றுதானே இந்தப் பாக்கியத்துடனே தொடர்ந்துவந்த கிலேசங்களையும் கண்டீர்களே; ஒரு துளித்தேனை நக்குகிறதற்காக அத்தனை கசப்பும் விழுங்கவேண்டுமோ? நெல்லுக்கும் உமி யிருக்கிறது. எவ்வகைக் கனிகளுக்கும் தோலும் கொட்டையுமுண்டு. இவையெல்லாம் இயல்புதான்; ஆகிலும் நான் ஒரு தினத்தில் அனுபவித்த பொல்லாப்போ மிகவும் அதிகம். குதிரை ஏறுகிறதற்கு எனக்கு அதிர்ஷ்டமில்லையாக்கும்! விதிக் கெதிராய் நடக்க என்னுற் கூடுமோ? கூடாதே! ஆதலால் இனி அந்தக் குதிரையை அதுவந்த இடத்திற்குத் திருப்பி அனுப்பிவிடுகிறதே காரியம் 'ஆகாது ஆகாது' என்ருர். அதற்கு சிஷ்யர்களெல்லாம் 'ஆகா' அப்படிச் சொல்ல வேண்டாமையா அஃதென்னை நீர் கொண்ட குதிரையோ நாங்கள் தேடின குதிரையோ இரண்டில் ஒன்றுமன்றே; தெய்வாதீனமாய்த் தாளுகவந்த குதிரையன்ருே? நாம் இதைத் திரும்ப அனுப்பினுல் திருவுள்ளத்துக்கு மறுவுளமாக நடக்கிறதாகும். ஆதலால் இஃது அதிக தோஷமாய் முடியாதா? குதிரையைப் பிடித்திருந்த தோஷத்தை அந்த வள்ளுவன் கழித்த பிறகு அஞ்சத்தக்கது என்னவிருக்கின்றது? 'ஒன்றுமில்லை' என்ருர்கள்.

இவைகளுடனே இன்னமும் பல நியாயங்களை அவர்கள் விரிவாகச் சொல்ல, குருவும் மனந்தேறி 'நீங்கள் சொன்ன

படி யாகட்டும்' என்ருர். 'ஆனுலும் அன்று வந்த மோசம் போல் இனி வராதபடிக்கு, இராமாறு குதிரையை மேயவிட வொண்ணுது வீட்டிலேதானே கட்டுவிக்கவேண்டும். அதற் கான இடமுங்காணேம்' என்ருர். அப்போது மூர்க்கனென் பவன் 'இதற்காக ஆலோசனை என்ன? இந்த க்ஷணத்திலே நான்போய் ஆலங்கொம்புகளை வெட்டிக்கொண்டு வந்து நம்முடைய மடத்துக்கு ஒரு மூலையிலே நேர்த்தியான லாய மொன்று பண்ணிப் பதித்ததுபோலக் காட்டுகிறேன்' என்ருன்.

என்றவுடன் புறப்பட்டுப் போய் வழியோரத்திலிருந்த பிரமாண்டமான கொடியாலின் மேலேறி நின்று செழிப்பா யுயர்ந்து வளர்ந்து ஒழுங்காயிருந்த கிளையைக் கோடாரி யினுல் வெட்டத் தொடங்கினுன். ஆனுலும் அவன் நுனிப் பக்கத்திலிருந்து அடிப்பக்கத்தில் வெட்டுகிறதைக் கண்டு வழிப்போக்கனுக வந்த ஒரு பிராமணன் தம்பீ, அப்படி நிற்கவேண்டாம். கிளையோடே நீயும் விழப்போகிருய் என்ருன். அதற்கவன் "இந்தத் துர்ச்சகுனமான வார்த்தையை எனக்கு நீ சொல்ல வந்தாயோ?" என்று அரையிற் செருகி வைத்திருந்த வெட்டரிவாளைப் பிராமணன் மேல் எறிந்தான். அவனும் "இந்த முரடன் பட்டறியட்டும்" என்று விலகித் தப்பிப் போய்விட்டான். மூர்க்கனேவென்ருல் முன்னின்றபடி பின்னும் நின்று வெட்டினதினுல் அரைவாசிக் கதிகமாக மரம் அறுப்புண்டு மள மள வென்று முறிந்து விழத் தானும் அதனேடே விழுந்தான். "அம்மம்மா இங்கு வந்த அந்தப் பிராமணன் பிரபலமான சாஸ்திரி; மகா புரோகிதன். அவன் சொன்னபடிக்கு ஆயிற்று" என்று கடுகவெழுந்து பிராமணனைப் பின்பற்றிக் கூவிக்கொண் டோடினுன். சடுதியில் இவன் கிட்ட ஓடிவருவதைப் பிராமணன் கண்டு 'இந்த புத்தியில்லாத மிருகம் என்ன செய்யுமோ என்று அஞ்சி நின்ருன். மூர்க்கன் வந்து ஒரு கும்பிடு போட்டு "ஐயா நீர் பிரபல சாஸ்திரி. இன்னுமொரு ஆருடம் எனக்குச் சொல்லவேண்டும். நான் பரமார்த்த குருவின் சீஷனுக்கும் அவர்மேல் எனக்கு அதிக பக்ஷ முண்டாயிருக்கின்றது; அவருக்குத் தளர்ந்த வயதா

யிருக்கிறபடியினுலே அவர் கொஞ்ச நாளுக்குட் சாவா ரென்று நான் பயந்திருக்கிறேன். இப்பொழுது நீர் எனக் காறுதலாக அவருக்கு முடிவுகாலம் எப்பொழுது வரும்? அதற்குமுன் காணப்படும் அடையாளமென்ன? சற்றே தயவு செய்து சொல்லவேண்டும்'' என்ருன். பிராமணன் தப்பிக் கொள்ளப் பலவித போக்குச் சொல்லியும் அவன் கேளாதத னுலும் விடாததனுலும் கடைசியிலே 'ஆசன சீதம் ஜீவன் நாசம்' என்ருன். 'இவன் அஃதென்னே ஐயா! அதற்கு அர்த்தஞ் சொல்ல வேண்டும் என்று அலட்டிக் கேட்க, 'உன் குருவுக்கு இருப்பிடம் என்றைக்குக் குளிர்ந்து காண் கிறதோ அஃது அன்றைக்குச் சாவு கிட்டினதென்பதற்கு அடையாளம் என்று அறிந்துகொள்' என்பதாகப் பிராமணன் சொன்னுன்.

மூர்க்கனும் நமஸ்காரம் செய்துவிட்டுப் போய், வெட்டின கிளையை மடத்துக் கிழுத்துக்கொண்டு வந்து நடந்த செய்தி யெல்லாம் விவரமாய்ச் சொன்னுன். குரு இதைக்கேட்டு மிகவும் விசாரப்பட்டு ஜோசியஞ் சொன்ன பிராமணன் மகா சாஸ்திரி யல்லவென்று சொல்லக்கூடாது. உனக்கவன் சொன்னபடியெல்லாம் உடனே பிரத்தியக்ஷமாயிற்றே; ஆதலால் எனக்கு அவன் சொல்லியனுப்பியு ஜோசியமுந் தப்பமாட்டாது. 'ஆசன சீதம் ஜீவன் நாசம்' என்பது நல்ல யுக்தியும் அனுபவமுமான வசனந்தான்; இனி எச்சரிக்கையாக இருக்கவேண்டுயாக்கும். ஒருக்காலும் கால் சுத்தி செய்யக்கூடாது. அதன்மேல் ஆண்டவன் விட்டபடி யாகிறது என்ருர்.

பயிற்சி

1. கனி—இருபொருள் கூறு.
2. 'கிளேயோடே நீயும் விழப்போகிருய்'—சந்தர்ப்பம் கூறு.

கேள்விகள்

1. மூர்க்கனது மூடச் செய்கை யாது? அதன் பலன் என்ன?
2. மூர்க்கன் வழிப்போக்கனுக வந்த பிராமணனே ஒரு பிரபலமான சாஸ்திரி என்று மதித்தது ஏன்?
3. மூர்க்கன் பிராமணனிடம் கேட்ட ஆருடம் என்ன? அதற்கு அப் பிராமணன் கூறியது என்ன?
4. பிராமணன் கூறிய ஜோசியத்தை அறிந்துகொண்ட குரு என்ன தீர்மானம் செய்துகொண்டார்?

# 5. ஜெரோசப்பா நீர்வீழ்ச்சி

எஸ். தியாகராஜன், பி.ஏ.

கோடைக் காலத்து விடுமுறை நாட்களிலும் கிறிஸ்துமஸ் விடுமுறை நாட்களிலும் உல்லாசப் பிரயாணங்கள் செய்து நாட்டில் ஆங்காங்கேயுள்ள விசேஷமான இயற்கைக் காட்சிகளைக் கண்டு களித்தும் சரித்திர சம்பந்தப்பட்டனவும் புராதனமான சிற்ப வேலைப்பாடமைந்தனவுமான கோயில்களைப் பார்த்தும் பெரிய பெரிய அணைக்கட்டுகள், தொழிற்சாலைகள், மிருகக் காட்சிச்சாலைகள் முதலிய பலவற்றைக் கண்டும் வருவது என்ற பழக்கத்தை நம் இந்திய நாட்டில் பலர் மேற்கொண்டிருக்கிறார்கள். அயல்நாடுகளில் இந்தத் துறையில் மிக்க ஊக்கத்தைப்பெற்றுப் பிரயாணம் செய்து அங்கங்கே கண்ட விஷயங்களைச் சுவைபெற எழுதும் அறிஞர்கள் பலர் உண்டு. மைசூர் ராஜ்யத்தில் அம்மாதிரியான பார்க்கத்தக்க இடங்கள் பல இருக்கின்றன. அவற்றில் மிகவும் முக்கியமானவை **கண்ணம்பாடி** அணையும், அதனைச் சார்ந்துள்ள 'பிருந்தாவனம்' என்னும் பூஞ்சோலையும், சோமநாதபுரம், பேலூர், ஹளேபீட் இவைகளிலுள்ள சிற்ப வேலைப்பாடமைந்த பண்டைக் காலத்துக் கோயில்களும், சரவண பௌகோளாவிலுள்ள ஒரே கல்லில் செதுக்கிய 60 அடி உயரமுள்ள கோமளேசுவரர் சிலையும், பத்திராவதியிலுள்ள இரும்புத் தொழிற்சாலையும், ஷிமோகா ஜில்லாவிலுள்ள **ஜெரோசப்பா நீர்வீழ்ச்சியுமாம்.**

இயற்கை அன்னையின் கம்பீரத் தோற்றத்தையும் பயங்கர உணர்ச்சியுடன் கூடிய அழகையும் கண்டு ஆனந்திக்க வேண்டுமாயின் நீங்கள் இன்றே இந்த ஜோக் அல்லது ஜெரோசப்பா நீர்வீழ்ச்சியைப் போய்ப் பாருங்கள். இதைவிட உலகத்திலேயே மிகப் பெரியதும் அழகு வாய்ந்ததுமான நீர்வீழ்ச்சி கிடையாதென்று சொல்லுகிறார்கள். இந்த நீர்வீழ்ச்சி மைசூர் ராஜ்யத்திற்கும் பம்பாய் ராஜ்யத்திற்கும் எல்லையில் இருக்கிறது. இது மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்த ஷிமோகா ஜில்லாவிலுள்ள சாகர் என்னும் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து சுமார் 30 மைல் தூரந்தான். இந்த

ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ரயில்வே மோட்டார் பஸ்கள் நீர்வீழ்ச்சியின் அடிவாரத்திற்குப் பிரயாணிகளைச் சௌகரியமாய் ஏற்றிச் செல்ல ஏற்பாடு செய்திருக்கின்றனர். அப்படிப் போகும்போது வழியில் சாராவதி என்னும் நதியைக் கடந்துதான் செல்லவேண்டும். ஆனால் பிரயாணிகள் இறங்க வேண்டிய அவசியமில்லை. அவர்கள் ஏறிச்செல்லும் பஸ்



ஜெரோசப்பா நீர்வீழ்ச்சி

ஒன்றுக்கொன்று இணைக்கப்பட்டுள்ள படகுகளில் ஏற்றி அக்கரைக்குக் கொண்டுபோகப்படுகிறது. இந்த நதி சுமார் 250 கஜம் அகலமுடையதாய், ஆனால் அதிக ஆழம் இல்லாததாய் இருக்கிறது. பார்வைக்கு இந்த நதி சிறுமையும் சிறந்த மனப்பெருமையுமுள்ள ஒரு பெரிய ஆற்றின்

தோற்றத்தை ஒத்திருக்கிறது. சுற்றிலும் எங்கும் அமைதி குடிகொண்டிருக்கிறது. மாலை வேளையில் மலைச்சரிவில் இறங்கும் சூரியனது செம்பொற் கிரணங்கள் நதியின் சலன மற்றுச் செல்லும் நீர் பரப்பிலும், நடு நடுவே கும்பல் கும்பலா யுள்ள கற்பாறைகளின் மேலும் வீழ்ந்து எங்கும் பொன்மய மான ஒளியை வீசுகின்றன. அருவியில் மோதிவரும் மலைக் காற்றானது நம் உணர்வைக் குளிர்விக்கிறது.



படகில் ஏற்றிய பஸ்

நதியைக் கடந்தபின் நீர்வீழ்ச்சிக்குச் செல்லும் பாதை நீலகிரி மலையில் செல்லும் இருப்புப்பாதை போல் வளைந்து வளைந்து செல்கிறது. சுற்றிலும் கண்ணுக்கு இனிய காட்சி களே. பாதையின் இரு புறங்களிலும் இயற்கை மணம் தவழும் மலைச்சாரல்கள் கட்புலனாகின்றன. ஒரு புறம் நீண்டு உயர்ந்த பெருங்குன்றுகள் கம்பீரமாக நிமிர்ந்து நிற்கின்றன. மறுபுறம் வானளாவி ஓங்கி வளர்ந்த மரங்களும், தெவிட்டாத

இயற்கை இன்பம் பொழியும் பசுஞ்சோலைகளும், அவைகளை நோக்கி ரீங்காரத்துடன் பறந்து செல்லும் நீல நிற வண்டு களும், குட்டிகளை மடியில் அணைத்துக் கிளைகளுக்குக் கிளை தாவிச் செல்லும் குரங்குகளும் அளிக்கும் காட்சி நேரில் பார்த்தவர்க்கன்றி மற்றவர்க்குச் சித்தரிப்பது அரிது.

நாகரீக வாழ்க்கையின் ஆடம்பரங்களைப் பார்க்கிலும், கை புனைந்தியற்றாத இயற்கைப் பேரழகு வாய்ந்த மலை வாழ்க்கை அதிக அளவில் இன்பமளிக்குமென்று தோன்று கிறது. இம்மலைச்சாரல்களில் கிழங்கு கல்லித்தேன் எடுத்து, மலைவளம் பாடியும் நடித்தும் வாழ்வு நடத்தும் குன்றவர் நிலையும், மலை அடிவாரத்துச் சமவெளிகளை உழுது, கம்பும் தினையும் பயிர் செய்து, ஆடு, மாடு, எருமை, கோழி வளர்த் துச் சுகஜீவனம் செய்யும் குடியானவர்கள் நிலையும், பெருஞ் செல்வத்தையும் துச்சமாகக் காட்டுகின்றன. இவர்களது வாழ்க்கை பேரின்ப வாழ்க்கையாகவே பரிணமிக்கிறது.

நீர்வீழ்ச்சியின் சமீபத்தில் வரவர, அலைகளை எழுப்பிக் கொந்தளித்துப் பொங்கும் கடலோசை போன்ற ஒரு பேரிரைச்சல் நம் செவிகளில் விழுகிறது. இந்தச் சப்தம் நீர்வீழ்ச்சியினின்று வருவது. பஸ்ஸிலிருந்து இறங்கி அதிக தூரம் செல்லவேண்டியதில்லை. ஆங்காங்கு அமைக்கப்பட் டுள்ள மேடைகளின்மீது நின்று எதிரில் நோக்கினால், மலை உச்சியில் சுமார் 880 அடி உயரத்திலிருந்து, தனித்தனியே நான்கு அருவிகளாகப் பிரிந்து, 'ஹோ' என்ற பேரிரைச்ச லோடு பளிங்கு மழைபோல் விழும் துளிகளோடு நீர்வீழ்ச்சி புலனாகிறது. இந்நான்கு வீழ்ச்சிகளுக்கும் முறையே 'ராஜா' (Raja) 'ராணி' (Rani) 'ரோரர்' (Roarer) 'ராக்கெட்' (Rocket) என்ற பெயர் இட்டிருக்கின்றனர்.

கீழே குனிந்து பாறைகளுக்கிடையே விழும் வீழ்ச்சியை நோக்கினால் 'பொங்குமாகடல்' போல் தோன்றும். அது விழும் வேகத்தில் வெளிக்கிளம்பும் நீர்த்திவலைகளின் மேலும் வெண்மை நுரையின் மேலும் மாலைச் சூரியனின் பொன்னிறக்கிரணங்கள் படும்போது விதவிதமான வர்ணங் களுடன் கண்ணைக் கவரும் வான விற்கள் ஏற்படுவது ஓர் அற்புதத் தோற்றமே. அமைதியும், அடக்கமும், சாந்தமும்

கொண்டு பாறைகளுக்கு இடையே ஊர்ந்து வந்த இந்நதிக்குத் திடீரென்று கோர அரக்கனின் ஸ்வரூபமும், காளியின் உக்கிரமும் எங்கிருந்து வந்தன என ஆச்சரியப்படுகிறோம். மலையின் மடுவில் வீழ்ந்ததும் சர்வேசுவரனின் சடையில் வீழ்ந்த கங்கையைப்போல் பழைய சாந்தமும் அமைதியும் கொண்டு பாறைகளினிடையே செல்கின்றது. இவையெல்லாம் இயற்கை அன்னையின் லீலா விநோதமன்றோ?

இயற்கை அழகு நிறைந்துள்ள இடங்களிலெல்லாம் இறையொளி கண்டுள்ளார் நம் முன்னோர். இந்தக் காட்சியைக் கண்டு கண்கொட்டாமல், நம்மையும் மறந்துநிற்கும் சில விநாடிகளில் உலக மகா யுத்தமும் பேயரக்கனின் பயங்கரப் போரும், சர்வாதிகாரிகளின் கொடூரமும், 'ஜனநாயகம்' என்ற பெயரால் நடக்கும் அநீதிகளும், நாம் விட்டு வந்த மனைவிமக்கள், உற்றார் உறவினர் நினைவும் எல்லாம் நம்மை விட்டு வெகு தொலைவில் போய்விடுகின்றன. இதனை இணையிலா அழகு வாய்ந்து கண்ணையும் கருத்தையும் ஒருங்கே குளிர்விக்கும் இன்ப நிலையம் என்று கூறினால் அது மிகையாகாது.

## பயிற்சி

1. இயற்கை, புராதனம், இன்பம், அரிது, நீதி—எதிர்ப்பதம் எழுது.

2. ஜெரோசப்பா நீர்வீழ்ச்சி மிகப் பெரியது.—பெரிது என்பது பண்படியாகப் பிறந்த குறிப்பு வினை முற்று. இது போன்ற வேறு நான்கு குறிப்பு வினைமுற்றுள்ள வாக்கியங்கள் எழுது.

3. மலைக்காற்றானது நமது உணர்வைக் குளிர்விக்கிறது. குளிர்விக்கிறது—என்ன வகையான வினைச்சொல்?

4. ஒருபுறம் நீண்டு உயர்ந்த பெருங்குன்றுகள் கம்பீரமாக நிமிர்ந்து நிற்கின்றன.—இந்த வாக்கியத்திலுள்ள பெயரெச்சம், வினையெச்சம் இவைகளைக் குறிப்பிடு.

5. வாழ்வு—'வு' விகுதிபெற்ற தொழிற்பெயர். இதுபோன்ற வேறு நான்கு தொழிற் பெயர் கூறு.

## கட்டுரை எழுதுதல்

1. நீ செய்துள்ள ஒரு பிரயாணத்தைப்பற்றி விவரித்து எழுது.

2. நீர்வீழ்ச்சியைப்பற்றி ஒரு கட்டுரை எழுது.

## கேள்விகள்

1. மைசூர் ராஜ்யத்தில் பார்க்கத் தக்க இடங்கள் யாவை?

2. சாராவதி நதி எவ்விதமான தோற்றத்தை அளிக்கின்றது?

3. ஜெரோசப்பா நீர்வீழ்ச்சியுள்ள மலைச்சாரல்களிலும், மலை அடிவாரத்துச் சமவெளிகளிலுமுள்ள மக்களின் வாழ்க்கை எவ்விதமானது?

4. ஜெரோசப்பா நீர்வீழ்ச்சியின் தோற்றத்தை வர்ணி.

5. இயற்கை அழகு நிறைந்துள்ள இடங்களைக் காண்பதால் ஏற்படும் அனுகூலம் யாது?

# 6. ஒலி பரப்பும் நிலையங்கள்

எம். வி. ஜான். எம். ஏ. எஸ்ஸி.—வித்வான் தா. மாசில்லாமணி

இந்தியாவில் முதன் முறையாக 1927வரு ஜூலை மாதம் 23உ ஒலி பரப்புதல் ஆரம்பமாயிற்று. அப்போது வைசிராய் இர்வின் பிரபு, பம்பாய் ஒலிபரப்பு நிலையத்தைத் திறந்து வைத்தார். அந்த ஆண்டிலேதான் கல்கத்தாவிலும் ஒரு நிலையம் ஸ்தாபித்தனர். இவ்விரண்டு நிலையங்களும் இந்திய ஒலி பரப்பிக் கம்பெனியின் ஆதரவில் வேலை செய்தன. இந்தக் கம்பெனி ஏற்படுவதற்கு முன்னே, சிற்சில நிலையங்கள் இங்குமங்கும் வேலைசெய்து கொண்டிருந்தன. அனுமதிக் கட்டணத்தின் ஒரு பகுதியைத் தபால் இலாகாவில் வசூல் செய்து, இந்நிலையங்களுக்குக் கொடுத்தனர். கல்கத்தாவிலும் பம்பாயிலும் அவ்வந் நகரங்களின் தேவைகளுக்காக, மிகவும் குறைந்த சக்தியாகிய ஒன்றரைக் கிலோவாட் சக்தியில் நிலையங்கள் ஆரம்பமாயின. இவைகளின் எல்லை முப்பது மைல்தான்.

1934-ம் ஆண்டு இந்தியாவில் ஒலி பரப்பும் சாதன சாத்தியங்களைக் குறித்து விசாரணை செய்து ஒரு திட்டம் சமர்ப்பிக்குமாறு சர்க்கார் கிர்க் என்னும் ஆகாயவாணி நிபுணர் ஒருவரை நியமித்தனர். இந்தத் திட்டத்தின்படி, பில்டன் என்பவர் அதில் இந்திய ஆகாயவாணிக்காரியகர்த்தராகவும், கையிட் என்பவர் தலைமை யந்திர நிபுணராகவும் நியமனம் பெற்றனர். இந்த இலாகாவிற்கு நாற்பது இலட்சம் ரூபாய் அனுமதிக்கப்பட்டது. இவர்களது சிபார்சின் பேரில் கல்கத்தா, பம்பாய், டில்லி நகரங்களில் குற்றலைப் பிரயோகமுள்ள பத்துக் கிலோவாட் நிலையங்கள் அனுமதிக்கப்பட்டன. மேலும் பத்துப் பட்டணங்களில் குறைந்த சக்தியில் நடுத்தர அலையினால் ஒலி பரப்பும் நிலையங்கள் அனுமதிக்கப்பட்டன. அன்றியும் டாக்கா, லாகூர், இலக்குமணபுரி, சென்னை, திரிச்சிராப்பள்ளி ஆகிய பட்டணங்களில் நடுத்தர அலைப் பிரயோகமுள்ள ஐந்து கிலோவாட் நிலையங்கள் அனுமதிக்கப்பட்டன. ஐதராபாத்தில் ஏற்கனவே ஒரு நிலையம் ஸ்தாபனமாகி யிருக்கின்றது.

பரோடா, திருவிதாங்கூர், கொச்சி சமஸ்தானங்களிலும் ஒலி பரப்பு நிலையங்கள் ஸ்தாபிப்பதற்குச் சகல ஏற்பாடுகளும் செய்து ஸ்தாபித்துள்ளனர்.

இந்திய ஒலிபரப்பு நிலையங்களிற் பற்பல பாஷைகள் உபயோகிக்கப்படுகின்றன. ஒவ்வொரு மாகாணத்திலும் பிரதான பாஷைகளில் ஒலிபரப்புகின்றனர். இந்நாட்டின் கல்வி விஷயங்களில் விசேஷ நிகழ்ச்சி முறைகள் உண்டு. கிராமப் புனருத்தாரண வேலை விஷயங்களிலும் விசேஷ நிகழ்ச்சி முறைகள் சித்தஞ்செய்ய முயலுகின்றனர். கிராமங்களில் ஒலிவாங்கிகள் சர்க்கார் செலவில் நிறுவப்படுகின்றன. 1927-ம் ஆண்டில் இந்தியாவில் ஆயிரம் ஒலி வாங்கிகளே இருந்தன. ஆனல் 1932-ஆண்டில் குடியேற்ற நாடுகளுக்கு ஒலி பரப்பத் தொடங்கியபோது, இத்தொகை அதிகரித்தது. இப்போது ஏறக்குறைய எழுபத்து நாலாயிரம் ஒலி வாங்கிகள் உள்ளன. மற்ற நாடுகளோடு ஒப்பிடும்பொழுது, இந்தியா ஒலிபரப்புதலில் மிகவும் தாழ்ந்த நிலையிலேயே இருக்கின்றது. எனினும், விரைவில் அவைகளோடு சம நிலைக்கு வந்துவிடும் என்று நம்பலாம்.

பற்பல நாடுகளுக்குள் நட்பு விளைத்தற்கேயன்றிப் பகை விளைத்தற்கும் ஆகாயவாணி உதவி புரிகின்றது. இரு நாடுகளுக்குள் பகைதொடங்குவதற்கு ஆகாயவாணிப் பிரசாரம் முன்னேற்பாடு ஆகும். இரு நாடுகளுக்கும் போர் முதன் முதல் ஆகாயவாணியினுல் தொடங்குகின்றது என்னலாம். இக்காரியத்திற்காக விசேஷ நிகழ்ச்சி முறைகள் தயார் செய்கின்றனர். உலக அபிப்பிராயத்தைத் தங்கள் செய்கைக்கு அனுகூலமாகத் திருப்பிக்கொள்வதே அதன் நோக்கமாகும். ஜெர்மனி, இத்தாலி, சோவியத்து ரஷியா போன்ற நாடுகளில் கேள்வியாளர் கூட்டங்கள் ஏற்படுத்தப்பெற்று, அக்கூட்டத்தினர் பாமர மக்களிடம் பிரசாரஞ் செய்கின்றனர். ஜப்பானும் ஜெர்மனியும் அரசியல் விஷயங்களில் ஆகாயவாணியைத் தவருக உபயோகிக்கின்றன. ஜெர்மானியர் அயல்நாடுகளில் ஒலி பரப்பும்பொழுது, நாசி ஆளுகையைப் புகழ்ந்து பேசினர். அன்றியும், அவர் அறிவிக்கும் செய்திகள் பல தவறுடையன என்றும், அவர். உள்ளது உள்ளபடியே

அறிவிப்பவரல்லர் என்றும் தெரிய வந்திருக்கின்றது. அநேக உண்மைகளை மறைக்கின்றனர். இத்தகைய பிரசாரம் நாடுகளுக்குள்ளேயே மனஸ்தாபம் விளைவிக்கும். ஜெர்மானியர் கொண்டிருக்கும் முக்கிய நோக்கம் யாதெனில், இராஜ்யங்களுக்குள் அவநம்பிக்கையையும் பிரிவினையையும் விளைவிப்பதே. ஆகாயவாணி மூலம் பொய்யான செய்திகளை எங்கும் பரப்பி, பற்பல இராஜ்யங்களில் பகையையும் மாற்சரியத்தையும் உண்டாக்க முயன்று வருகின்றனர். இந்த விஷயத்தில், ஜப்பான், ஜெர்மனி, இத்தாலி ஆகிய மூன்று தேசங்களும் ஒரே மாதிரிதான். ஆகாயவாணி மூலம் பற்பல தேசங்களிலும் இராஜ்யங்களிலும் சமாதானத்தையும் ஐக்கியத்தையும் வளர்க்க ஏற்பாடு செய்வதைவிட்டு அவைகளை ஒன்றுக்கொன்று விரோதமாக எழுப்பிவிட முயலும். இந்த முயற்சியானது, ஆகாயவாணியின் சரித்திரப் புத்தகத்தில் மற்றொரு புதிய அதிகாரம் ஆகும். போர் தொடங்கு முன்னரே பகை நாடுகளைக் குறித்து எண்ணிறந்த கதைகள் கட்டிவிடுகின்றனர்.

இந்தியாவில் ஆகாயவாணியைப் பிரசார வேலைக்குப் பயன்படுத்தாவிடினும், அது போதிய அளவு பிரசித்தி அடையவில்லை. இந்தியா ஒரு கண்டம்போல் மிகவும் விரிவான தேசம். அதற்குக் குற்றலை நிகழ்ச்சி முறையே மிகவும் ஏற்றதாகும். காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரைக்கும் விரிந்துள்ள இந்தப் பெரிய தேசத்திற்குக் குடியேற்ற நாடுகள் இல்லாவிடினும், ஒலி பரப்புதல் சித்திபெறவேண்டுமாயின், குற்றலைகளே உபயோகிக்கவேண்டும். ஒலி பரப்பும் நிலையத்திற்குப் பக்கத்திலுள்ள இடங்களில், நடுத்தர அலைகள் உபயோகிக்கலாம். மேனாடுகளில் நடுத்தர அலைநிலையங்கள் அநேகம் உள்ளன.

ஆகாயவாணி நிகழ்ச்சி முறைகளை இன்னும் அபிவிருத்தி செய்தல்வேண்டும். மேனாட்டு நிகழ்ச்சி முறைகளில் ஆகாயவாணி நாடகம் முக்கிய ஸ்தானம் பெற்றுள்ளது. இந்திய நிகழ்ச்சி முறைகளிலோ அதற்கு இடம் இல்லை. இவ்வகை நாடகங்கள் வரைவது எளிதன்று. கடந்த பத்து வருடங்களாக, பிரிட்டிஷ் ஒலிபரப்பிக் கழகத்தார் ஆகாய

வாணி நாடகத்தை வளர்க்கக்கூடிய முறைகள் அனைத்தையும் கையாண்டு வந்திருக்கின்றனர்; இந்த நாடகங்களில் அநேகம், சீர்திருத்தம் பெற்ற பழைய நாடகங்களேயாம். ஷேக்ஸ்பியர் நாடகங்களில் அநேகம் ஆகாயவாணி நாடகங்களாக மாற்றப்பட்டுள்ளன. சம்பாஷணைகளும், சம்வாதங்களும், ஆகாயவாணி மூலம் அனுப்பப்படும்பொழுது அவை முன்னிலும் மிக இனியதாயிருக்கின்றன.

## பயிற்சி

1. ஆண்டு—வெவ்வேறான பொருள் கூறு.

2. பொருள் கூறு :—சாதன சாத்தியம், பிரதானம், சித்தஞ்செய், மாற்சரியம்.

3. அனுகூலம்—எதிர்ப்பதம் என்ன?

## கட்டுரை

ஒரு நாள் நீ ஒலிவாங்கி ஸ்தாபிக்கப்பட்ட ஓரிடத்திலிருந்து கேட்ட ஒலி பரப்பு நிகழ்ச்சிகளைப்பற்றி உன் சினேகிதனுடன் சம்பாஷிப்பதுபோல் ஒரு வியாசம் எழுது.

## கேள்விகள்

1. இந்தியாவில் முதன் முறையாக ஒலி பரப்புதல் ஆரம்பமானது எப்பொழுது? எவ்விடத்தில்?

2. 1927-ல் பம்பாய், கல்கத்தா நகரங்களில் ஸ்தாபிக்கப்பட்ட ஒலி பரப்பு நிலையங்களின் ஒலிபரப்பும் சக்தி, நிர்வாகம் இவைகளைப் பற்றிக் கூறு.

3. 1934-ல் இந்தியாவில் ஒலிபரப்பும் விஷயமாக எடுத்துக்கொள்ளப் பட்ட முயற்சிகள் என்ன?

4. இப்பொழுது எங்கெங்கு ஒலிபரப்பும் நிலையங்கள் ஸ்தாபிக்கப் பட்டுள்ளன? அவற்றின் சக்தி என்ன?

5. இந்திய ஒலி பரப்பும் நிலையங்கள் எவ்விதமான விஷயங்களை ஒலி பரப்பி வருகின்றன? இன்னும் எவ்விதமான நிகழ்ச்சி முறைகள் கையாளப் படவேண்டும்?

6. ஜெர்மனி, ஜப்பான் முதலிய தேசங்கள் ஆகாயவாணியை எவ்விதங்களில் தவறாக உபயோகிக்கின்றன?

7. மேனாடுகளில் ஆகாயவாணி நிகழ்ச்சிகளை எவ்விதம் மக்கள் இன்புறும்படி செய்கின்றனர்?

# 7. புதிய போர் முறைகள்

என். ஆர். ஸுப்பையர், எம். ஏ.

[இரண்டாவது உலக மகா யுத்தம் நடந்துகொண்டிருக்கும்போது ஆசிரியர் வரைந்துள்ள கட்டுரை.]

இப்போது நடைபெற்ற இரண்டாவது உலகப்போரில் மேற்கொள்ளப்படும் முறைகள் இருபத்தைந்து வருடங்களுக்கு முன் நடந்த ஐரோப்பிய மகாயுத்தத்தின் முறைகளிலிருந்து முற்றும் வேறுபட்டிருக்கின்றன. சாதாரணமாகப் பத்திரிகைகளில் இம்முறைகள் சம்பந்தமாகச் சில புதிய வார்த்தைகளையும் சொற்றொடர்களையும் உபயோகப்படுத்துகின்றனர்.

முதலாவதாக, இப்போருக்குப் 'பெட்ரோல் சண்டை' (Oil-War - எண்ணெய்ச் சண்டை) என்று பெயரிட்டிருக்கிறார்கள். காரணம் என்ன? இதற்கு முன்னெல்லாம் சேனைகளையும் யுத்தச் சாமான்களையும் போர்முனைகளுக்கு அனுப்ப ரயில் பாதைதான் மிக அவசியமாயிருந்தது. ஆகையால், இருப்புப் பாதைச் சௌகரியங்கள் ஏராளமுள்ள இடங்களில்தான் போர்க்களத் துருப்புகள் திரட்டப்பட்டு வந்தன. ஒரு தேசத்து ரயில்வேப் படத்திலிருந்து எந்த எந்த இடங்களில் போர்க்களங்களை அமைக்கக்கூடுமென்று முன்னதாகவே எதிரி ஊகித்து அறியக்கூடும். மேலும் சேனைகள் முன் நோக்கிச் செல்லவேண்டுமானால், இருப்புப் பாதைகளை அமைத்துக்கொண்டே போகவேண்டும்.

இப்போரிலோ ரயில்வேக்களின் பிரதான்யம் குறைந்து போய்விட்டது. அநேகவித ஆகாய விமானங்களும் கரடு முரடான பிரதேசங்களில்கூட அதிவேகமாகச் செல்லக்கூடிய 'டாங்கிகள்' என்று சொல்லப்படும் மோட்டார் வண்டிகளும் சேனைகளின் முக்கிய உறுப்புக்களாக ஆகிவிட்டன. இவைகள் எல்லாம் பெட்ரோல் சக்தியால்தான் ஓடக்கூடியவையாதலால், இச்சண்டையைப் 'பெட்ரோல் சண்டை' என்று சொல்லுவது சரியானது. இது காரணம் பற்றியே எண்ணெய்ச் சுரங்கங்கள் இருக்கும் இடங்களின் பேரிலேயே எதிரிகள் கண்ணாக இருக்கின்றனர். தோற்றுப்போய்ப் பின்வாங்கும்படி நேரும்போது எண்ணெய்ச் சுரங்க யந்திர

சாலேகளே உடைத்து அழித்துவிட்ட பிறகுதான் பின் வாங்குகின்றனர்.

இரண்டாவதாக, இராணுவப் பயிற்சி பெற்ற ஆடவர்கள் மாத்திரமே சண்டை செய்யக் கடமையுள்ளவர்கள் என்று நினைப்பது தவருகும். ஏனெனில் இயந்திர சக்தி இப்போது முன்னிலும் பதின்மடங்கு விருத்தியடைந்திருக்கிறது. ஆயுதங்களும் மற்ற யுத்தச் சாமான்களும் அபரிமிதமாய் வெகு சீக்கிரத்தில் உண்டாக்கப்படுகின்றன. உண்டு பண்ணப்பட்ட ஆயுதங்கள், குண்டுகள், பீரங்கிகள் முதலிய வைகளேப் போர்க்களங்களுக்கு அதிசீக்கிரத்தில் கொண்டு போகச் சௌகரியங்கள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன.



இவ்விதம் கணக்கிடமுடியாத போர் உபகரணங்களே உண்டுபண்ணும் முக்கிய கடமையைப் பெண்கள் இப்போது வகித்து வருகிருர்கள். விமானத் தாக்குகள், குண்டுவீழ்ச்சு முதலிய விபத்துக்களிலிருந்து தேசத்தைக் காத்துவரும் பொறுப்பு, இராணுவத் துருப்புகள் கையிலிருந்து அந்த அந்தப் பிரதேசப் பிரஜைகளிடத்தில் ஒப்படைக்கப்பட்டுள்ளது. அதாவது சண்டையின் அவசர நிமித்தமாகவும் தேசப் பாதுகாப்புக்காகவும் ஒவ்வொரு பிரஜையும் ஆண், பெண் வித்தியாசமில்லாமல் தன் உடலேயும் சொத்துக்களேயும் சர்க்காருக்கு அர்ப்பணம் செய்யவேண்டி வருகிறது. இப்போது காப்பு வேலேயில் பங்கு எடுத்துக்கொள்பவரை

உள்நாட்டுப் போர்ச்சேனை என்று சொல்லலாம். மேற் சொல்லிய காரணங்களினால், இப்போது நடைபெறும் யுத்தத்தைச் 'சமஸ்த குடிப்போர்' (Total-War) என்று சொல்லுவது முற்றும் ஏற்றதாகும்.

மூன்ருவதாக, வெகு தூரத்திலிருந்து சத்துருக்களைக் கண்ட க்ஷணத்தில் கொல்லக்கூடிய துப்பாக்கிகளும், பீரங்கி களும் உபயோகத்திற்கு வந்தது முதல் போர்க்களங்கள் தரை மட்டத்திற்குமேல் அமைவதில்லை. ஆழமான கிடங்குகளைக் கவட்டி அவைகளுக்குள் கோட்டைகள் முதலியவைகளைக் கட்டிப் பட்டாளங்களை மறைத்து வைத்துப் போர் செய்து வந்தனர். இம்மாதிரியான போருக்குக் 'கிடங்குச் சண்டை' என்று பெயர். உதாரணமாக பிரான்ஸ் தேசத்துக் கிழக்கு எல்லையின் நெடு நீளத்திற்குக் கிடங்குகளை வெட்டி அநேக தெருக்களையும், இருப்புப் பாதைகளையும், கோட்டைகளையும் இக்கிடங்குகளில் அமைத்துச் சத்துருக்கள் நெருங்கக் கூடாத மாதிரியில் போர்முனையைத் தயாரித்தனர். இதற்கு 'மாஜினோ லைன்' என்று பெயர். இதே மாதிரியே ஜெர்மானியரும் தங்கள் எல்லைக்குள் கிடங்கு வரிசைகளை ஏற்படுத்தினர்கள்.

ஆனால், புது மாதிரியான போர் முறைகள் கையாளப் பட்டது முதல் கிடங்குச் சண்டை ஏற்பாடுகள் பயனற்றவை ஆயின. ஏனெனில் எதிரியின் போர் முனையில் பலக்குறை வான இடத்தை தந்திரமாய் அறிந்துகொண்டு பெரிய சேனையைத் திரட்டி 'மின்னலை'ப்போல் (Bleitzkrig) எதிரி யின் சைனியத்தைத் தாக்கும்போது, ஆங்காங்குக் கிடங்கு வரிசைகள் உடைந்து, துருப்புகள் கொஞ்சம் கொஞ்சமாக நெளிந்து கொடுக்க வேண்டிவருகிறது. இங்ஙனம் ஏற்படும் இடைவெளி வழியாகச் சத்துரு ராணுவப் படைகள் திருட்டுத் தனமாய் ஊடுருவிச் சென்று (Infiltration); நம் துருப்புக ளுடன் கலந்து மெதுவாகச் சேனையின் பின்பக்கம் சிறிய கூட்டம் கூட்டமாகப் போய்ச் சேர்ந்து பாலங்களை உடைத் தும், மரங்களை வெட்டிப்போட்டுப் பாதைகளில் தடை செய் தும், மற்றும் பல கேடுகளை விளைவித்தும் வருகின்றனர்.

பின்னிருந்து எதிரி இப்படிச் சண்டைபோடுவது நமது

சேனைக்குப் பெரிய அபாயமாக முடிகிறது. மேலும், துருப்புகளை விமானங்களில் ஏற்றிக்கொண்டுபோய், பலூன்களின் உதவியால் எதிரியின் சைனியத்தின் பின்பாகத்தில் இறங்கும்படி செய்து வருகின்றனர். இவைகளுக்கும், 'பாராப் படைகள்' (Para Troops) என்று பெயர்.

மேற் சொல்லிய சூழ்ச்சிகள் வெற்றிபெற வேண்டுமானால், பட்டாளம், கம்பெனி, பிரிகேட், டிவிஷன் என்று அழைக்கப்பட்ட பழைய மாதிரிப் போர்ப்படை அணிகளுக்குப் பிரதான்யம் கொடுக்காமல், பத்து, பன்னிரண்டு பேர்களுடைய சிறிய கூட்டங்களாகப் படைகளைப் பிரித்துப் போர்க்களங்களில் வெவ்வேறு பாகங்களுக்கு அனுப்பவேண்டி வருகிறது. (Group-Warfare) இக் கூட்டங்களில் சேர்ந்த ஒவ்வொரு வீரனும் மேலதிகாரியின் உத்தரவை எதிர்பாராமல் சமயோசிதமாகப் புத்தியைச் செலுத்தி, எதிரியைத் திக்கு முக்காடச் செய்யும் திறமை படைத்தவனாய் இருக்க வேண்டியது அவசியமாகிறது. படைத் தலைவர்களுக்குத் தனக்குக் கிடைத்த சமாசாரங்களை உடனே தெரிவிக்கும்படியாகவும், அவர்களுடைய கட்டளையை அப்போதைக்கப்போது பெறும்படியாகவும் இக்கூட்டத்தில் சேர்ந்த ஒவ்வொரு போர் வீரனுக்கும் ஒரு 'ரேடியோ' ஸெட்டு கொடுத்திருக்கின்றனர்.

மேற்சொல்லிய முறைகளை உபயோகிப்பதனால் கிடங்குகள் பயனற்றுப் போய்விட்டன. முன்போல் படைவீரர்கள் கிடங்குகளில் மறைந்து நின்றுகொண்டு சண்டை போடுவதை விட்டுவிட்டுத் திறந்த வெளிகளில் 'டாங்கிகள்' என்று சொல்லப்படும் பீரங்கி வண்டிகளில் ஏறிக்கொண்டு பட்டாள வரிசையில் போர் புரிந்து வருகின்றனர். இது ஒரு பெரிய மாறுதல். டாங்கிப் படைகள் தாம் இப்போது நடக்கும் போருக்கு மிகவும் அவசியமாக இருக்கின்றன. ஆயிரக் கணக்கான 'பான்ஸர்' டாங்கிப் படைகள் மேடு பள்ளத்தைச் சற்றும் சட்டை செய்யாமல் அதிக வேகமாகச் சென்று எதிரி ஸ்தலங்களைத் தாக்குகின்றன. இங்ஙனம் டாங்கிகள் முன் சென்று எதிரிச் சேனைகளை முறியடித்த பிறகுதான் காலாட் படைகளும் மற்றவைகளும் முன் செல்லக்கூடும். ஆகவே இந்நாள் போரில் வெற்றிபெற வேண்டுமானால் விமானப்படை

டாங்கிப் படை இவை இரண்டின் பலந்தான் அதிகமாக இருக்கவேண்டும்.

கடைசியாகக் கடற்போரில் புதிய ஏற்பாடு ஒன்று கையாளப்பட்டு வருகிறது. யுத்த ஆரம்பத்தில் எதிரியின் 'யூ' போட்டுகளால் அதாவது நீரில் மூழ்கிச் செல்லும் கப்பல்களினுல் நேசக் கட்சிக் கடற்படைக்கும் வியாபாரக் கப்பல்களுக்கும் பெரு விபத்துகள் நேரிட்டன. இவ்விபத்துகளை விலக்கத்தகுந்த உபாயத்தை நேசக் கட்சியார் கண்டுபிடித்து கையாண்டு வருகிறுர்கள். இப் புதிய ஏற்பாட்டின்படி நேசக் கப்பல்கள் தன்னந்தனியே போவதில்லை. பதினைந்து முதல் இருபது வரையில் கப்பல்களை ஒன்று கூட்டி, அந்தக் கூட்டத்திற்கு முன்னிலும் இரண்டு பக்கங்களிலும் பீரங்கிகள் ஏற்றியுள்ள சண்டைக் கப்பல்களைப் பாதுகாப்புக்கு உடன் செல்லும்படி திட்டம் செய்திருக்கின்றனர். ஆகாயத்திலிருந்து கப்பல்களுக்கு அபாயம் நேரிடாமலிருக்க, நேசக் கட்சியாரின் விமானங்கள் அவர்களின் பிரதேசங்களிலுள்ள விமானத் தலைமை ஸ்தலத்திலிருந்து கண்காணித்து வருகின்றன. இந்த ஏற்பாட்டிற்கு 'கான்வாய்' (Convoy) என்று பெயர். இது உபயோகத்தில் வந்தது முதல் யூபோட்டுகளின் தொந்திரவு பாதிக்குமேல் குறைந்துவிட்டது. சேனைகளுக்கு வேண்டிய உணவுப் பொருள்களும், தளவாடச் சாமான்களும் ஏராளமாக அட்லாண்டிக் மகாசமுத்திர "சந்துகளின்" வழியாகப் பத்திரமாய் வந்து சேருகின்றன. மொத்தத்தில் முடிவாக இப்புதிய முறைகளே நேசக் கட்சியாரின் வெற்றிகளுக்கு முக்கிய காரணங்களென்று நிச்சயமாய்ச் சொல்லலாம்.

பயிற்சி

1. ஆடவர்—பால்கூறு. இதில் பாலை உணர்த்தும் விகுதி யாது?
2. சத்துரு, வெற்றி—எதிர்ப்பதம் எழுது.

கேள்விகள்

1. 'கிடங்குச் சண்டை' என்றுல் என்ன? இக்காலத்தில் இம்முறைச் சண்டை ஏன் பயன்படவில்லை?
2. 'பாராப் படைகள்' என்றுல் என்ன?
3. 'கிடங்குச் சண்டை' முறை வெற்றிபெறப் படைகளை எவ்விதம் பிரித்து அனுப்பவேண்டியிருக்கிறது?
4. 'டாங்கிகள்' என்றுல் என்ன? அவை போரில் எவ்விதம் பயன் படுகின்றன?

# 8. குடிகளியல்பு—ராஜபக்தி—அநியாய பஞ்சகம்

ச. வேதநாயகம் பிள்ளை

விக்கிரமபுரி சில காலங் குடியரசாயிருந்ததி னிமித்தம், அநேக ஜனங்கள் ராஜபக்தி யென்பதையே சுத்தமாய் மறந்து விட்டார்கள். ராஜாவாயிருக்கிற நாங்களே ராஜபக்தியை உபயோகிப்பது சிரமமல்லவென்று நினைத்து, சில விவேகிகளை ஏவி, ஜனங்களுக்கு ராஜ பக்தியைப் போதிக்கும்படி செய்வித்தோம். அவர்கள் அடியிற்கண்டபடி பிரசங்கித்தார்கள் :—

"ஒவ்வொரு மனுஷனும் ஜீவிக்கிறதற்குப் பலருடைய உதவி வேண்டியிருப்பதால், ஒவ்வொருவனும் தனிமையாக வனவாசஞ் செய்வது சாத்தியமில்லாத காரியமாயிருக்கிறது. ஆகையால், ஆதிகாலந் துவக்கிக் கிராமங்களிலும் நகரங்களிலும் ஜனங்கள் கூட்டுறவாய் வாழ்வது வழக்கமாயிருக்கின்றது. விவசாயம், நெசவு, சிற்பம், தச்சுவேலை, கொல்லு வேலை முதலிய பல தொழில்கள் உலகத்துக்கு முக்கியமான படியாலும், அந்தத் தொழில்களை ஒவ்வொருவனுங் கற்றுக் கொள்வது அசாத்தியமான தாகையாலும், அந்தத் தொழிலாளிகள் உள்ள இடங்களில் வசிப்பது ஜனங்களுக்குப் பெரிய சௌகரியமாயிருக்கிறது. கூட்டுறவாய் வாழுகிற ஜனங்கள் ஒருவருக்கொருவர் உபத்திரவஞ் செய்துகொள்ளாமலும், ஒருவருடைய சொத்தை ஒருவர் அபகரிக்காமலும் பாதுகாப்பதற்காகவும் இன்னும் தேசோபகாரமான பல நன்மைகளைச் செய்யவுமே ஒவ்வொரு தேசத்திலும் ராஜாங்கம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஜனங்கள் தங்கள் நன்மைக்காக அரசனை நியமித்துக் கொண்டிருப்பதால், அரசனுடைய கட்டளைக்கு அவர்கள் கீழ்ப்படிய வேண்டியது அகத்தியமாயிருக்கிறது. ஒரு சிறிய குடும்பத் தலைவன் சொற்படி நடவாத குடும்பஸ்தர்கள் துன்பம் அடைவார்களானால், அனந்தங் குடும்பங்களுக்குத் தலைவனாகிய அரசன் சொற்படி கேளாதவர்கள் எப்படி க்ஷேமம் அடைவார்கள்? உலகமாகிய

உடலுக்கு அரசன் தலையாகவும் பிரஜைகள் பல அவயவங்களாகவு மிருக்கிறார்கள். எண்சாணுடம்பிற்கும் சிரசே பிரதானமாயிருப்பதுபோல், உலகமாகிய உடலுக்கு அரசனே பிரதானமாயிருக்கிறான். தலையில்லாத சரீரம் எப்படி ஜீவிக்காதோ, அப்படியே அரசனில்லாத தேசம் நாசத்தை அடையும்.

சகல சாஸ்திரங்களும், புராணங்களும், சமய நூல்களும் அரசனை விசேஷமாகச் சொல்லுகின்றன. அரசன் ஜனங்களால் நியமிக்கப்பட்டவனாயிருந்தாலும், அவன் சகலருக்கு மேலான புருஷ சிரேஷ்டனென்று சகல தேசங்களிலும் நன்கு மதிக்கப்படுகிறான். சூரியன் உயர்வான இடத்திலிருந்து பிரகாசியாவிட்டால், உலகம் ஒளிபெறுமா? மேகம் மேலான இடத்திலிருந்து வருஷியாவிட்டால், உலகத்துக்குப் பயன் படுமா? ஆறு, குளங்கள் உயர்வாகவும், வயல்கள் தாழ்வாகவு மிருந்தால் மட்டும் ஜலம் பாயுமே யல்லாமல், ஆற்றைப் பார்க்கிலும் உயர்வாயிருக்கிற கழனிகளுக்கு ஜலம் பாயுமா? அப்படியே அரசனுக்குக் குடிகள் தாழ்ந்திருக்க வேண்டியவர்களே யல்லாது, அரசனுக்குக் கீழ்ப்படியாத குடிகள் க்ஷேமத்தை அடைவார்களா? "மாதாவுக்குச் சுகமிருந்தால் கர்ப்பத்துக்குஞ் சுகம்" என்பது போல அரசன் சுகமாயிருந்தால் மட்டும் ஜனங்களுக்கும் சுகமானதால், அவனுடைய க்ஷேமத்தை ஜனங்கள் எப்போதும் பிரார்த்திக்க வேண்டும். அரசனை வணக்கமாயும், மரியாதையாயும், பய பக்தியாயும் பூஜிதை செய்யவேண்டும். அரசனுடைய சுக துக்கங்களைத் தங்களுடைய சுக துக்கங்களாகவும், அரசனுடைய காலிற்பட்டது தங்களுடைய கண்ணிற் பட்டதாகவும் பிரஜைகள் எண்ணி, எப்போதும் ராஜபக்தி செய்ய வேண்டும். சூரியனிடத்தில் வெப்பமும், சந்திரனிடத்தில் களங்கமும், மேகத்தினிடத்தில் இடியும், புஷ்பங்களிடத்தில் முட்களும் இருப்பதுபோல, அரசனும் நம்மைப்போல மனுஷனாதலால் அவனிடத்தில் சில குணதோஷங்களிருப்பதும் சகஜம். அதற்காக அரசனை நாம் அவமதிக்காமல், அரசனுடைய குற்றத்தை நீக்கிக் குணத்தை மட்டுங் கிரகித்துக் கொள்ளவேண்டும். அரசனுடைய செய்கைகளுக்கு நமக்குக்

காரணந் தெரியாதபோது, அவன் நல்ல எண்ணத்துடனேயே செய்வதாக ஊகிக்க வேண்டுமே தவிர, விபரீதமாக எண்ணக் கூடாது. அரசன் ஒரு அக்கிரமஞ் செய்தாலுங்கூட அதைக் கிரமமான மனுமூலமாகப் பரிகரிக்க வேண்டுமே யல்லாது, ராஜ துரோகத்தைக் கனவிலுஞ் சிந்திக்கக்கூடாது. ராஜ நிந்தையை நாமும் பேசக்கூடாது; பிறர் பேசவும் இடங் கொடுக்கக்கூடாது.

சத்துருக்களையும் துஷ்டர்களையும் அடக்கவும், நியாய பரிபாலனம் நடத்தவும், தேச நன்மைக்கடுத்த பல வேலை களைச் செய்யவும் போதுமான சதுரங்க சேனைகளையும், உத்தியோகஸ்தர் முதலியவர்களையும் நியமித்து அநுபாலிக்க வும் அரசன் கடமைப்பட்டிருப்பதால், அதற்காக விதிக்கப் பட்ட வரிகளை ஜனங்கள் மனோற்சாகமாகச் செலுத்த வேண்டும். வரி வாங்காவிட்டால் அரசன் தேச காரியங்களை எப்படி நடத்தக்கூடும்? வேரில் விடப்பட்ட ஜலம் மர முழுவதும் பரவுவது போலவும், நாம் வயிறு நிரம்பப் புசிக்கும் உணவு ஜீரணித்துத் தேக முழுவதும் வியாபிப்பது போலவும், அரசனுக்குப் பிரஜைகள் கொடுக்கிற வரிகள் பிரஜைகளுக்கே உபயோகமாகிறபடியால், அரசனால் விதிக் கப்பட்ட நியாயமான வரிகளைப் பிரஜைகள் நிராடங்கமாகச் செலுத்தவேண்டும்.

ரோமாபுரியிலே பல வரிகள் ஏற்பட்டிருந்த காலத்தில், ஜனங்கள் வரி கொடுக்கமாட்டோமென்று நிராகரித்து ஊரை விட்டு வெளியே போய்விட்டார்கள். அவர்களை அழைத்து வரும்படி அகிரிப்பா என்னுந் தளகர்த்தனை ஆலோசனைச் சங்கத்தார் அனுப்பினார்கள். அந்தத் தளகர்த்தன் ஒரு விசித்திரமான கட்டுக்கதையைச் சொல்லி ஜனங்களை வசியப் படுத்தினான். அஃதென்னை யெனில்:—

முற்காலத்தில் வயிற்றுக்கும் மற்ற அவயவங்களுக்கும் சடுத்தம் உண்டாகி, அந்த அவயவங்களெல்லாம் ஒன்று கூடி, வயிறு ஒரு வேலையுஞ் செய்யாமலிருப்பதால், இனி மேல் வயிற்றுக்காகத் தாங்கள் ஒரு பாடும் படுகிறதில்லை யென்று பிரதிக்ஞை செய்துகொண்டன. கைகள், "ஒரு வேலையுஞ் செய்யோம்" என்று சும்மா இருந்தன. கால்,

வயிற்றுக்காக ஒரு அடிகூட எடுத்து வைக்கமாட்டேன்'' என்றது. கண், காது முதலியவைகளும் தங்களுடைய தொழிலைச் செய்ய நிராகரித்தன. இவ்வகையாக அந்த அவயவங்கள் செய்த பந்துக்கட்டு, தங்களுக்கே தீங்காய் விளைந்தது. வயிற்றுக்கு ஆகாரமில்லாமையினால், கை சோர்ந்து, கால் அயர்ந்து, வாய் உலர்ந்து, கண் இருண்டு, காது அடைத்து, தங்களுக்கே உபத்திரவம் உண்டானபடியால், வயிறுதான் பிரதானமென்றும், வயிற்றுக்கு ஆகாரங் கொடாவிட்டால், தாங்கள் ஜீவிக்கிறதற்கு மார்க்கமில்லை என்றும் அந்த அவயவங்கள் அறிந்துகொண்டன; வயிற்றுக்கு இடுகிற அன்னம் தேகத்தின் அவயவங்களுக்கெல்லாம் பிரயோஜனமாவதுபோல, அரசனுக்குக் கொடுக்கப்பட்ட வரிகள் ஜனங்களுக்கே உபயோகமாகிறபடியால், ''வரி கொடுக்கிற விஷயத்தில் ஜனங்கள் ஆடங்கஞ் செய்யக் கூடாது'' என்றார்கள்.

அந்த பிரசங்கிகள் மறுபடியும் ஜனங்களைப் பார்த்துச் சொல்லுகிறார்கள். ''இந்த ஊர் குடியரசாயிருந்த காலத்தில் நாம் பட்ட அவஸ்தைகளும், இப்போது நமக்கு உண்டாயிருக்கிற சௌக்கியங்களும், நமக்குப் பிரத்தியக்ஷப் பிரமாணமாய்த் தெரிந்திருக்கின்றன. இப்படிப்பட்ட தர்ம ராஜாங்கம், இந்தப் பூமண்டலத்தில் எங்கேயாயினும் இருக்குமா? சில மூட ராஜாக்கள் செய்த அக்கிரமங்களை நீங்கள் கேள்விப்பட்டால், இப்போது நீங்கள் எவ்வளவு பாக்கிய சாலிகளென்பதை நீங்களே அறிந்துகொள்வீர்கள். ஒரு சம்ஸ்கிருத வித்வான் ''அநியாய பஞ்சகம்'' என்று ஐந்து சுலோகங்கள் செய்திருக்கிறார். அவைகளுள் இரண்டு சுலோகங்களை மொழிபெயர்த்து, உங்களுக்குத் தெரிவிக்கிறோம்.

## அநியாய பஞ்சகம்

1. ''அநியாயபுரி என்னும் பட்டணத்தை மூர்க்கராஜன் என்பவன் ஆண்டுகொண்டு வந்தான். அவன் எலி வேட்டைக்குப் போயிருந்தபோது, அவனுடைய பத்தினியை ஒரு

பாம்பு கடித்துவிட்டதாகவும் விஷந் தலையில் ஏறின உடனே அவளுக்கு பிராண பயம் உண்டாகுமென்றும், அரண்மனே உத்தியோகஸ்தர்கள் மந்திரிக்குத் தெரிவித்தார்கள். விஷம் தலையில் ஏருதபடி தலையை வெட்டிப் பத்திரமாய் வைத்திருக்கும்படி மந்திரி உத்தரவு செய்தான். அந்தப் பிரகாரம் ராஜபத்தினியின் தலே வெட்டப்பட்டது. பாம்பு ஒரு வீட்டில் நுழைந்து, வெளிப்படாமலிருந்தபடியால் அந்த வீட்டைக் கொளுத்திவிடும்படி மந்திரி ஆக்ஞாபித்து அந்தப்பிரகாரம் நெருப்பு வைக்கப்பட்டது; அந்த நெருப்பு நகரமெங்கும் பரவி, எல்லா வீடுகளேயும் பொருள்களேயும் நாசஞ் செய்து விட்டது. அந்தத் தீயை அவிப்பதற்காக ஏரியின் கரையை உடைக்கும்படி மந்திரி உத்தரவு செய்து, அந்தப் பிரகாரம் ஏரியின் கரை உடைக்கப்பட்டது. ஏரியின் ஜலமெல்லாம் வீணுய்ப் போய்விட்டதால் வயலுக்குப் பாய்ச்சத் தண்ணீரில்லாமல், பயிர்களெல்லாம் வாடி வதங்கின. பயிர்கள் வெய்யிலினுல் வாடாதபடி ஊரிலுள்ள மரங்களேயெல்லாம் வெட்டிப் பயிருக்கு பந்தலிடும்படி செய்வித்தான். இந்தப் பிரகாரம், மந்திரி ஊரையெல்லாம் பாழாக்கி விட்டான்.

2. பயறு அளக்கிற விஷயத்தில் விற்கிறவனுக்குங் கொள்கிறவனுக்குங் கலகம் உண்டாகி, மத்தியஸ்தர்களிடத்தில் முறையிட்டுக் கொண்டார்கள். விற்கிறவன், "மரக்காலேக் கவிழ்த்துப் பின்புறத்தால் அளப்பேன்" என்ருன். வாங்குகிறவன், "வழக்கப்படி மரக்காலின் முன் புறத்தால் அளக்கவேண்டும்!" என்ருன். மத்தியஸ்தர்கள் இருவருக்கும் பொதுவாக மரக்காலேப் படுக்க வைத்துக் குறுக்காக அளக்கும்படி தீர்மானித்தார்கள்.

பயிற்சி

1. பொருள் கூறு :—விவேகிகள், அகத்தியம், அனர்த்தம், கழனி, பூஜிதை, சந்திர களங்கம், சகஜம், பரிகரிக்க, அநுபாலிக்க, நிராடங்கமாக, ஆடங்கம், பிரத்தியக்ஷம், பிரமாணமாய், பிராணபயம்.

2. சாத்தியம், அக்கிரமம்—எதிர்ப்பதம் எழுது.

3. தேசோபகரமான, குற்றஞ் சாட்டு, உபத்திரவம்—வாக்கியங்களில் அமைத்து எழுது.

## கேள்விகள்

1. ராஜாங்கம் ஏற்படுத்தப்பட்டிருப்பதன் நோக்கம் என்ன?

2. அரசருக்குக் குடிகள் தாழ்ந்திருக்க வேண்டுமென்பதைச் சில உதாரணங்களால் விளக்கு.

3. அரசர் விதிக்கும் வரிகளைக் குடிகள் மனோற்சாகமாகச் செலுத்த வேண்டியதன் அவசியம் என்ன?

4. அகிரிப்பா என்பவன் யார்? அவனுக்கு இடப்பட்ட உத்தரவு என்ன? அவன் ஜனங்களை எவ்விதம் தன் வசப் படுத்தினான்?

5. மூர்க்க ராஜனுடைய மந்திரி ஊரைப் பாழாக்கியது எவ்விதம்?

# 9. விந்தைகள்

பெ. நா. அப்புஸ்வாமி பி.ஏ., பி.எல்.

இவ்வுலகம் தோன்றியதே ஒரு விந்தை. இவ்வுலகத்தி லுள்ள பொருள்கள் யாவும் விந்தைகள். அவற்றினிடையே மனிதராகிய நாம் தோன்றியது விந்தையிலும் விந்தை.

களிப்பு நிறைந்த தூய்மையான மனங்களாலே அன்பும் ஆனந்தமும் பெருகும் பிரகாசமான கண்களாலே குழந்தை கள் இவ்வுலக விந்தைகளைக் கண்டு பேரானந்தம் அடை கிருர்கள். வானில் பறக்கும் ஆகாய விமானமும், நிலத்தில் சடசடவென்று ஓடும் ரயில் வண்டியும் அவர்களுக்குப் பெரு மகிழ்ச்சியை உண்டுபண்ணுகின்றன. ஓடும் நீரின் அழகை யும், காயும் நெருப்பின் அழகையும் கண்டு அவர்கள் மகிழ் கிருர்கள். நிலாவின் அழகும் நாய்க்குட்டியின் அழகும் குழந்தை மனதிலே ஒன்று போலப்படுகின்றன. அந்த மனத்திலிருந்து பெருகும் களிப்பு வெள்ளமானது முகத்திலே புன்னகையாகத் ததும்புகிறது; அலை அலையான சிரிப்பாக நம்மேல் வந்து மோதுகிறது; நம்மையும் நிலைக்க ஒண்ணுத ஆனந்தவெள்ளத்தில் ஆழ்த்திவிடுகிறது. அற்புத உலகத் திலே உள்ள விந்தைகள் அனைத்தையும் அனுபவிப்பதற்குப் பிறந்த சிருஷ்டிகள் தாம் குழந்தைகள்.

நாமும் ஒரு காலத்தில் குழந்தைகளாய் இருந்தோம். ஆனல், வயது ஏற ஏறப், போலி அறிவு மிகமிக, விந்தைகளை அனுபவிக்கும் திறமையை நாம் இழந்து விட்டோம். ஆயினும் சிற்சில வேளைகளில், இவ்வுலகத்தில் காணப்படும் சிற்சில நிகழ்ச்சிகளும் பொருள்களும் நம் மனங்களைத் தாக்கி, அவற்றைக் கவர்கின்றன. அவ்வேளைகளில் நாமும் விந்தைகளை உணர்கிரும்; மீண்டும் சிறு குழந்தைகளோடு ஆனந்தமடைகிரும்.

ஓரிடத்தில் உள்ளோருக்குச் சாமானியமாகத்தோன்று வன சில, மற்ருேரிடத்தில் உள்ளோருக்குப் பெரிய விந்தை களாகத் தோன்றுகின்றன. முதல் முதலாக நகரத்துக்கு வருகிற பட்டிக்காட்டான் நகரத்திலே எத்தனை விந்தைகளைக் கண்டு அனுபவிக்கிருன்! ஒரு காலத்திய விந்தைகள் என்று

எண்ணப்படுவன மற்றொரு காலத்தில் மிகவும் சாமானியப் பொருள்களாகி விடுகின்றன.

முற்காலங்களில் மேலை நாடுகளிலே உள்ள மனிதர்கள் விந்தைகள் என்று கருதிய பொருள்கள் எத்தனையோ இருந்தன. அவற்றுள் சில செயற்கை விந்தைகளை அவர்கள் பெரு விந்தைகள் ஏழு என மதித்து வந்தனர்.

சற்றேறக்குறைய இரண்டாயிரத்து அறுநூறு வருஷங்களுக்கு முன்னே பாபிலோனியாவிலே நேபுகாத்நேச்சார் என்னும் சக்கரவர்த்தி ஒருவன் இருந்தான். பாபிலோனியா ஒரே சமவெளியான பிரதேசம். அங்கே பெயருக்குக் கூட மலைகள் கிடையா. அவ்வரசனுக்கு உயிருக்குயிரான மனைவி ஒருத்தி இருந்தாள். அவள் மலைநாட்டிலிருந்து வந்தாள். பாபிலோனியாவின் சமவெளிகளைப் பார்த்துப் பார்த்து அவளுடைய அழகிய கண்கள் அலுத்துப்போயின. மலை நாட்டின் ஏற்றத்தையும் தாழ்வையும் உயர்வையும் சரிவையும் அவள் மீண்டும் பார்க்க விரும்பினாள். 'சக்கரவர்த்தியின் மனைவியாயிருந்தும் இயற்கையின் அழகை அனுபவிக்கும் பாக்கியம் நமக்கில்லையே!' என்று அவள் ஏங்கி மனம் வருந்தினாள். அவளுடைய வாடிய மனத்தைக் குளிர்விப்பதற்காகவும் அவளுடைய குவிந்த முகத்தை மலர்விப்பதற்காகவும், அரசனால் ஒரு பூந்தோட்டம் அமைக்கப்பட்டது.

இவ்வாச்சரியமான தோட்டம் உப்பரிகையின்மேல் உப்பரிகையாகக் கட்டப்பட்டது. மேல் உப்பரிகையின் உயரம் முந்நூறு அடி. ஒவ்வோர் உப்பரிகையிலும் செடிகள், கொடிகள், மரங்கள்—ஆ! எத்தனை நிறமாய்ப் பூக்கும் புஷ்பச் செடிகள்! எத்தனை மரங்கள்! சோலைகள் மேலும் கீழுமாய், மேடும் பள்ளமுமாய் மலைப் பிரதேசத்தைப் போலவே அமைந்திருந்தது இத்தோட்டம். இந்தத் தோட்டத்தை எங்கே பார்த்தாலும் ஓடைகள் சலசலவென்று ஓடிக் கொண்டிருந்தன. நகரத்துக்குப் பக்கத்திலுள்ள யூப்ரடீஸ் நதியின் நீரை எத்தனையோ எந்திரங்கள் இறைத்து இத்தோட்டத்தில் பாய்ச்சின. பூந்தோட்டத்தில் உலவி வாழ்ந்த அரசி வெளி உலகத்தையே மறந்தாள்; பாபிலோனியாவின் சமவெளியையும் மறந்தாள். அவள் மனம் தளிர்த்துத்

தழைத்தது ; அவள் முகம் மலர்ந்து சிரித்தது. தூர இருந்து பார்ப்போர் கண்களுக்கு அந்தத் தோட்டம் வான வெளியிலே தொங்குவதாகவே தோன்றிற்று. அரசனுடைய அன்பினுல் பிறந்த அழகிய பூந்தோட்டம் சில காலமே நிலைத்திருந்தது. அந்தோ காலத்தின் கொடுமையால் அழிந்து போய் விட்டது.

சற்றேறக்குறைய இரண்டாயிரத்து நானூறு வருடங்களுக்கு முன்னே கிரீஸ் தேசத்திலே பைடியஸ் என்ற ஒருவர் இருந்தார். அவர் மிகவும் புகழ்பெற்ற சிற்பி. அவர் கிரேக்க நாட்டின் பெருந்தெய்வமான ஸியுஸ் என்னும் கடவுளின் விக்கிரகம் ஒன்றைச் செய்தார். ஒலிம்பியா என்னும் இடத்திலே அதை ஸ்தாபித்தார். அந்த விக்கிரகத்தின் உயரம் அறுபது அடி. பொன்னுலும் தந்தத்தாலும் செய்யப்பட்ட அந்தத் தெய்வ விக்கிரகமானது மகோன்னதமாக வீற்றிருந்தது. அதன் அளவையும், கம்பீரியத்தையும், விலை மதிப்பையும், அழகையும் கண்டு எண்ணிப் பாராட்டிக் கொண்டாடிற்று. அந்தோ ! அதுவும் முற்றிலும் அழிந்து போயிற்று.

இந்த விந்தை தோன்றி இருநூறு வருடங்களுக்குப் பிறகு, அதாவது சுமார் இரண்டாயிரத்து இருநூறு வருடங்களுக்கு முன்பு, கிட்டத்தட்ட ஒரே காலத்தில் நான்கு விந்தைகள் தோன்றின. அவற்றுள் மூன்றை இயற்றியவர் கிரேக்க நாட்டுச் சிற்பிகள்.

ஆசியா மைனர் எனப்படும் தேசத்திலே முன் காலத்திலே கிரேக்கர்கள் மிகுதியாகக் குடியேறி வந்தார்கள். அங்கே உள்ளது எபீஸஸ் என்னும் சிறு நகரம் ! அந்தப் பிரதேசத்தில் உள்ள அந்நாட்டுப் பழைய மக்கள் ஏதோ ஓர் இயற்கைத் தேவதையை வணங்கிக்கொண்டிருந்தார்கள். அந்தத் தெய்வமும் தாங்கள் வணங்கிவந்த ஆர்டிமிஸ் என்னும் பெண் தெய்வமும் பல அம்சங்களில் ஒத்திருப்பதைக் கண்ட கிரேக்கர்கள், அவ்விரண்டு தெய்வங்களையும் ஒன்ருக்கி, அதற்குக் கோயில் ஒன்றை எபீஸஸ் நகரத்திலே கட்டினுர்கள். அந்தத் தேவதையை வழிபடுவோரின் தொகை நாளுக்கு நாள் மிகுந்துகொண்டு வரவே, அதற்கு ஏற்பக் கோயிலையும்

அவர்கள் பெரிதாக்கிக்கொண்டே வந்தார்கள். இப்படிப் பல திருப்பணிகள் நடந்தன. ஐந்தாம் முறை திருப்பணி செய்த சிறப்பாகிய பெருங்கோயிலானது சுமார் இரண்டாயிரத்து இருநூறு வருடங்களுக்கு முன் கட்டி முடிக்கப்பட்டது. ஐந்நூறு அறுநூறு வருட காலம் உலகத்தில் அது புகழ் பெற்று விளங்கிக்கொண்டிருந்தது. பிறகு அந் நாட்டைப் படையெடுத்துவந்த அந்நிய நாட்டார் அதைச் சூறையிட்டு, நெருப்புக்கு இரையாக்கிப் பாழ்படுத்தினர். தெய்வத்திருக் கோயில் மண்ணோடு மண்ணாகிவிட்டது. அக்கோயிலிலிருந்த தூண்களின் சிதைவுண்ட அடிப்பாகங்களிற் சில இப்போது லண்டன்மா நகரிலுள்ள காட்சிச் சாலையில் வைக்கப் பட்டிருக்கின்றன.

கிட்டத்தட்ட அதே காலத்தில், அதே நாட்டின் வேறொரு பாகத்தில் ஹெலிகர்னஸஸ் என்னும் இடத்தில் மாஸோலஸ் என்னும் சிற்றரசன் ஒருவன் இருந்தான். அவன் மரண மடைந்ததும் அவனுடைய பிரிவாற்றுமைக்கு மிகவும் வருந்திய அவனுடைய மனைவி அவனுடைய உடலை அடக்கம் செய்த இடத்திலே, அவனுடைய ஞாபகச் சின்னம் ஒன்றை அமைக்கவேண்டும் என்று எண்ணினள். அந்தக் காலத் திலே பல்வகைக் கலைகளுக்கும் பெயர்போன கிரேக்க நாட்டி லிருந்து சிறந்த சிற்பிகளை வரவழைத்தாள். அச்சிற்பிகள் அரசனுடைய சமாதியின் மேலே நீண்ட சதுரவடிவமான ஒரு மேடையைக் கட்டினார்கள். அதற்கு மேலே வேலைப் பாடமைந்த தூண்களை நிறுத்தினார்கள். அதற்கும் மேலே ஒரு தளவரிசையையும், அதன் மேலே நான்கு குதிரைகள் பூட்டிய அழகிய தேரையும் நிறுமித்தார்கள். அந்தத் தேரின் தட்டிலே அரசன் அரசி ஆகிய இருவருடைய பிரதிமைகளையும் வைத்தார்கள். அதைப்போல் அழகிய சமாதியை உலகத்தார் அதுவரையில் கண்டதும் இல்லை கேட்டதும் இல்லை. மாஸோலஸ் அரசனுடைய சமாதி என்பதால் அதற்கு மாஸோலியம் என்று பெயர் வழங்கலாயிற்று. சமாதி செய்த இடத்தில் கட்டப்படும் அழகிய ஞாபகச் சின்னத்தை இன்றளவும் மாஸோலியம் என்று சொல்லுவதிலிருந்து அதன் சிறப்பு ஒருவாறு விளங்கும். ஆனால், மாஸோலஸ் அரசன்

அடைந்த கதியை அவனுடைய சமாதியும் அடைந்து விட்டது!

கிரீஸ் தேசத்துக்கு அடுத்த ஈஜியன் கடலிலே, ஆசியா மைனர் நாட்டின் தென் மேற்குப் பாகத்துக்கு அடுத்தாற் போல் உள்ளது ரோட்ஸ் என்னும் சிறு தீவு. அந்தத் தீவிலே குடியேறிய கிரேக்கர்கள் சூரியதேவனது விக்கிரகம் ஒன்றை அமைத்தார்கள். அதன் உயரம் நூறு அடி. கல்லாலும் மண்ணாலும் கட்டப்பட்டதன்று அவ்வுருவம். செம்பையும் ஈயத்தையும் உருக்கி வார்த்த விக்ரகம் அது. அங்கே உள்ள துறைமுகத்தின் வாயிலுக்குக் காவலாக அப்பெரும் பிரதிமையானது நின்றுகொண்டிருந்தது. அதன் ஆயுள் வெகு சீக்கிரம் முடிந்துவிட்டது. அதை நிலை நிறுத்தி அறுபது வருடங்கள் ஆகுமுன் அந்த நாட்டிலே ஒரு பூகம்பம் உண்டாயிற்று. அப்போது அந்த விக்கிரகம் ஆடிச் சாய்ந்து கீழே விழுந்து துண்டு துண்டாய் உடைந்து போயிற்று. சற்றேறக் குறைய ஓர் ஆயிர வருடகாலம் அது மண்ணோடு மண்ணாய்க் கிடந்தது. பிறகு உடைந்து சிதறிக் கிடந்த துண்டுகளை அங்குள்ளோர் பொறுக்கி எடுத்துப் பழைய வெண்கல விலைக்கு ராத்தற் கணக்காக எடை போட்டு விற்றார்கள்; என்னே கொடுமை!

எகிப்து தேசத்திலே அலெக்ஸாந்திரியா நகரத்துக்குப் பக்கத்திலே உள்ள சிறு தீவு ஒன்றுக்குப் பாரோஸ் என்பது அக்காலத்துப் பெயர். அந்தத் தீவின் கீழ்ப்புறத்திலே எகிப்து நாட்டு மன்னர் மன்னனாகிய இரண்டாம் டாலெமியரசன் கலங்கரை விளக்கம் ஒன்றைக் கட்டுவித்தான். அவ் விளக்கம் ஐந்நூறு அடி உயரமுள்ளதாயும், அடி முதல் சிகரம் வரையில் முழுவதும் வெள்ளை வெளேரென்ற தூய சலவைக் கல்லால் கட்டப்பட்டதாயுமிருந்தது. அதன்மீது வெயில் படும்போது அந்த ஸ்தம்பம் முழுவதுமே ஒளி வடிவமாகத் தோன்றுமாம். அழகும் பயனும் ஒருங்கு சேர்ந்து உருவெடுத்தது அக் கலங்கரை விளக்கம். அதுவும் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது.

பண்டைக் காலங்களிலே எகிப்து தேசமானது நாகரிகத்தில் சிறந்து விளங்கியது. அத்தேசத்து மன்னர்களுக்

குப் பார்வோன்கள் என்று பெயர். அவர்கள் இறந்துபோன பிறகு, அவர்களுடைய உடலுக்குப் பரிமள கந்தங்களிட்டுப் பக்குவப்படுத்துவது அந்நாட்டு முறை. அவர்கள் இவ்வுலகத்தை விட்டுப் பரலோகம் சென்றபொழுது, இம்மையில் அவர்கள் அனுபவித்த சுகங்களை யெல்லாம் மறுமையிலும் அவர்கள் அடையும் பொருட்டு, அவருடைய மனைவியர்களையும், ஏவலாட்களையும், தேர், குதிரை முதலிய வாகனங்களையும், ஆபரணங்களையும், பொன்னையும், விசிறி, சாமரம் முதலியவற்றையும் அவர்களோடு அடக்கம் செய்வது வழக்கம். அவை அனைத்தையும் ஒன்ருக வைக்கும் பொருட்டுக்



பிரமிட் கோபுரம்

கட்டிய பெரிய சமாதிகளுக்குப் பிரமிட்டுகள் என்று பெயர். அடிப்புறத்திலே அகன்று சச்சவுக்கமாகவும், உச்சிப்புறம் சிறுத்து முனையாகவும் உள்ளது அவற்றின் வடிவம். எகிப்து நாட்டிலே சுமார் எழுபத்தைந்து பிரமிட்டுகள் இருக்கின்றன. அவற்றுள் மிகவும் முக்கியமானவை கீஸே என்னும் இடத்திலுள்ள மூன்று பெரிய பிரமிட்டுகள். அவற்றுள் ஒன்று மிக மிகப் பெரியது. அதன் அடிப்புறத்திலே ஒவ்வொரு பக்கத்தின் அளவும் கிட்டத்தட்ட ஒன்றரை மைல் நீளம் உள்ளதாக இருக்கிறது. அதன் உயரம் நானூற்று எண்பத்தோரடி. அதிலுள்ள கற்களைக்கொண்டு சென்னை ராஜதானி, மைசூர்,

திருவாங்கூர், கொச்சி, புதுக்கோட்டை ஆகிய இவற்றைச் சுற்றி ஒரு கற்சுவர் கட்டலாமாம்! கட்டினது போகக் கற்களும் மிஞ்சும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

அது சுமார் நாலாயிரம் வருஷங்களுக்கு முன்னாலே கட்டப்பட்டது. ஆதலால், முற்கூறிய விந்தைகள் எல்லாவற்றைக்காட்டிலும் அது காலத்தில் முற்பட்டது. அதற்குப் பிற்பட்டுத் தோன்றிய மற்ற விந்தைகள் யாவும் அழிந்து போனபோதிலும், இன்றுவரை அது தங்கி நிற்கின்றது. காலம் செல்லச் செல்ல அந்த விந்தை மிகுந்து வருகிறது என்றே சொல்லவேண்டும். ஆயினும் இக்காலத்தில் நாம் அதையுங் கூட அவ்வளவு பெரிய விந்தையாக மதிப்பதில்லை. ஏன்?

அதனினும் பெரிய விந்தைகள் இப்பொழுது நம்முடைய மனதைக் கவர்ந்துவிட்டன. பழைய விந்தைகளுக்கு நமது மனத்தில் இடமில்லாமல் போய்விட்டது. இவ்வாறு நமது சின்னஞ் சிறு மனத்திலே வந்து குடிகொண்ட புதிய விந்தைகள் ஒன்றிரண்டல்ல; அவை எத்தனையோ ஆகிவிட்டன. ஆகாயத்தில் பக்ஷிகளைக் காட்டிலும் உயரமாய்ப் பறப்பது, கடலில் மீன்களைக் காட்டிலும் வேகமாய் நீந்துவது, நிலத்தின்மேல் காற்றைக் காட்டிலும் கடுமையாய்ச் செல்வது, ஓரிடத்திலுள்ளோர் ஒருவர் பல்லாயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ள மற்றொருவரோடு பேசுவது, அவ்வாறே ஒருவரையொருவர் பார்த்துக்கொள்வது, இரும்புப் பெட்டிக்குள் இருக்கும் பொருளையும் பளிங்குப் பெட்டியில் இருப்பதைப்போல் காண்பது, புண்ணில் கனல் நுழையினும் நோவில்லாதிருப்பது, ஆகாசவாணி அசரீரியாய்ப் பேசுவது, எமதூதர்கள் போன்ற கொடிய நோய்களோடு போராடி அவைகளை வெல்லுவது முதலிய விந்தைகள் நாள்தோறும் நிகழ்கின்றன. இவற்றினிடையே கல்லுக்கும் கட்டடத்துக்கும் இடம் ஏது? பழைய விந்தைகள் போயின. புது விந்தைகள் வந்து குவிந்துகொண்டே யிருக்கின்றன.

இவை யாவற்றினும் பெரிய விந்தைகள் இன்னும் ஒன்று இருக்கிறது. என்னவெனில், நாம் வாழும் அற்புத உலகத்தில் நமது கண்ணெதிரில் நிகழ்ந்துகொண்டே யிருக்கும் இத்தனை விந்தைகளையும் நாம் கண்டும் கேட்டும் அநுபவித்

தும் வந்தபோதிலும், இவற்றின் நுட்பங்களைச் சிறிதேனும் அறிந்துகொள்ள முயலாதிருக்கும் விந்தையே, அவ்விந்தை.

### பயிற்சி

1. பொருள் கூறு :—தூய்மையான, புன்னகை, கவர்கின்றன, உப்பரிகை, சூறையிட்டு, பிரதிமை, கலங்கரை விளக்கம், பரிமளகந்தம், ஏவலாட்கள், கனல், அசரீரி.

2. எதிர்ப்பதம் எழுது :—பிரகாசமான, பாக்கியம், இம்மை, சுகம், சிறுத்து.

3. இடைச் சொல் வந்துள்ள வாக்கியங்களை இப்பாடத்திலிருந்து எடுத்தெழுது.

4. பொருள் விளக்கு :—(1) நம்மை நிலைக்க ஒண்ணுத ஆனந்த வெள்ளத்தில் ஆழ்த்திவிடுகிறது. (2) வாடிய மனதைக் குளிர்விப்பதற்காக, (3) மனம் தளிர்த்துத் தழைத்தது.

5. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது :—சற்றேறக்குறைய, குடியேறி, கிட்டத்தட்ட, ஞாபகச் சின்னம், இன்றளவும், சச்சவுக்கமாக.

6. பிரதேசம், பிறதேசம், இரை, இறை :—பொருள் வேறுபாடு என்ன ?

7. அந்தோ—என்ன வகையான சொல் ?

8. அந்த விக்கிரகத்தினது அழகை உலகம் கண்டு, எண்ணிப் பாராட்டிக் கொண்டாடிற்று. (அ) உலகம் என்ன வகையான பெயர்ச் சொல் ? (ஆ) எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் எவை ? (இ) வினையெச்சங்கள் எவை ?

### கேள்விகள்

1. ‘பெரு விந்தைகள் ஏழு’ எனப்படுவன எவை ?

2. நேபுகாத்நேச்சார் என்னும் சக்கரவர்த்தி எவ்விதமான பூந்தோட்டத்தை அமைத்தான் ? ஏன் ?

3. பைடியஸ் என்னும் சிற்பி செய்த விக்கிரகத்தின் அமைப்பைப் பற்றிக் கூறு.

4. எபீஸஸ் நகரத்தில் ஏற்பட்ட விந்தையை விளக்கு.

5. மாஸோலியம் என்பது என்ன ? எங்கு அமைக்கப்பட்டது ? ஏன் ? அதன் அமைப்பை வர்ணி.

6. சூரிய தேவனது விக்கிரகம் யாரால் எங்கு ஸ்தாபிக்கப்பட்டது ? அதன் கதி என்ன ?

7. பாரோஸ் தீவில் கட்டப்பட்டிருந்த கலங்கரை விளக்கம் எத்தன்மையதாய் விளங்கியது ?

8. ‘பார்வோன்கள்’ என்றால் என்ன ?

9. ‘பிரமிட்டுகள்’ என்றால் என்ன ? அவற்றால் நாம் தெரிந்துகொள்ளும் விஷயங்கள் யாவை ?

10. தற்காலத்தில் நமது மனதைக் கவரும் விந்தைகள் யாவை ?

# 10. என்ன விளையாட்டு?

டாக்டர். பி. சுப்பராயன்

நமது நாட்டிலே இப்பொழுது முப்பது நாற்பது வருஷங்களாக மேல்நாட்டு விளையாட்டங்களாகிய கிரிக்கெட், டென்னிஸ், புட்பால் முதலியவற்றின்மீது நமது மக்களுக்கு ஒரு பிரியம் ஏற்பட்டுள்ளதை யாவரும் ஒப்புக்கொள்ள வேண்டும். இது நமது தேசத்தின் நன்மைக்காகவா இல்லையா என்ற பிரச்னை இப்பொழுது நமது நாட்டில்—அதுவும் நமது ராஜ்யத்தில் இருந்து வருகிறது.

இதைப்பற்றி நமது மக்கள் அறிந்துகொள்ளவேண்டியது மிகவும் முக்கியம். இந்த விஷயத்தில் எனது நண்பர் ஒருவர் மேல்நாட்டில் செய்யப்படும் சாமான்களை விற்பதற்காகவே நாட்டில் இவ்விளையாட்டங்களை நமது ஆங்கிலேய சகோதரர்கள் புகுத்தியிருக்கிறார்கள் என்று சில இடங்களில் சொல்லி வந்திருக்கிறார். அதுவுமன்றி, இன்னும் நமது அன்பிற்குரிய சில தலைவர்கள், எதற்காக மேல்நாட்டு விளையாட்டங்கள் என்றும், நமது நாட்டிற்கு அவை யாதொரு அவசியமும் இல்லை என்றும் சொல்லி இருக்கிறார்கள். நமது நாட்டின் விளையாட்டங்களே நமக்குப் போதுமானவை, அன்னிய விளையாட்டங்கள் வேண்டுவதில்லை என்றும் சொல்லி இருக்கிறார்கள். ஆனால், நமது நாட்டின் விளையாட்டங்களும் மேல்நாட்டில் பரவி இருக்கின்றன என்பதை மறந்துவிடுகிறார்கள்.

இதற்கு உதாரணமாக, குதிரையின்பேரில் ஏறி விளையாடும் போலோ (polo) பந்து விளையாட்டத்தைச் சொல்லலாம். இந்த ஆட்டம் நமது நாட்டிற்கு இரான் தேசத்திலிருந்து வந்து, நமது முகமதிய அரசர்களால் ஆடப்பட்டது என்பது சரித்திரத்தின் மூலமாக அறிந்துகொள்ளலாம். இது நமது நாட்டின் வழியாகத்தான் ஆங்கிலேய தேசத்திற்குச் சென்றது. இப்பொழுதுகூட இந்த விளையாட்டத்தில் நமது நாடு ஒரு மேன்மை அடைந்துதான் இருக்கின்றது. இதில் பேர்போன விளையாட்டுக்காரர்கள் அநேகம் பேர் நமது நாட்டில் இருந்திருக்கிறார்கள்; இன்றும் இருக்

கிறார்கள். உதாரணமாக, கோல்கொண்டா சபைக்கு ஆடின ஷாமிர் ஸாபேக், இப்பொழுது ஜெய்பூர் அரசரது கூட்டத்தில் ஆடும் ராவ் ராஜா, அனுத் ஸிங்க், ஜெய்பூர் மகாராஜா முதலியவர்களைச் சொல்லலாம். இவர்கள் வெளிநாட்டிற்கும் போய் நமது நாட்டிற்கு இந்த விளையாட்டத்தில் கீர்த்தி பெற்றுவந்திருக்கிறார்கள்.

இது நிற்க: ஹாக்கி (Hockey) விளையாட்டத்தில் நமது நாடு உலகத்திலேயே கீர்த்தி பெற்றிருப்பதை நாம் மறந்துவிடக் கூடாது. இது மேற்கிலிருந்து வந்த விளையாட்டென்று சொல்லுவதுகூடத் தப்பென்று சொல்லலாம். பழைய காலத்தில் கிரீஸ் நாட்டில் இந்த விளையாட்டம் ஆடினார்கள் என்பதைச் சரித்திர மூலமாக அறிந்துகொள்ளலாம். இதிலும் நமது நாட்டில் பேர்பெற்றவர்கள் அநேகம் பேர் இருக்கிறார்கள். நமது நாடு இந்த ஆட்டத்தில் பிரசித்தி பெற்றதற்குக் காரணம் தியான் சண்ட் அவருடைய தம்பி ரூப் சிங்க், பின்னிகர் முதலியோர். தியான் சண்ட் என்பவர் நமது நாட்டின் ஜனங்களின் குணத்தை எவ்வாறு காட்டலாம் என்பதை அவருடைய ஆட்டத்தினால் ரூபித்திருக்கின்றார். மற்றத் தேசங்களில் இந்த ஆட்டத்தில் தங்களுடைய சரீர பலத்தை உபயோகித்து ஆடுவார்கள். ஆனால் தியான் சண்டோ இதில்லாமல் மனோ சக்தியினால் எப்படி ஆடலாம் என்பதை உலகத்திற்கே வழிகாட்டியிருக்கிறார். இதனால்தான் ஒவ்வொரு நாட்டின் மக்களின் குணாதிசயங்களை அவர்கள் ஓர் ஆட்டத்தை ஆடுவதினால் கண்டுபிடிக்கலாம் என்று நூலாசிரியர்கள் எழுதியிருக்கிறார்கள்.

இன்னொரு உதாரணமாக, கிரிக்கெட் விளையாட்டத்தில் பேர்பெற்ற காலஞ்சென்ற நவநகர் மகாராஜா அவர்களை எடுத்துக்கொள்ளலாம். அவருடைய ஆட்டம் மேல் நாட்டார் ஆட்டம்போல் இல்லாமல், நமது நாட்டு மக்களது குணாதிசயத்தைக் கொண்டு ஆடினதாக மேல்நாட்டார்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அவர் இந்தக் கிரிக்கெட் விளையாட்டத்திற்கே ஒரு புத்துணர்ச்சி கொடுத்தார் என்று ஆங்கிலேயரே ஒத்துக்கொள்ளுகிறார்கள். இதனால் விளையாட்டங்கள் ஒரு நாட்டைத்தான் சேர்ந்தவை என்று யாராலும் சொல்ல

முடியாது. அந்தந்த நாட்டின் குணதிசயங்களை ஒட்டி விளையாட்டங்கள் அந்தந்த நாட்டில் உள்ளன. புட்பால் (Foot-Ball) முதலிய ஆட்டங்களும் அம்மாதிரியே நமது நாட்டில் ஆடப்பட்டு வருகின்றன. ஆகையினால் மேல் நாட்டிலிருந்து வந்த ஆட்டங்களென்று நாம் இவற்றைத் தள்ளிவிடக் கூடாது.

கிரிக்கெட் முதலிய ஆட்டங்களால் நாம் கற்றுக்கொள்ள வேண்டிய விஷயங்கள் அநேகம் உள்ளன. இந்த ஆட்டங்களில் ஒருவன் தன்னுடைய கீர்த்தியையே நினைக்காமல் தன்னுடைய கட்சியின் கீர்த்திக்கே தான் விளையாடவேண்டும் என்பதைக் கற்றுக் கொள்கிறான். அதில் ஒருவன் தானே கீர்த்தி பெற்றாலும் தன்னுடைய கட்சியின் கீர்த்தியை முன்பு வைத்தே அக்கீர்த்தியைப் பெறவேண்டும். இதனால் தேசத்தொண்டு புரிவதற்கும் கற்றுக்கொள்ளலாம். எவனொருவன் தனது கீர்த்தியைக் கருதாமல் தனது கட்சியின் கீர்த்தியை நினைக்கிறானோ, அவன் தன்னை நினையாமல் தனது தேசத்தின் நன்மையை நினைப்பதற்கு இதனால் அறிந்து கொள்கிறான். இதனால்தான் ஆங்கிலேயர்கள் வாடர்லூ போர்க்களத்தில் அடைந்த வெற்றியானது ஈடன் கலாசாலையின் விளையாட்டு ஸ்தலங்களில் அடையப் பெற்றதென்று சொல்லுகிறார்கள்.

அதுவுமல்லாமல், இம்மாதிரி ஆட்டங்கள் ஆடுவதில் உலகம் ஒன்றுபடுவதற்கு ஒரு ஹேது உண்டாகிறது. நமது நாட்டிலிருந்து சென்ற ஹாக்கி கூட்டத்தாரின் வெற்றியினால் நமது நாட்டின் பெயரும் அநேக நாடுகளில் பிரபலமாயிற்று. இதனால் அநேக நாடுகளின் சிநேகமும் நமது நாட்டிற்கு வந்ததென்பதை நாம் மறக்க முடியாது. காலம் சென்ற நவநகர் மகாராஜா ரஞ்சித் சிங் அவர்களால் நமது நாட்டின் பெயர் இங்கிலாந்தில் நன்றாக அக்காலத்தில் தெரிய வந்தது. அதுவுமல்லாமல் இங்கிலாந்திலுள்ள சாதாரண ஜனங்களுக்கு ரஞ்சித்சிங் என்பவரைச் சொல்லாமலே தெரியும். ஒரு ஆசிரியர் எழுதுகின்றார் "கிளாட்ஸ்டன் என்பவர் பிரதம மந்திரியாக இருந்தாலும், அவர் யாரென்று தெரியாத ஜனங்கள் ரஞ்சித் சிங் யாரென்று உடனே

சொல்லிவிடுவார்கள்.'' இவற்றையெல்லாம் நாம் யோசித்துப் பார்ப்போமானால், பல நாடுகளின் சிநேகம் வளருவதற்கு இது ஒரு காரணம் என்பதை நாம் மறக்க முடியாது. ஆகையால்தான் நமது நாட்டிலிருந்து போகும் இந்த விளையாட்டார்கள் நமது நாட்டின் நன்மையை நினைத்துத்தான் நடந்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்த வேண்டியிருக்கிறது.

உலகம் குறுகிவிட்டதென்பதை எல்லோரும் ஒப்புக் கொள்கின்றனர். இந்தத் தருணத்தில் உலகத்திலுள்ள ஜனங்களுக்குள் ஒற்றுமை முக்கியம். அந்த ஒற்றுமை இருந்தால் தான் சண்டை, சச்சரவு வரும் காரணத்தை நீக்கலாம். ஆகையால் இம்மாதிரி விளையாட்டங்கள் வேண்டுமென்று சொல்லுகிறார்களே ஒழிய ஏதோ மேல் நாட்டுச் சாமான்களை விற்பதற்குத்தான் என்று சொல்லவில்லை. முக்கியமாக, டென்னிஸ் விளையாட்டம் உலகப் பிரசித்தி பெற்றதற்குக் காரணம் அமெரிக்கா தேசத்தைச் சேர்ந்தவரான டுவைட் டேவிஸ் என்பவர் கொடுத்த பரிசுதான். இதனால்தான் ஒவ்வொரு வருஷமும் 36, 37 தேசத்தைச் சேர்ந்த ஜனங்கள் இந்தப் போட்டியில் பங்கு எடுத்துக் கொள்ளுகிறார்கள். இதனால் உலக ஜனங்கள் ஒருவரோடு ஒருவர் கலந்து ஒருவரை ஒருவர் அறியச் சந்தர்ப்பமும் உண்டாகிறது. உலக சிநேகமும் இதனால் பரவுகின்றது. இதை நாம் மறந்து விடக்கூடாது.

சிலர், ''எதற்காக இவ்வளவு செலவு செய்து வெளியூரிலிருந்து ஆட்டக்காரர்களை வரவழைக்கவேண்டும்? அதனால் தேசத்திற்கு என்ன நன்மை?'' என்றுகூடக் கேட்கின்றார்கள். அதற்குப் பதில் சிநேக பாவத்தினால் ஜனங்களுக்குள் ஒருவித அன்யோன்யம் வளருவதற்காகவும், நம்பிக்கை உண்டாக்குவதற்காகவும் நமது தேசத்தின் கீர்த்தியை மேலாக்குவிதற்காகவும்தான் அப்படி அன்னிய நாட்டிலிருந்து ஆட்டக்காரர்களை வரவழைக்கின்றோம். அவர்களுடைய நடவடிக்கையால் சிநேகம் பரவுவதுமல்லாமல், நமது நாட்டிலுள்ள ஜனங்கள் அதிலிருந்து அநேக நன்மைகளை உணர்ந்துகொள்ளலாம். இதுதான் மேல் நாட்டு விளையாட்டங்களை ஆடுவதற்குக் காரணம்.

இதற்காக மேல் நாட்டுச் சாமான்களே நாம் வாங்க வேண்டுமென்பது அவசியம் இல்லே. அச்சாமான்களே நமது நாட்டிலேயே தயாரித்துக்கொள்ளலாம். சென்ற பத்துப் பன்னிரண்டு வருஷங்களாக நமது நாட்டில் இச்சாமான்கள் தயாராகி வருகின்றன என்பதையும் ஞாபகமூட்டுவது அவசியம். இப்பொழுது சியால்காட்டில் அநேகம் பேர் கிரிக்கெட், டென்னிஸ், ஹாக்கி முதலிய ஆட்டங்களுக்கு வேண்டிய சாமான்கள் தயாரித்து வருவது எல்லோரும் அறிந்த விஷயம். இப்பொழுது மேல் நாட்டிலிருந்து வரும் சாமான்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தோமானல் இந்தச் சாமான்கள் உயர்ந்த சாமான்களென்று நாம் அறிந்துகொள்ளலாம். இதைத்தான் நமது ஜனங்கள் இப்பொழுது பெரும்பாலும் வாங்க ஆரம்பித்திருக்கிருர்கள். ஆகையால் நமது பணம் நமது நாட்டைவிட்டுப் போவதற்கு இப்பொழுது அவசியமுமில்லே; காரணமுமில்லே. இதை நமது நண்பர்கள் அறிந்துதான் இருக்கிருர்கள்.

இதனுல் நமது விளேயாட்டங்களே மறந்துவிடவேண்டும் என்று நினேக்க வேண்டுவதில்லே. சடுகுடு, கிட்டி முதலிய ஆட்டங்களே நமது ஜனங்களிடையே பரவச் செய்யவேண்டியது அவசியம். ஏழைத் தேசத்தில் ஜனங்களின் ஆரோக்கியத்திற்காகச் செலவில்லாமல் ஆடும் ஆட்டங்கள் மிகவும் முக்கியம். அந்த விஷயத்தில்தான் நமது ஆட்டங்களே நாம் மறந்துவிடக் கூடாதென்று நினேக்கவேண்டி யிருக்கின்றது. ஆனுல், இதைக்கொண்டு மேல் நாட்டு ஆட்டம் வேண்டாமென்று சொல்லவேண்டியதில்லே. இரண்டும் முக்கியம் தான். தேசத்தின் நன்மையை ஒட்டி மேல்நாட்டு ஆட்டங்களேயும் நாம் பழகிக்கொள்ள வேண்டியதுதான் என்பது எனது எண்ணம். நம் ஆட்டங்களே மறந்துவிட வேண்டுமென்பதல்ல. தேசம் வளர்ந்து நாகரீகமுள்ள கீர்த்தி அடைய வேண்டுமென்ருல், இரண்டுவிதமான ஆட்டங்களும் நமக்கு வேண்டியவைதான்.

### பயிற்சி

1. பொருள் கூறு:—பிரசினை, கீர்த்தி, ரூபி, ஹேது, பிரபலம், தருணம், அன்யோன்யம்.

2. நமது—இது எவ்வகையான பெயர்ச்சொல்? வேற்றுமை என்ன? மற்ற வேற்றுமைகளில் எழுது?

3. இப்பாடத்திலிருந்து இடவாகு பெயருக்கு உதாரணம் எழுது.

4. கீழ்க்கண்ட வாக்கியங்களில் செங்குத்துக் கோடுகளிடப்பட்ட இடங்களில் தகுந்த குறிகளை இடுக;

சுந்தரம் கோபுவை நோக்கி | நான் கிரிக்கெட் விளையாடப் போகிறேன் | நீயும் விளையாட வருகிருயா | என்று கேட்டான் |

### கட்டுரை எழுதுதல்

இரண்டு நண்பர்கள் நம் நாட்டு விளையாட்டங்களையும் பிற நாட்டு விளையாட்டங்களையும் பற்றிச் சம்பாஷிப்பது போல் ஒரு கட்டுரை வரைக.

### கேள்விகள்

1. நம் நாட்டு விளையாட்டங்கள் எவை? மேல் நாட்டு விளையாட்டங்கள் எவை?

2. மேல் நாட்டு விளையாட்டங்கள் நமது நாட்டில் புகுந்துள்ளதைப் பற்றிச் சிலர் எவ்விதமான தப்பு அபிப்பிராயம் கொண்டுள்ளனர்?

3. போலோ விளையாட்டம் எந்த நாட்டிலிருந்து நம் நாட்டிற்குள் புகுந்தது? பின்னர் அவ்விளையாட்டம் நம் நாட்டிலிருந்து எந்நாட்டில் பரவியது? எவ்விதம்?

4. வெளிநாட்டிற்குச் சென்று போலோ விளையாட்டத்தில் நம் நாட்டிற்குக் கீர்த்திபெற்று வந்தவர்கள் யார்?

5. தியான் சண்ட் எந்த விளையாட்டத்தில் சமர்த்தர்? அவர் தம் ஆட்டத்தினுல் உலகத்தாருக்கு எடுத்துக் காட்டியுள்ள உண்மை யாது?

6. காலஞ் சென்ற நவநகர் மகாராஜாவுடைய கிரிக்கெட் ஆட்டம் பற்றி ஆங்கிலேயர் கொண்ட அபிப்பிராயம் என்ன?

7. ஆட்டம் ஆடுவோர் என்ன மனக்கோளுடன் விளையாடவேண்டும்? அவ்வித மனக்கோளுடன் ஆடுவோர் அறிந்துகொள்வது என்ன?

8. கிரிக்கெட் முதலிய ஆட்டங்களை ஆடுவதாலும் ஆட்டத்திற்கு ஆட்டக்காரர்களை வெளியிடங்களிலிருந்து வரவழைப்பதாலும் ஏற்படும் நன்மைகள் யாவை?

9. நம் நாட்டு கிரிக்கட் முதலிய ஆட்டங்களுக்கு வேண்டிய சாமான்கள் தயாரிக்கும் இடம் எது?

10. நம் நாட்டு ஆட்டங்களின் தன்மைகளையும் அவற்ருல் ஏற்படும் நன்மைகளையும் கூறு.

# 11. சீதக்காதி

அப்துல்காதிர், எம். ஏ.

பதினேழாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் திருநெல்வேலிச் சீமையிலே பெரியதோர் பஞ்சம் தோன்றியது. உணவு அரிதாயிற்று. நெல்லும் பொன்னும் நிகர விற்கும் நிலை வந்தது. இந்நாள் போன்று அந்நாளில் போக்குவரவு சாதனங்கள் அமையாமையின் மக்கள் பஞ்சத்தால் பரிதவிக்கலாயினர். பசியும் பிணியும் பல்கின. துயரமும் தொல்லையும் மல்கின. கண்ணீரும் கம்பலையும் கரை புரண்டன.

இத்தகைய இக்கட்டான காலத்து, காயல் துறைமுகத்தருகுள்ள கீழ்க்கரை என்னும் கிராமத்தில் ஒரு தனிகர் வாழ்ந்து வந்தார். அவர் பெரு வணிகர். காயல் துறையிலிருந்து அவருடைய கலங்கள் கீழ்க்கடல் மேல்கடலெல்லாம் சென்று திரவியம் தேடித் திரும்புவன. எனவே, இவரது நெற்களஞ்சியத்திலே இரண்டு மூன்றுண்டுகளாகச் சேமித்து வைக்கப்பட்ட நெற்குவியல்கள் நிறைந்திருந்தன. பிரபுவின் காரியக்காரர் மாரி பொய்க்கவே மட்டற்ற ஊதியம் அடையலாமென மகிழ்ந்திருந்தனர்.

ஆனல் இப்பிரபு பெருஞ் செல்வம் படைத்திருந்தது போன்று பெரிய உள்ளமும் உடையவராயிருந்தார். நாட்டில் மக்கள் உணவின்றி உயிர் விடுவதையும், களஞ்சியத்தில் கதிர்கள் வீணே மண்டிக் கிடப்பதையும் கண்டார். உளம் நெகிழ்ந்தார். பணியாளர் எத்துணைத் தடுத்துக் கூறினும் தடைபடாது, களஞ்சியத்தைத் திறந்து ஏழை மக்கட்கு அள்ளி அள்ளி வழங்கினர். அவரது வரையா வண்மையின் முன்னர் பஞ்சம் பஞ்சாய்ப் பறந்தது. பசிப்பிணி மருத்துவன் எனப் பரிநாமமும் இப்பிரபுக்கு வந்தது. இவரே சீதக்காதி. இவரது வண்மையை வியந்து ஒரு தமிழ்ப் புலவர் பாடியுள்ளதைப் பாருங்கள்.

“ ஓர் தட்டிலே பொன்னும் ஓர் தட்டிலே நெல்லும் ஒக்கவிற்கும்
கார் தட்டிய பஞ்சகாலத்திலே தங்கள் காரியப்பேர்
ஆர் தட்டினுந் தட்டு வாராம லேயன்ன தானத்துக்கு
மார்தட்டியதுரை மால் சீதக்காதி வரோ தயனே ”

இவரது இயர்பெயர் ஸையத் காதிர் என்பது. கொடை

யின்பம் நோக்கித் தமிழ்ப் புலவர் சீதக்காதி எனத் திரித்துக் கொண்டனர். கி. பி. ஏழாம் நூற்றாண்டு தொட்டுத் தமிழ் நாட்டில் வாணிபம் கருதி வந்துறைந்த அராபியர் வழிவந்த வர் இவர். இவரது சரித்திரத்தைத் தொகையாகக் கூறுவ தற்குச் சான்றுகள் கிடைத்தில. தனிப்பாடல் திரட்டில் சில செய்யுட்களே யுள்ளன. ஆகவே, வேறு சான்று தேடவேண் டியதாயிற்று. அம்முயற்சியின் பலன் இக்கட்டுரை.

சீதக்காதியின் சீரும் பேரும் இந்திய நாடெங்கணும் பரவ, அவை கேட்ட முகலாயச் சக்கரவர்த்தி ஔரங்கசீப் அவரைத் தனது பிரதிநிதியாக (Ambassador) சேதுபதி யிடம் நியமித்தனன் என்ற வழக்காறு உண்டு. அஃதெவ் வாறாயினும், இவர் விஜய ரகுநாத கிழவன் சேதுபதியின் முழு அன்பையும் பெற்று, அவனுக்கு உற்றுழி உதவும் நட் பினராய்த் திகழ்ந்தனரென்பது ஒரு தலை. விஜயரகுநாதப் பெரிய தம்பி மரைக்காயர் என்ற பிறிதொரு பெயரும் இவ ருக்கு வழங்கி வந்ததென்பது இவர் பேரில் பாடப்பட்டுள்ள 'நொண்டி நாடகம்' என்ற நூலிலிருந்து அறியக் கிடக் கின்றது. அக்கால மன்னரின் பெயரால் அவர் தம் அமைச் சரும் நண்பரும் அழைக்கப்படுவதொரு பெரு வழக்குத் தமிழகத்துக்குப் புதியதல்ல. சீதக்காதி சேதுபதியின் பெயரைக் கொண்டிருந்தன ரென்பதொன்றே அவருக்கும் சேதுபதிக்கும் எத்தனைத் தொடர்பிருந்தது என்பதற்குப் போதிய சான்றாகும். சேதுபதி இராமநாதபுரத்தில் அரண் அமைக்கத் தொடங்கியக்கால், சீதக்காதி ஆள்வலியும் பொருள் வலியும் அவனுக்கு உதவினரென்று ராம்நாட் மான்யுவலில் (Ramnad Manual) குறிப்பிடப்பட்டிருப்பது கருதத்தக்கது.

அகன்ற உள்ளமும் சிறந்த வன்மையும் கைவரப்பெற்ற இவர் தமிழ் மொழியின்பாலுள்ள தனிப்பெருஞ்சுவை இனி மையால் ஈர்க்கப்பட்டார். ஆரிய மன்னனும் பிருகத தத் தனை அடிமை கொண்ட தமிழணங்கு சீதக்காதியைத் தன் சீர் பரவும் தொண்டனாகக் கொண்டதில் வியப்பொன்று மில்லை. தமிழ்ப் பற்றுள்ள தனிகனைத் தமிழ்ப் புலவர் விடுவரோ ?

நாலுதிசையிலிருந்து புலவர் வந்து இப்புலவரைக் குழுமிப் பரிசுகொண்டு தங்கள் பசி நீக்கினர். இங்ஙனம் சீதக்காதியினல் புரக்கப்பட்ட புலவருள் சந்தம் வல்ல படிக்காசுப் புலவரும், சீருப் புராணம் பாடிய உமருப் புலவரும், நமச்சிவாயப் புலவரும் சிலராவர். இனைய புலவர் அவ்வள்ளலின் புகழைப் பரக்கப் பாடியுள்ளனர்.

படிக்காசுப் புலவர் 'சூரியகாந்தி காய்ந்து சிவந்தது; பாவாணர் நெஞ்சம் பன்னூல் ஆய்ந்து சிவந்தது; ஆனல் சீதக்காதியின் கரங்களோ இரவலர்க்கு அனுதினமும் ஈந்து சிவந்தது' என நயம்படக் கூறியுள்ளார். மற்றோரிடத்தில் 'செம்பொன் பிடிபிடியாய் ஓயாமலீபவன்' என்று கூறுகிறர்.

இங்ஙனம் வரையா வண்மையால் வான்புகழ்கொண்ட சீதக்காதி 'பிறந்தவர் இறந்தேயாகவேண்டு' மென்றும் பெற்றியான் இறந்துபட்டனராக தமிழ்ப்புலவோர் கையற்றுக் கலங்கினர். நமச்சிவாயப் புலவர் மனமொடிந்து கூறுவது இது: 'இனிப் பூமகள் இருந்தென்ன! புவிமகள் இருந்தென்ன! நாமகள் இருந்தென்ன! என்று சீதக்காதி இறந்தாரோ அன்றே புலமையுமல்லவா இறந்துவிட்டது.'

படிக்காசுப் புலவர் கூறியது வருமாறு:—

"மறந்தாகி லுமரைக் காசுங் கொடாமட மாந்தர் மண்மேல்
இறந்தாவதென்ன இருந்தாவதென்ன; இறந்து விண்போய்ச்
சிறந்தாலுங் காயற் றுறை சீதக் காதி திரும்பிவந்து
பிறந்தா லொழியப் புலவோர் தமக்குப் பிழைப்பில்லையே."

சீதக்காதி மாண்டதை அறியாத ஒரு புலவர் பசியால் வாடி, வெயிலால் உலர்ந்து, நாடும் காடும் கடந்து, காயல் வந்து சீதக்காதியிடம் பரிசு பெறுவான்வேண்டி வினவ, அவர் இறந்தனர் எனக்கேட்டு ஏங்கிச் சமாதியண்டை சென்று அழுது நின்றனராக அவ்வமயம் 'சமாதியுள்ளிருந்து அவ்வள்ளலின் கணையாழி வெளிப்பட்ட தென்றும், அதைப்பெற்று அப்புலவர் தம் வறுமை நீங்கின ரென்றும் கர்ண பரம்பரையாக வழங்கி வருகின்றது. இது பற்றியே 'செத்தும் கொடுத்தான் சீதக்காதி' என்ற பழமொழி எழுந்துள்ளது.

இவர் வரிசை யறிந்து வழங்கும் வள்ளல் என்பதோடுநீதியும் நேர்மையும் உடையரெனக் கொள்ளற்குச் சான்றுள்ளது. இன்றும் கீழ்க்கரையில் இவர் வாழ்ந்திருந்ததென்று கூறப்படும் வீடொன்றிருக்கிறது. அதன் முனையில் ஒரு புகுதி மாத்திரம் சுவர் எழுப்பப்படாமல் விடப்பட்டுள்ளது. விடப்பட்ட இப்பகுதியால் அவ்வீட்டில் அழகு கெட்டு விகாரமாகத் தோன்றுகிறது. இதற்கவ் வூரார் சமாதானம் கூறும் மாத்திரத்தான்; அம்மூலை நிலம் ஒரு முதுமகளது என்றும், சீதக்காதி வீடு கட்டுங்கால் அம்முதியளது விருத்தாந்தம் அறியப்பட்டில தென்றும், தனதலதைத் தான் கொள்ளலாகாதென்றும் அறநெறிப் பாற்பட்டுச் சீதக்காதி அங்ஙனமே அந்நிலத்தை விட்டுவிட்டனரென்றும் கூறுவர். இவ்வள்ளலின் பொது நோக்கும் நேர்மையும் பொன் போன்று போற்றத்தக்கன அன்றோ? இவர் போன்று இன்று எத்தனை வள்ளல்கள் உள்ளனர்? சீதக்காதி, மறைவுடன் புலவர் நாவும் சிறந்த பாடலை மறந்துவிட்டது.

"இனிப்பா டுநரு மில்லைப் பாடுநர்க்
கொன்றீ குநருமில்லைப்
பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்
சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்
றீயாது வீயு முயிர் தவப் பலவே."

என்றனர் ஔவையாரும்.

பயிற்சி

1. நூற்றாண்டு—பதம் பிரித்து எழுது.

2. பொருள் கூறு:—பல்கின, மல்கின, இக்கட்டு, தனிகர், திரவியம், சான்று, குழுமி, புரக்கப்பட்ட, கணையாழி.

3. பூமகள், புவிமகள், நாமகள்—இப்பெயர்கள் யார் யாரைக் குறிக்கின்றன?

கேள்விகள்

1. சீதக்காதி என்பவர் யார்? இவரது இயற்பெயர் என்ன? அப்பெயர் திரிபுற்ற காரணம் யாது?

2. சீதக்காதியாரிடம் பரிசு கொண்டு சென்ற புலவர்கள் யார்?

3. படிக்காசுப் புலவர் சீதக்காதியாரின் வள்ளண்மையைப் பற்றி எங்ஙனம் வியந்து கூறுகிறார்?

4. 'செத்தும் கொடுத்தான் சீதக்காதி' என்னும் பழமொழி வழங்கப்படுவது ஏன்?

5. சீதக்காதியார் நீதியும் நேர்மையும் உடையவர் என்பதை ஓர் உதாரணத்தால் விளக்கு.

# 12. உரை நடை கண்ட உத்தமர்

ச. குருஸ் அந்தோனி, பி. ஓ. எல்.

நம்முடைய மொழி மிகப் பழமையானது. இது பல வேறு காலங்களில் பலவிதமாக வளர்க்கப்பட்டு பல மாறுதல் களை அடைந்து வந்தது. மாறுதல்களை அடைந்தது என்ற வுடன் நீங்கள் மாறிவிட்டது என்று நினைத்தல் கூடாது. அஃதாவது நூல் இயற்றுவதிலும் படிப்பதிலும் ஒரு சிறிது மாறுதல் ஏற்பட்டது. பலவேறு மாறுபாடுகளில் 17-ம் நூற் ருண்டில் அடைந்த மாறுபாடும், திருத்தமும் நமது கருத்தில் இருக்கவேண்டியன. இக்காலத்தில் மேல் நாட்டார் நம் நாடு போந்து நூல் அமைக்கும் துறையிலும் படிக்கு முறையிலும் புதுவழி வகுத்தனர். அவ்வைரோப்பியர்களில் தலை சிறந்து விளங்கிப் பெரும் புகழ் பெற்று விளங்குகின்றவர் இருவர். அவருள் ஒருவர் வீரமாமுனிவர் என்னும் கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கியாவர்.

இவர் இத்தாலிய நாட்டில் காஸ்திக் கிளியோனே என்ற ஊரில் 1680-ம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 8-ம் நாளில் பிறந் தார். இளமையிலேயே பல மொழி வல்லுநராகி 'இயேசு மன்றத்தில்' (Jesuit society) சேர்ந்தார். அம் மன்றத்தின் தலைவர், அடிகளைத் தமிழ் நாட்டுக்கு அனுப்பி அருள்மறை யைப் போதிக்க ஆணையிட்டார். அப்பணியைத் தலைமேற் கொண்ட ஐயர் அக்காலத்தில் போர்த்துக்கீசியருக்குத் தலை நகராக விளங்கிய கோவா என்னும் ஊரை அடைந்து கிறிஸ்து சமயத்தைப் பரப்புவதற்கு வேண்டிய வழிகளை எல்லாம் வகுத்தார். அவற்றுள் ஒன்று உள்நாட்டு மொழி களைக் கற்றுச் சிறந்த நூல்கள் இயற்றுவது.

மேல் நாட்டிலுள்ள கிறிஸ்து பெருமான் அடியார்கள் நம் நாட்டுக்கு வந்து தொண்டாற்றுவது உங்களுக்குத் தெரியும். அவர்கள் நமது தாய் மொழியைக் கற்றிருந்தால் தான் நமது மக்களோடு அளவளாவி நன்கு ஊழியஞ்செய்ய முடியும். எனவே, நம் நாட்டுக்குக் கிறிஸ்து பெருமான் பொன்னுரைகளைப் பரப்ப வந்த பெஸ்கி அடிகள் தமிழை ஐயந்திரிபறக் கற்றுத் தமக்குப் பின் வருவோர் எளிதில்

கற்றுக்கொள்ளச் சிறந்த வழி வகுத்தார். அதன் பயனே 'கொடுந் தமிழ்' என்னும் நூல். இதை அடிகள் இலத்தீன் மொழியில் இயற்றினர்.

அன்றி இக்கொடுந் தமிழ் நூலில், தமிழ் மக்களிடையே வழங்கும் வழக்குச் சொற்களும் வழக்காறுகளும் இன்னவை எனக் கூறப்பட்டுள்ளன. சாதாரணமாக அயல் நாட்டினர் பேசுவதற்கு வேண்டிய வழிகளும், வகைகளும் விரிவாகக் கூறப்படுகின்றன. சமயத் தொடர்பான சாதாரணச் சொற்களுள் ஆண்டுகள், மாதங்கள், நாள்கள் இவைகளின் பெயர்கள் முதலியவற்றை விரிவாகக் கூறுகின்ருர்.

நமது மொழி மிகத் தொன்மை வாய்ந்து, சில சிறப்பியல்புகளைப் பெற்றிருப்பினும், நம் மக்கள் இம்மொழியை எளிதில் படிப்பதற்கு வழிகோலவில்லை. இக்குறையை நீக்குவதற்கு ஓர் அகராதி இயற்றினர். இதற்கு முன்னர், சொற்களின் பொருளைத் தெரிந்துகொள்ள வேண்டுமானல் நிகண்டுகளைப் பாராமல் படித்திருக்கவேண்டும். அன்றேல் சான்ருேர்களிடத்தில் பாடங் கற்றிருக்கவேண்டும். இப்பொழுதோ அறியாத சொற்பொருள்களைத் தெரிந்துகொள்ள அகராதியைக் கையாளுகின்ருேம்! எழுத்துக்களின் வரிசையான முறையில் சொற்களும் அதன் பலவேறு பொருள்களும் காணக்கிடக்கின்றன. அவைகளில், சந்தர்ப்பத்துக்கேற்ற சொற்களை எடுத்துக்கொள்ளுகின்ருேம்; இது நமக்கு எவ்வளவு எளிதாயிருக்கிறது. இவ்விதமாக நாம் கையாளும் தமிழ் அகராதிகளுக்குத் தாயாக விளங்குவது நமது முனிவர் பெருமான் இயற்றித் தந்த சதுரகராதி என்பதை நாம் மறக்க முடியாது.

அக்காலத்தில் எழுந்த நூல்கள் எல்லாம் செய்யுளால் ஆயனவே. அவைகளுக்குப் பொருள் விளக்கம் உரை நடையில் இயற்றி இருந்தார்கள். எனவே உரை யிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்கள் இருந்தன என்பது தெரியும்; என்ருலும், உரை நடையாகவே முழுவதும் அமைந்த நூல்கள் இல்லை. படிப்போர் விழுந்து விழுந்து சிரிக்கும்படியான கதைகளும் நவீனங்களும் உரை நடையில் இருந்தில. இவ்வாறு சிரிப்பும் கிளர்ச்சியும் உண்டாக்கச் சிலேடையாகப்

பாடுவதுண்டு. இதைக் கற்றறிந்த பெரியோர்களே சுவைத்து அனுபவிக்கக் கூடும். ஆனால், நம் அடிகள் எல்லோரும் படித்து இன்புற 'அவிவேக பூரண குரு கதை' ஒன்றை எழுதித் தந்தார். அது படிக்கப் படிக்க இன்பந் தருவதாகும். பிற்காலத் தெழுந்த நவீனங்களுக்கு இந்நூலே தாயாயிருக்கின்றது. உங்கள் தமிழ்ப்பாடத் தொகுப்பில் அக் கதைகளில் ஒரு பாகம் தெரிந்துகொள்ளப்பட்டிருக்கிறது. இந்த உரை நூலேயன்றி 'வேத விளக்கம்' 'வேதியர் ஒழுக்கம்' 'ஞானம் உணர்த்துதல்' 'பேதக மறுத்தல்' முதலிய உரை நடை நூல்களை இயற்றியுள்ளார். இவை செந்தமிழ்ச் சுவை நிரம்பியுள்ளன. மனக் கருத்து வெளிப்படுந்திறம் மங்கா மாண்பை உடையன. கருதிய பொருள் விளக்கம் உவமைகள் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் தன்மையன.

அன்றி அடிகளுடைய செய்யுள் இயற்றுந் திறன், தமிழர் மூக்கில் விரல் வைத்து வியக்கும் பான்மையது. இயேசு பெருமானை வளர்த்த சூசைமா முனிவரின் சரிதத்தை இலக்கிய முறைப்படி இன்பமாகப் பாடியுள்ளார். அந் நூலின் பெயர் தேம்பாவணி. செந்தமிழ் மணம் கமழக் கவி யாத்திருக்கின்றனர்; சந்தர்ப்பத்துக்கேற்ற ஓசையும், நீரொழுக்குப்போன்ற சொற்களின் தொடரும், ஆசையைப் பெருக்குவனவாகும்; நூலைப்படித்துச் சுவைத்துப் பாருங்கள். இன்னும், திருக்காவலூர்க் கலம்பகம், அன்னை அழுங்கல் அந்தாதி, தனிப்பாடல்கள், வண்ணம் முதலியவைகளைப் பாடியிருக்கின்றார்.

இலக்கியத் துறையில் படித்து இன்றமிழ் நூல்கள் பல பாடினது மன்றி இலக்கணமும் இயற்றியுள்ளார். தமிழிலுள்ள எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி முதலிய இலக்கணங்களைத் தொன்னூல் விளக்கமாகச் செய்துள்ளார். இந்நூலின் சிறப்பியல்பு யாதென்றால், சில இலக்கணங்களை மிகச் சுருக்கி எளிதில் தெரிந்துகொள்ளும்படியாகக் கூறினது எனலாம். அவைகளில் 'குற்றியலுகரம் ஒன்று.' இக் குற்றியலுகரத்தை எந்த இலக்கணங்களாலும் எளிதில் கூற முடியவில்லை. அடிகள் அருமையாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள்.

இவரைத் தமிழ்ச் சீர்திருத்தவாதி என்று கூறினுல் அது குற்றமாகாது. இவர் காலத்தில் குற்றெழுத்திற்கும் நெட்டெழுத்திற்கும் வேறுபாடு காணமுடியாத நிலையில் எழுதி வந்தார்கள். இவர் நாம் எளிதில் கண்டுகொள்ள, எழுத்துக்களின் உருவத்தைச் சிறிது மாற்றினுர். இவ்வாறு தமிழர் மறந்தாலும் தமிழ் மறக்காத பணியாற்றி 1742-ம் ஆண்டில் இறைவன் திருவடி நிழலை அடைந்தார்.

## பயிற்சி

1. பொருள் கூறு :—ஐயந்திரிபற, அளவளாவி, பழமொழி, வல்லுநர், மஞ்றம், வழிகோலவில்லை.

2. பணி—பலபொருள் கூறு.

3. முனிவரவர்கள் இயேசு பெருமானை வளர்த்த சூசைமா முனிவரின் சரித்திரத்தை இலக்கிய முறைப்படி இன்பமாகப் பாடியுள்ளார் :— இந்த வாக்கியத்தின் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் கூறு. வாக்கியத்தில் வந்துள்ள பெயரெச்சம், இடைச்சொல் இவைகளைக் குறிப்பிடு.

4. கீழ்க்கண்ட வாக்கியத்தை மூன்று தனி வாக்கியங்களாகப் பிரித்து எழுது :—

நம் நாட்டுக்குக் கிறிஸ்து பெருமான் பொன்னுரைகளைப் பரப்ப வந்த பெஸ்கி அடிகள், தமிழை ஐயந்திரிபறக் கற்றுத் தமக்குப் பின் வருவோர் எளிதில் கற்றுக்கொள்ளச் சிறந்த வழி வகுத்தார்.

## கேள்விகள்

1. உரை நடை கண்ட உத்தமர் என்று கூறப்படுபவர் யார்? அவ்விதம் அவரைக் கூறுவது எவ்விதம் பொருந்தும்?

2. வீரமா முனிவரது இளமைப் பருவத்தைப் பற்றிக் கூறு.

3. வீரமா முனிவர் தமிழ் நாட்டுக்கு வந்ததும் மேற்கொண்ட பணி யாது?

4. ஐயரவர்கள் 'கொடுந்தமிழ்' என்னும் நூலை இயற்றியதன் காரணம் என்ன? இவர் வேறு என்னென்ன நூல்களை இயற்றியுள்ளார்?

5. தேம்பாவணி என்னும் நூல் கூறும் விஷயம் யாது?

# 13. பட்டு

டாக்டர் பா. நடராஜன், டி.லிட்.

பட்டு நெசவு இந்தியாவின் மிகப் பழைய தொழிலென்பதற்கு ஐயமில்லை. "பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும், கட்டு நுண் வினைக் காருகர் இயற்கை" என்பது சிலப்பதிகாரம். ஆனால் போர்த்துகீசியர் இந்தியாவுக்கு வந்து வாணிபம் தொடங்கிய பிறகுதான், இந்தியப் பட்டு ஐரோப்பாவில் அதிகமாக பரவலாயிற்று. அதை யறிந்த ஐரோப்பிய வியாபாரக் கம்பெனிகள் இங்கு வந்து பல பட்டு நெசவாளர்களை வேலைக்கமர்த்தி அவர்களுக்கு முன் பணம் கொடுத்துத் தொழிலை நடத்தினார்கள். இதனால் தொழில் சிறப்படைந்ததேனும், தொழிலாளர் சுதந்திரம் போய்விட்டது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் கிழக்கிந்திய வர்த்தகக் கம்பெனியார் இங்கிலாந்துக்கு அனுப்பிய ஏற்றுமதிகளில் பட்டு ஒரு தனியிடம் பெற்றிருந்தது. இதனால் இங்கிலாந்திலுள்ள பட்டு நெசவுத் தொழிலாளர் பாதிக்கப்படவே, இந்தியப் பட்டு நெசவுச் சரக்குகளை இறக்குமதி செய்யலாகாதென்ற கிளர்ச்சி பிறந்தது. அதன் பயனாகக் கம்பெனியார் மூலப்பொருளான பட்டு நூலையே இறக்குமதி செய்யலானார்கள். பிறகு இந்தியப் பட்டு நெசவுத்தொழில் ஓங்கவே இல்லை.

ஆயினும் வங்காளம், கூர்ச்சரம், மைசூர், மதுரை, தஞ்சாவூர் முதலிய இடங்களில் உள்நாட்டுத் தேவைக்கு வேண்டிய உற்பத்தி நடந்துகொண்டே வந்தது. இதிலும் காலப்போக்கில் சோர்வு ஏற்பட்டது. உள்நாட்டுப் பிரபுக்களும், தனவந்தரும் நாளடைவில் நலிவடைந்தனர்; சீனா, ஜப்பான் போன்ற வேறு நாட்டுத் தொழிலின் போட்டியும் புகுந்தது.

அழிந்துவரும் பட்டு கை நெசவுத் தொழிலின் இடத்தை நிரப்பப் பட்டுமில் நெசவுத் தொழில் தோன்றவில்லை. இந்தியா முழுவதும் மொத்தம் 12 பட்டு நெசவு மில்கள்தான் இன்று இருக்கின்றன. நாட்டில் உற்பத்தியாகும் பட்டுநூல் ஏராளம்; எனினும் பட்டு நெசவு மில்கள் பெருவாரியாகத் தோன்றாமைக்குப் பற்பல காரணங்கள் உண்டு. வெளிநாட்டு ஏற்றுமதியில் சிறப்படைதற்குரிய இழை நயம் இந்தியப்

பட்டு நூலுக்கில்லை. உள் நாட்டிலோ, பட்டுக்கிருக்கும் தேவை சொற்பமே. பெருவாரியான மக்கள் ஏழைகள். பட்டுக்கும் அவர்களுக்கும் எட்டாத் தொலை. அன்றியும், ராஜ்யங்கள் தோறும் பட்டுடையில் பெரிய வேற்றுமை களிருக்கின்றன. தனித்தனி விருப்பங்களைப் பூர்த்திசெய்யக் கைத்தறிகளே ஏற்ற கருவி. ஜரிகை யில்லாத பட்டாடை அதிகமாக 'விரும்பப்படுவதில்லை. இயந்திரங்களில் ஜரிகை போடுவது இயலாது. பட்டு நெசவுக்கு மிக நுட்பமான இயந்திரங்களும், கைதேர்ந்த இயந்திரத்தொழிலாளரும் வேண்டும். இவை நாட்டில் கிடைத்தல் அருமை. அரசாங்க ஆதரவும் குறைவு. இவைகள் சீர்படும்போதுதான் பட்டுத் தொழில் தலையெடுக்கக் கூடும்.

தக்க ஆதரவு பெருவிட்டால் நாட்டுப் பட்டுத் தொழில் விரைவில் அழிந்துவிடுமென்று பட்டு மில் முதலாளிகளும் பிறரும் அரசாங்கத்தாரிடம் விண்ணப்பித்தனர். அதன் பயனாக டாரிப் போர்டு ஒன்று நியமனமாகி விசாரணை நடந்தது. அவர்கள் அறிக்கை வரும் வரையிலும் தற்காலிக மாக ஒரு சிறு அளவுக்கு வரிப் பாதுகாப்பு அளிக்கப்பட்டது. சமீபத்தில் போர்டாரின் அறிக்கையும் வெளிவந்துள்ளது. காப்பு வரிக்குச் சாதகமாக அவர்கள் சிபார்சைச் செய்துள் ளார்கள். ஆனால் யுத்தத்தினால் இயல்பாகப் பட்டின் விலை ஏறியிருப்பதே தகுந்த காப்பாயிருக்கிறதென்றும், தற்காலிக மாகப் போடப்பட்ட வரி மட்டும் நீடிக்கலாமென்றும், பின்னர் பார்த்துக் கொள்ளலாமென்றும் அரசாங்கத்தார் முடிவு செய்து விட்டனர்.

### பயிற்சி

1. குற்றியலுகரத்திற்கு இரண்டு உதாரணங்கள் கொடு.
2. 'மதி' விகுதி பெற்ற இரண்டு தொழிற் பெயர்களை எடுத் தெழுதுக.

### கேள்விகள்

1. பட்டு நெசவு இந்தியாவின் மிகப் பழைய தொழிலென்பதற்கு ஆதாரம் என்ன?
2. நம் நாட்டில் பட்டு நெசவு மில்கள் பெருவாரியாகத் தோன்றாமைக் குக் காரணங்கள் என்ன?
3. பட்டுத் தொழில் தலையெடுக்க என்னென்ன விஷயங்கள் சீர் படுதல் வேண்டும்?

# 14. உழைப்பும் தன்னம்பிக்கையும்

**வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை**

காலஞ்சென்ற அமெரிக்க விஞ்ஞான சாஸ்திர நிபுண ரான எடிசனுடைய வெற்றியின் இரகசியத்தை நீங்கள் அறிந்துகொள்ள விரும்புகிறீர்களல்லவா? அதைக் குறித்து அவர் கூறுவது வருமாறு :—

"எனக்கு அதிர்ஷ்டத்தில் நம்பிக்கையே கிடையாது. அதிர்ஷ்டமென்ற ஒன்று இருக்குமானுல் நான் உலகத்தி லேயே பெருந் துரதிர்ஷ்டசாலியாகத்தானிருந்திருக்க வேண் டும். எனது வாழ்க்கையிலே ஒரு தடவைகூட அதிர்ஷ்டம் ஏற்பட்டதில்லே. எனக்குத் தேவையான ஒன்றைச் செய்ய நான் முயலுவேனுயின் எனக்குத் தேவையற்ற பலவும் ஒன்றன்பின் ஒன்ருகத் தென்படத் துவங்குகின்றன. எனக் குத் தேவையில்லாத தொண்ணூற்றென்பது பொருள்களைக் கண்டு பிடித்த பிறகுதான் நான் எதிர்பார்த்துக் கொண் டிருக்கும் நூருவது பொருள் எனக்குப் புலனுகின்றது. இது மிகவும் கடினமான அதிர்ஷ்டமல்லவா?

"உண்மையில் எனக்கு நல்ல அதிர்ஷ்டத்திலும் நம் பிக்கையில்லை துரதிர்ஷ்டத்திலும் நம்பிக்கையில்லையென்று உங்களுக்குச் சொல்லிவிடுகிறேன். பல மனிதர்கள் சில விஷயங்களைக் கண்டுபிடிக்க முயன்று பின்னுல் விட்டு விடு கிருர்கள். நானே எதைக் குறித்து முயற்சி செய்கிறேனே அது கிடைக்கும் வரையில் ஒரு பொழுதும் பின் வாங்குவ தில்லை. அதிர்ஷ்டசாலி என்று நினைக்கப்படும் எனக்கும் துரதிர்ஷ்டசாலிகளென்று தங்களை நினைத்துக்கொள்ளும் மனிதர்களுக்குமுள்ள வித்தியாசம் இதுதான். எனக்கு ஏதோ அசாதாரணமான சக்தியிருப்பதினுலேயே நான் செய்துள்ள காரியங்கள் என்னுலியன்றிருக்கின்றனவென்று பலர் நினைத் துக்கொண்டிருக்கிருர்கள். அது உண்மையன்று. புத்தி சாலியான எந்த மனிதனும் நான் செய்துள்ள காரியங்களைச் செய்ய முடியும். ஆனுல், பிடிவாதமாக அவன் எடுத்த காரியத்தில் ஈடுபடவேண்டும்; நமக்குத் திருப்தியுண்டாவ தற்காக நல்லதெதுவும் தானுக உதயமாகி விடாது என்பதை

அவன் நினைவு கூர்தல் வேண்டும். நாமே அதை உதயமாகும்படி செய்ய வேண்டும். மேதாவித் தன்மை யென்பது நூற்றுக்கு ஒரு பங்கு அருளும், தொண்ணூற்றென்பது பங்கு வியர்வை சொட்டப் புரியும் உழைப்புமே யாகும்.''

நமது அதிர்ஷ்டத்தில் பெரும் பகுதியையும் உருவாக்கும் உழைப்பிற்குப் பெரும் பொறுமையும் விசேஷமான தன்னம்பிக்கையும் இன்றியமையாத ஊன்றுகோலாகின்றன. எடிசனைப் போன்ற பேராற்றல் வாய்ந்த நிபுணர்களின் சரித்திரங்களையும், வீரபுருஷர், வீரப் பெண்மணிகள் வரலாறுகளையும் கூருத்தூன்றிக் கற்போமாயின், அவர்கள் எவ்விதமாக வாழ்க்கையில் வெற்றியடைந்தனரென்பது இனிது புலனாகும். வெற்றி வீரர்களான சிவாஜி, நெப்போலியன், குரு கோவிந்த ஸிங் முதலியவர்களும் பிரபல விஞ்ஞானக் கலைஞரும் ஒப்பற்ற தன்னம்பிக்கை, எத்தகைய இடையூறுகளுக்கும் சலியாத பொறுமை, தளராத ஊக்கத்தோடும் உற்சாகத்தோடும் கூடிய பேருழைப்பு ஆகிய மூன்று அம்சங்களைக் கொண்டே தங்கள் நல்லதிர்ஷ்டத்தைப் படைத்துக் கொண்டனரென்று நாம் தெளிவாக அறிந்துகொள்ளலாம். இவ்வீரர்களும் அறிஞர்களும் தங்கள் வாழ்க்கையில் பற்பல இன்னல்களை எதிர்த்துப் போராடின ரெனினும், தங்கள் லட்சியத்தினின்றும் ஒரு சிறிதும் விலகிச் செல்லவில்லை.

"அஞ்சுவது யாதொன்றுமில்லை; அஞ்ச வருவதுமில்லை" என்னும் மனவுறுதி இவர்களுக்குத் தன்னம்பிக்கையின் பயனாகவே ஏற்பட்டதென்னலாம். தன்னை நம்பாதவன் பிறரை நம்புவதெங்ஙனம்? கடவுளைத்தான் நம்புவதெங்ஙனம்? 'தனக்கு நண்பனாக இருப்பவன் பிறருக்கும் நண்பனாவா' னென்று மேலை நாட்டினருள் ஒரு பழமொழியுண்டு. தன்னம்பிக்கை வாய்ந்தவனே தனக்கும் நண்பனாகிப் பிறர்க்கும் நண்பனாவான். நல்லதிர்ஷ்டமென்னும் கட்டடத்தின் அடிப்படையாக அமைவது தன்னம்பிக்கையேயாகும். 'தன்னை உயர்த்துவோனும் தானே, தாழ்த்துவோனும் தானே' என்று நம்பிப் பொறுமையோடு உழைத்துக்கொண்டே யிருப்பவர் கல்வி கேள்விகளிலும் இயற்கை

யறிவாற்றல்களிலும் குறைந்தவராயினும் தாங்கள் விரும்பும் பதவிகளை அடைந்தின்புறக் கூடும்.

"சிலகாலம் எல்லாரையும் ஏமாற்றலாம்; சிலரை எல்லாக் காலத்திலும் ஏமாற்ற முடியாது" என்று அமெரிக்க ஜனாதிபதிகளி லொருவராக விருந்த அப்ரஹாம்லிங்கன் கூறினர். ஆயினும் நம்மை நாமே ஒரு போதும் ஏமாற்றிக்கொள்ள முடியாதென்பதை நன்ருக உள்ளத்தில் பதியவைத்துக் கொள்ளவேண்டும். நாம் அடைய விரும்பும் பதவிக்குத் தன்னம்பிக்கையினுலும், உழைப்பினுலும், பொறுமையினுலும் நமக்குத் தகுதி யுடையவர்களாக்கிக் கொள்ள வேண்டும்.

தளபதி உல்ப் என்ற வீரன் ஒரு யுத்தத்திற்குச் செல்லு முன் ஆங்கில மந்திரியான பிட் என்பவரோடு உரையாடிக் கொண்டிருந்தான். அவ்வீரன்பால் தன்னம்பிக்கை அளவு கடந்து பொங்கியது. அவன் தனது வாளையுருவிச் சுழற்றிப் பேராண்மை தோன்ற உரத்த குரலில் கம்பீரமாகத் தன்னுலாகும் செயற்கருஞ் செயல்களை எடுத்துரைத்தான். இது தற்பெருமையாகுமென்று கருதிய மந்திரியார் "ஆண்டவனே! இந் நாட்டின் விதியை இப்படிப்பட்டவர்களிடத்திலா ஒப்புவிக்க வேண்டும்?" என்று ஒரு நண்பரிடம் பரிகாசமாகப் பேசினர். இத்தகைய தளபதி, தான் சுர நோயுற்றிருந்தும் வீராவேசத்தோடு படுக்கையினின்றும் எழுந்து தன் படைகளை நடத்திச்சென்று வெற்றிசூடி மீண்டான். முதற்கண் தற்பெருமை யெனத் தாம் கருதியது தன்னம்பிக்கையின் தடிப்பேயென்பது பிட் மந்திரியாருக்குப் பின்னர் வெளிப்பட்டது. 'குரைக்கும் நாய் கடியாது' என்பது உண்மைதான்; எனினும் அது உறங்கும் சிங்கத்தினும் பல பல வழிகளில் பயன் தருவதன்றே?

ஆனல் தன்னம்பிக்கை யென்பது எப்போதும் ஆரவாரம் செய்வதன்று. "கிராட்டன் என்ற பெரியார் தம்மைப் பற்றி யென்ன சொல்லுகிருர்?" என்று கேட்ட ஒரு பிரபுவுக்கு, "அவர் தம்மைப் பற்றி ஒன்றும் கூறிக் கொள்ள வில்லை. சித்திரவதை செய்யினும் தம்மைப் புகழ்ந்து பேசும் ஒரு வார்த்தையாவது அவரிடமிருந்து பெறமுடியாது. அவர்

## பயிற்சி

1. பொருள் கூறு:—புலனுகிறது, நினைவு கூர்தல், மேதாவித் தன்மை, ஊன்றுகோல், சலியாத, உரையாடிக்கொண்டு, பதிலிறுத்தார், அரண், இறுமாந்து, திண்ணம்.

2. எதிர்ப்பதம் எழுது:—அதிர்ஷ்டம், நம்பிக்கை, பெருமை, திருப்தி.

3. ‘இதோ என் அரண் இருக்கிறது’—சந்தர்ப்பம் கூறு.

4. சுரநோயுற்றிருந்த தளபதி வீராவேசத்தோடு படுக்கையினின்றும் எழுந்து தன் படைகளை நடத்திச் சென்று வெற்றி சூடி மீண்டான்.

(அ) பெயர்ச் சொற்களின் வேற்றுமை சொல்லு.

(ஆ) பெயரெச்சம், வினையெச்சம் இவைகளைக் குறிப்பிடு.

(இ) நான்கு தனி வாக்கியங்களாகப் பிரித்து எழுது.

## கேள்விகள்

1. எடிசன் தம் வாழ்க்கையில் ஒரு தடவை கூட அதிர்ஷ்டம் ஏற்பட்டதில்லை என்று கூறிக்கொண்டது ஏன்?

2. எடிசன் சில விஷயங்களைக் கண்டுபிடிப்பதில் எவ்விதம் முயற்சி செய்து வந்ததாகக் கூறியுள்ளார்?

3. பெரியோர் எவ்விதக் குணவிசேஷங்களைக் கொண்டு தங்கள் நல்லதிர்ஷ்டத்தைப் படைத்துக் கொள்கின்றனர்?

4. தன்னம்பிக்கை ஏன் அவசியம் வேண்டும்?

5. உல்ப் என்ற வீரன் யுத்தத்திற்குச் செல்லுமுன் மந்திரியான பிட் என்பவரிடம் எவ்விதம் உரையாடினுர்? அப்பொழுது பிட் நினைத்தது என்ன? யுத்தம் முடிந்த பின்னர் அவர் அறிந்து கொண்டது என்ன?

6. தன்னம்பிக்கை வெற்றியளிக்கும் என்பதை உதாரணத்தால் விளக்கு.

7. எவ்விதக் குணங்கள் பொருந்தியவன் தன் வாழ்க்கையில் வெற்றி யடைந்து பிறரால் அதிர்ஷ்டசாலி என்று மதிக்கப்படுவான்?

களை இன்னதினிய தென்றேராது மிக்க ஆவலோடு கை கொண்டமட்டும் வாரி வாரி யுண்டான். அப்படி யுண்ணு மவசரத்திலே ஊனேடுனுயிருந்த ஒரு வலிய மாமிசத் துண்டம் அவன் தொண்டையில் அடைத்துக்கொண்டது. அதனுல் கூனன் மாரடைத்து, மூச்சடங்கி, அறிவிழந்து பிணம் போலத் தரையிற் சாய்ந்தான். இதைக் கண்ணுற்ற தம்பதிகளிருவரும் மதிமயங்கித் திடுக்கிட்டு, "ஐயோ தெய்வமே! இஃதென்னே விபரீதம்? நமது வீட்டில் இவனுக் கிப்படி நேர்ந்ததே, இவன் செத்துக்கிடப்பதை யாரேனுங் கண்ணுறின், நாமேதோ இக்கூனனேச் சதி செய்து கொலே புரிந்ததாக எண்ணுவார்களல்லவோ! அதிகாரிகள் கண்டால் நம்மை வதைப்பார்களே! என்ன செய்வோம்" என்று அதிகத் திகிலடைந்து, தங்களாற் செய்யக் கூடிய பரிகாரங் களெல்லாஞ் செய்து யாதும் பயன்படாமை கண்டு, பிரே தத்தை யெவ்வாருவது வீட்டை விட்டப்புறப்படுத்துவதே கருமமெனத் தேர்ந்தனர்.

தையற்காரனும் அவனது மனேவியும் தலேப்பக்கமொரு வரும் காற்பக்கமொருவராக அச்சவத்தை யடுத்த நாலேந்து வீட்டிற்கப்புறமிருந்த ஒரு வைத்தியன் வீட்டிற்கு எடுத்துச் சென்று, அவன் வீட்டின் தெருக்கதவைத் தட்டினுர்கள். அது கேட்டு ஒரு வேலேக்காரி வந்து கதவைத் திறந்து "சேதி என்ன?" என, சுந்தரன் அவள் கையில் ஒரு வெள்ளியைக் கொடுத்து, "அம்மே! இதைப் பண்டிதர் கையிற் கொடுத்து, ஒரு நோயாளியை யழைத்து வந்திருக்கின்றேம் என்று சொல்" என்றனன். அப்பணிப்பெண் வைத்தியன் முன் சேதி சொல்லும்படிக்குப் போகும்போது, அவள் பின்னரே மெல்லெனத் தம்பதிகளிருவருஞ் சவத்தை யெடுத்துச் சென்று மேல்மாடிப் படிச்சுவரில் சார்த்தி விட்டு மீண்டும் விரைந் தில்லம் போய்ச்சேர்ந்தனர்.

பணிப்பெண்ணே பரிகாரியிடஞ் சென்று "இருவர் நோயாளி யொருவனேக் கூட்டிக்கொண்டு வந்திருக்கிருர்கள்" என்று சொல்லி, அவர்கள் கொடுத்த வெள்ளியை அவன் கையிற்றந்தனள். பண்டிதன் வேலேக்காரியை தீபங் கொண்டுவா" என்று கட்டளேயிட்டு வியாதியஸ்தனேக் காண

வேண்டித் தானிருந்த அறையை விட்டு விரைந்து வரும் போது, அவன் கால் தடுக்கி மேற்படிக் கடுத்தாற்போல் வைக்கப்பட்டிருந்த பிணம் மளமளவென்று புரண்டு கீழே போய் விழுந்தது. வைத்தியன் "இஃது என்னை?" என்று தீபங்கொண்டு பார்க்கச், கூனன் விழுந்து செத்துக் கிடக் கக் கண்டான். "ஓ ஓ! நாம் என்ன காரியம் செய்தோம். ஐயோ இவனைக் கூட்டிக்கொண்டு வந்தவர்கள் எங்குற்றனர். நமது அவசரத்தால் இவனிக் கெதியானுற் போற் காண்கிறதே யாது செய்வோம்" என்று திகிலடைந்து சற்றுத் தெளிந்து தானுந் தன் மனைவியுமாய் ஒருவித ஆலோசனை செய்து கொண்டு, நல்ல நிசி வேளையில் அண்டையிலிருந்த ஒரு வர்த்தகன் வீட்டின் இறப்பின் மேலேறியிருந்து கொண்டு அவ்வீட்டின் புகைக் கூண்டின் வழியாய் அக் கூனற் சவத்தின் கைகளிற் கயிறு தொடுத்து மெல்லக் கீழே இறக்கி விட்டுக் கயிற்றை மேலாகவே வாங்கிக்கொண்டார்கள்.

சதிர்க் கச்சேரிக்குப்போயிருந்து அப்போதுதான் வீட் டுக்கு வந்த வர்த்தகன் புகைப் போக்கின் வழியாய் ஒரு சிறு குள்ளன் இறங்கி நிற்பதாகக் கையிலிருந்த தீபத்தாற் கண்டு "ஓகோ! திருடனிதோ அகப்பட்டான்! அகப்பட்டான்" என்று கூச்சலிட்டு, ஆ! எலியும் மூஞ்சூறுமல்லவோ என் வெண்ணெயை யெல்லாம் தின்று போகின்றன வென்று நினைத்தேன்; நீ தானு இதுவரையிலும் என் சொத்தைக் கொள்ளை கொண்டாய்? நல்லது ஓடிப்போகப் போகிறுய் நில்லு நில்லு" என்று அதட்டிக்கொண்டே ஒரு நீண்ட தடியோடு வந்து சவத்தைப் புடைத்தான். அடியுண்ட பிணம் கீழே விழ அதன்மேல் தான் விழுந்து நன்ருய்ப் புடைத்தான். அப்போது கள்ளன் அசைவின்றிச் சத்த மிடாதிருக்கக் கண்டு வர்த்தகன் தீபங் கொண்டு சோதித்து அடி பொறுக்கமாட்டாமல் அவன் செத்து வீழ்ந்து பிணமா யினுனென்று நினைத்து அவன் மேற்கொண்ட கோபம்போ யொளிக்க "ஐயையோ! நமது மூர்க்கத்தனத்தால் திருடன் மாண்டானே; கொலைபாதகனுனேனே; தண்டனைக்குள்ளாக வேண்டி வருமே, ஐயோ! தெய்வம் இப்படியுமென்னை பழிக் காளாக்குமா?" என்று பலவாறு எண்ணியெண்ணி முகம்

வாடி இடிவிழுந்த மரம்போல நின்று பிரமித்துச் சித்தங் கலங்கி ஒன்றுந் தோன்ருமல் ஏங்கி "அடாபாவி" அடா சண்டாளா! என் பொருள்களைக் கொள்ளை கொண்டது மல்லாமல் என் குலத்தையு மழிக்க வந்தாயே காலா!! என்று பலவாய்ப் பிணத்தை வைது, பின்பு அந்தக் கோணற் சவத் தைத் தோளின்மேலெடுத்துச்சென்று, தன் வீட்டுத் தெருக் கோடியிலுள்ள ஒரு கடை வீட்டின் சுவரோடு சுவராய் நிற்கும்படி நிறுத்திவிட்டுத் திரும்பிப் பாராமலே யொருவரு மறியாதபடி மிக்க பரபரப்பாய் வீடு வந்து சேர்ந்தான்.

பின்பு சுக்கிரனுதித்துக் கீழ்த்திசை வெளுத்துப் பொழுது புலருந்தருணத்தில் மிக்க செல்வந்தனும், பெருமைபெற வாழ் பவனும், இராஜ மாளிகைக்கு வேண்டிய சாமான்கள் கொடுத்து வருபவருமான மிலேச்ச வர்த்தகனொருவன் நித்திரை மயக்கந் தெளிந்துந் தெளியாதவனுய்ப் படுக்கையை விட்டு வெளிப்பட்டு, காலைக்கடன் கழித்து நீராடி மீள விரும்பி, இராத்திரி யுண்ட மது மயக்கத்தால் தள்ளாடிக் கொண்டே செல்லுகையில் நிலந் தெளிந்தால் மக்கள் தன் நிலையைக் கண்டு நகைப்பார்களே என்கிற அச்சத்தாற் சற்று விசையாய் நடந்து சென்ருன். அப்படிச் செல்லுங் காலடியதிர்ச்சியாற் சந்தின் மூலையோடு மூலையாய் நிறுத் தப்பட்டிருந்த சவம் அவன் சந்து திரும்புகையிலவன் முதுகின்மேல் திடீரெனச் சாய்ந்தது. சாயவே அதைப் பிணமென்ருேராது, பதுங்கியிருந்து ஆளைப் போகவிட்டு மேல் வீழ்ந்து குரல்வளையைப் பிடித்து வழிபறிக்குங் கள்வ னென்று நினைந்து திரும்பி விரைவிற் சவத்தைப் பற்றி முகத்தில் ஓங்கி ஒரு குத்துக் குத்திஞன். அக்குத்திஞற் சவங் கீழே விழ, அதன்மேல் தான் விழுந்து "திருடன்! திருடன்" என்று கூக்குரலிட்டுக் கொண்டே நன்ருய்ப் புடைத்தான்.

வர்த்தகனது கூச்சல் வழிப்போக்கர்களை அங்குக் கூட் டியது, ஸ்தலத்துச் சேவகர்களும் வந்து சேர்ந்தனர். காவற் காரர் சங்கதி விசாரித்து வர்த்தகனை 'ஐயோ! அடித்தது போதும் நிறுத்து நிறுத்து என்று' விலக்கி கள்வனெழுந் திருக்கும்படி கைலாகு கொடுத்துத் தூக்க முயன்றனர்.

கள்வனெழுந்திராமல் அசைவின்றிப் பிணமாயிருக்கக் கண்டு வர்த்தகனைப் பிடித்து கூட்டிப்போய் நியாயாதி பதியினுடைய காவற்கூடஞ் சேர்த்தனர். மிலேச்ச வர்த்தகன் அப்போது மதுமயக்கம் நீங்கித் தெளிந்து, தான் முன் பின் யோசியாது செய்த செய்கையைக் குறித்துச் செய்வதின்னது தவிர்வதின்னதென ஒன்றுந்தோன்ருதவனுய்த் தியங்கித் துன்புற்றிருந்து, நியாயாதிபதி கச்சேரிக்குவந்தவுடன் அவன் முன் கொண்டுபோய் நிறுத்தப்பட்டான். நீதிமான் காவலர் சொன்ன பிரியாதைக் கவனமாய்க் கேட்டு, கைதியுடனெடுப்பித்து வந்த சவத்தை நன்ருய்ப் பார்வையிட்டு, வர்த்தகனை நோக்கி "நீ செய்ததாய் ருஜுவாகிற இக்கொடிய செய்கைக்கு என்ன சொல்லுகிருய்? என்ருன். வர்த்தகன், "ஐயா! இவன் எனது கைகளால் கொலையுண்டான் என்பதில் ஐயமில்லை. ஆதலினுல், நான் குற்றவாளி யல்லன் என்று சொல்வதற்கு வழி யொன்று மில்லை" என்ருன்.

நியாயாதிபதி இந்தக் குறிய கூன் சவத்தைக்கண்ட போதே ஊராள்வோனுக்குச் சந்தோஷம் விளைக்கும் அதிசயக் காரருள் அக்கூனனு மொருவனென்றறிந்தனுதலாலும், வர்த்தகனும், அரண்மனையைச் சார்ந்தவனுதலாலும் அரசன் அனுமதி பெறவேண்டி, இவ்வர்த்தகன் சூழாது புரிந்த கொலையைக் குறித்தும், அவனதைத் தடையின்றி யேற்றுக் கொண்டதைக் குறித்தும் தேசாதிபதிக்கு விண்ணப்பஞ் செய்து, அவன் கட்டளை பெற்று மிலேச்ச வர்த்தகனைக் கழுவிலேற்றும்படி தீர்மானித்து, வர்த்தகனைக் கொலைக் களத்திற்குக் கொண்டு போகும்படி கட்டளை யிட்டான்.

கொலை புரிவோர் கழுமரத்தடியில் வர்த்தகனை நிறுத்தித் தூக்க எத்தனிக்குந் தருணத்தில், வேடிக்கை பார்க்க வந்து அங்குக் குழுமிய கூட்டத்தினின்று, "ஐயோ! அவரைக் கழுவேற்ருதே; ஏற்ருதே! கூனனைக் கொன்றவன் நானே" என்று உரத்துக் கூவிக்கொண்டு ஒரு சுதேச வர்த்தகன் சரேலென் றெதிரே வந்து நியாயாதிபதியை நோக்கித் தன் வீட்டின் புகைக் கூண்டின் வழியாய் அக் கள்வன் இறங்கினதும் அவனைத் தானடித்ததும், அதனுல் அவன் இறந்து போனதும், தெருவிலே யவன் சவத்தைக்கொண்டு போய்

நிறுத்தினதும் இவை முதலான தன் கதையைச் சொன்ஞன்.

நியாயாதிபதி கேட்டு "இவ்வர்த்தகன் சுயேச்சையாய் ஓடிவந்து தானே கொலே புரிந்தேனென்று குற்றத்தை ஏற்றுக் கொள்ளுகிருனே, இஃது என்ன ஆச்சரியம்?" என்று சற்று யோசித்து நின்று பின்பு "நன்று, அம் மிலேச்ச வியாபாரியை விட்டு இவ்வர்த்தகனைக் கழுவேற்றுக" என்ருன். கொலேயாளிகள் அந்த வர்த்தகனைப் பிடித்துக் கட்டும்போது யூதவைத்தியன் ஒருவன் கும்பலினின்று வெளிப்பட்டு, "ஐயா நியாயாதிபதியே! பொறும் பொறும். இக் கொலேக்குக் காரண மிவ்வர்த்தகனல்லன். நான் சொல்வதைச் சற்றுச் செவிசாய்க்கக் கடவீர்" என்று சொல்லி, சென்ற இராத்திரி நல்ல தூக்க வேளேயில் இருவர் இக்கூனனைக் கொண்டுவந்து தன் வீட்டுத் தெருக் கதவைத் தட்டினதும், வேலேக்காரி தீபமில்லாமற் கதவைத் திறந்ததும், அவர்கள் அவள் கையில் ஒரு வெள்ளியைக் கொடுத்து அதைத் தன்னிடங் கொடுத்து அவர்கள் கூட்டிவந்த வியாதியஸ்தனை உடனே பார்க்கும்படிக்கு வேண்டினதும், அவர்கள் வேண்டுகோளேத் தன்னிடம் அவள் வந்து சொல்லுகையில் இக் கூனனை வீட்டின் மேல்மாடிப் படியண்டை அவர்கள் விட்டுப் போனதும், தீபமில்லாமல் நோயாளியைப் பார்க்கவேண்டித் தான் அவசரமாய் வருகையிற் கால்பட்டுக் கூனன் படியிற் புரண்டு கீழே விழுந்து செத்துக் கிடந்ததும், தானும் தன் மனேவியுமாய்ச் சவத்தை யெடுத்துப்போய், அடுத்த வர்த்தகன் வீட்டு இறப்பின் புகைக் கூண்டின் வழியாய் வீட்டினுள் இறக்கி விட்டதும் விவரமாய்ச் சொல்லி "இக் குறியனை யுண்மையாகக்கொன்றவன். நானே யாதலால் கழுவேற்றப்பட வேண்டியவன் நாஞகவேயிருக்கிறேன்; அவ்வர்த்தகன் குற்றவாளி யல்லன் அல்லன்" என்ருன்.

அதைக் கேட்டு நியாயாதிபதி "இஃதென்னே புதுமை? முற்றுஞ்சோதித்தறிவோம்" என்று "நல்லது, இவ்வர்த்தகனை விட்டு விட்டு வைத்தியனைப் பிடித்துத் தண்டிக்கக் கடவீர்" என்று கட்டளேயிட்டான். அப்போது சுந்தரனென்னுந் தையற்காரன் கூட்டத்தினின்றும் "நான்தான் குள்ளனைக்

கொன்றேன், வைத்தியனைக் கொல்லாதேயுங்கள், கொல்லா தேயுங்கள்'' என்று கூவிக்கொண்டு நியாயாதிபதி முன் சரேலென ஓடிவந்து, அக்கூனனைத் தான் கடையிற் கண்டு வீட்டிற் கழைத்துப்போய் விருந்தளித்தபோது அவன் முள்ளடைத்துக்கொண்டு செத்து வீழ்ந்ததனால் அவனைத் தானும் மனைவியுமாய்த் தூக்கிக்கொண்டு சென்று வைத் தியன் வீட்டின் மேல்மாடிப் படியிலே விட்டுவந்தது முதல் எல்லாச் செய்தியையும் விளங்கச் சொல்லிக் ''கூனன் செத்தது நானிட்ட சோறுண்டதனாலாகையால் நானே கழுவேற வேண்டியவ னாகின்றேன்'' என்று பிடிவாதஞ் செய்தான்.

நியாயாதிபதி இம்மூவர் செய்தியையும் கேட்டு மேலே நடத்த வேண்டியதைப்பற்றி ஆலோசியா நிற்கையில் வேடிக்கை பார்க்க வந்தவர்களுள் ஆங்கு நிகழ்ந்தன வெல் லாம் மிக்க ஆவலோடு கேட்டுக்கொண்டு நின்றிருந்த குழிந் தாழ்ந்த சிறு கண்களோடு கூடியவனும், வெள்ளிக் கம்பி காய்த்துத் தொங்குவதுபோல் தேகமெங்கும் நீண்ட நரை பொருந்திய உரோமங்கள் குறைவறப் பெற்றுள்ளவனும் உச்சி முதற் பாதம் வரையிலும் தளந்து மடிப்படைந்து கறுத்து நீண்ட தேகத்தோடு கூடியவனுமாகிய ஒரு கிழ அம்பட்ட இரண வைத்தியன் சடுதியில் நியாயாதிபதி முன் வந்து நின்று, ''ஐயா, இந்தக் கூனன் இன்னும் செத்தா னில்லை; உத்திரவானால் சில நிமிஷத்திற்குள் அவனை உயிர்ப் பிக்கமாட்டுவேன்'' என்று சொல்லிக்கொண்டே பிணத் தண்டை சென்று, அவன் தலையைப் பிடித்துப் பலமாய் அசைத்துப் பார்த்துத் தன்னிடமிருந்த ஓர் ஆயுதத்தினால் அக்கூனன் தொண்டையிலடைத்துக் கொண்டிருந்த எலும் போடு கூடிய ஒரு பெரிய மாமிசத் துண்டத்தை யாவரும் காண எடுத்துக் காட்டி, கூனன் சகஜமாய் நித்திரையினின் றெழுந்திருப்பவன் போல, ஆயாசமின்றி எழுந்து ஆடிப் பாடும்படி செய்து, ஆங்கெய்திய எல்லோரையுஞ் சந்தோஷ சாகரத்தில் முழுகச் செய்தனன்.

## பயிற்சி

1. பொருள் கூறு :—அந்நியோந்நியமாய், கரம், புலால், குசோதியமாய், ஊன், தம்பதி, குரல்வளை, கைலாகு கொடுத்து, கும்பல்.

2. இறப்பு—இருபொருள் கூறு.

3. ஆண்பாலிலும் பெண்பாலிலும் வரக்கூடிய பெயர்ச் சொற்களும் இரண்டு உதாரணங்கள் இப்பாடத்திலிருந்து எடுத்தெழுது.

4. ஐயோ! தெய்வமே ! இஃதென்னை விபரீதம் ?—இந்த வாக்கியத்தி லுள்ள இடைச் சொற்கள் எவை ? 'தெய்வமே'—வேற்றுமை என்ன ? அச் சொல்லை மற்ற வேற்றுமைகளிலும் எழுது.

5. செங்குத்துக் கோடுகளிடப்பட்ட இடங்களில் தகுந்த குறிகளை இடுக :—நான் வைத்தியருடைய வீட்டிற்குச் சென்று | அங்கு வாசலி லிருந்த பையனை நோக்கி | பையா | வைத்தியர் வீட்டில் இருக்கிறாரா என்று கேட்டேன்.

## கேள்விகள்

1. தையற்காரன் சிறு கூனனைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றது ஏன் ?

2. சிறு கூனன் உண்ணும்பொழுது என்ன சம்பவித்தது ?

3. தையற்காரன் தன்மீது கூனனைக் கொன்றதாகப் பழி ஏற்படாதிருக்கும் பொருட்டு என்ன செய்தான் ?

4. வைத்தியன் தானே அந்தக் கூனனைக் கொன்றதாக நினைத்தது ஏன் ? அக் குற்றம் தன்னை விட்டு நீங்கும்படி அவன் என்ன செய்தான் ?

5. புகைக் கூண்டின் வழியாக வர்த்தகனது வீட்டிற்குள் இறக்கப் பட்ட சிறு கூனனது உடலைக்கண்டு வர்த்தகன் என்ன நினைத்தான் ?

6. காவலாளிகள் மிலேச்ச வர்த்தகனைக் காவற் கூடத்தில் ஏன் சேர்த்தார்கள் ?

7. மிலேச்ச வர்த்தகனைக் கழுவிலேற்ற எத்தனிக்கும் தருணத்திலும் அதற்குப் பின்னரும் என்ன நேர்ந்தது ?

8. சிறு கூனன் உயிர் பிழைத்தது எவ்விதம் ?

# 16. நிகும்பலை

அ. சீநிவாச ராகவன், எம். ஏ.

நாடக பாத்திரங்கள் :—விபீஷணன், லக்ஷ்மணன், இந்திரஜித்தன், இராவணன், பல வானர வீரரும் அரக்கரும்.

இடம் :—நிகும்பலைப் போர்க்களமும், இலங்கையும்.

இராம இராவண யுத்தம் முற்றிவிட்டது. இலங்கையின் வெற்றிக் கோபுரம் அசைவு கொடுத்துவிட்டது. அண்ணன் ஆணையை மேற்கொண்டு கும்பகர்ணன் போரில் உயிர் துறக்கிறான். இந்திரஜித்தனுடைய சூரத்தனமும் சூழ்ச்சியும் பயனற்று விழுகின்றன. நிகும்பலை யாகம் அநுமன் கைபட்டழிகிறது. தோல்விக் களைப்பின் சோகவெறியில், இந்திரஜித்தன் தன் சிற்றப்பன் விபீஷணனைத் தூற்றுகிறான். தருமத்தைத் தவிர வேறு கடமையறியாத விபீஷணன் பேச்சைக் கேட்டு, தருமத்தின் வலிமையை இந்திரஜித்தன் உணர்கிறான். தந்தையிடம் சென்று, கற்புத் தெய்வமான சீதாபிராட்டியை விட்டுவிடும்படி வேண்டுகிறான். "கோழை, உயிருக்குப் பயந்தவன்" என்று பரிகசிக்கும் தந்தையை வணங்கிவிட்டு வெளியேறுகிறான். போரில் மடிகிறான்.

## காட்சி 1

### நிகும்பலைப் போர்க்களம்

**இந்திரஜித்தன் :** (திணறிப் பெருமூச்சுடன்) என்ன செய்தும் என்ன செய்தும்......எப்படி வெல்வது? பாசுபதமும் சக்ராயுதமும் பயனில்லாமல் மழுங்கிவிட்டனவே!...... இதுவரை அறிந்ததில்லை, தோல்வி என்பது இவ்வளவு பயங்கரமானதா? அனுமான் சொன்னது சரிதான். சாவது சதம். என்றோ ஒரு நாள்......இன்றுதான் சாவோமே.......(இரைந்து) எதிர்த்து நில், வில்லே அரண்.

"இந்திரனை வளைத்தவில்" "நிகும்பலைக் காவல்" என்ற கோஷங்கள். (தணிந்த குரலில்) ஆனால்...நான் மடிந்தால் இலங்கை என்னவாகும்? வேறு யார் இருக்கிறார்கள்? நிகும்பன் போனான். அதிகாயன், அதிகாயனும் போனான். படைத்தலைவரெல்லோரும் பட்டனர். சிற்றப்பன் கூற்றுவனும் அஞ்சப் போர்புரிந்து வீர

மரணம் எய்தினன். (கசப்புடன்) இதோ வருகிறான், இன்னொரு சிற்றப்பன். குலத்துக்குக் கோடாரியாய் முளைத்தவன்.

(விபீஷணன் வருகிறான்)

சிற்றப்பா, மனம் குளிர்ந்ததா? நிகும்பலை யாகத்தைக் குலைத்தது உன் சூழ்ச்சிதானே?

விபீஷணன் : உன்னுடன் என்ன பேச்சு?

இந்திரஜித்தன் : ஆம். பேசமாட்டாய்! உனக்குப் பேச்சு வேறு! என்ன எச்சில் வாழ்க்கை உன்னுடையது?, எதற்காக இந்த மனிதரைப் போற்றி மானம் இழக்கிறாய்? கைலையங்கிரியை ஒரு கையாலும், இலங்கைக் கொற்றத்தை ஒரு கையாலும் அலட்சியமாய்த் தாங்கித் தேவர்கள் கை கட்டிக் குற்றேவல் செய்ய மூவுலகாண்ட ராவணேசுவரனுடைய சிம்மாதனத்தில் வீற்றிருக்கக் கனவு காண்கிறாயா? ராமன் அம்பு பட்டு ராவணன் புழுதியில் வீழ்ந்தபின், அண்ணன் மாண்டதற்கு அழுவாயோ அல்லது ஆனந்த பாஷ்பம் சொரிந்து இந்த மனிதர்களை வாழ்த்துவாயோ? அரக்கர் யாவரும் தொலைந்தபின், இலங்கையில் என்ன அரசு நடத்தப் போகிறாய்? பிணங்களும், பேய்களும், நரிகளுமே உன் பரிவாரங்கள். வசையே உன் புகழ். அவமானமே உன் கொடி. அடிமை வாழ்வே உன் கொற்றம். இதைவிட உயிர்விடலாம். சிற்றப்பனா நீ? கும்பகர்ணன் அல்லவா என் சிற்றப்பன்! நீ மனிதருக்கு அடிமை. அரக்கர் குலம் என்ற நன்மரத்தில் தோன்றிய புல்லுருவி.

விபீஷணன் : மகனே! இந்திரஜித்தா, தோல்வி களைப்பின் சோக வெறியிலே ஏதேதோ பேசுகிறாய். நான் அடிமை தான். மனிதருக்கல்ல; அரக்கருக்குமல்ல. நான் தருமத்திற்கும், சத்தியத்திற்கும் அடிமை. அவையே என் உடன் பிறப்பு; ராவணன் அன்று, என்றைக்குக் கற்புத்தெய்வத்தை மனம் நோக அடித்தீர்களோ, அன்றே எனக்கும் உங்களுக்கும் உள்ள உறவு அறுந்தது.

அதனால் விளையும் கடமையும் மாண்டது. சுற்றத் தாரையும் இலங்கையையும் நீயே காப்பாற்று; புகழ் பெறு. பழியும் நரகமும் எனக்கே வரட்டும். தரு மத்தின் வழியே நடக்கிறேன் என்ற அமைதியே எனக்குப் போதும். அரக்கர் குலத்திற்கு நாசம் நான் விளைக்கவேண்டுமா? அவர்கள் வினையே அதைச் செய் யுமே? தரும தேவதைதான் அரக்கரை அழிக்க முற்பட் டிருக்கிறது. அதன் முன் கைலையை எடுத்த தோள் வலியும், இந்திரனை வென்ற வில் வலியும்......

**இந்திரஜித்தன் :** (இடைமறித்து) உபதேசம் போதும். இது போர்க்களம். வில் வலியை இப்பொழுது காண்.

[போர் புரிந்த வண்ணம் போகிறார்கள். ஆரவாரம். "வெல்க ராகவன்" "வெல்க இளையவன்" என்ற கோஷங்கள். இந்திரஜித்தன் தளர்ச்சியுடன் திரும்பி வருகிறான்.]

**இந்திரஜித்தன் :** (தணிந்த குரலில்) விபீஷணன் சொன்ன திற் குற்றமில்லை! ஆனால் அதற்குப் பணிய மனம் கொள்ளவில்லையே? இலங்கை என்னையல்லவா நம்பி நிற்கிறது. என் வில் வலியும் பொய்த்ததென்றால் இலங் கைக்குப் போய்ப் பார்க்கலாமா? அவர் கேட்பாரா? ரதமும் குதிரைகளும் அழிந்துவிட்டன. நல்லது, (கசப்புடன் நகைத்து) என் பழைய வாகனங்கள் இருக்கவே இருக்கின்றன. இருக்கட்டும் மழை மேகமும். (போகிறான்)

[விபீஷணனும் லக்ஷ்மணனும் வருகிறார்கள்]

**விபீஷணன் :** அரசே! இந்திரஜித்தன் ரதமும், குதிரை களும் போய்விட்டன. தனியே நிற்கிறான். இதுவே தருணம்.

**லக்ஷ்மணன் :** எங்கே......அவனைக் காணோமே?

[ஆரவாரம்]

**குரல்கள் :** இங்கே இருந்தானே......இப்பொழுது பார்த் தேனே......எங்கே? பாறையின் பின்புறம் தேடுங்கள்... "நிகும்பலைக்காவல்"... 'வில்லே அரண்'...தோப் புக்குள் மறைந்து போர் புரியலாம்...முன்போல் மேகத் தில் மறைந்து விட்டானா?...ஏதோ சூழ்ச்சி செய்கிறான்.

இந்திரஜித்தன் எங்கே?......பயந்து ஓடிவிட்டான்...... அவனே பயப்படுவான்......எங்கே இந்திரஜித்தன்...... எங்கே......எங்கே?

[குரல்கள் மங்கி மறைகின்றன]

## காட்சி 2

[இலங்கை அரண்மனையில் ஒரு மண்டபம் : இராவணன் ஒரு மஞ்சத்தில் அமர்ந்திருக்கிறான். நாட்டிய மாதர் அபிநயம் நடிக்கின்றனர். அவர்கள் சிலம்போசை சங்கீதத்துடன் கலந்து மண்டபம் முழுதும் பரவுகிறது. வெளியே ஆசாரவாயிலில் முரசொலி அதிர்கிறது.]

**இராவணன் :** ஆசார வாயில் முரசு கேட்கிறது...நிறுத்துங்கள் (சங்கீதமும் நாட்டியமும் ஓய்கின்றன) யாரது? (இந்திரஜித்தன் வருகிறான்) இந்திரஜித்தா இரு......நீங்கள் போகலாம்.

[நாட்டிய மாதர் போகின்றனர்]

இது என்ன இந்திரஜித்தா! உடம்பெல்லாம் இரத்த வெள்ளம். தோளெல்லாம் அம்புகள் உழுத புண். நிகும்பலை யாகம் முடியவில்லையா?...யாகம்...முடியவில்லையா? ஏன் படத்தைக் கீழே போடும் பாம்பைப் போல் தளர்கிறாய்? நடந்ததென்ன?

**இந்திரஜித்தன் :** (சோர்வுடன்) நடந்தது வேறொன்றுமில்லை. நம்முடைய மாயா சீதைச் சூழ்ச்சியை விபீஷணன் வெளிப்படுத்திவிட்டான்; அவ்வளவுதான். யாக மந்திரத்தின் நடுவிலே வானர ஸிம்ஹநாதம் அதிர்ந்தது.

**இராவணன் :** நிகும்பலைக் காவல்?

**இந்திரஜித்தன் :** அழிந்தது.

**இராவணன் :** அழிந்ததா? என்ன வியூகம் அமைத்தாய்?

**இந்திரஜித்தன் :** சக்கர வியூகம். ஆனால் எந்த வியூக மானாலென்ன?

**இராவணன் :** பிறகு?

**இந்திரஜித்தன் :** (சலிப்புடன்), பிறகென்ன, போருக்கு மூண்டேன்; பாசுபதம் தொடுத்தேன்.

இராவணன் : உம்...?

இந்திரஜித்தன் : விழலுக்கு இறைத்த நீராயிற்று.

இராவணன் : பாசுபதம் கூடவா?

இந்திரஜித்தன் : ஆம், பாசுபதம் மட்டுமில்லை. நெடியவன் படையும் அந்த மனிதனை வலம் செய்து சென்று...... ஐயா, இங்கே ஒரு வார்த்தை சொல்ல வந்தேன்...... வாய் கூசுகிறது.

இராவணன் : [நிமிர்ந்து நோக்கி] சொல், மகனே! என்னிடம் கூசுவானேன்?

இந்திரஜித்தன் : வேறொன்றுமில்லை, நாராயணாஸ்திரமே அவனை வணங்கிச் சென்றதனால்...நாம்...நாம்...வெற்றி நமக்கில்லை......ஏதோ கொடும்பழி தேடிக்கொண்டு விட்டோம்.

இராவணன் : (சிறிது ஓங்கிய குரலில்) என்ன!

இந்திரஜித்தன் : ஆம், ஐயா...நம்முடைய பாபமே அவர்களுக்கு வலிமையாக அமைந்தது. அந்த லக்ஷ்மணன் ஒருவனே மூன்று உலகத்தையும் தனியே நின்று அழிப்பான். என்ன பராக்கிரமம்? என்னால் வியக்காமல் இருக்கமுடியவில்லை.

இராவணன் : சரி, சரி, இதைச் சொல்லவா இங்கே வந்தாய்?

இந்திரஜித்தன் : இல்லை...ஆனால் இங்கு வந்ததுகூட அவன் கருணையினாலேதான். உலகம் அழிந்துவிடுமே யென்று நாராயணாஸ்திரத்தை அவன் ஏவவில்லை. அதை அவன் விடுத்திருந்தால் இங்கே நான் வந்திருக்க...

இராவணன் : மேகநாதா......

இந்திரஜித்தன் : ஆம். வந்திருக்க முடியாது.

இராவணன் : போதும்...போதும்...உன்...வீரம் மங்கிவிட்டது. இந்திரஜித்தன்! என் மகன்! பயங்கொள்ளியா? அட அவமானமே!

இந்திரஜித்தன் : இல்லை. பயங்கொள்ளி இல்லை. ஆனால் ஐயா,...நான் எப்படிச் சொல்வேன். (குரலை உயர்த்தித்

தீர்மானமாக) ஆம், நான் பயங்கொள்ளிதான்......என் உயிரைவிட நான் அஞ்சவில்லை. போர்முனைக்குப் போகப் பயப்படவில்லை. ஆனால் நாளை என்ன ஆகுமோ என்று பயப்படுகின்றேன். மனசிலே உள்ள பாசம் என்ன வெல்லாமோ செய்கிறது.

**இராவணன் :** ஆகவே, பெண்ணைப்போல்......

**இந்திரஜித்தன் :** ஆகவே, சொல்லி விடுகிறேன். சீதையை...சீதையை விட்டுவிடுங்கள். அவர்கள் போய் விடுவார்கள். இதுவரைச் செய்த தீங்கையும் பொறுத்துக் கொள்வார்கள். இலங்கையும் அரக்கர் குலமும் உய்ந்து விடும்.

**இராவணன் :** (கோபத்துடன்) மேகநாதா, நீ தான் பேசுகிறாயா? (கசப்புடன் நகைத்து), உன் பேரில் குற்றமில்லை. பயத்தினால் ஏதோ வாய்க்கு வந்தது உளறுகிறாய். போ. 'பயப்படாதே' மனிதருக்குப் பயந்து......ஒடுங்காதே.

**இந்திரஜித்தன் :** (சிறிது கோபத்துடன்) ஐயா !

**இராவணன் :** உன்னையும், உனக்கு முன் போர் முனைக்குச் சென்று மயங்கி மறைந்தவர்களையும் நம்பியா இந்தப் பகையைத் தேடிக்கொண்டேன் என்று நினைக்கிறாய்? நீ போய்விட்டால் வருவது தோல்விதானா? என்ன நிச்சயமடா? இந்திரனை வென்ற மகா வீரன் முன், எனக்கும் போர் செய்யத் தெரியும் என்று சொல்லலாமோ? தளர்ந்து ஒய்ந்த உன் கையில் மட்டுமில்லை. என் கையிலும் வில்லொன்று உண்டு.

**இந்திரஜித்தன் :** (பணிவுடன்) இல்லை ஐயா, நான் சொல்ல வந்தது...

**இராவணன் :** போதுமடா உன் பேதைமை. நாளை என்ன தான் வந்து விடுமென்று எண்ணுகிறாய்? வெற்றியும் தோல்வியும் வீரர்க்குச் சமம். தோற்றேன்—இராவணனுக்கும் தோல்வியா? தோற்றேன் : தோற்றேன் என்றே வைத்துக்கொள்வோம், அப்போதும் என்ன? வேத முள்ள வரையில் ராமனுடைய பெயர் நிலைக்குமானால், என்னுடைய புகழும் நிற்குமல்லவா? சாவது

இன்றோ நாளையோ நிச்சயம். வாழ்வுக்கு இறுதி உண்டு. வீர மரணத்தால் அடையும் புகழுக்கு முடிவும் உண்டா?...சீதையை விடுவதா? என் இருபது தோள்களும் என்ன, உரமில்லாமல் ஊசலாடும் ஆலம் விழுதுகளா? சீதையை விட்டுவிடுவதா? என்ன வார்த்தை! தேவர்கள் நகையாடமாட்டார்களா? இராவணேசுவரனுடைய பராக்கிரமம் இலவம் பஞ்சா? போர்க்களத்திலே மடிவதேயானாலும் அவ்வளவு சுலபத்திலா மடிவேன்? திசைகளை வென்ற தோளும் வில்லும் ஸாகஸ மில்லாமல் சாய்ந்து விடுமா?

**இந்திரஜித்தன் :** (இரக்கத்துடனே) அரசே!

**இராவணன் :** உன்னிடம் பேசுவதில் பயனென்ன? போ... அந்தப்புரத்துக்குப் போய் ஆயாசத்தைத் தீர்த்துக் கொள். போர்புரிய உன்னாலாகாது. யாரடா அங்கே? ...என்னுடைய கவசம் வரட்டும். தேரைப்பூட்டு.

**இந்திரஜித்தன் :** (பதட்டத்துடன்) வேண்டாம், வேண்டாம். என் உயிரிருக்கும் வரையில் தாங்கள் போர்முனைக்குப் போக வேண்டியதில்லை. பின்னர் (தழதழத்த குரலில்) போகிறேன்...மேக நாதனை மறந்துவிடுங்கள். ஏன் முகத்தைத் திருப்பிக் கொள்ளுகிறீர்கள். என்னைப் பார்க்கக் கூடாதா? இதுதான் கடைசி முறை, தங்களைத் தரிசிப்பது ; போகிறேன்.

[இந்திரஜித்தன் போகிறான்]

**இராவணன் :** (திடீரென்று தன் நினைவு பெற்றவன்போல் எழுந்து சுற்றும் முற்றும் வெறிக்கப்பார்த்துத் திகைப்புடன்) இந்திரஜித்... மேகநாதா...மகனே......போய்விட்டானா? (மஞ்சத்தில் சாய்கிறான்).

## காட்சி 3

நிகும்பலைப் போர்க்களம். போர் ஆரவாரம்

**குரல்கள் :** எங்கே இந்திரஜித்...எங்கே? என்ன இருட்டடா இது...ஆம், விடியப் போகிறதல்லவா...இதோ தேரோசை கேட்கிறது. இந்திரஜித் வந்தான்...இதோ...

[ஆரவாரம். சங்கொலி]

**விபீஷணன் :** சூரியோதயமாகிவிட்டது. இனி இந்திரஜித்தன் மறைய முடியாது. அரசே...எங்கே...

**லக்ஷ்மணன் :** விபீஷணு! என்ன அதிசயமான வீரனப்பா இந்த இந்திரஜித்தன்! இவன் சாகவா வேண்டும்?

**விபீஷணன் :** அரசே, இதென்ன தயக்கம்?...போர்க் களத்திலே......

**லக்ஷ்மணன் :** இதோ விபீஷணு — இராமனே வேதங்கள் வணங்கும் தரும மூர்த்தியானல், இந்தப் பாணம் இலக்குத் தப்பாது.

நாணொலி " மடிந்தான் இந்திரஜித்தன் " " வெல்க ராகவன் " " தருமம் வெல்க " என்ற கோஷங்கள்.

**விபீஷணன் :** இன்றுடன் இலங்கை வீரம் சாய்ந்தது. மகனே, உன் முடிவு இப்படியா ஆகவேண்டும்?...இராவணன் ஆசையிலே இந்திரஜித்தன் வீரம் ஆகுதியாய்க் கரிந்தது. நிகும்பலை முடிந்தது. தருமம் வென்றது.

" வெல்க ராகவன் " " தருமம் வெல்க " என்ற கோஷங்கள்,

ஆரவாரம்.

# குறிப்புரை

## I. கடவுள் வாழ்த்து

### திருவருட்பா

திருவருட்பாவை இயற்றியவர் ராமலிங்க சுவாமிகள். இவர் கருணீகர் எனப்படும் கணக்கர் குலத்தில் கி. பி. 1823-ல் சிதம்பரத்திற்கு அருகிலுள்ள மருதூரிற் பிறந்தார். இவரது தந்தையார் பெயர் ராமையாப் பிள்ளை; தாயார் பெயர் சின்னம்மை. இவரது சமயம் சைவம். கடவுள் ஒருவர் உண்டு என்றும், அவரை வழிபடுவோருக்கு ஜீவகாருண்யம் இன்றியமையாதது என்றும், அவரை அடைவதற்கு வழி சமரச சன்மார்க்கமென்றும் இவர் தமது பாடலில் கூறுகின்றார். இவர் பாடிய பாடல்கள் ஆறுபகுதி (திருமுறை)களாக வகுக்கப்பட்டிருக்கின்றன.

கடவுள் யாவருக்கும் பரம பிதாவாதலால், அவரை அப்பா என்று அழைக்கின்றார். வேண்டுதல் - விரும்புதல்; பிரார்த்தித்தலுமாம். ஆர் உயிர் - உலகில் நிறைந்த ஜீவகோடிகள் அருமையான உயிருமாம்.

பார் - பூமி; இங்கே பூமியின் பகுதிகள். பதம் - ஸ்தானம், அவையாயாவன இந்திரலோகம் முதலிய இடங்கள். எந்தை - எனது பிதாவே, இது விளி. அருட்புகழ் - அருளாகிய புகழ்.

செப்பாத - சொல்ல முடியாத. மார்க்கம் - தூயநெறி. திகழ்ந்தது - விளங்கி. அருட்சோதி - தேவரீரது அருளாகிய சோதியை.

தப்பு எது - எந்த வகையான பிழை. பொறுத்தல் - பொருளாகக் கொள்ளாதிருத்தல். பிரியாத - நீங்காத. இந்தப் பாட்டில் ஐந்து பிரார்த்தனைகள் வேண்டப்படுகின்றன. அவையாவன :—(1) எல்லா உயிர்களிடத்தும் ஜீவகாருண்யமாயிருத்தல். (2) எவ்விடத்தும் சென்று கடவுளது அருட்புகழைக் கூறிப் பரப்புதல் (3) மேனிலையில் திவ்ய சன்மார்க்கம் விளங்கும்படி கடவுள் தம் அருளைச் செலுத்துதல். (4) தாம் செய்யும் தவறுகளைப் பொறுத்தல். (5) கடவுளைத் தாம் என்றும் பிரியாத நிலைமையை அடைதல் என்பனவாம்.

## II. அறவழி

### 1. திருக்குறள்

திருக்குறளை அருளிச் செய்தவர் திருவள்ளுவ நாயனார். இவர் 2000 ஆண்டு கட்கு முன்பு நமது தமிழ் நாட்டிலிருந்த பெரியார். திருக்குறளில் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் மூன்று பிரிவுகளுள்ளன. இந்நூல் 1330 திருக்குறள்களையுடையது. இந்நூலத்தின்

சம்ஸ்கிருதம் முதலிய பல பாஷைகளிலும் நாகரிக வாழ்க்கை யுடையாரது மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது.

இத்திருக்குறளுக்குத் தருமர் முதலிய முற்கால அறிஞர் பதின்மர் உரை வகுத்திருக்கிருர்கள். அவற்றுட் சிறந்தது பரிமேலழகர் உரையே.

1. அன்புடமை - தம்மோடு தொடர்புடையாரிடத்தில் காதல் உடைய வனக இருத்தல். எல்லாம் - எல்லாப் பொருளாலும். தமக்கு உரியார் - தமக்கே உரியவராவர். என்பும் - எலும்புமாம்; இங்கே உடம்பாலும் என்பது பொருள். பிறர்க்கு உரியர் - மற்றவர்களுக்கு உரியவராவர். சிபிச் சக்கரவர்த்தி, ததீசி முனிவர் முதலியவர்கள் முறையே தமது உடம்பைப் புருவின் பொருட்டும், இந்திரன் பொருட்டும், உதவிய வரலாறுகள் பிரசித்தம்.

2. ஒழுக்கம் - நல்ல நடை. நன்றிக்கு - புண்ணியத்திற்கு. வித்தாகும் - காரணமாகி இன்பம் தரும். என்றும் - எந்தக் காலத்திலும். இடும்பை தரும் - பாவத்திற்குக் காரணமாய்த் துன்பம் தரும்.

3. பொறையுடைமை - தமக்கு ஒருவன் தீமை செய்தால் தாம் அவனுக்குத் தீமை செய்யாமற் பொறுத்திருத்தல். அகழ்வார் - தோண்டு கிறவர்கள். தாங்கும் - சுமக்கும். இகழ்வார்ப் பொறுத்தல் - நிந்திப்பவர் களைப் பொறுத்தல். தலை - மேலான அறம். பூமி தன்னைத் தோண்டு கின்றவர்களையும் வீழாமற் சுமந்து கொண்டிருப்பதுபோல், ஒருவன் தன்னை நிந்திப்பவர்களையும் பொறுத்து நன்மை செய்வது மேலான அறம் என்பதாம்.

4. கல்வி - கற்கவேண்டிய நூல்களைக் கற்றல். மணற்கேணி - மணலி லுள்ள கிணறு; கிணற்றைக் கேணி என்றல் சோழ நாட்டு வழக்கு. இங்கே கிணற்றிலுள்ள நீர் என்பது பொருள். தொட்ட அனைத்து ஊறும் - வேண்டிய அளவுக்குத் தக்கபடி ஊறும். கற்ற அனைத்தும் - படித்த அளவுக்குத் தக்கபடி. அறிவு ஊறும் - அறிவு வளரும், சிறிது படித்த மாத்திரத்தில் திருப்தி அடையாமல், மேன்மேலும் கற்கவேண்டும் என்ற வாறு.

5. கேள்வி - கற்றவர்கள் கூறும் அரிய விஷயங்களைக் கேட்டல். எனைத்து ஆனும் - எவ்வளவு சொற்பமானாலும். நல்லவை - நன்மை தரும் விஷயங்களை. கேட்க - ஒருவன் கேட்பானாக. அனைத்து ஆனும் - அவ்வளவு சொற்பத்தினாலும். ஆன்ற பெருமை - நிறைந்த பெருமையை. தரும் - அந்தக் கேள்வி ஞானம் கொடுக்கும்.

## 2. இனிது நாற்பது

இது கடைச் சங்கத்துப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. இதன் ஆசிரியர் பூதஞ் சேந்தனார் என்பவர். இந்நூல் 40 செய்யுட்களை யுடையது. ஒவ்வொரு செய்யுளிலும் இனியதாகிய விஷயம் சொல்லப்படும்.

1. மன்று - சபை. முதுமக்கள் - அறிவால் முதிர்ந்த பெரியோர். தந்திரம் - நூல். மாண்பு - பெருமை. விழுச்சீர் - மிகுந்த சிறப்பு. இரு முதுமக்கள் - தாயும் தந்தையும். கண்டு எழுதல் - கண்டு எழுந்து வணங்குதல்.

2. தங்கண் - தம்மிடம். அமர்வு - விருப்பம். அம்கண் விசும்பு - அழகிய இடம், அகன்ற ஆகாயம். அகல் நிலா - விரிந்த நிலவையுடைய பூர்ணச் சந்திரன். காண்பு - பார்த்தல். பங்கம் - குற்றம். பரிந்து - இரக்கங்கொண்டு. பரிந்து + யார்க்கும் = பரிந்தியார்க்கும்; சந்தியைக் கவனிக்க.

3. கயவர் - கீழ்மைக் குணமுள்ளவர். இகந்து - நீங்கி. உள்ளி - நினைத்து. ஒளிபட - கீர்த்தியுண்டாகும்படி.

## 3. இன்னா நாற்பது

இதுவும் கடைச்சங்கத்துப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. இதன் ஆசிரியர் கபிலர் என்பவர். இந்நூலும் நாற்பது செய்யுட்களையுடையது. ஒவ்வொரு செய்யுளிலும் துன்பந்தரும் விஷயங்கள் சொல்லப்படும். இன்னா - துன்பந் தருவன.

1. பொருள் உணர்வார் - விஷயம்தெரிந்து மகிழ்பவர்கள். இல்வழி - இல்லாத விடத்தில். கூர் - மிகுந்த. போக்கு - போதல். செலவு - செல்லுதல். வண்மை புரிவு - கொடை கொடுத்தல்.

2. புல் ஆர் புரவி - புல்லைத் தின்னும் குதிரை. மணி - கழுத்திலிடும் மணி. ஊர்வு - ஏறிச்செல்லுதல். கருமப் பொருள் - காரியத்தின் பயன். இல்லாதார் - பொருளில்லாதார். நல்ல விருப்பு - நல்ல பொருள்களை விரும்புதல். பல்லாருள் - பலபேருக்கு நடுவில். நாணப்படல் - மானக்கேடு அடைதல்.

3. வெள்ளம்படும் மா - வெள்ளத்தில் அகப்பட்டு வருந்தும் மிருகங்கள். கள்ள மனத்தார் - வஞ்சனை பொருந்திய மனமுள்ளவர்கள். தொடர்பு - நட்பு.

4. நண்ணா - பொருந்தாத. புணர்ச்சி - தொடர்பு. நனி - மிகவும். கண்ணில் ஒருவன் - கண்ணில்லாத ஒருவனது. வனப்பு - அழகு. எண் இலான் - எண் அறிவில்லாதவன்.

## 4. திரிகடுகம்

இதுவும் கடைச் சங்கத்துப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. இதன் ஆசிரியர் நல்லாதனார் என்பவர். இந்நூல் காப்பு உட்பட 101 செய்யுட்களையுடையது. திரிகடுகம் - சுக்கு, திப்பிலி, மிளகு என்னும் மூன்றினாலும் ஆகிய மருந்து. இந்த நூலிலுள்ள ஒவ்வொரு செய்யுளிலும் கூறப்படும் மூன்று விஷயங்களும் உயிருக்குள்ள அறியாமையாகிய

நோயை உடற்குள்ள பிணியை நீக்கும் திரிகடுகம்போல நீக்குதலின், இஃது திரிகடுகம் எனப் பெயர் பெற்றது.

1. உடைமை - செல்வம். நில்லாமை - நிலேயாமை. உள்ளும் - நினைக்கும். நெறிப்பாடு - வழியிற்படுதல். அஃதாவது இந்த உலகிலுள்ள பொருள்களெல்லாம் நிலேயா எனத் தெரியும் நல் வழியிற் செல்லுதலாம். நன்று - நன்மை.

2. முறை - நீதி, நியாயம். நிறை - அடக்கம். தேற்ருதான் - தேரு தான். தூறு - பாழ்ங்குழி.

3. இருள் உலகம் - நாகலோகம். சேராத ஆறு - சேராமலிருப் பதற்குக் காரணமாகிய வழிகள்.

4. வைத்தனை - தம்மைப்பற்றி ஒருவர் கூறும் இகழ்ச்சியாக சொல்லே. ஊரிய - மிகுந்த. கட்டியென்று - தித்திப்பானதென்று.

## 5. நான்மணிக்கடிகை

இதுவும் கடைச்சங்கத்துப் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. இதனை இயற்றியவர் விளம்பி நாகனுர் என்பவர். இந்நூல் கடவுள் வாழ்த்து உள்பட 106 செய்யுட்களை யுடையது. கடிகை - துண்டு. நான்மணிக்கடிகை என்பது நான்கு ரத்தினத் துண்டுகளென்று பொருள் படும். ஒவ்வொரு செய்யுளிலும் ரத்தினத் துண்டு போன்ற நான்கு விஷயங்கள் கூறப்படுவதால் இந்நூல் அப்பெயர் பெற்றது.

1. அணி - அழகு. பெண்மை நலம் - பெண் தன்மைக்குரிய நன்மை யாகிய கற்பு. தான் செல் உலகமாவது - மறுமையுலகம்.

2. அல்லா - மேலல்லாத. கடைகள் - கீழ் மக்கள். தம்கைத்து - தம் முடைய கையிலுள்ளதாகிய பொருள்.

3. கொண்டான் - கணவன். துன்னிய - நெருங்கிய. கேளிர் - சுற் றத்தார். ஒண்மையவாய்ச் சான்ற - நன்மை நெறி அமைந்த. ஈன்ருள் - தாய். எண்ண - ஒப்பிடத்தக்க.

4. வாள் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியையுடைய மனைவி. திசை யென்பது இங்கே ஊரைக் குறித்தது. நட்டோர் - சிநேகிதர். அவை - சபை. மூத்தோர் - கல்வி கேள்வி முதலியவற்றிற் சிறந்தோர். கற்று அறிவு இல்லா உடம்பு - நூல்களைக் கற்றும் அறிவில்லாத உடம்பு.

## 6. பழமொழி

இந்நூல் பதினெண் கீழ்க் கணக்குகளுள் ஒன்று. இந்நூல் ஒவ்வொரு பழமொழியை இறுதியில் பெற்ற நானூறு வெண்பாக்களையுடையது. இதை இயற்றியவர் முன்றுறையரையனுர். இவர் ஜைனர்.

1. நெடியது - நெடுங்காலத்துக்குப் பின்பு வரும் துன்பத்தை. எளியை - நீ என்றும் அறியாய். முன் பகல் கண்டான் - முன்பு கண்ட

வன். அடியுளே - அந்நிலையுளே. மன்ற - நிச்சயமாக. 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்பது இச்செய்யுளின் கருத்து.

2. எறி - ஒளி வீசும். நேரொக்கும் - ஒப்பான. சிறியார் தமக்கு இனமாய் ஒழுகுதல் - கீழ் மக்களைப்போல் நடந்து கொள்ளுதல். அஃது - அச்செய்கை. இயைக்கும் - சேர்க்கும். ஆறு - நெறி.

3. மூத்தாலும் - மூத்தவிடத்தும். நனி உளர் - மிகவும் உளர். நாருத - முளையாத. பேதை - அறிவில்லார். உணர்வு - பொருளுணர்வு.

4. முரலும் - இசைக்கா நின்ற. ஊர -'ஊரனே! பேணி - விரும்பி. தவிசு - குதிரை மேல் இடுதலான கல்லணை. ஆறு - போலாம்.

## III. கதைப் பகுதி

### 1. மைனுவும் முயலும்

பஞ்சதந்திரம் என்ற நூல் வீரமார்த்தாண்ட தேவரென்பவராற் செய்யப்பட்டது. இதன் நடை மிக்க எளிதாய்ச் சிறுவர் படிக்கப் படிக்கத் தெவிட்டாதிருப்பது. இதில் ஐவகைத் தந்திரங்கள் கூறப்படுகின்றன.

1. மோனர் - மௌனமுள்ளவர். விரதியர்கள் - விரதத்தை அநுட்டிப்பவர்கள். உற - மிகவும். மேவுவர் - இருப்பவர். உய்யார் - பிழைக்க மாட்டார்கள். பூவை - மைனு. 2. முயங்கி - சேர்ந்து. 3. தரு - மரம். வாவி - நீர்நிலை. கூபம் - கிணறு. 4. வழக்கா - வழக்காக. துங்கர் - உயர்ந்தோர். 5. கூர்ம்பல்லன் - கூர்மையான பல்லையுடையவனென்று பொருள்படும். வெருவி - அஞ்சி. பக்கல் - பக்கம். உரைப்பம் - சொல்லுவோம். 7 மாற்றம் - சொல். 9. சகலம் - எல்லாம். 10. விரதங்களுக்கெல்லாம் மேலான விரதங்கள் இரண்டு. அவற்றுள் என்றும் பொய் சொல்லா விரதம் ஒன்று; உயிரைக்கொல்லா விரதம் மற்றொன்று. ஓரம் - பக்ஷபாதம்; ஒருதலை வழக்கு. 11. மாரீசம் - வஞ்சனை. மார்ச்சாலன் - பூனை. 12. விசுவசித்தல் - நம்புதல். கண்டம் - கழுத்து. செருக்கி - கர்வங்கொண்டு. இறந்த - இறந்தன.

### 2. புத்தரும் ஏழைச் சிறுவனும்

1. தனயன் - மகன். துறந்து - விட்டு நீங்கி. மதிமுகம் - சந்திரனைப் போன்ற முகம். நள்ளிரவு - நடு இராத்திரி. விஞ்சிய - மிகுந்த. 2. ஆயர் குலம் - இடையர் குலம். 3. வையகம் - பூமி. 4. தயங்கி - தகைத்து. 5. வள்ளல் - வரையாது கொடுப்போன். இங்கே புத்தரைக் குறிக்கின்றது. 11. உதிரம் - இரத்தம். 14. தின்மை - தீமை. 16. அளிக்க -கொடுக்க.

### 3. பிருதிவிராஜ் சம்யுக்தை

சுயம்வரம் - ஒரு பெண் தன் மனதுக்கேற்ற கணவனைத் தானே தெரிந்தெடுத்தல்; இஃது அரசன் புதல்விகட் குரியதோர் செயல். அங்கை - அழகிய கை. அவை - சபை. 2. சுயம்வர மாலை கையிலேந்தி நின்ற சம்யுக்தை தானும் ஓர் மாலை போன்று விளங்கினாள். ஆர் - யார்; மரூஉ. 3. ஒள் அணி வாயில் - பிரகாசிக்குந் தன்மையுள்ள அழகியவாசல். 4. தெளிவு - தெளிந்த அறிவு. 6. நாதன் - கணவன். சோகம் - துக்கம். 7. தரை - பூமி. பூ உடல் - புஷ்பம் போன்ற சம்யுக்தையின் சரீரம். நிறைவன் - நிறைவனாகிய. 8. புரவி - குதிரை. கொம்பு - பூங்கொம்பு. அனையாள் - போன்றவள். 10. வஞ்சினம் - சபதம். பரி - குதிரை. 11. வேள் - மன்மதன். மின் இடையாள் - மின்னலைப் போன்ற இடையையுடையவள்.

## IV. பிறவகைகள்

### 1. கபிலர் அகவல்

கபிலரகவல் என்பது கபிலரென்ற பெயருள்ளவர் ஒருவராற் பாடப்பட்டது. இவர் சங்கப் புலவருள் ஒருவராகிய கபிலருமல்லர், கபிலதேவ நாராயணரெனப்படுபவரும் அல்லர்.

கடிப்பு - பறையடிக்கும் குறுந்தடி. துயில் - உறக்கம். இன்னே - இப்பொழுதே, கூற்றுவன் - யமன். சாற்றவும் - உபசார வார்த்தை சொல்லினும், தமர் - சுற்றத்தார். நல்குரவு - வறுமை. உன்னான் - எண்ண மாட்டான்.

### 2. தனிப்பாடல்

இங்கே குறிக்கப்பட்ட பாடல்களிரண்டும் ஔவையார் பாடியன.

1. வல்லோம் - வலிமையுடையோம். வலிமை - பராக்கிரமம்.

2. நாணாமல் - வெட்கமில்லாமல். கிளி மற்றை நேரத்திலெல்லாம் தனக்குப் பேச்சுக் கற்பிக்க வேண்டுமென்று கேட்கும். பூனை வந்துவிட்டாலோ கீச்சுக்கீச்சென்று சப்தமிடும்.

### 3. நாட்டுச் சிறப்பு

சீர் - புகழ். பிரபலம் - கீர்த்தி. கன்னல் - கரும்பு. கொழித்து - தழைத்துச் செழித்து. வன்மை - கொடுமை. மருவி - கிட்ட நெருங்கி. பொய்கை - குளம். வாமம் - அழகு. கான் - காடு.

### 4. மழை

சொலித்தன - பிரகாசித்தன. குமுறின - முழங்கின. விசையாய் - வேகமாய். அளிகள் - வண்டுகள்.

துளிர் அனவாய் மலர்ந்து - தளிர் போன்ற வாயைத் திறந்து. உளம்- மனம். அந்தரங்கம் - இரகசியம். கணை - அம்பு.

### 5. உத்தியோக சங்கடம்

இது வேதநாயகம் பிள்ளை (மாயூரம் முன்சீப்) பாடிய சர்வ சமயக் கீர்த்தனையிலிருந்து எடுக்கப்பட்டது.

அபத்தம் - தவறு. அல் - இராத்திரி. அகில கண்டம் - எல்லா அண்டங்களும். சண்டப்பிரசண்டன் - உக்கிரமான பிரசண்டவாயு போன்றவன். நாளும் சகஸ்ரப் புளுகன் - நாளொன்றுக்கு ஆயிரம் பொய் சொல்பவன். கியாதி - பெருமை.பிரமஆதி - பிரம்மன் முதலியவர்கள். அட்டி - தாமதம்.

### 6. இராம நாடகக் கீர்த்தனை

இது சீகாழி அருணாசலக் கவிராயர் பாடியது. இந்த நாடகமே யன்றி சீகாழித் தலபுராணம் முதலிய நூல்களும் அவர் இயற்றியிருக்கின்றார்.

### 7. கம்பன்

புலமை - கல்வி, பாண்டித்தியம். ஆய்ந்தறிந்து - ஆராய்ந்துதெரிந்து கொண்டு. அணங்கு - தெய்வப் பெண். தயரதன் - தசரதன். அமரும் - வீற்றிருக்கும்.

### 8. எது சுதந்திரம்

இச்சை -விருப்பம். இடம் - துன்பம். கொச்சை மொழி - இழிவைத் தருகிற வார்த்தை. வகிக்காது - தாங்காது. கோறும் - விரும்பும். இது புதியது புகுதல்.

### 9. தொல்லையிழைத்திடும் பையல்

சுட்டித்தனம் - சேஷ்டை. பாசாங்கு - ஏமாற்று. மணி - சிறுவனது செல்வப் பெயர். சழக்கு - குற்றம். ஆர்வம் - அன்பு.

### 10. சிரித்த முல்லை

முல்லைப்பூ மலர்தலை அக்கொடி சிரித்ததாக கூறப்பட்டிருக்கிறது. வசம் - பக்கம். சொக்கு - அழகு. முல்லைக் கொடியின் இலைகள் பச்சென்றிருத்தல், அக்கொடி பச்சைப் பட்டுப் போர்வையாக மூடிக்கிடந்தது போன்றிருக்கின்றது.



